உ

கணபதிதுணை.

# திருநெல்வேலித்
# தலபுராண வசனம்.

இஃது

மதுரை, "ஸ்ரீ சிவஞான தீபச்சபை"

காரியதரிசி

ம. அழகர்சாமிபிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று

மதுரை

நான்காஞ் சங்கத்துப் புலவரும்

திரிசிரபுரம் எஸ். பீ ஜி. கழகப் புலவருமாகிய

மகா-ள-ள-ஸ்ரீ

அ. சுந்தரநாதப் பிள்ளை அவர்களாற்

பார்வையிடப்பெற்று,

திருநெல்வேலி சுவாமி சந்நிதி புத்தகசாலை

பிரம்மஸ்ரீ

டி. வி. வெங்கடேஸ்வரஐயரவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

மதுரை

ம. அழகர்சாமிபிள்ளையவர்களால்

தஞ்சாவூர்

"ஸ்ரீ வித்யாவிநோதினி அச்சியந்திரசாலையிற்"

பதிப்பிக்கப்பெற்றது.

1910.

சிவமயம்

# முகவுரை.

குறள் வெண் செந்துறை.

"ஆரண முகத்துநல் லன்பருள் ளத்தொளிட
வாரண முகத்திறை மலர்ப்பதந் தொழுவாம்."

அகண்டபரிபூரண சச்சிதாநந்தப் பழம் பொருளாகிய சிவபெருமான் இப்பூவுலகிற் பற்பல இடங்களில் எழுந்தருளிக் கோவில் கொண்டிருந்து ஆன்மகோடிகளுக்கு அருள்செய்யும் உண்மை வேதாகமபுராணங்களின் வாயிலானும் அனுபோக அவ்வையானும் அறிந்ததன்றோ?

அவ்வாறு நம்பெருமான் கோயில் கொண் டருளியிருக்கும் பலதலத்துள்ளும் மிக்கது திருநெல்வேலியே.

அத்தகைய திருநெல்வேலித்தலத்தின் புராணத்தை வடமொழியிலிருந்தும் ஸ்ரீலஸ்ரீ நெல்லையப்பக்கவிராய ரென்பவர் தமிழில் பாடியருளியதை இற்றைக்குச் சற்றேறக்குறைய நூற்றியாண்டுகளுக்குமுன் அச்சிட்டிருக்கின்றனர். அவ்வச்சுப்பிரதிகிடைப்பதோ இக்காலத்தருமையாக விருக்கிறது. அவ்வாறு கிடைத்தாலும், ஆங்கிலம் வளர்ந்து அடிபடர்ந்து தமிழிருந்த இடத்தையுங்கவிந்து கவர்ந்து வரும் இக்காலத்தில் தமிழ்வளங் குன்றியமையால் பண்டிதரல்லாத பலரு மறிதற்குக் கூடாதிருப்பதால், தமிழினிடத்து நீங்காவாவலும், அருள், அன்பு, ஈகை என்னும் நற்குணங்களைத் தனக்கு அணிகலனாகக் கொண்ட எனது நண்பரும், திருநெல்வேலியில் நல்வாழ்வு உடையவரும், வேதசொரூபமே யெனத்தோன்றிய பிரம்மஸ்ரீ வெங்கடேசுவர ஐயரவர்களின் திருக்குமாரருமாகிய பிரம்மஸ்ரீ வெங்கடேசுவரஐய

ரவர்கள் யாவரும் எளிதில் உணரும்படிச் செந்தமிழ் நடையில் எழுதின் தமிழ்மொழிக்குந் தமிழ்நாட்டிற்கும் பேருதவியாயி ருக்குமென்றும், அவ்வாறு செய்கவென்றும் நண்பின் கெழுதகைமையாற் கூறியருளிய இன்சொல்லைப் பொன்போற் போற்றி மன்னிய சென்னியாற் பணிந்து எழுதிமுடிக்கும் ஆற்றலில்லையென்றாலும் பெரிதோரவாவந்து உந்துதலினால் ஒருவாறு எழுதிமுடித்தேன். "எம்பெருமானருள்மேவிலொரு, துரும்பும்படைத் தளிக்கு மிவ்வகிலாண்டந்தொகுதியையே" என்னும் ஆன்றோர் திருவாக்கின் வண்ணம் ஒன்றுக்கும் பற்றாத்தமியேன்வாயிலாய் அருட்செயலால் இப்புராணம் வசனரூபத்தில் வெளிப்பட்டது. இதனுட்குற்றங்களிருக்குமேல் அஃதென்னறியாமையாலேயே நிகழ்ந்ததென்றுபெரிதும் மன்னித்து, இதனுள்ளிருக்கும் வியக்கத்தக்க பொருளெல்லாம் சர்வவியாபகமுஞ் சர்வ ஆற்றலுமுள்ள ஆதிமத்தியாந்தரகிதப் பொருளாகிய பெருங்கருணைத் தடங்கடலான இறைவனருளால் நேர்ந்ததென அவனைப் புகழ்ந்து என்னை ஆசிர்வதித்து இத்தகைய தொழிலில் என்னை மென்மேலுமூக்குமாறு பெரிதுங் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

தமிழ் மொழியிற்றேர்ச்சி மிகுதி இல்லையானாலும் இறைவர் புகழ் கூறுதும்யாமெனவெழுந்த அவா இறையருள்கொண்டிதனை முடிப்பித்ததென்பது முக்காலுஞ்சரதமே.

இதனை எழுதத்தூண்டிய பிரம்மஸ்ரீ தி.வே. வேங்கடேசுவர ஐயரவர்களுக்கு மனமொழி மெய்களாற் பல முறைவந்தித்து நீடூழியவர்வாழ்ந்திருக்குமாறு அருள் செய்யப் பேரருளைச் சிந்திக்கின்றேன்.

இப்புராணம் வெகுவிரைவில் வெளிவரவேண்டுமென்று அவாவி என்னைப் பலவகையாலுந் தூண்டுதலைச் செய்து தன் பலவேலைகளிலும் இதனையும் ஒரு வேலையாகக் கொண்டு இடையிடையே கண்மலர்சாத்திப் பொலிவுபடுத்திய எனது மைத்துனரும் திரிசிரபுரம் எஸ்.பி.ஜி. கழகப்புலவருமாகிய மகா-௱-௱-ஸ்ரீ அ. சுந்தரநாதபிள்ளை அவர்களுக்கும் வந்தனஞ் செலுத்தக்கடமைப்பட்டிருக்கின்றேன்.

இந்நூலைச் சிற்றளவிற்றாகிய காலஎல்லையில் பிழை மிகுதியும் வாராதபடிச் சிரமமெடுத்து அச்சிட்டுக்குறித்த காலத்திற்றந்த ஸ்ரீ வித்தியாவிநோதனி அச்சுக்கூடத்தலைவர்களுக்கும், நான் அன்புடனே வந்தனஞ் செலுத்துகின்றேன்.

இதனை வாங்கிவாசிப்போரனைவரும் மும்மைப் பயன்களையும் பெற்றுப் பெருக வாழ்ந்திருக்குமாறு எல்லாம் வல்ல இறைவன்றனை இறைஞ்சுகின்றோம்!!

சுபம்!! சுபம்!!

தஞ்சை
13-5-10.

இங்ஙனம்,
ம. அழகர்சாமி பிள்ளை.

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

மதுரை
நான்காஞ் சங்கத்துப் புலவரும்,
திரிசிரபுரம் எஸ்.பீ.ஜி. கழகப்புலவருமாகிய,
மகா-ள-ள-ஸ்ரீ
அ. சுந்தரநாத பிள்ளையவர்கள் இயற்றிய
நேரிசையாசிரியப்பா.

அமுதமுந் திருவுங் குமுதனன் னண்பனுந்
தோன்றிய சீர்கிள ரான்றபாற் கடலிற்
பாம்பணைப் பள்ளியிற் கூம்புறக் கைகுவித்
தமரர் போற்ற வறிதுயில் கொண்ட
தமர நெடுங்கடற் றனிவணன் றழூஉம்
பொருவிலாக் காதற் புகழ்பெறு கிழத்திய
ரிருவரி லொருவரா மெழிற்புவி மடந்தையின்
கயல்விழி சார்ந்த வியலமை முகமென
வயல்செறி பாண்டி வளநா டுயரும்
அழகினைக் கண்டு மழகினைச் செய்து
மறநெறி காட்டுந் திறனுயர் கண்ணெனக்
கூடலு நெல்லையுங் குலவிடு மிலகிய
வலக்கண் போல விலக்கணத் தமைந்தது
நெல்லையே யென்னுஞ் சொல்லையே புலவர்
அடுத்தடுத் தெங்குந் தொடுத்தே புகழ்வர்
அஃதான்று,
எண்குணக் கடலா மீசன் விரும்பி
மண்ணை யுண்ட மாயனும் வெள்ளைப்
பெண்ணைக் கொண்ட பிரமனும் பிறருஞ்
சூழ்ந்து போற்றித் தாழ்ந்து வணங்கத்
தறைவிலா தென்று நிறைவொடே வாழ்வதும்
ஊழிக் கடையினு முறுதியா யுற்றே

நாற்றிணை வளங்களு நன்கமைந் தமைவதும்
வேத மனைத்தும் விரும்பியே நோற்று
வேணுவென் றமைய வெள்விடைப் பாகர்
விழைந்ததில் முத்தாய் முளைத்தருள் செய்ததும்
அன்னை யெண்ணான் கறம்வளர்த் தமலனை
மணக்கப் பெற்றது மிணக்கமா யாடல்
கணக்கிலா தியற்றிப் பணக்கதி ரரவஞ்
சூடிய பெம்மான் நீடிய மழைக்குக்
கரங்கொடு நெல்லைக் கருத்தொடு காத்தது
மான மேன்மைத் தான மாகிய
திருநெல் வேலிசூழ் திருநெல் வேலி
என்றே மன்றப் பொன்றிகழ் நாடரும்
மருவ வுரைக்கும் பொருவில் திருவுறை
அரும்பதிப் புகழை விரும்புசெந் தமிழால்
யாவரு முணர மேவரு நடையில்
வழுவற வெழுதித் தொழுதிடத் தருகென
இந்தமா நகர்வாழ் முந்துமா மறையோன்
பிரமனே என்னப் பிறங்குறும் புகழான்
வெங்கடேஸ் வரவேள் விரும்பிய தவத்தின்
பயனென வந்த நயமுறு புத்திரன்
கல்வியுஞ் செல்வமுஞ் சொல்குணம் பலவு
மமைந்த புனித னமையென் றொளியர்
காதற் குடையான் தீதறு குடையான்
மேதகு கொடையான் வதமி னடையான்
என்றோ ருயிரெனு நான்ற ரன்பன்
வெங்கடேச் சுரப்போர் விகிர்தன் விளம்ப
அம்மொழி தன்னைச் செம்மொழி யெனஅக்
கருத்திற் கொண்டே திருத்தமா வெழுதி
மேவியல் திருநெல் வேலிப் புராண
மென்னும் பெயரே மன்னத் தந்தான்
அன்னவன் யாரெனி லருந்தமிழ்ப் புலவீர்
சொல்லக் கேண்மோ சொல்லக் கேண்மோ.

# சிறப்புப்பாயிரம்.

சிந்துவில் வேல்விடு மெந்தை யறுமுகக்
கந்தன் றாண்மலர் சிந்தையிற் பதித்தோன்
என்னுய ருணர்வெனு மென்றொரு காதல
னித்தா ரணியி லத்தா னென வழைத்
தின்பஞ் செய்வோன் பொன்னெனுங் குணத்தோன்
கூடலிற் கூடிவாழ் நாடரும் புகழான்
தருமமே யுதித்ததெ னை் தரும வுருவான்
மதுரையா பிள்ளையின் மாண்புறு புத்திரன்
முத்தமி ழருமை முதுபெருங் கடலில்
முழுகி யாடும் வழுவறு திறலான்
காரெனக் கொடுக்குங் கருணைக் கையான்
நாவலர் மெச்சும் நாற்கவி வள்ளல்
அழகிரி சாமியென் றன்பின்
நல்லோ ருரைக்கும் வல்லோன் றானே.



உ

சிவமயம்.

# சாற்றுக்கவி.



தஞ்சைமாநகர் சித்தாந்த வித்துவானும்
சிவகாசி விக்டோரியா பாடசாலைத் தமிழாசிரியருமாகிய
மகா-ள-ள-ஸ்ரீ
மு. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள்
இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நீர்வளருஞ் சடைமுடியின் நிலைத்தோங்கும்
பசுபதியுள் நிறைந்த மேன்மைப்
பேர்வளரும் பதிதிருநெல் வேலியென
மறைகளெலாம் பேசி டும்மால்
சீர்வளருஞ் சிவலிங்கம் ஆவுடையா
ளொடுந்தோன்றிச் சீவ ருய்யக்
கூர்வளருங் கடையுகத்து மழியாது
குடிகொண்டு குலவு மம்மா. (க)

இத்தகைய திருநாட்டின் சிறப்பொன்று
புராணத்தை யெவருங் கற்று
மத்தமொடு மதிசூடுஞ் சடாடவியர்
சரணமலர் மனத்திற் சூடி
வித்தகநல் வாழ்வனைத்து மிம்மையிலே
பெற்றுநனி விரும்பி வாழ்ந்தே
அத்தனுபர் கைலைதனை யந்தத்தி லடைகவென
வருளா லெண்ணி. (உ)

அருமறைசே ரந்தணர்தங் குலமணியா
யருணிலையி னமைவு கண்ட
திருமருவும் பெருவாழ்வு கொண்ட வேங்க
டேசுரப் பேர் செய்யோன் செய்த

மருவுறுநற் றவத்தமைந்த புத்திரனுங்
 குணங்கல்வி வண்மை யெல்லாம்
ஒருவடிவு கொண்டவேங்க டேசுரப்பேர்
 வள்ளலுமே யுரிய நண்பால். (௩)

அரியயற்கு மறிவரிய வத்தனல
 ரடிதோய வவனி யண்மித்
தெரிவரிய வெட்டெட்டுத் திருவிளையாட்
 டியற்றியருள் சீரார் கூட
லுரியபெருந் தவத்துதித்த அழகிரிசா
 மிப்புலவ னுள்ளங் கொள்ள
விரிமணமார் திருநெல்லைப் புராணத்தை
 நடையாக வியம்பு மென்றான். (௪)

இன்னவுரை தனைக்கேட்டே யிதயமிக்க
 களிகொண்டிங் கியைந்த தென்றே
மன்னுலகோர் பிறப்பொன்னுங் கடல்கடந்து
 சுகம்பெருகும் வளமார் முத்தி
துன்னுகரை யேறுதற்கோர் வங்கமெனத்
 தொழுதுலகோர் துதிக்க மாறு
நன்னயமார் நடையினியல் நழுவாது
 வழுவாது நவின்றா னம்மா. (௫)



உ
சிவமயம்,

திருநெல்வேலி வடக்குரதவீதி
ஸ்ரீ உ. ப. பஞ்சநதியாபிள்ளை அவர்கள் குமாரர்
மகா-ா-ா-ஸ்ரீ உமையொருபாகம்பிள்ளை அவர்கள்
இயற்றியது.

திருமகளும் வெண்கமலத் தொருமகளுங் கொழுநரொடு தினமும் வந்து
உருவமலை மகளடியு மவள்கணவன் உயரடியும் முழுந்து போற்றிக்
கருதரிய வளம்பெற்றுக் களியெய்து நெல்வேலிக் கதையை யன்பில்
உருகுதமிழ் வசனததால் உரைத்தலகோர் பெரும்பயனை யுண்ணு மாறு

செய்கவென வேதமுடன் றருமமெலா முன்றமுறையே செம்மை யாக
செய்யதிருப் பூசைதவ மியற்றியமை யிடமென்னச் சேர்ந்து போற்றுந்
துய்யதிரு நெல்வேலித் தலத்தமரும் வாழ்வுடையான் றோன்று மக்கள்
உய்யவென வெங்கடேச் சுரப்பெரியோ னருளீண்ட வுரைத்தா னன்றே.

அர்த்தவுரை வாடாதே யிந்தநில முயர்வெய்த வறிவின் மிக்கான்
சிந்தைமகிழ் கோடாதே சிவனடியை யுட்கொண்டே சிறப்பின் மிக்க
மூந்துதமிழ் கவிப்புலவன் அழகர்சா மிப்பெரியோன் முறையி னோர்ந்து
சந்தமுறுங் கவிகூட்டிச் சார்ந்ததொரு நடையாக்கித் தந்தா னம்மா.

சாற்றுக்கவி முற்றிற்று.



# திருநெல்வேலி ஸ்ரீ. காந்திமதி- நெல்லையப்பர் கோவி லில் நடக்கும் 12-மீ உற்சவங்களின் விபரம்.

## சித்திரைமீ

1உ சித்திரை விசு வானதால் சுவாமி சிந்துபூந்துறைக்குப் போய் தீர்த்தவாரிக்கு சந்திரசேகரர் போகிறது. சித்திரை சத்திரத்தில் சுவாமி சிந்துபூந்துறையில் தீர்த்தவாரி. பௌரண மையன்று மாசாபிஷேகம் கொழுந்து. திருவோண நட்சத்திரத் தில் சபாபதி அபிஷேகம். சதைய நட்சத்திரத்தில் அப்பர் திருவிளையாடல். பரணி நட்சத்திரத்தில் சிறுத்தொண்டர் திரு விளையாடல்.

## வைகாசிமீ

சுவாதி நட்சத்திரத்தில் சுவாமிக்கும் அம்பாளுக்கும் பால் அபிஷேகம். விசாகநட்சத்திரத்தில் சுவாமிக்கும் அம்பாளுக்கும் ஆயிரத்தெட்டு சங்கம் வைத்து அபிஷேகஞ் செய்தல், அன்று இரவு ரிஷபவாகனத்தில் வீதி வலம்வருதல். பௌரணமி மாசா பிஷேகம், சந்தனம்.

## ஆனிமீ

மூலநட்சத்திரத்தில் முதலில் பிள்ளையார் துவஜாரோகணம், அன்று திருஞான சம்பந்தமூர்த்தி திருவிளையாடல். விநாயக ருக்கு நாள் $5\frac{1}{2}$. முதலி மூவருக்குத் திருநாள், நாள் $6\frac{1}{2}$. சந்திர சேகரருக்கு நாள் $7\frac{1}{2}$. மகநட்சததிரததில் ஆனித்திருநாளுக்கு துவஜாரோகணம் ஆரம்பம், அன்று இரவு அம்பாள் சகிதம் பூங் கோவில்ச் சப்பரத்தில் வீதி வலம் வருதல்.

2-ம் திருநாள் காலையில் சுவாமிக்கும் அம்பாளுக்கும் வெள் ளிசப்பரத்தில் வீதிவலம், அன்று இரவு கற்பவிருக்ஷத்திலும் கமலவாகனத்திலும் வீதி வலம் வருதல்.

3-ம் திருநாள் காலையில கற்பகவிருக்ஷத்திலும் கமலவாக னத்திலும் வீதி வலம்வருதல் அன்று இரவு பூதவாகனத்திலும் சிம்மவாகனத்திலும் வீதி வலம் வருதல்.

4-ம் திருநாள் காலையில் குதிரை வாகனத்திலும் காமதேனு வாகனத்திலும் வீதிவலம் வருதல். அன்று இரவு சுவாமி அம் மனும் ரிடபவாகனத்தில் வீதி வலம் வருதல்.

5-ம் திருநாள் காலையில் ரிஷபவாகனத்தில் வீதி வலம் வருதல். அன்று இரவு இந்திரவாகனத்தில் வீதிவலம் வருதல்.

6-ம் திருநாள் பகலும இறவும சுவாமியும் அம்பாளும் ஆனைவாகனத்திலும் அன்னவாகனததிலும் வீதிவலம வருதல்.

7-ம் திருநாள் காலையில் பல்லக்கில் வீதிவலம்வருதல். அன்று இரவு குதிரைவாகனத்திலும் காமதேனு வாகனத்தில் வீதி வலம் வருதல். அப்போது நடராஜாவும் சப்பரததில் வீதிவலம் வருதல்.

8-ம் திருநாள் காலையிலும் சப்பரத்தில் பச்சை சாத்தி நடராஜருக்கு அலங்காரம் செய்து வீதிவலம் வருதல். நடராஜர் வீதிவலம் வந்தவுடன் சுவாமியும் அம்பாளும் பல்லக்கில் கோவிலுக்குள் சுத்திவருகிறது. அன்று பகல் 3-மணிக்கு கங்காளநாதர் பிக்ஷைக்காக வீதிவலம் வருதல். அன்றிறவு சுவாமியும் அம்பாளும் கைலாசபருவத வாகனத்திலும் கிளிவாகனத்திலும் தேர்கடாக்ஷம் செய்து வீதிவலம் வருதல்.

9-ம் திருநாள் சுவாமியும் அமபாளும் இரதத்தில் ஆரோகணித்து வீதிவலம் வருதல். அன்று இரவு சத்தாபர்ணத்தில் வீதிவலம் வருதல்.

10-ம் திருநாளில் தந்தப் பல்லக்கில் சுவாமியும் அம்மனும் ரதவீதி சுத்தி சிந்து பூந்துறைக்கு தீர்ததவாரிக்குப் போகிறது.

மகம நட்சத்திரத்தில் மாணிக்கவாசகா திருவிளையாடல்.

உத்திர நட்சத்திரத்தில் சபாபதி அபிஷேகம.

பௌரணமை திதியில் மாசாபிஷேகம பிலாப்பழம்.

பூரட்டாதி நட்சத்திரத்தில் சிரா அபிஷேகம் வருஷாபிஷேகம்.

உத்திரட்ட நட்சத்திரத்தில் 1008, ஆயிரத்தெட்டு திவ்விய கலசம் வைத்து சங்காபிஷேகம் செய்கிறது. அன்றிரவு சுவாமியும் அம்பாளும் ரிடபவாகனத்தில்வீதிவலம் வருதல்.

## ஆடிமீ

1உ தக்ஷணாயனபுண்ணியகாலமானதால் சுவாமி சிந்து பூந்துறைக்குப் தீர்த்தவாரிக்கு போகிறது பரணிநட்சத்திரத்தில் அம்பாளுக்கு வளகாப்பு திருநாளுக்கு அம்பாள்கோவில் துவஜாரோகணம்.

4-ம் திருநாளில் எண்ணெக்காப்பு உற்சவம்.

10-ம் திருநாளில் அம்பாள் சிந்து பூந்துறைக்குந்தீர்த்தவாரிக்கும்போய் வந்து கோவிலில் மொளெக்கொட்டு உற்சவம்.

பௌரணமை மாசாபிஷேகம் பால் சுக்கிலபக்ஷம் சதுர்த்தசியில் பவித்திர உற்சவம்.

இப மாசத்தில் மலமாசாதிகள் வந்தால் ஆவணி மீத்தில் நடக்கும்.

## ஆவணிமீ

மகநட்சத்திரம் சிம்ம லக்கினத்தில் ஆவணிமூலத்திருநாள் துவஜாரோகணம்.

4-ம் திருநாள் ரிஷபவாகனம.

9-ம் திருநாள் கேட்டை நட்சத்திரம் கன்னியாலக்கினத்தில் தேரோட்டம்.

10-ம் திருநாள் இரவு 11-ம் திருநாள் சூரியோதயத்துக்கு முன் மூலநட்சத்திரத்தில் சந்திரசேகரர் மானூருக்குப்போய் அம்பலத்தில் கருவூர் சித்தருக்கு தெரிசனம் கொடுக்கிறது.

சதுர்த்தசியன்று சபாபதிக்கு அபிஷேகம்.

பௌரணமியன்று மாசாபிஷேகம், கரும்புபால்.

## புரட்டாசிமீ

சதுர்த்தசியன்று நடராஜாவுக்கு அபிஷேகம்.

பௌரணமை மாசாபிஷேகம் அப்பம். பூர்வபக்ஷம் பிரதமைமுதல் நவராத்திரி ஆரம்பம்.

நவமிதிதியில் சரஸ்வதிபூஜை. தசமியன்று பகல் நாழிகை 24-க்குமேல் 28-க்குள் சந்திரசேகரர், ராமயன் பேட்டைக்கு வெள்ளிக்குதிரையில்போய் அம்புபோடுகிறது.

## ஐப்பசிமீ

1௨ ஐப்பசி விசு வானதால் சுவாமி சிந்து பூந்துரைக்குப் போய் தீர்த்தவாரி கொடுக்கிறது.

பௌரணமி பாசாபிஷேகம், அன்னம், பாணிநட்சத்திரம் தனுசுலக்கினத்தில் ஸ்ரீ காந்திமதி அம்பாள் திருக்கல்யாண மஹோர்ச்சவ துவஜாரோகணம்.

அன்றிரவும் பகலும், அம்பாள் பூங்கோவில் சப்பரத்தில் வீதிவலம் வருதல்.

2-ம் திருவிழா காலையில் வெள்ளிச்சப்பரம்,அன்றிரவு கமல வாகனம.

3-ம் திருநாள் காலையில் கமலவாகனம், அன்றிரவு சிம்ம வாகனம்.

4-ம் திருநாள் காலை காமதேனுவாகனம், அன்றிரவு ரிடப வாகனம்.

5-ம் திருநாள் காலை இடபவாகனம், அன்றிரவு இந்திர வாகனம்.

6-ம் திருநாள் காலையில் அன்னவாகனம் மாலையிலும்

7-ம் திருநாள் காலையில் தங்கபல்லக்கில் அம்மன் தவந்த கிருஷ்ண திருக்கோலம் அன்றிறவு காமதேனுவாகனம்

8-ம் திருநாள் காலையில் வெள்ளிச் சப்பரத்தில் அம்பாளுக்கு கோலாட்ட அலங்காரம், அன்றிரவு தங்ககிளி வாகனம்.

9-ம் திருநாள் காலையில் தேரோட்டம் அன்றிரவு பல்லக்கு.

10-ம் திருநாள்காலையில் அம்மன் பல்லக்கில் சிந்துபூந்துரைக்கு தீர்த்தவாரிக்குப் போகிறது. அன்றிரவு 3-மணிக்கு அம்பாள் தபசுசெய்யும் அலங்காரத்தோடு பம்பாநதிக்குச்சென்றுதபசுசெய்தல்

11-ம் திருநாள் காலை சுவாமி கல்யாணகோலத்துடன் ரிடபவாகனத்தில் பம்பாநதிக்கு மாலையிடப்போகுதல் சுவாமிவருவதைக்கண்ட அம்பாள் உடனே சுவாமிக்கு மூன்று பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம்செய்து மாலைபோடுவது தீபாராதனை நடந்

து சுவாமியும் அம்பாளும் வீதிவலம்வந்து கோவிலுக்கு வருகிறது; அன்றிரவு அம்பாள் பல்லக்கில் சிந்துபூந்துறைக்கு காதல் குளித்துவிட்டு பூப்பல்லக்கில் கோவிலுக்கு வருகிறது.

அப்பால் சுவாமி கல்யாணகோலத்துடன் அம்மன்கோவிலுக்குப்போய் காலையில் உத்திராட நட்சத்திரத்தில் கல்யாணமாகி சுவாமி ஆனைவாகனத்திலும் அம்பாள் பூப்பல்லக்கிலும் வீதிவலம் வருதல் கல்யாணமான மூன்றுநாள்வரை ஊஞ்சல் உற்சவம்.

கல்யாணமான நாலாம்நாள் சிந்து பூந்துறையில் தீர்த்தவாரி அன்றிரவு ரிடபவாகனத்தில் வீதி வலம் வருதல்.

பூர்வபக்ஷம் பிரதமைமுதல் ஷஷ்டிவரை சுப்பிரமணிய சுவாமி உர்ச்சவம். ஷஷ்டியன்று சுப்பிரமணியசுவாமி குதிரை வாகனத்திலும் ஆறுமுகநாயனுர் சப்பரத்திலும் வீதிவலம் வந்து ஈசானியத்தில் சூரசம்காரம் செய்வது.

## கார்த்திகைமீ

1-உமுதல் 30-தேதி வரை விசேஷதிருவனந்தல்

பௌரணமி மாசாபிஷேகம் நெய்தீபம

கார்த்திகை நட்சத்திரத்தன்று நாளது சுவாமியும் அம்பாளும் தீபோற்சவகாட்சிகண்டு பின வீதிவலம் வருதல்

## மார்கழிமீ

சதைய நட்சத்திரத்தில் திருவெண்பாவைதிருநாள் துவஜாரோகணம,

4-ம் திருநாளில் ரிஷபவாகனத்தில் சுவாமி வீதிவலம்வருதல்.

6-ம் திருநாள் அன்று கோவில் மனோன்மணியம் மனதிருக் கல்யாணம், பௌரணமி மாசாபிஷேகம், நெய்.

10-ம் திருநாள் சூரியோதயத்தில் தாம்பிரசபையில் ஆருத்திராதெரிசனம். நடராஜாதிரு நடனம்.

## தைமீ

1-ம் உ மகரச்சக்கராந்தியானதகல்சுவாமி சிந்து பூந்துறைக்கு போய் தீர்த்தவாரி கொடுக்கிறது.

2-ம் திருநாள் சுவாமி பார்வேட்டைக்கு வெள்ளைமடத்துக்கு போகிறது. உத்திரட்டாதி நட்சத்திரம் மகரலக்கினத்தில் தைப்பூசத்துக்கு துவஜாரோகணம்.

4-ம் திருநாள் நெல்லுக்கு வேலிகட்டிய திருவிளையாடல் அன்று ரிடபவாகனம் வீதிவலம் வருதல்.

10-ம் திருநாளில் சுவாமியும் அம்பாளும் ரிடபவாகனத்தில் சிந்துபூந்துரைக்குப் போய் பூசநட்சத்திரத்தில் தீர்த்தம் கொடுக்கிறது. மறுநாட் காலையில் சுவாமியும் அம்பாளும் வீதிவலம் வருதல். அன்று காலையில் சௌந்தரிய சபையில் நடராஜர் திருநடனம்.

12-ம் திருநாள் தெப்ப உற்சவம். பௌரணமி மாசாபிஷேகம், தேன். கிருஷ்ணபட்ச திரயோதசிமுதல் பத்திரதீபம் உர்ச்சவம், ஆரம்பம், அன்றுமுதல் அமாவாசைவரை நாள் மூன்றுக்கு மஹாருத்திரா அபிஷேகம் செய்து அன்று இரவு சிவிலிநாயகர் கோவிலுக்குள் வலம்வருதல். அமாவாசையன்று பத்திரதீபம். அன்று இரவு ரிடபவாகனத்தில் வீதிவலம் வருதல்.

6-ம் திருநாளில் வருடங்களுக் கொருதடவை லெட்சத்தீபம நடக்கும். அன்று ரிஷபவாகனத்தில் சுவாமியும் அம்பாளும் வீதிவலம் வருதல்.

## மாசிமீ

சதுர்த்தசியில் நடராஜாவுக்கு அபிஷேகம் பௌர்ணமி மாசாபிகேஷம் தாவளி.

அன்று இரவு அப்பர்சுவாமி பொற்றாமரையில் தெப்ப உற்சவம்.

## பங்குனிமீ

கார்த்திகை நட்சத்திரத்தில் பங்குனி உத்திரத் திருநாளுக்கு துவஜாரோகணம்.

4-ம் திருநாள் பாலுக்காக வெட்டப்பட்ட திருவிளையாடல்

10-ம் திருநாளில் உத்தர நட்சத்திரத்தில் சுவாமி செங்கோல் கொடுக்கிறது.

பௌரணமி மகசாபிஷேகம், தயிர்.

**மாசாந்திர உற்சவாதிகள் முடிந்தது.**



## சருக்க அட்டவணை.


| தொ. | சருக்கம். | பக்கம். |
|---|---|---|
| | காப்பு. | அ |
| க | நைமிசாரணியச் சருக்கம் ... | க |
| உ | நாட்டுச்சருக்கம் ... | கசு |
| ங | நகரச்சருக்கம் ... | உகூ |
| ச | வேணுவனச்சருக்கம் ... | சய |
| ரு | தருமதேவதை இடபமானச்சருக்கம் ... | சகூ |
| சு | அகத்தியா வரவு, தக்கன் வேள்விச்சருக்கம் ... | ருஉ |
| எ | இமயபருப்பதச்சருக்கம் ... | சுரு |
| அ | காமதகனச்சருக்கம் ... | எஉ |
| கூ | மோனம் நீங்குசருக்கம் ... | அங |
| கய | தவங்காண்சருக்கம் ... | அஎ |
| கக | மணம்பேசுசருக்கம் ... | கூங |
| கஉ | வரை அலங்காரச்சருக்கம் ... | கூச |
| கங | கணங்கள்செல்சருக்கம் ... | கூஅ |
| கச | இமயமலையிற் சுவாமி எழுந்தருளினச்சருக்கம் | கயஉ |
| கரு | அகத்தியரைத்தென்பாலனுப்பிச்சருக்கம் ... | கயகூ |
| கசு | கிரௌஞ்சகிரிச்சருக்கம் ... | ககசு |
| கஎ | விந்தகிரிச்சருக்கம் ... | கஉச |
| கஅ | வில்வலன் வாதாவிச்சருக்கம் ... | கஉசு |
| ககூ | திருக்குற்றாலச்சருக்கம் ... | கஉகூ |
| உய | அகத்தியர் வேணுவனத்துற்றச்சருக்கம் ... | கஙச |
| உக | தென்மலைத்தாம்பிரபன்னித் தீர்த்தச்சருக்கம் ... | கஙகூ |
| உஉ | பாவநாசச்சருக்கம் ... | கசக |
| உங | திருமூலநாதச்சருக்கம் ... | கசங |
| உச | காசிபேசுரச்சருக்கம் ... | கசச |
| உரு | திருக்கோடீசுரச்சருக்கம் ... | கசகூ |
| உசு | கம்யேந்திரமோக்ஷச்சருக்கம் ... | கருஉ |
| உஎ | திருப்புடைமருதூர்ச்சருக்கம் ... | கருச |
| உஅ | சோமதீர்த்தச்சருக்கம் ... | கசுய |
| உகூ | உரோமேசுரத்தீர்த்தச்சருக்கம் ... | கசுக |
| ஙய | துருவாசேசுரதீர்த்தச்சருக்கம் ... | கசுங |
| ஙக | மந்திரேசுரச்சருக்கம் ... | கசுரு |
| ஙஉ | திருவக்கினீசுரச்சருக்கம் ... | கசுகூ |

| தொ. | சருக்கம். | பக்கம். |
| --- | --- | --- |
| ஙங | அறகேசுரச்சருக்கம் ... | கஎக |
| ஙச | சிகதுபூந்துறைச்சருக்கம் .. | கஎஉ |
| ஙரு | சத்தவிருடிகள் தீர்த்தச்சருக்கம் ... | கஎசு |
| ஙசு | குட்டத்துறைத் தீர்த்தச்சருக்கம் ... | கஎகூ |
| ஙஎ | சடாயுதீர்த்தம் அல்லது இராமேச நல்லூர்ச்சருக்கம் ... | கஅக |
| ஙஅ | மங்களேசுரத்தீர்த்தச்சருக்கம ... | கஅஉ |
| ஙகூ | பிரிதி[illegible]சருக்கம் ... | கஅச |
| ச0 | வைகுந்தச்சருக்கம் ... | கஅரு |
| சக | காந்திசுரசசருக்கம் .. | கஅசு |
| சஉ | ஆழ்வார்திருநகரியாகியதிருக்குருகூர்ச்சருகம் ... | கஅஎ |
| சங | நவலிங்கபுரச்சருக்கம் ... | கஅஅ |
| சச | பிரமேசுரச்சருக்கம் ... | கஅகூ |
| சரு | சோமேசுரச்சருககம் ... | ககூக |
| சசு | திருச்செந்தூர்ச்சருக்கம் ... | ககூங |
| சஎ | சங்கமத்துறைச்சருக்கம் ... | ககூஎ |
| சஅ | தாம்பிரபன்னிச்சருக்கம் ... | ககூஅ |
| சகூ | அகத்தியர்லோபாமுத்திரைக்கு தலமகிமை யுரைத்தசருக்கம் ... | உ0ங |
| ரு0 | அகத்தியருக்கு மணக்கோலங்காட்டினச்சருக்கம் ... | உ0கூ |
| ருக | கைலாசவிலாசச்சருக்கம் ... | உகசு |
| ருஉ | அறம்வளர்த்தசருக்கம் ... | உஉஎ |
| ருங | காட்சிகொடுத்தச்சருக்கம் ... | உஙஅ |
| ருச | திருக்கல்யாணச்சருக்கம் ... | உசரு |
| ருரு | பட்டாபிஷேகச்சருக்கம் ... | உருச |
| ருசு | விட்டுணு திருவிளாநடத்தியசருக்கம் ... | உசுச |
| ருஎ | தாருகாவனச்சருக்கம் ... | உசுஅ |
| ருஅ | சத்தவிருடிகள் கலியுகத்துக்கஞ்சி வந்துபேறுபெற்றசருக்கம் ... | உகூஅ |
| ருகூ | திருமூலலிங்கச்சருக்கம் ... | ங0ங |
| சு0 | வேண்டவளர்ந்தமாலிங்கச்சருக்கம் ... | ங0சு |
| சுக | நெல்லுக்குவேலியிட்டசருக்கம் ... | ஙகசு |
| சுஉ | சுவேதமுனிகாலனைக்கடந்தசருக்கம் ... | ஙஉ0 |

| தொ. | சருக்கம். | | பக்கம். |
|---|---|---|---|
| சா௩ | சிந்துபூந்துறை இலிங்கமகிமைச்சருக்கம் | ... | ௩உஅ |
| சாச | பாடலங்கம்பை மகிமைச்சருக்கம் | ... | ௩௩க |
| சாரு | கருமாரிமகிமைச்சருக்கம் | ... | ௩௩சா |
| சாசா | பொற்றாமரைச்சருக்கம | ... | ௩௩அ |
| சாஎ | தீர்த்தச்சருக்கம் | ... | ௩சசா |
| சாஅ | நீலவண்ணனன்னதானமகிமைச்சருக்கம் | .. | ௩ருக |
| சாகூ | ஆனிவிழாவில் அன்னதானமகிமைச்சருக்கம் | .. | ௩ருச |
| எ0 | விபூதிமகிமைச்சருக்கம் | ... | ௩ருசா |
| எக | உருத்திராக்கமகிமைச்சருக்கம் | .. | ௩ருஅ |
| எஉ | பஞ்சாக்கரமகிமைச்சருக்கம் | ... | ௩ருகூ |
| எ௩ | சிவபூசைமகிமைசசருக்கம் | ... | ௩சா0 |
| எச | பிரதோடமகிமைச்சருக்கம் | ... | ௩சாஉ |
| எரு | புட்பார்ச்சனைச்சருக்கம் | ... | ௩சாச |
| எசா | உருத்திராபிடேகச்சருக்கம் | ... | ௩சாரு |
| எஎ | சிவபுண்ணியமகிமைச்சருக்கம் | ... | ௩சாஎ |
| எஅ | தீபச்சருக்கம் | ... | ௩எக |
| எகூ | தொண்டர்கள் மகிமைச்சருக்கம் | ... | ௩எச |
| அ0 | வருணாசிரம நல்லொழுக்கங் கூறியச்சருக்கம் | ... | ௩எசா |
| அக | பிரமசரியச்சருக்கம் | .. | ௩எஅ |
| அஉ | மகளிரிலக்கணங்கூறியச்சருக்கம் | ... | ௩எகூ |
| அ௩ | ஆசாரங்கூறியச்சருக்கம் | ... | ௩அக |
| அச | இல்லறங்கூறியசருக்கம் | ... | ௩அ௩ |
| அரு | துறவறங்கூறியசருக்கம் | ... | ௩அச |
| அசா | சர்வப்பிராயச்சித்தசருக்கம் | ... | ௩அசா |
| அஎ | நாலுஉகங்களுந் தவம்புரிந்து பேருபெற்றசருக்கம் | ... | ௩அஎ |
| அஅ | அரதகவடிவம்மைச்சருக்கம் | ... | ௩அகூ |
| அகூ | பிட்டாபுரத்தி அம்மைச்சருக்கம் | ... | ௩கூ௩ |
| கூ0 | நெல்லை கோவிந்தர்சருக்கம் | ... | ௩கூஎ |
| கூக | அரியயனருச்சனைச்சருக்கம் | ... | ௩கூகூ |
| கூஉ | நாரதச்சருக்கம் | ... | ச00 |
| கூ௩ | அனந்தனாதி நாகவரசர் வரம்பெறும் சருக்கம் | ... | ச0க |
| கூச | அகத்தியர் அரசுசெய்சருக்கம் | .. | ச0உ |
| கூரு | வங்கிய குலசேகரபாண்டியச்சருக்கம் | ... | ச0௩ |

| எ௭. | சருக்கம். | பக்கம். |
|---|---|---|
| கூசு | குலசேகரபாண்டியச்சருக்கம் ... | ச0ச |
| கூஎ | உருத்திரகோடிச்சருக்கம் ... | ச0சு |
| கூஅ | இப்புரிச்சருக்கம் ... | ச0அ |
| கூகூ | கச்சபாலச்சருக்கம் ... | சக0 |
| ச00 | பிரமவிருத்தபுரச்சருக்கம் ... | சக௩ |
| க0க | தசரதராமன பூசைபண்ணியசருக்கம் ... | சகச |
| க0உ | தலமகிமை கேட்ட கிருட்டினனுக்கு புத்திரனுதவியசருக்கம் ... | சகரு |
| க0௩ | பொற்றாமரையில் முழுகின பெண்களுக்குப் புடவைகொடுத்தசருக்கம் ... | சகசு |
| க0ச | காமவேதியனுக்குக் காமவேதனை தீர்த்தசருக்கம் | சகஎ |
| க0ரு | உபாத்தியாய நாகவந்துபிள்ளைகளுக்கு ஓதுவித்தசருக்கம் ... | சகஅ |
| க0சு | பாவொனமகன் துயரந்தீர்த்தசருக்கம் ... | சககூ |
| க0எ | வேதியன்பாவந்தீர்த்த சருக்கம் ... | சஉ0 |
| க0அ | கருவூர்ச்சித்தர் சருககம் ... | சஉக |
| ச0கூ | திருஞானசம்பந்தபிள்ளையார் சருக்கம் ... | சஉஉ |
| கக0 | தொண்டர்கள் நயினர்ச்சருக்கம் ... | சஉச |
| ககக | நின்றசீர்நெடுமாறநாயனர் சருக்கம் ... | சஉரு |
| ககஉ | வடபுலத்துகெவுடன்வந்தச்சருக்கம் ... | சஉஎ |
| கக௩ | தாம்பிரசபையில் அம்மைக்குநடனங்காட்டியசருக்கம் ... | சஉஅ |
| ககச | தேவர்களுக்கு அகோரதாண்டவங்காட்டிய சருக்கம் ... | சஉகூ |
| ககரு | காளியுடன்வாதாடுச்சருககம் ... | சஉகூ |
| ககசு | அம்மைக்குஆனந்தசவுந்தரிய நடனங்காட்டியசருக்கம. ... | ச௩0. |
| ககஎ | மானூர்ச்சபையிலாசசரிய நடனச்சருக்கம், ... | ச௩க. |
| ககஅ | தாம்பிரசபைநடனந்தரிசித்தவனும் அவனைக்கூடினவருங்கதியடைந்தசருக்கம் ... | ச௩க. |
| கககூ | தாம்பிரசபை நடனதரிசனங்கண்டவேதியனைக்கண்டபாவிகதியடைந்தசருக்கம். ... | ச௩௩. |
| ச2உ0 | திருநெல்வேலிப்புராணம் படித்தவேதியனைக்கண்டபாவிகதியடைந்தசருக்கம். ... | ச௩ச. |





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநெல்வேலித் தலபுராண வசனம்.



## காப்பு.

சீர்பூத்த செழும்பவளக் குன்றென்னத் திகழ்கரியைத்
    தேவி யீன்ற
நார்பூத்த முதற்சேயை நவையனைத்து மகற்றியருள்
    நாட்டுந் தேவைப்
பேர்பூத்த மறைமுடிவைப் பிரணவத்தின் பிறங்குருவப்
    பெம்மான் றன்னைக்
கூர்பூத்த கருத்தினிடைக் குலவநனி கூட்டிமிகு
    குறையை வெல்வாம்.

## வேணுவனநாதர் துதி.

திருவிதழி கங்கையரா திங்கண்முடி தரித்தவனைக்
கருவிலெனை யினிப்படைக்காக் கருணையனைக் கானத்தே
மருவியபா லிடையனன்று வண்படையால் வெட்டுகையி
லுருவிலிங்க மாய்வேயி லுதித்தவனை யுள்குவமே.

நெல்வேலிநாதர் துதி.

கண்ணகன் ஞாலந் தன்னிற் கடையனே னெடுத்த வெண்ணில்
நண்ணரும் பிறப்பி னெல்லாம் நல்லுயிர்க் குயிராய் நின்றே
எண்ணருஞ் சிறப்பை நல்கி யியல்பெறும் வாழ்வை யீயும்
புண்ணருந் திருநெல் வேலிப் பரனடி முடிமேல் வைப்பாம்.

திருமூலநாதர் துதி.

தேமேவு மரிபிரம னறிவரிய பேரொளியாய்த்
திகழ்ந்து பூமேல்
தூமேவு வித்தாக முளைத்தருளிப் பரந்தோங்கித்
தொடர்ந்த வன்பால்
மாமேவு முயிர்க்குயிராய் ஆநந்த மயமாகி
வயங்கு வானைப்
பாமேவு திருமூல நாயகனை யனுதினமும்
பரவி வாழ்வாம்.

சபாநாயகர் துதி.

அருமறையும் அறிவரிய ஆநந்த நிலையாகி
யகண்ட மாகிப்
பெருகொளியாய்ப் பேசரிய நிட்களமாய் நின்மலமாய்
பிறப்பி றில்லாத்
தருகருணை முழுமுதலாய்த் தாம்ரசபை யூடுநின்று
தக்கோர் போற்றத்
திருநடனம் புரிந்தருளுஞ் செம்பதுமக் குஞ்சிதத்தாள்
சிந்தை வைப்பாம்.

தக்ஷிணாமூர்த்தி துதி.

மன்னியநற் சராசரங்க ளெல்லாமாய் அல்லவுமாய்
வயங்கி யைந்தெனு
பண்ணுதொழில் நடத்தியருள் சிவமென்னும் பரம்பொருளைப்
பரிவின் முன்னாள்

அன்புடனே சநகரொடு நால்வருக்கு மறிவரிய
வமுத ஞானந்
தென்முகமா யிருந்தருளித் தெரித்தருளும் பெருமானைத்
தெளிந்து வாழ்வாம்.

காந்திமதியம்மை துதி.

விண்ணவரும் மண்ணவரும் விளங்குபெரு முனிவரரும்
நண்ணவருந் திருப்பாதம் நதிச்சடையார் திருக்கரத்தால்
புண்ணவர்கள் பரவிடவே பரிந்துதொடப் பெறும்பாதம்
அண்ணலிடக் காந்திமதி அழகியபொற் பாதமம்மா.

வடிவாள் துதி.

அத்தனார் வாழும் நெல்லை அரும்பதி யதனில் நாளும்
ஒத்தநா லெட்டாக் கூறும் உயரறம் விளங்கச் செய்து
சித்தமா சகன்ற நல்லோர் தெளியுளக் கோவில் வாழும்
சத்திமா வடிவாள் பாதந் தலைமிசைச் சூடி வாழ்வாம்.

விநாயகர் துதி.

கடல்சூழும் வையகத்திற் கருத்தறியாச் சிறியேனைக்
கருத்துட் புக்கே
அடல்சூழும் மாயையிருள் தேய்ந்தொழிய ஞானவொளி
யமைய நாட்டி
உடல்குளிரும் படியெனக்குச் சிவயோகந் தந்தருளும்
மூமையாள் பாகன்
மடல்விரிபூங் கரக்கனிக்கா வவரைவலம் வருங்கரியை
வணக்கஞ் செய்வாம்.

சுப்பிரமணியர் துதி.

விண்ணவர்க் கலக்கண் தந்த விறன்மிகு மசுரர் தம்மை
எண்ணரும் வடிவேல் கொண்டே யின்புற வழித்துத் தேவர்க்
கெண்ணரும் நிலையைத் தந்த இளையவன் முருகன் றன்னை
கண்ணினிற் கருத்திற் சேர்த்தே கதித்தநல் லின்பந் துய்ப்பாம்.

### வாணி துதி.

வேதனுயர் வியன்நாவில் விளங்கியொளிர் வெண்மலரில்
விரும்பி மேவும்
சீதமதி முகத்தாளை விண்பணியும் பதத்தாளைத்
திவவு யாழும்
போதமுறு புத்தகமும் மணிவடமும் பிடித்தாளைப்
போற்றி செய்தே.
கோதறுநற் கவிநான்குங் குவலயத்திற் களியெய்தக்
கூறு வேனே.

### நந்தியடிகள் துதி.

சிந்தைநோய் தவிர்க்கு மெங்கள் சிவபிரான் வாழுங் கைலை
வந்தடி தொழுவா னெண்ணி மணிமுடி யுறைஞ்சத் தேவர்
முந்துறு பொழுதி லன்னார் முடிமிசை யடிவைத் தாங்கே
பந்தியாய் நிறுவும் நந்தி பதமலர் முடிமேல் வைப்பாம்.

### திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.

தூமேவுங் கவுணியர்தங் குலத்துதித்துத் தூயமறை
தொடர வொண்ணு
மாமேவு கடவுளிட மேவுமுமை தருமுலைப்பால்
மகிழ்வி னுண்டு
மீமேவு முயர்ஞான முணர்ந்தமணர் தமைவென்று
விளியவென்றே
கூமேவு கழுவிலிட்ட திருஞான சம்பந்தன்
குணத்தாள் போற்றி.

### அப்பர் துதி.

எம்மதத்துஞ் சிறந்ததுநஞ் சைவமதஞ் சிவனேதான்
இறைவ னென்னும்
சம்மதத்துக் குலகறியக் கலைகடந்த திருநாவால்
தமிழ்ப்பாப் பாடி

வெம்மதத்துக் களிறஞ்ச நீற்றறைபூந் தடமாக
விளைந்து கல்லே
யம்மதத்தும் புணையாகக் கடல்கடந்த வப்பரடி
யடைந்து வாழ்வாம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி.

பாராரும் பைந்தமிழாற் பரனடிக்கே பண்ணாரும்
பதிகம் பாடிப்
பேராரும் பெருமானுக் காளாகி யவர்தந்த
பீடார் பொன்பெற்
றோராரு மாற்றிலிட்டுக் குளத்தெடுத்தே யதைப்பின்னு
மினிய வன்பின்
நேராரும் பரவையகம் புக்களித்த சுந்தரன்றாள்
நினைதல் செய்வாம்.

## மாணிக்கவாசகர் துதி.

வேணிக்கண் நதிவைத்த பெருமானைப் பரியாளாய்
விரும்பும் வேம்பன்
காணிக்கண் வந்தருள வைகையிருங் கரையடைக்கக்
கனிவிற் பிட்டு
வாணிக்கன் றாளாக முடிமிசைமண் சுமந்தருள
வழுத்தும் பாச்சொல்
மாணிக்க வாசகர்தன் றாண்மலரை மனத்திருத்தி
மகிழ்வாம் மாதோ.

## அகத்தியர் துதி.

தென்புவித் தாழ்வு நீக்கித் திருத்தமிழ் வளத்தை நீட்டி
மன்புவி மாந்தர் வாழ மலையமா மலையில் ஈசன்
சொன்மொழிப் படியே வந்த சுந்தரக் கும்பன் றாள்கள்
என்முடிக் கணிந்தே னென்றோ வினிக்குறை யெனக்குத் தானே.

## தீட்சாகுருவின் துதி.

வீங்கிய மறைவலார் நால்வர் விளங்கொரு ஞானந் தேரப்
பாங்கொரு யோகியாய் நின்றான் பாவியே னுய்ய வெண்ணிப்
பூங்குடிச் சச்சிதா நந்தப் புகழ்பெயர் தாங்கி வந்தான்
ஈங்கவன் றாளிணை போற்றி யெழில்பெறத் துதிப்பாம் மன்னோ.

## தமிழாசிரியர் துதி.

தேசுபெருந் திருத்தமிழைத் திருத்தமுறத் தெளிவில்லாச்
சிறிய வெற்கும்
வீசுபுகழு ளன்பா லுரைத்தருளி யுலகிலெனை
விளங்கச் செய்த
பூசுநல வொளிகாலுந் திருநீறு விளங்குமெழிற்
பொன்னின் மேனிப்
பேசுதமிழ் அமிர்தகவி அமிர்தத்தின் அடிமலர்கள்
பெற்றேன் பெற்றேன்.

## அவையடக்கம்.

வேதங்கள் வேணுவென வமைநெல்லைப் புராணத்தை
விளம்ப வென்றால்
போதங்கள் கடந்தபெரு முனிவரர்கும் போதற்கும்
பொருந்தா தென்றே
மாதங்க முடையபிரான் மொழிந்தனனேல் மடமைநிறை
மதிகொள் யாமோ
ஓதங்க முறைநிறுத்தி யுரைப்பதெனை உள்கிமிக
வெள்கு முள்ளம். (க)

பிறந்தபெரும் பிறப்பிலெலாம் மக்களெனப் பிறப்பதுவே
பேசின் மேலாம்
அறந்தருநன் ஞானமொடு மமலனையே போற்றுதலோ
வதனின் மேலாம்

உறந்தருநல் வேய்வனநீ தினுயர்புகழை யுரைப்பதுவே
யுய்ய வீட்டின் [றற்
திறந்தருமென் றியம்புமுறை கேட்டுளங்கொள் பான்மையி
சிறிய யானும். (௨)

என்னிடத்தி லன்புடைய சிவநேயர் பலர்கிட்டி
யினிய சொல்லால்
மன்னுமலை மகளோடுஞ் சிவனுறையுந் தலத்திலெல்லாம்
மதிப்பு வாய்ந்த
பன்னுதிரு நெல்வேலிப் புராணத்தை வசனத்தாற்
பகர்ந்து பாரில்
நன்னுதலார் தாமுமுணர் வகைசெய்க வெனமொழிந்தார்
நலத்தை யாய்ந்தே. (௩)

அன்னமொழி கேட்டிடினு மதுசெய்யு மறிவுவலி
யமையே னென்னுந்
துன்னுபய மொருபுறத்து வந்திருந்தே னுரையளித்த
தோகை பாகன்
மன்னுபுகழ் கூறுதும்யாம் எனவெழுந்த வேட்கைமிக
வலிமை கொண்டே
பன்னுமுயர் புராணத்தை யெழுதுவித்த திறையருளாற்
பரிந்து மாதோ. (௪)

இதுகண்ட பெரியோரு மெனையிகழா ரிதிற்பிழையை
யென்றுங் காணார்
விதுகண்ட திருமுடியி லரவணிபெம் மான்வாழும்
மேன்மை மிக்க
நதிகொண்ட தலமகிமைப் புகழெண்ணி யீடுபட்டு
நாதன் றுய்ய
மதுகொண்ட மலரடிக்கே யன்புகொண்டிங் குரைத்ததென
மதிப் பரன்றே. (௫)

குற்றமெலாங் குறிப்பதற்கோ ரிலக்கியமா மிந்நூலைக்
குணஞ்சேர் மேலோர்

குற்றமெலா மகற்றியருள் வீடுதரும் புனிதமுறு
குழகன் றனைக்
கற்றதனின் பயனாகக் கற்றறியும் பயனுடைமை
கருதிக் கண்டு [பர்.
முற்றுகளிப் புடையவராய் முறைசெய்வர் பிழைபொறுப்
முனியார் மண்ணோ. (௬)

## நூல்வழி.

நெல்வேலித் தலமேன்மை முழுதுமுறை மறையுணர்ந்த "
நீரர் வாய்மைச்
சொல்வேலி யந்தணர்தந் துகளறுநல் வழியாகச்
சோற்ற தேவ
எல்லாரும் பாடைமொழி பெயர்ப்பறிந்தும் நெல்லையப்பன்
இயம்பும் மேன்மை
வில்லாருங் கவியுணர்ந்துங் கவின் நடையிற் புகன்றனம்யாம்
விளங்க மாதோ. (௭)



உ

திருச்சிற்றம்பலம்.

# திருநெல்வேலித்தலபுராண வசனம்.



## நைமிசாரணியச் சருக்கம்.

திருத்தகு சைவமோங்கச் சிவபுரா ணங்கள் எல்லாம்
அருத்தியின் முனிவர் கேட்க அருந்தவச் சூதர் கூறப்
பொருத்தம தாக நின்ற புகழ்மிகு நைமி சப்பேர்
பெருத்தநற் காவை நாவாற் பேசிடின் முத்தி யாமே.

அண்டபகிரண்டங்கள் அனைத்தும் ஆன அகண்டபரிபூரண சச்சிதாநந்தப் பரம்பொருளால் தந்தருளப்பெற்ற வேதங்களை இடைவிடாது மலர்போலுஞ் செவந்த அழகிய வாயால் பாடிக் கொண்டிருப்பவனும், மலர்ந்த செவந்த ஆம்பல் மலர்போன்ற திருவாயும், கச்சணிந்த களபக் கொங்கையும், பூரணச்சந்திரனைப் போன்ற அழகிய முகத்தையு முடைய கல்வித்தேவியாகிய வாணிக்கு நாயகனும், அழகிய உலகங்களை எல்லாம் படைப்பவனும், நான்கு திருமுகங்களும் எட்டுக்கண்களு முடையவனுமான பிரம்மதேவன் தன் ஆதனத்தில் வீற்றிருக்கும்பொழுது; பரந்து சூழ்ந்த கடலைத் தனக்கு ஆடையாகவுடைய உலகத்திலே நல்லதவங்கள் பலவற்றையுஞ் செய்து தினந்தினம் நல்ல தருமங்களை இயற்றி விளங்கும்படியான குற்ற மற்ற முனிவர்களெல்லாம் ஒன்றுகூடித் திரண்டு வந்து அப்பிரமதேவனின் அழகிய மலர்ப்பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்கள். வணங்கிய அவர்கள் பிரமதேவனைப்போற்றித் துதித்து "ஐயனே! நாங்கள் இன்றுவரையிலும் அரிய நல்லதருமத்தைச்செய்து பூமிமுழுதும் சுற்றிவந்தும் எங்களுக்குத் தவஞ்செய்யத்தக்க இடங்கிடைக்கவில்லை, ஆகையாற்றங்களிடம் வந்தடைந்தோம், தாங்கள் எளியோங்கள் மீது கருணை கூர்ந்து

தவஞ் செய்தற்குத் தக்க வனத்தைக் காட்டியருளவேண்டும்” என்று வேண்டினார்கள்.

பரிசுத்தமுடைய அந்தப் பிரமதேவன் முனிவர்கள் விண்ணப்பத்தைக் கேட்டுணர்ந்து, அருள்செய்ய விரும்பி ஒரு தருப்பைப் புல்லை எடுத்துச் சக்கரமாக வளைத்து அவர்கள் முன்னால் உருட்டி இதுபோய்த் தங்குமிடத்தில் நீங்களும் தொடர்ந்து சென்று தங்கித் தவஞ்செய்திருங்கள் என்றார்.

உடனே முனிவர்களெல்லாம் பிரமதேவனைத் துதித்துப் போற்றி வணங்கி விடைபெற்றுக்கொண்டு அந்தப் பிரமதேவன் விடுத்த தருப்பைப்புல்லாலாக்கப்பட்ட சக்கரத்தைத்தொடர்ந்து சென்று, அது தங்கிய வனத்திற்றங்கி, பிரமதேவனின் அருளை நினைந்து துதித்து, இது தேவலோகத்தை அளாவிய வனமென வியந்து, களித்திருந்தார்கள். பூமியிடத்தே பிரமதேவனால் விடப்பட்ட தருப்பை நேமியால் காட்டப்பெற்ற நலத்தால் அதற்கு ‘நைமிசாரணியம்’ என்னும் ஒரு பெயர் ஏற்பட்டது. அந்த வனத்தின்கண்ணே பொய்யினின்றும் நீங்கிய மெய்த்தவமுனிவர்கள் எவ்லோரும் பயனைத் தரக்கூடிய நெறியிலே நின்று மூலப்பொருளைத்துதித்து மேலானபெருந்தவங்களைச்செய்துகொண்டிருந்தார்கள். அவ்விடத்திலே முனிவர்களுடைய வேள்விச் சாலைகளும், வேதம்பயிலுஞ் சாலைகளும், உயர்ந்த பன்னசாலைகளும், பலவகைமணிகளால் இழைத்துச் செய்யப்பட்ட பாகசாலைகளும், உயர்ந்த யோகசாலைகளும், நிலைமாடங்களையுடைய சாலைகளும், மாடங்களையுடைய சாலைகளும், மணிகள் குயிற்றிய சிகரங்களையுடைய சாலைகளும், பற்பலகோடி விளங்கின. அவ்வழகியவனத்தின் இடங்கள்தோறும் வேதிகைகளைச் சுற்றியிருந்துகொண்டு வேதங்களைச் சொல்லுபவரும், சிவசாதனமான திருநீறு தரித்துக்கொண்டு சந்தியாவந்தனங்கள் செய்பவரும், குளிர்ந்த நருமணமுள்ள மலர்களைத்தூவிச் சிவார்ச்சனை செய்பவர்களும், ஆதிநாளின் புராணநீதி ஆகமங்களைப் பகர்பவர்களுமாக விளங்குவர். அந்தணர்கள் ஒருபக்கத்திலும், அரியதவத்தைச் செய்பவர்கள் ஒருபக்கத்திலும், மேலான ஞானத்தையுடையவர்கள்

ஒருபக்கத்திலும், யோகாப்பியாசஞ்செய்யும் மேலோர்கள் ஒரு பக்கத்திலும், ஞானச்சிந்தையை யுடையவர்கள் ஒருபக்கத்தி லும், பூதசித்தியர்கள் ஒருபக்கத்திலும், இருந்துகொண்டு ஓது கின்றபஞ்சாட்சர மந்திரத்தின் ஒலியும், வேதங்களின் ஒலியும் எங்கும் நிறைந்துசப்திக்கும்.

மா, பலா, கோங்கு, மாதளை, வன்னி, வேங்கை, பாரிசா தம், புன்னை, சண்பகம், ஆரம், சந்து, அகில், பிண்டி, பாடலம், ஆல், கொன்றை, தெங்கு, கற்பகம் முதலிய தருக்கள் வானுற வளர்ந்து அவ்வனத்தில் விளங்கும்.

பரிசுத்தமான தவத்தையுடையவர்கள் சூழ்ந்துள்ள கூட் டத்தாலும், அங்குள்ளார்கள் தேகத்தில் அணிந்துள்ள வெள் ளிய திருநீற்றின் பிரகாசத்தாலும், மிகவுயர்ந்துள்ள சோலைக ளாலும், விளங்கும்வேதாகமங்களாலும், அந்தநைமியசாரணியம் சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கைலயங்கிரிபோல் விளங் கும். ஆதிசேடனால் சுமக்கப்படுதலாலும், பச்சை நிறத்தாலும் உலகத்து உயிர்களைக் காப்பதனாலும், பெருந்தவத்தோர் சார்த லாலும், பொன்மணியாலும், பூமணம்பொருந்துதலாலும் அந்த நைமிசாரணியவனம் விஷ்ணுவைப்போல் விளங்கும். மேகங்கள் மீது செல்லுதலாலும், பல்லாயிரங்கண்களாலும், செவ்வியராகத் தைப்பாடும் அரம்பை மாதர்கள் தம்மிடத்திற் சேர்தலாலும், அந்த நைமிசாரணியம் தேவேந்திரனைப்போல் விளங்கும். குற்ற மற்றதும், குற்றத்தையறுப்பதுமான மேன்மைக்குணத்தாலும், நீதியினாலும், எவ்விடத்தும் நல்லநெறிகளைச் செலுத்துதலாலும், பூலோகத்தார்கள் புகழுந்தன்மையாலும், போதகம்பொருந்தி யிருத்தலினாலும், அந்தப் பூமலி நைமிசாரணியம் மாதவர்கள் போல விளங்குஞ் சிறப்பையுடையது. பரிசுத்தமான அந்த நைமிசாரணியத்தில், நீலோற்பல மலர் சூழ்ந்துள்ள வாவிகளி லெல்லாம் அழகிய வண்டுகள் கீதங்களைப் பாடிக்கொண்டிருக் கும், பூக்கள் நிறைந்துள்ள சோலைகளிலெல்லாம் அழகிய கிளி கள் வேதங்களைப் பாடிக்கொண்டிருக்கும், மாமரங்களிலெல்லாம் குயில்கள் இருந்துகொண்டு பஞ்சாட்சர மந்திரங்களை ஓதிக்

கொண்டிருக்கும், ஆவலோடு வசிக்கும் பூவைப்புள்களெல்லாம் ஆகம புராணங்களை யோதிக்கொண்டிருக்குஞ் சிறப்பே நனி விளங்கும். ஞானமாமுனிவர்கள் வாழும் பூஞ்சோலை நிறைந்துள்ள நைமிசாரணியத்தின் அழகிய மலர்கள் நிறைந்த தருக்கள் கற்பகவிருட்சத்தின் மலர்களையணியும் தெய்வப் பெண்களின் கூந்தலிற் பரிமளமுண்டாகும்படி வானலோகத்திலும் நீண்டு வளரும். கானத்தைச் செய்கின்ற யாழைத் தேவர்களும் தெய்வப்பெண்களும் பாடக் களிப்போடுகூடிய மயில்கள் ஆடும் இந்தவிதமான சிறப்புகளோடு விளங்கும் நைமிசாரணிய வனத்தில் வசிட்டராதி முனிவர்களும், உரோமேசர், கபிலர், கற்கர், அத்திரி, புலகர், வச்சராங்கிராசு, சோமர், நத்தியர், பரத்துவாசர், வாமதேவர், சித்தர், கங்கணர், ததீசி, கவுதமர், மார்க்கண்டர், பவுத்திரர், பாவநாசர், பராசரர், காமசித்து, வசுபர், கமர்து, சிவத்தர், கண்ணுவர், பிருகு, கோசடி, மிருகண்டர், நவத்திரிசடி, வியாக்கிரமபாதர், நற்கலியர், வாலகில்லர், புலத்தியர், மறைக்குமாரர், சிவபத்தர் ஆகிய இவர்களும், இன்னும் எண்ணுங்காற் கோடானுகோடி என்னுங் கணக்கினுமடங்காத முனிசிரேட்டர்களும் தபோதனர்களும் சூழ்ந்து நண்ணி எந்நாளும் வாழ்வார்கள்.

இப்படிப்பட்ட மகாவனத்தில் அன்போடு வசிக்கும் பெரிய தவத்தோர்களெல்லாந் தீர்க்கசத்திர வேள்வியைப் பன்னிரண்டு வருஷகாலம் தேவர்வந்திருந்து களிகூர இயற்றினார்கள். இருமுனிவர்கள் இத்தகைய வேள்வியைச் செய்து முடிக்குஞ்சமயத்தில், உலகெலாந் தழைத்தோங்குஞ் சைவமதமானது நன்னிலைமை பெற்றோங்கும்படி, தபோதனர்கள் தன்னைச் சூழ்ந்துவர வேதவியாசராற் கூறப்படும் புராணங்களை விளங்கக்கூறுபவராகிய மேன்மைவாய்ந்த சூதமகாமுனிவர் வந்தார். சூதமகாமுனிவர் வந்தவுடன் முனிவர்களெல்லாம் எழுந்து எதிர் சென்று வணங்கி வாழ்த்திச் செழுமையான ஆசனத்திலே யிருக்கச் செய்து செய்யவேண்டிய பூசைகளெல்லாம் செய்யவேண்டிய முறைப்படி மகிழ்வோடுசெய்து பலவகைத் துதிகளாலும் அவரைத் துதித்துப் பிறகு முகமன்கூறி, மிக்க கருணையுடைய சூத

முனிவனைப் போற்றிக் கேட்கின்றார்கள் ! பரிசுத்தமான தபத்தை யுடைய பெருமானே ! ஞானமயமான வேதக்கடலே ! சூழ்ந்த நெருப்பிலே எழுந்து தோன்றும் அருந்தவமலையே ! சூதரென் னும் திருப்பெயரையுடைய பரிசுத்தனே ! சிவபுராணங்கள் கூறும்படியான உண்மைக் கருணையனே ! இங்கு கருணைசெய்து வந்தது எங்கள் பெருந்தவத்தின் பயனேயாகும். அடிகளைக் காணப்பெற்றோம், அதனால், உருத்திரனின் அருளும் பெற்றோம். நெருங்கிய வேள்விசெய்ய ஆரம்பித்த பயனுங் கையுறப் பெற் றோம், ஜென்ம சாபல்யத்தைப்பெற்றோம், என்றாலுந், தங்களிடங் கேட்கவேண்டுவதொன்றிருக்கிறது அஃதென்னவென்றால் சந்தி ரனைச் சடாபாரத்திற் சூட்டியருளிய சிவபெருமானுக்கு அன்பா குந் திருக்கதைகள் முன்னுந் தங்களிடங்கேட்டோம். அவைக ளையே இன்னுங்கேட்கவேண்டுமென்னும் ஆசையுடையவர்களா யிருக்கிறோம், ஆகையால் அதனைத்தாங்கள் எங்களுக்கு உரைத் தருளவேண்டுமென்று வேண்ட, பிரமனையொத்த சூதமகாமுனி வர் முனிவர்களைநோக்கி, முனிசிரேஷ்டர்களே ! பதினெண்புரா ணங்களுள் எங்குள்ள கதையை நீங்கள்கேட்க விரும்புகின்றீர்க ளென்ன, அதற்கு அவர்கள் உருத்திரர்களின் புரங்களெல்லாங் கூடி ஒன்றானதும், பிரமவிருத்தபுரமானதும், வேணுவனமான தும், நிருத்தஞ் செய்யும்படியான தாம்பிர சபையானதும், நெல் வேலியானதுமான திவ்விய சிவஸ்தலத்தின் பெருமைகளைக்கூறி யருளவேண்டுமென்று பணிந்து வேண்டினார்கள்.

சூதமகா முனிவர் அதி ஆநந்தங்கொண்டு முனிவர்களை நோக்கி, ஓ ஆணவமலங்களை எல்லாங்களைந்த, புனிதர்களே ! மகா தவத்தையுடைய வர்களே ! வேணுவனத்தின்பெருமையை விரித் துரைக்க வேண்டுமென்றால் ஒளி பொருந்திய பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய உமா தேவியாரை இடது பாகத்தே கொண்ட மழுவிடையுடையவரே கூறல்வேண்டும், அவரல்லாமல் இப்பரந்த வுலகத்திலுள்ள எவரும் நினைத்திடற்கும் மிகவும் அ ரியது ஆகும். வேதத்தை யுரைத்தருளிய வேத வியாசர் தன் குமாரனாகிய சுகப்பிரம ரிஷிக்குக் கூறியருளியபடி அவ்வியாசரி

திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றார், ஆகையால் மிக்க தவத்தை யுடைய முனிவர்களே! சிதமதியணிந்த சடைப்பெருமான் வசிக்குஞ் சிறப்பையுடைய நெல்வேலிக்கதையில் சிறிதே யானறிந்தது, அதிற்சிறிது உங்களுக்குச்சொல்லுகின்றேன் கேளுங்களென்று நெல்வேலி யீசன் உபய பாதங்களை வணங்கித் துதித்துத் தாம் யிர சபையையும் வேணு வனத்தையும் மகிழ்ந்து வாழ்த்தித்திரி கரணமும் ஒத்து நன்னெறியிலே செல்லும்படியான முனிவர்கள் கேட்கும்படிச் சொல்லுகின்றார்.



## உ-வது நாட்டுச் சருக்கம்.



மூலமாய் எல்லாந் தானும் முழுமுதற் பொருளாமீசன்
கோலமார் தேவியோடுங் கூர்ந்தரசுஞற்று நாடு
சீலமார் பொருநை யாறு செழிப்புறப் பாயும் நாடு
தாலமீ துயர்ந்த நாடு தமிழ்வளர் பாண்டி நாடே.

சிவ பெருமான் விரும்பிக் கோயில் கொண்டிருக்கப் பெற்றதும், மனிதவுருவந் தாங்கி அம்மையாரோடு அரசாளப் பெற்றதும், எட்டெட் டென்னுந் திருவிளையாட்ல்கள் சிவ பெருமான் செய்வதற் கிடமாயதுமான பாண்டி நாட்டின் வளஞ் சிறிது சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சூதமகா முனிவர் கூறுகின்றார்.

பரமனார் இனிது வாழும் பாண்டிய நாட்டில், தாமரை, நீலோற்பலம்முதலிய மலர்களால்நிறைந்ததும், மணம்வீசுவதும், அழகுடையதும், செல்வத்தை யுண்டாக்கக்கூடிய செந்நெலுங் கன்னலும் நிறைந்ததுமான மருத நிலங்களும், மணம் விரியப் பூத்துத் தேன் பெருக் கெடுத்து ஓடும் தருக்கள் ஓங்கிய சோலைகளும் சூழ விளங்கித் தோன்றும். நவமணிகளால் நிறையப் பதித்த மாடங்கள் எங்கும் விளங்கும்.

வயல்களாற் சூழப்பட்டுள்ள பாண்டி நாட்டின் கண்ணே கால்களிலெல்லாங் கயல் மச்சங்கள் பாயும்; காவினிடத்தெல்லாம் புயல்கள் (மேகங்கள்) பாயும்; சாலியெல்லாம் மணிகள் பாயும்; குளங்களிலெல்லாம் பணிலங்கள் (சங்குகள்) பாயும்; காற்றுகளிலும் மேகங்களிலும் வண்டுகள்பாயும். குளத்தில் சூழ்ந்துள்ள கமலத்திலிருந்து வழியுந் தேன்கள் பக்கமெல்லாம் பாயும், பழனஞ் சூழ்ந்துள்ள பாண்டிநாட்டில் இடங்களிலெல்லாம் குடவளையின் முத்தும், நெருங்கிய மூங்கில்களின் முத்தும், இதழ் விரிந்த தாமரைகளின் முத்துஞ் சந்திரனைப் போலப் பிரகாசிக்கும். சுடர் ஒளி மிகுந்த நாகத்தின் உச்சிமணிகள் செவந்த கிரணங்களையுடைய சூரியனைப் போலப் பிரகாசிக்கும். வயல்களால் சூழப்பட்ட பாண்டி நாட்டில் தகடு போன்ற இலைகளையுடைய நீண்ட வாழை மரத்தின் கனியின்சாறும், பலாக்கனியின்சாறும், கலந்து விளங்கும் பொய்கை களிலெல்லாம் தாமரையிலுள்ள அன்னங்கள் புல்லுதலை விட்டொழியும்படிக்குப் பெரும் வாளை மச்சங்கள் தாவும் சந்திரனைப் போல வெள்ளிதாக விளங்கும். மேகக் கூட்டங்கள் படர்ந்து சென்று மணிகள் கொழிக்கும் அலைகளையுடைய கடலிற்படிந்து அந்நீரையுண்டு கரியமேனியையுடைய விண்டுவைப்போல் திரும்பி வந்தன.

திசைகளிலெல்லாம் இடித்து, வானத்து விளங்குகின்ற சூரியனின் பிரகாசத்தையுமாற்றி, இருட்படலம்போல எங்கும் மூடி, விரும்பும் தமிழினால் விளங்கும் நன்மை மிகுந்த பொதிய மலையின் மேலே வந்து, வில்லோடுந் தோன்றிக் கிட்டி, கடல்சூழ்ந்த உலகமெல்லாம் உய்யும்படித் தமிழ்வரம் பறுத்த அகத்திய முனிவரின் கமண்டல நீர் சொரியும் பான்மை போலப் பெய்கின்ற மழைத்தாரை எங்கும் பெருகும்படிப் பொழிந்தது. மேகங்கள் பொழிந்த அந்தப் பரிசுத்தமான நீரானது திரிநேத்திரங்களையுடைய சிவ பெருமானின் இடப்பாகத்தே வசிப்பவளும், அகில லோகங்களையும் அன்புடனே பெற்றவளுமான தாயின் இருதனத்தினின்றும் உதவப் பெற்ற இனிய பாலைத் திருஞான சம்

பந்தர் மகிழ்ச்சியோடு உண்ணும்பொழுது அவர் வாயினின்றும் வழிந்த பால் போலப் பரந்தது.

செந்தாமரையில் வீற்றிருக்கும் லட்சுமி நாயகனாகிய விஷ்ணுவும் சரஸ்வதியும் வணங்கிப் பல்லாண்டு கூறவும், பரிசுத்தமான பிரம்மன் முதலிய தேவர்கள் தொழுது தோத்தரிக்கவும் செவந்த கண்களையுடைய திருமால் மகிழ்ச்சியோடு காந்திமதியம்மையாரின் திருக்கல்யாணத்தில் சங்கரனின் கையால் வார்த்த நீரைப்போல் வெள்ளம் எங்கும் தழைத்துப் பெருகிற்று.

அருவி நீர் பெருகி மாட்சிமை பெற்ற யானையின் தந்தத்தோடு சந்தனம், அகில், இன்னும் மற்றுமுள்ள மயிற்பீலி, பெருகிய நல்ல மணிமுதலியவற்றை வாரிக்கொண்டு விளங்கும் பொன் மலர்களையும், ஏந்திக்கொண்டு ஒப்பற்ற சிறப்போடு பொருநை வெள்ளம் வந்தது.

கொன்றை, பாதிரி, ஆத்தி, கூவிளம், எருக்கு, மத்தம், மான், சர்ப்பம், புலி, யானைத்தோல் முதலிய வற்றை ஏந்திக்கொண்டு பொருந்தவருந்தன்மையாலும், உலகுக்கு நன்மைசெய்து காக்க வருகின்றமையாலும், அந்த மலையமலையிலிருந்து வருகின்ற வெள்ளம் அம்பலத்தாடியருளும் பரம சிவனைப் போன்றிருந்தது. இந்தத் தாம்பரபன்னி வெள்ளமானது வனமணியும், துளவும், வெள்ளைச்சங்கும், வகுளமாலையும், கதை திகிரி வில் பூங்கணை வாள், முதலியவற்றையும் ஏந்திக்கொண்டு களிவோடு உலகமெல்லாம் களிக்கும்படி வருகின்ற தன்மையாலே சானகி நாயகனைப்போல் விளங்கியது.

தாமரை மீது விளங்கலாலும், பாரதி பொருந்துதலாலும் தேன் ஒழுகும் மலர் மாலைகளாலும், நெருங்கிய வனத்தினாலும், புதிய மணம் வீசும் தருப்பையினாலும், பொருந்திய பரிசுத்தத்தாலும், இந்தத் தாம்பிரபன்னி வெள்ளமானது நான்முகக்கடவுள் போல விளங்கும். இந்தத் தாம்பிரபன்னி வெள்ளம் ஆயிரங் கண்களிற் கண்டு அமுத வூண் தருதலாலும் தேவர்கள் சூழ்ந்து எங்கும் பொருந்துதலாலும் விருப்பத்தோடு சிவபெரு

* மானைப் போற்றிக்கொண்டு ஒழுங்கான வழிகளிற் செல்லுவதி னாலும், பெரிய விண்ணுலகத்தைக் காக்கும் தேவேந்திரனைப் போல் அது விளங்கும். பொதிய மலையிலிருப்பதினாலும், முத் தமிழ் விளக்கத்தினாலும், அறிவின் மிகுந்து உயர்ந்த மாதவப் பெருமையினாலும், பதியை நித்தமும் உள்ளத்திற் பதித்துள்ள சிறப்பினாலும், முழு மணிகள் மிகுந்த பொருநை வெள்ளம் கும்பமுனியை ஒத்து விளங்கும். மலையிலே பிறந்து ஒழுங்காக வருதலாலும், தன் மேனியிலே பச்சை நிறம் விளங்குதலாலும், விளங்கிய கற்பு முதலிய குணங்களால் உயர்வு பெற்றிருத்தலா லும், இந்தப் பொருநை வெள்ளம் அழகு நிறைந்த உமாதேவி யாரை ஒத்து விளங்கும். தன்னைச் சிந்திப்பவர்களின் வறுமை யை விரைந்து உடனே போக்கி மிகுந்த செல்வத்தை யவர்கள் உயரும்படிக் கொடுத்திடுதலாலும், அழகிய மணியாபரணங்களைப் பூண்டிருத்தலாலும், செந்தாமரைமேல் விளங்குதலாலும், இந் தத் தாம்பரபன்னி வெள்ளம் லட்சுமி தேவியைப்போலச் சிறந்து விளங்கும். ஆரம், மாலிகைபுனைந்து வெள்ளைத்தாமரை அகத்தே சாரவைகிய தன்மையாலும், தனு (உடல்) வெளுப்பினாலும், நீர் பொருந்தினோரைப் புலவராக்குந் (புலவர்-தேவர்) தன்மையினா லும், இந்தத் தாம்பிரபன்னிவெள்ளம் கலைமகளைப்போல விளங் கும். பல உயிர்களுக்கும அமுதத்தையே பரிவுடன் கொடுத்து நெல் விளையும் நிலங்களிலெல்லாம் நிறைந்து நெறியிலே துன்பங் களைப்போக்கியும், அன்போடு அறமெல்லாம் வளர்த்தும் சிறப் போடு செல்லுந் தன்மையால் இந்தப் பொருநை வெள்ளம் அன் ன பூரணியைப்போல விளங்கும். முன்னே கடலையுண்ட அகத் திய முனிவர் பின்கோபந்தீர்ந்து அச்சமுத்திரத்தைப் பெருகச் செய்ய விரும்பி அன்புகொண்டு தன் கைக்கமண்டலத்தில் அடைத்திருந்த நீரை பூமியிலே விடுத்ததுபோல விளங்கியது. சந்தனம், அகில், தூயபலமணி ஆகிய இவைகளைச்சுமந்துகொ ண்டுமிகுந்த பலமலர்களை வாரிக்கொண்டு வழிபடுபவர்களைப்போல என்னை யாண்டருளும் நாயகன் பெற்ற சுப்பிரமணியக்கடவுளைக்

* முந்தியதும் இதவும் பின்வருபவைகளும் பொருநைக்கும், சிவபெரு மான், மால், பிரமன், இந்திரன், அகத்தியர், உமாதேவி, லட்சுமி, வாணி, அன்னபூரணி ஆகிய தேவர்களுக்கும் சிலேடை.

கிட்டித் தொழச் செல்வதுபோல அந்த முது நீர் விளங்கியது. இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமான் முன்னர் விஷத்தை யுண்டு தேவர்களுக்கு அமிர்தத்தைத் தந்தருளிய தன்மையைப் போல், வடி தமிழ்ப்பொதியம் கருத்த பெருத்த மேகங்களையுண்டு நீண்ட பூமியில் அமுதத்தைத் தந்தருளி சிறப்பொடு விளங்கிற்று. இந்தப் பொருநை மாநதி அழகிய ஆகாய கங்கையோடும் அளாவித் தாழ்ந்துள்ள பாதலத்துள்ளே சென்று உடல் நிரம்பச் சர்ப்பந் தாங்கியுள்ள சிவ பெருமானின் திருக்கோயில்களெங்கும் பரவிப் பிறகு சமுத்திரத்தின்மீது போயிற்று. முனிவர், வானவர், பிரம்மா, விஷ்ணு, சிவபெருமான், சிறந்த பராசத்தி ஆகிய இவர்கள் புகழ்ந்தருளும் தாம்பிரபன்னி யென்னும் புனிதநதிப் பெருமை சிறியேனாகிய என்னால் புகலுவதற்கு எளியதாகுமோ?

கொடிய வில்லையுடைய வேடர்களை விரும்பும்படியான வேட்டுவப்பெண்களை, தினையை, தேக்கிலையினாற் செய்த குடிசையை, யானையை, கோளரிவேங்கையை, கோங்கை, மஞ்சள், இஞ்சி முதலிய பொருள்களை வாரிக் கொண்டு அவ்வெள்ளம் நடந்தது.

சந்தனம், அகில், குங்குமம், சாதிக்காய், கோட்டம், சிந்துரம், இலவங்கம், ஏலம், சீதாரி, சிறு சண்பகம், ஆகிய இவைகளைக் கொண்டு வருதலால் பொருநை நதியானது புந்திமிக்க ஒரு வணிகனை ஒத்திருந்தது.

பொருநை, காலவெங்கனல் ருத்திரகோலம் போலக்கனன்று எரியும் பாலை நிலத்தில் சென்றது, சென்றவுடனே அது பாலை நிலமாகக்காணப் படவில்லை, சில மில்லாதவர்கள் படிந்தாலுஞ் சிவன் உருவமாகச் செய்யும் அழகிய இத்தாம்பிரபன்னியாற்றின் பெருமையை யாவரே எடுத்துச் சொல்ல வல்லவர்கள். குருந்து, முல்லை, காயா, கொன்றை ஆகிய இவற்றைச் சாடி ஆன் நிரை கன்றுடன் ஆயர் பொற்பாடியில் இருந்த நெய்ப்பால், தயிரோடு இடைச்சியர்கள் ஊடலினால் களைந்து எறிந்த ஆபரணங்களோடு எல்லாவற்றையுஞ் சூழவாரிக்கொண்டு வரும் பொருநைநீர் கருமங்களினின்றும் நீக்கி நற்கதியை விரும்பினோர்

உருகுகின்ற சிந்தையைப்போல் உலகமெல்லாம் பரந்து ஓங்கித் தருமம்நீடி மெய்யறமெலாம் முறைமுறை தழைத்த மருதநிலத்தையடைந்தது.

மா, பலா, கமுகு, பொன்னிற இதழி, பாதிரி, மருது, உலவை, பனைமுதலியவற்றோடு புன்னை, சாதி, கூவிளம் முதலியன நீரில் தாழ்ந்தெழும் விதமானது குளிர்ந்த நீரில் குளித்தெழும் பறவைகளைப்போல் விளங்கிற்று. மள்ளரின்சேரிகளை வாரணக் கூட்டங்களை (வாரணம்=யானை) வளர்த்த புள்ளி மான்களை, நாய்களை, பன்றியை யின்னும் ஏனைய விலங்கின் கூட்டங்களை அதன் குட்டிகளை, பகுதிபகுதியாகக் கொண்டுபோய் அப்பொருநை வெள்ளம் களிப்பொடு நெய்தலில் விரைந்து சென்றது. பின் அந்நிலத்திலேயுள்ள நீண்ட கைதைகளையும், பெண்ணையையும், நிரை நிரையாகப் பிடுங்கி பரதவரின் பட்டினங்களை யழித்துக் கொண்டு, தேடிக்கொண்டிருக்கும் தங்கணவரைக்கூடும் கற்புடை மனைவியர்போல விரைந்து கடலிடை பூடுருவிச் சென்றது.

இத்தகைய வளங்கள்நிறைந்து சங்கமத்துறையில் தரளங்களின் வளங்கள் மிகுதியாகச்செய்யும் தாம்பிரபன்னியைத் தக்கவாறிருந்து சிந்திப்போர்கள் பந்தமாகிய வினைத்தொடர்பினின்றும் நீங்கிச் சந்திரமௌலியாகிய சிவபெருமானின் இணையடி சார்ந்து வாழ்வார்கள். மேகங்கள் தவழும் குறிஞ்சி நிலத்திலேயுள்ள பூந்தேன் கயல் மச்சம் உலாவுகின்ற வயல்களிற்பாயும், வயல்களின்கண்ணேயுள்ள சங்குகள் குறிஞ்சி நெய்தல் முதலிய நிலங்களில் முத்தளக்கும், இந்தவிதமாகத் திணைக்கருப் பொருள்களெல்லாம் ஒரு நிலத்துற்று மயங்கும்படிச் செய்கின்ற தன்மையால் அப்பொருநை நதியானது நிலைபெற்ற பல கற்பங்கடோறும் மிகவெழுந்த சமுத்திரத்தைப்போல நெருங்கிவந்தது.

நீண்ட பூமியில் இந்தவிதமாகப் பண்பினினிரந்து விரைந்து வரும் பொருநை யாறானது பாற்கடல் கடைந்திடுநாளில் உடனெழுந்து வெள்ளியதிரை பரந்து ஓடினதுபோலச் சமீபத்தில் நெருங்கியுள்ள பல கால்வாய்களிலும் பிரிந்து உடனே ஓடியது. வேதங்களால் ஓதப்படுகின்ற பொருளான சந்திரனை முடித்தரு

னும் சிவபெருமான் வீற்றிருக்கும் வெள்ளியலையிடைவரும் அருவிகளென்ன மள்ளர்கள் ஒதுக்குகின்ற கால்களிலெல்லாம் நிறையவெங்கும் பொருநை நீத்தம் பரந்தது. பொதியமலையிலிருந்து சமுத்திரம் வரையிலும் உள்ள நீண்ட மதகுகள் விளங்கிய கால்வாய்கள் அணைகள் முதலிய இடங்களிலெல்லாம் மள்ளர்கள் கூடிக்கொண்டு அலையோடு கூடிவரும் வெள்ளமானது கரையை உடைத்திடாதபடிக்கு அடைக்குஞ் சப்தமும், பிரகாசம் பொருந்தி விளங்கும் அந்நீரின் ஆர்ப்புமேயாக (ஆர்ப்பு—சப்தம்) உலகமெல்லாம் நிறைந்தன. முரசொலியும் முன்னுள்ள மள்ளர்கள் சப்திக்கும்படி ஊதுகின்ற ஊதுகொம்பின் சப்தமும், அடிக்கப்படுகின்ற பம்பையின் சப்தமும், புரவுசூழ்ந்த ஏரி நீரின் ஒலியும் ஆகிய இவைகளெல்லாங்கூடிச் சமுத்திரத்தின் சப்தத்தோடு மாறுகொண்டு ஒலித்தன. பொருநையின் நீரானது பொருந்திய அமுதென உலகத்தோர் கொண்டாடும்படிப் பரந்தது. கருத்த வண்டின் கூட்டங்கள்போலச் செறித்த மதுவையுண்டு மள்ளர்கள் ஆடிப்பாடி ஆர்த்தார்கள். கயல் மச்சங்கள் நிறைந்துள்ள குளங்களிலுள்ள நீரும், நீண்ட நகர்ப்புறத்திலெல்லாம் சூழ்ந்துள்ள நீரும் இடமகன்ற பெரியபூமி முழுதும் வளைந்து, பிலத்திலுமாழ்ந்திருக்கும் பெரும்புறக்கடல்போல விளங்கும். பொருநைவெள்ளம் சோலையிலுள்ள தடாகங்களிலும் வயல்களிலும் சந்தனப்படப்பைகளிலும் தாமரைநிறைந்த பொய்கைகளிலும் மேகத்தினூடு சஞ்சரிக்கின்ற நீர்போலவும், உடலினூடு சஞ்சரிக்கின்ற உயிர்போலவும், சஞ்சரித்துக்கொண்டுவந்தன. இவ்வாறு திவ்விய தாம்பிரபன்னி பாயப்பெற்ற பாண்டிநாட்டில் வரம்பெலாம் வேலிசூழும், வயல்களிலெல்லாஞ் சாலிசூழும், கரும்பெலாந்தரளஞ்சூழும், கயமெல்லாங் கழுநீர்சூழும், அரும்பெலாம் நறவுசூழும், மலர்களெல்லாம் ஓதிசூழும்.

குளிர்ந்த சோலையில் தேனையுண்டு தாவும் பெட்டையோடு வண்டினமுழங்க வெள்ளைச் சங்குகளொலிக்கும். வாவிக்கொண்டல்கள்முழங்க முன்றிலினிடத்துக் குறுந்தடியாலடிக்கப்படும் முரசம் சப்திக்கும். பார்ப்பார் வீடுகளிலெல்லாம் வேதங்கள்

இசையோடு சப்திக்கப்படும். வாவிகளிலெல்லாம் செந்தாமரையின்மேல் வண்டுகள் வசிக்கும். நீலோற்பல மலர்களிலெல்லாம் களியருச் செந்தேன்வைகும். பொருந்திய சோலைகளிலெல்லாம் விருப்பத்தோடு ஸ்ரீமிறுவைகும். பூவளர் கரும்புகளிலெல்லாம் பொன்னிறச் சுரும்புவைகும். கான் அலர் சோலைதோறுங் கரும்படும் மள்ளர் ஓசை, பழனங்கடோறும் பழனங்கள் முழங்குமோசை, பூ நிறைந்துள்ள பொய்கைகள்தோறும் புனல்குடையும் மகளிரின் ஓசை ஆகிய இவ்வோசைகளெல்லாம் வானத்தில் எழுகின்ற முகில் ஓசைக்குமாறுக ஒலிக்கும்.

நீலநிறம்பொருந்திய ஆண் எருமைகளைப்பூட்டி நெருங்கிடத் தயல்களிலெல்லாம் சாலுழு சேறுசெய்வோர், நெல்விதைப்போர், நாறுபறிப்போர், நாற்றை வயல்களில் நடுவோர், கால்வாய்களிற் றிர்வோர் ஆகிய இவர்களின் ஓசை மிகுந்திருக்கும். மள்ளர்கள் அமுதவாரியை வயல்களிளெல்லாம் பரப்பிச் சாலி ஒள்ளியவளைகள் ஊர உழுகின்ற எருமை ஒருங்குமோதப் பள்ளமான நீண்ட இடங்களிலெல்லாம், வயலைச்சூழ்ந்த வரம்புகளிலெல்லாம், துள்ளித்திரியும் கயல்மச்சங்களை அம்மள்ளர்கள் தம்மாதர் விழி என்று நினைந்து சோர்வார்கள். ஆலையில் எழுந்த பாகும், குளத்தின்கண்ணேயுள்ள தாமரையிலுள்ள தேனும், சோலையினிடத்தேயுள்ள கனியின் தேனும், சூழ்ந்துள்ள இருல்களிலுள்ள தேனும், அழகிய நீண்ட வாழையீன்ற கொழுமையான கனியின் தேனும், பாய்ந்து சேல்மச்சங்கள் உகளும்படியான வயல்களிலெல்லாம் செந்நெல்லை வளர்க்கும். விளங்குகின்ற நீண்ட செந்நெல் விளையும் வயல்களிற் களைகளைத்தேர்ந்து மிகுந்து வளர்ந்துள்ள கமலம், நெய்தல் ஆகிய இவைகளை வேறேடுபரித்து வீசி எறிந்துவிட்டுச் சேருங் களபமும் சந்தனமும் செறிந்துள்ள திரண்டகொங்கையில் ஊறும் பாலை மழலைப் பிள்ளைகளுக்குக் கடைசியர் ஊட்டுவார்கள். இந்தவிதமாகவளர்க்க வளர்ந்துள்ள செந்நெல்களைக் கூனியவாள்களால் அறுத்து பெரும்போர்களாகச்செய்து அவ்விடத்தே பகடுகளைச் செலுத்தி வைக்கோல்களைக் களைந்து பதரைத்தூற்றி மணியென விளங்கும் நெல்லினை

வண்டியில் தொகுப்பார்கள். மலர்களிலுள்ள தேனைப் புள்ளியை யுடைய வண்டுகள் மாந்தும்; சோலையிலுள்ள குற்றமற்ற கனி களையெல்லாம் குரங்குகளுண்ணும்; அவ்விடங்களிலுள்ள குமு தத்தையும் நீலோற்பலத்தையும் எருமைகள் உண்ணும்; கன்றுக ளெல்லாம் மெல்லிய முலைப்பாலையுண்ணும் இத்தகைய செழிப் பையுடையது. இன்னும் அழகியமெல்லிய பூவைப் பட்சிக ளெல்லாம் பாடும்படியான வளப்பம் பொருந்திய மருதவெளி களை நனிமிகவுடைய சிறப்பு மிகுந்ததிப்பாண்டி நாடு.

வண் தமிழ் மணக்கும் தெண்ணீர் வளம் பொருந்திய மருத வெளியில் சோலைகளெல்லாம் மேகத்தைப் பழிக்கும். நல்ல உயர்ந்த மணிகள் சூரியனைக் காயும். மூங்கில் முத்தும் யானைத் தந்தங்களிற் பிறந்த முத்தும் கோட்டிற் பிறந்த குளிர் முத்துக் களும் வானத்திலே தவழ்ந்து செல்லும் நிலவைக்காயும். அங் குள்ள கோங்கரும்பும் இளநீரும் பெண்களின் கொங்கையின் அழகைக்காட்டும். அருந்தளிர் மேனியின் வனப்பைக் காட்டும். நீலோற்பலங்கண்ணின் பொலிவைக்காட்டும். கரும்பு மாதர்களின் சொல்லின் சிறப்பைக் காட்டும். வாழைகள் அழகிய தொடை யின் ஒப்பைக்காட்டும். மேன்மையுள்ள சங்குகளும், பாக்கு மர மும், விளங்கும் மாதர்களின் கழுத்தின் நயத்தைக் காட்டும். அந்நாட்டில் மகரயாழ்கரத்தில் ஏந்தி வளம்பெற வாசிக்கின்ற வர்களும், மனமகிழ்ச்சியோடு அழகிய திருவிழாக்கள் நடத்து கின்றவர்களும், ஆட்டுக் கடாக்களோடு ஆட்டுக் கடாக்களைப் போர் செய்யும்படி தாக்கச் செய்பவர்களும், சொல்லுதற் கரிய வேதங்களை ஓதிச் சடங்குகளியற்றுபவர்களும், பரிவு மிகுந்த கழகங்களிலெல்லாம் படைக்கலம் பயில்கின்றவர்களும், திட முறுகலைகள் எல்லாஞ் சிந்தையிற் றெளிபவர்களும், விரிந்த பிடரி மயிரையுடைய குதிரை யானை முதலியவற்றை வீதியில் நடத்து பவர்களும், குற்றமற்ற பாலும் நெய்யும் வெல்லமும் முப்பழங்க ளும் தேனும் அழகிய மெல்லிய முதிரை மூரலும் மற்றுள்ள சுவைகளோடும் அந்தணர், தேவர், அன்பர், விரும்புந் தஞ்சுற்றத் தார், உற்றவர்கள், விருந்தினர்கள் முதலியவர்களுக்கு அன்போடு உண்பிப்பார்களுமல்லால் வேறு அடாதனவும் அறமல்லாதன

வுஞ் செய்பவர்களில்லை. அந்நாட்டின்கண்ணே குயிலினங்க ளெல்லாம் பெண்களின் குதலைச்சொல்லைப் பயிலும். மயில்க ளெல்லாம் பெண்களின் சாயலைக்கண்டு களிகூரும். மேகங்கள் அந்நாட்டு மாதர்களின் கூந்தலே தனக்குத் தஞ்சமென நினைக் கும். பூரணச்சந்திரனும் அந்நாட்டு மாதர்கள் முகம்போலாமை கண்டு உடற்களங்கத்தை நீக்கிக்கொள்ளவும் என்றும் பூரணநிலை யிலிருக்கவும் முயற்சிசெய்யும். சீரிய இந்நாட்டில், நீரெல்லாம் வாசனைவீசும். வயல்களிலெல்லாம் நெல்விளையும். மரங்களெல் லாம் கனிகளையுதவும். கடல் அமுதுதவும். தினைப்புனங்கள் தினை வரை முதிரை முதலிய விளங்கும் பிறவற்றையெல்லாந்தரும். நறுமலர்களெல்லாம் தேனையும் மணத்தையுந் தரும். முன்றில் களிலெல்லாம் அழகிய முரசவாத்தியங்கள் முழங்கும். நெருங் கிய காடுகளிலெல்லாம் மேகங்களதிரும். மலைகளிலெல்லாம் இழியும் குளிர்புனல்கடலென அதிரும். ஆலையில் எழுகின்ற புகை அருமறை வேள்விச்சாலையில் எழுகின்ற புகை பொன்னை யொத்த பெண்கள் கூந்தலுக்கூட்டும் அகிற்புகை முதலியன விண்மிசைப்படர அதனைக்கண்ட சோலைமயில்கள் மேகமென நினைத்துக் களிப்புடனே கலாபங்களை விரித்து ஆடும்.

சேல் மச்சங்கள் உகளும்படியான குளங்களில் நெருங்கி யுள்ள மலர்களின்மேல் ஒளி பொருந்திய சங்குகள் வளரும், வனத்தினிடத்தும் மாழை வாவியினிடத்தும், இருக்கின்ற மலர் களின் மேல் விரும்புங் கலைமான்கள் மேலுரும்படியான இயல்பை யுடையது, வாசனை மிகுந்த நெல்வயல்களின் சமீபத்தி லெல் லாம் தழைத்து விரிந்த மூங்கில்களுள. மேலுறவளர்ந்த பாக்குமரங்களுடனே பலாமரங்களுங் கலந்து வளரும். மடல் விரிந்துள்ள தாழை யாரும் மயங்கும்படி வளரும். வாழைக ளெல்லாம் சோலைசோலையாய் வளரும். அந்நாட்டுமாதர்களின் கூந்தலிற்குலவியிருக்கும் வண்டுகள் காதல்தரும் அவர்விழிகளை மதுகரமென நினைத்து மீளும். அழகிய வெள்ளிய சங்குகள் தவழும்படியான மடையில் உகழ்ந்து வாழும் வாளை மச்சங்கள் மிகவளர்ந்துள்ள பூகத்தின் பாளையில் வெளிபடத்தாவும், அந்

நாட்டில் உலவும் தென்றற்காற்று பொதியமலையில் நிலவுகின்ற புதிய மணங்களையளாவி நிதிதரும்படியான பொருநையின் நீரொடு பழகி, மது நிறைந்த மலரொடுவெடி தமிழ்கலந்து, பதிதொரு முலவும். பொன்மலைபோல வளர்ந்த பொதியமால் வரையினிடத்திலிருந்து நீண்ட பூமியிற்செல்லும் பலமணிகள்கொழிக்குந் தாம்பிரபன்னியின் நீர் நாடெலாம் பரந்து மிக்கவளப்பத்தைப் பெருக்கிற்று.

நீலோற்பலம், தாமரை, முல்லை முதலிய மலரும், அசோகம், சூதம் முதலிய அழகிய மரங்களுங்கூடிப் பூத்தலால் சோலைகளெல்லாம் மன்மதனுடைய அம்புப்புட்டில்போல விளங்கிற்று. சுனைகளிலெல்லாம் நீராடும் தோகைபோலுஞ் சாயலையுடைய பெண்களின்கண்ணாகிய அழகிய குவளையையும் பக்கத்தேயுள்ள தேன் ஒழுக மலர்ந்துள்ள குவளை மலரையும் தெரிந்துகொள்ள முடியாதபடி வண்டின் கூட்டங்கள் மனமருண்டன.

குறிஞ்சி நிலத்தில் புளினர்கள் பூந்தினையைப்பாங்குற விரித்துவிளங்குவார்கள். முல்லை நிலத்தில் ஆயர்கள் ஆன்மேய்த்துக் குழலூதி விளங்கிக்கொண்டிருப்பார்கள், மருத நிலத்திலெல்லாம் வாள்போலும் விழியையுடைய கடைசியர் வார்த்தையைப் பூங்குயில்கள்தேரும். நெய்தல் நிலத்திலே அடிபெயர்ந்து நடக்கும் நுளைச்சியரின் நடையைக் கற்றுக்கொள்ள அன்னங்கள் அங்குவந்துதங்கி விளங்கிக்கொண்டிருக்கும்.

குறிஞ்சி நிலத்திலேயுள்ள வில்வலியுள்ளவேடர்கள் தேனெடுக்கும்பொழுது, இரப்பவர்க்கு இல்லையென்று சிறிவிழும் அற்பரைப்போல், ஈக்கூட்டங்கள் இரைத்துமொய்க்கும். கொலைவிழிக் கொடிச்சியர் கொடைத்தொழிலைக் கற்றவரைப்போல் மலைநாகங்களின் மணிகளை வீசுவார்கள். முல்லை நிலத்திலே, ரத்திநாபரணங்கள் விளங்குந் தனமசைய மேகலாபாரந்தாங்கிய இடைதள்ளாடக் கரத்துள்ள வளையல் ஒலிக்க முல்லை மாதர்கள் தயிர் கடைவார்கள். வயல்களிலெல்லாம் பொருநைநீர் பரந்து பாய்தலினால் அளவில்லாத வாளை மீன்கள் அணைகளிலெல்லாம்

பொருந்தியிருக்கும். சிறந்த நெய்தல் நிலம் தாழைகள் மணம் மிகப் பூவினை வளர்த்திக்கொண்டிருக்குந்தன்மை யுடையதாகும்.

கருந்தினை, செந்தேன் முதலியவற்றை குறிஞ்சிநிலந்தரும். நெய், பால், வெண்ணெய்முதலியவற்றை முல்லைநிலந்தரும். நெல், கரும்புமுதலியவற்றை மருதநிலந்தரும். நிலந்தரும்பொருளோடு முத்து முதலியவற்றை நெய்தல் நிலந்தரும்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் தோகைகள் முல்லைநிலத்தில் வாழும் பெண்களின் சாயலைக்காட்டும். முல்லை நிலத்துள்ள முல்லையரும்புகள் வேட்டுவப் பெண்களின் பல்லைக்காட்டும்.

முல்லை நிலத்துள்ள பசும்பால் மருதநிலத்துக் கடைசியரின் குதலைச் சொல்லைக் காட்டும். மருதநிலத் தாமரை முல்லை மாதரின் முகத்தைக் காட்டும்.

தெய்வப் பெண்களும் அரம்பையரும் குறிஞ்சி நிலத்திலே யுலாவுவார்கள். குறவர் மாதர் மருதநிலத்தில் மதுக்குடங்களைத் தாங்கி யுலாவுவர், செந்நெல்லுக்கு விற்றிடுவார்கள். முல்லை மாதர்கள் பால், நெய் முதலியவற்றை நெய்தநிலத்தே முத்திற்கு மாறிடுவார்கள். இன்னும் இன்னாட்டின் வளங்களெல்லாங் கூறுவதென்றால் ஈராயிரம் நாவுடைய ஆதிசேடனுக்கும் அமையாது; இவ்வகைச் சிறப்புகளும் வளங்களும் உள்ள இப்பாண்டிநாட்டில சீலம் மிகுந்த பெரியோர் சூழ்ந்துள்ள சிவாலயம் பொருந்தியிருப்பதாலும், மேலான வானவர்களுக்கும் எட்டாத முத்திவீட்டை யளித்தலினாலும், பொருநையாற்றொடு விளங்கும் பாண்டி நாடானது, ஆலகாலவிடத்தை யமுதாக வுண்ட திருநீலகண்டர் வசிக்குஞ் சிவலோகமேயாகும். விளங்கும் வலியையுடைய உலகத்தில் தென்பால் உயர்திசை யதிகமானதென்று குறுமுனிக்கு அறியும்படிச் சிவபெருமான் கூறியருளிய மேன்மையுள்ள பாண்டிநாட்டின் தன்மையை ஒருவாறு சுருங்கக் கூறினோம், இனிமேல் சிறிது நகரவளங் கூறுகின்றோம் கேளுங்களென்று சூதமகாமுனிவர் கூறுகின்றார்.

## ௩-வது நகரச்சருக்கம்.

காசிமுதற் சிவபெருமான் வாழ்தலங்கள் பலவற்றுட்
கனக்கத் தோன்றும்
பேசரிய நெல்வேலி நகரினையே விரும்பியிறை
பிறைசேர் நெற்றிக்
கூசுமெழிற் காந்திமதித் தேவியொடும் வாழ்தரவே
குலவும் பண்பால்
நேசமொடு நினைந்தாலும் பவமொழியும் பயன்சேரும்
நினைவாய் நெஞ்சே.

உலகெலாம் விளங்கும் படிக்கும், தீதகலும் படிக்கும், அண்டகோடிகளை ஈன்றருளும் அன்னை முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்திடும் இயல்பினாலே, நீதிதழைத்து ஓங்கும் திருநெல்வேலி மாநகரம், ஆதியாகியும், அந்தமாகியும், அளவில்லாத பிரளய காலத்திலுஞ் சோதியாகவும், நித்தியமாகவும், துலங்கி விளங்கும். திருமகள் வளரப்பெற்றுள்ள மார்பை யுடைய திருமாலும், வாசனை மிகுந்த தாமரையின்மீது வீற்றிருக்கும் பிரம்மாவும், முறையே கருடன் அன்னம் என்னும் இருபுள்ளின்மேலும் ஏறிவந்து, எம்பெரு மானை வணங்கித் தம் மடியார்களோடும், மாதர்களோடும் தங்கியிருக்கப் பெறுதலினாலே, இத்திருநெல்வேலியே பிரம்மலோகமும், வைகுந்தமும், சிவலோகமுமாகும். இம்மட்டோ ? இம் மூவுலகங்களுக்கும் மேலாய பதமென்றுங் கூறலாம்.

தேவேந்திரனும், பண்ணைப் பழிக்குஞ் சொல்லையுடைய இராணியும், மற்றைத்தேவர்களும், அரம்பையர்களும், மற்றுமறிவுடைய முனிவரர்களும், எண்டிசைக் காவலர்களும், இயக்கர்களும், இசைபயிலும் கந்திருவர்களும், சித்தர்களும், மிகுந்த ஆவலொடுவந்து தினமுந் தொழுவார்கள். தேவர்களும் மற்றுமுள்ள எல்லாவுலகத் திலுள்ளவர்களும் பரிசுத்தமுள்ள எல்லாப்பொருள்களும் பொருந்தி யிருத்தலினாலும், சிவ

பெருமானும் பார்வதி தேவியாரும் பரிவுடன் கோவில் கொண் டிருப்பதினாலும். இந்நெல்வேலியைப் பேரண்டம் எனக்கூறு வார்கள். இந்தத்தலம் ஒப்பற்றதாய், எப்பதிகளுக்கும் உயர்ந்த பதியாய் இருப்பதுமல்லாமல், மன்னும் பகிரண்டங்களெல்லாம் வகுத்து உயிர்களைக் காத்தருளுந் தன்மையுடையவரான சிவ பெருமான் அனவரததான நாயகராகி எப்பொழுதும் வீற்றிருக் குந் தலைவராக வீற்றிருந்து அரசுபுரியும் சிறப்பைப் பெற்று விளங்கும். இந்தத் திருநெல்வேலி என்னும் திவ்விய தலமா னது கணக்கிடற்கரிய பலவுகங்களிலும் அழியாதிருக்கும் நிலை மையினாலும், பொதியமலையில் விளங்கித்தோன்றும் அழகிய பொருநையாறானது மாறாதுவருகின்ற தன்மையினாலும், மேலா னநிலைமையைத்தரும் ஞானம் நீங்காத தன்மையினாலும், இந்நக ர்க்கு உவமை எவர்கள் உரைக்கவல்லவர்கள் ஆவார்.

இந்தத் திருநெல்வேலித்தலம் சிவபெருமான் கவுரியை மணம்புரிந்த கல்யாணப்பதி. இரண்டாம் வுலகில் வடகாஞ்சிக் கதிகமானது, தென்காஞ்சியென்றும் வழங்கும், பவத்தினின் றும்நீங்கி மேன்மையானகதியை அடையவிரும்புகிறவர்களுக்குச் சிவதலத்திலுமுயர்ந்த தலமாம். இப்பதி அழகிய பூமிதேவிக்கு முகமாகும். அலர்மகளுக்கு அணியாகும் செம்பதுமையின் சிலைபோன்ற நுதலிலெழுதுகின்ற திலகமுமாகும், கும்பமுலைக்கு ஆரமுமாம். பாண்டி நாட்டில் விளங்குகின்ற இந்தத் திருநெல் வேலி என்னும் நகரத்தில் குலமகளிர் அகலாது என்றும் பொரு ந்தியிருப்பார்கள். விளங்கும் பெரிய சமுத்திரங்கள் ஓரேழும், ஓருழிகாலத்தில் சுழலும் நீர் அகழியாய் சூழுந்தன்மை, யுலக மெல்லாம் அரனின் விழிப்பொறிய தொன்றினால் உண்ணப்படு நாளில் அழிவின்றி இந்த நகர்விளங்கும் என்று எண்ணி அடைந்ததுபோலும். நீண்ட நாகங்களின் தலைமணிகளின் ஒளி கள் சூரியனைப்போல் பிரகாசிக்கக் கடலிற் கதிரவனுதித்ததென மிகுந்துள்ள தாமரைகள் மலரும், மலர்ந்த அத்தாமரையில் வண் டுகள் மதுவையுண்ணும். கரைகளின் தாழைகளிலெல்லாம் முத் துக்கள் மிகுதியாய் விளங்கும்.

வண்டுகள் உலாவப்பெற்றதும் மணிநிறைந்ததும் வெள்ளஞ் சூழ்ந்ததுமாகிய அகழியில், விரைவில் உலாவக்கூடிய குதிரைக ளெல்லாம் உலவும். நெடியமேகங்கள் உலாவுவதுபோல யானைகள் உலாவும். மலைகள் உலாவுவதுபோல முதலைகள் உலாவும். பூமி யெல்லாம் நிறைந்திருக்கும் பலபல உயிர்களோடு உடனெலாம் உறைதரும் உலகெலாமுய்யவே வடிவுடைய மலைகள் செய்த நல்ல தருமம்போல மிக உயர்ந்து அழகு செய்துகொண்டிருக்கும் நெ ல்லையைச் சூழ்ந்து நிற்கும் மதிள்கள் நீண்ட இம்மதிள் முன்னு ளில் மாலும் பிரமனும் அடிமுடியைத் தேடுநாளில் இறைவனு டைய செந்தாமரைபோலும் பொன்னடிபோற் பாதலம் புகுந்தும் பொன்முடியென மேலே போய் உயர்ந்தும் விளங்கும். இந்நெல் லையைச்சூழும் மதிள் பொன்னகரத்திலும், அதற்கு அப்புறத்தே யுள்ள பிரம்மலோகத்திலும், அதற்கு அப்புறத்தேயுள்ள வைகு ண்டத்திலும், போய் நெருங்கி நிற்கும். காந்தி செய்யும் முழும ணிகளாகிய நவமணிகள் குயிற்றியமதிளின் ஒளி பொன்னுலகத்தி லும் பிரம்மலோகத்திலும் வீசுவதால் அன்றோ அவ்வுலகங்களில் இரவு பகலென்பதின்றி எப்பொழுதும் பகலாகவே யிருக்கிறது. சத்துருக்கள் எதிர்த்தால் நால்வகைச்சேனைகளும் அழியும்படி நாந்தகத்தை நடுவே வீசும். பாணங்களை எடுத்தெரியும், சீறும், கொன்றிடும், கொலை செய்யும், வேலையும் தண்டையும் தாங்கும், அஞ்சுற விழுங்கும், எடுத்தெறியு நீண்ட சூலத்தை எடுத்துச் சுற்றும், கோபிக்கும், போர்கள் செய்யும், கடுமைகள் செய்யும், சூழும், ஒளிக்கும், கன்மழை பெய்யும், வடுச் செய்யும்படிக்காய்ச் சப்பட்ட வெண்ணையைக் கொட்டும், நெருங்கிய வச்சிராயுதங்கள் வீசும், நெடுமையில் நின்று காட்டும், நீலிபோல நடனஞ் செய்யும், கொடுமைகள் பலவும் பண்ணும், எமனைப்போல உயிர்களை யுண் ணும், முரசினைச் சப்திக்கும், கொம்பையூதும், சங்கினை முழக் கும் இதன் சிறப்பை எவரே எடுத்து உரைப்பார்.

சில அரசரின் அரணங்களைச் சூழும், அகழியில் எறியும், ஓடும், நெருங்கிய புள்ளினங்களை யோட்டும், தேவர்களும் அஞ்சும் படிச் சப்திக்கும், சூரியனும் மற்றுள்ள கோள்களும் பயப்படும் படிபடர்ந்து பாயும், தோமரங்களையும் கணையங்களையும் வீசும்,

சுடும் அணலினைவாரிவீசும், அக்கரம் கப்பணங்களைவீசும், நீண்ட பெருமுசலம் வீசும், வேகும் அழல் தழல்களை வீசும், மேகம் பொருந்திய கவண்கல்களை வீசும், அச்சத்தைத் தரக்கூடிய வேல் முதலிய படைகளை எல்லாம் சத்துருக்கள் நடுங்கும்படி வீசும், போர் செய்பவர்களுடைய கைவில்களைந்தும் வேடிக்கையாக விழுங்கும் பட்சிகளைப் போலப் பறக்கும், பழிப்பவர்கள் மனத்தையும் நாவையும் தேடிச்சென்று கோபித்து அழிக்கும், இந்தவிதமாகவெல்லாம் நம் திருநெல்வேலியைச் சூழ்ந்துள்ள மதிலின்மேலுள்ள பொறிகள் செய்யுமென்றால் அதன் பெருமையை யாவர் சொல்ல வல்லவர்கள் ஆவார்கள். நீண்ட பொன் மதிலில் ஓங்கும் கொடிகள் எல்லாம் ஆகாயத்திலிருக்கும் பரிகளை ஒத்திருக்கும். செம்படங்கள் எல்லாஞ் செவ்வானம்போலவிளங்கும். மூடிக்கொண்டிருக்கும் கதலிகை கவிகைகளெல்லாம் பூண்ட ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைப்போல எங்கும் விளங்கிக்கொண்டிருக்கும். கருதும் தம்மனத்துக் கெட்டாக்கடிமதில் கடக்கமுடியாச் சூரியன் தம்பரிகளை விட்டிறங்கி வணங்கிப்பின் செல்வான். இரவில் வருஞ்சூரியன் நீண்ட மணிக்கதலிகைகள் தேய்ப்ப வெளுத்தவுடல் கறுக்கும்படி நாளும் நுழைந்து செல்வான். அழகிய அலங்கரிக்கப்பட்ட மணிக்கொடிகள் புவன கோடிகளை எல்லாம் போர்த்துவிடும்.

மண்டபம் அனேக கோடியும், மாளிகைகள் அனேக கோடியும், மேகங்கள் படியும்படியான மாடங்கள் கோடியும் விளங்கும்; மேடைகள் பலகோடி பதாகைகள் கோடி வீதிகளிலுள்ள கோபுரங்கள் பலகோடி ஆக எங்கும் விளங்கும்; இந்தத் தலம் தேவ லோகத்தையும் ஏய்க்கும்படியாக அழகு சிறந்து விளங்கும். மணி மறுகிடங்களிலெல்லாம் மகரதோரணங்களின் மீது அழகோடு விளங்கிக்கொண்டிருக்கும் அடி விரிந்த கிரணங்களையுடைய பல சந்திரர்களைப் போலப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். பூமாலைகள் தொங்கப் பட்டுள்ள அழகிய மாடங்களி லெல்லாம் மயில்களாடிக் கொண்டிருக்க வாவிகளிலுள்ள அன்னங்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கும்.

மரகத மணிகளால் இழைத்துச் செய்யப்பட்ட மாடங்களும் மாளிகைகளும் அளவற்ற கோடி விளங்கும். வச்சிரத்தினால் செய்யப்பட்ட மேடைகள் எண்ணற்றகோடி, மிகத்திரமான நீலமணிகளாற் செய்த சிகரங்கள் அளவில் கோடி, குற்றமற்ற வளப்பமுடையதாகச் செய்யப்பட்டுள்ள பொய்கைகள் அநந்தங்கோடியாக விளங்கும். சந்திரகாந்த மேடைதனில் ஒளி விளங்கச்செய்த அழகு மிகுந்த செவந்த பிரகாசமுள்ள மணி நிறத்தூவிகளெல்லாம் சந்திரனைப்போல விளங்குஞ் சங்குகள், பிரகாசம் பொருந்திய முத்தை யீனும்படியான மலர் வாவிகளிலெல்லாம் விளங்கும் குவிந்த தாமரையைப்போலத் தோன்றும்.

மலைகளின்மேற்பொருந்தியிருக்கும் யானைகள்போல மேகங்கள் ஒருபுறம் பொருந்தியிருக்கப் பெற்ற வெண்மாளிகைகள் மாலினை ஒரு பாகத்தே கொண்டு விளங்குஞ் சிவபெருமானைப் போலத்தோன்றும். அழகுமிகுந்த உயர்ந்த கோநகரின்வீதியிலே சூழ்ந்துள்ள நீலமாமணிகளாற் செய்யப்பட்ட மாளிகைகளின் உச்சியில் விளங்குஞ் செம்மணி சேர்ந்திருக்கும் தோற்றமானது மார்பினிடத்தே லட்சுமி வசிக்கப்பெற்ற மகாவிஷ்ணுவை ஒத்திருக்கும். சன்னல்களிலெல்லாம் சார்ந்து நிற்கும் சந்திரனைப் பூக்கமழும் மெல்லிய கூந்தலையுடையாய் முகம் பாரென்று கூறக் காளையர்களோடுங் காணும் கன்னியர்கள் ஒளியில்லாது உற்றுள்ள களங்கத்தினால் மதியென்றனர். தனபாரஞ் சுமந்த மாதர்களின் சாயலை நாடி மயிற் கூட்டங்கள் செல்லுகையில் அதனினத்தோடு அன்னப் பறவையும் மேடை யிடங்களிற் செல்லுதல் தன் மேகக் கூட்டங்களோடு சந்திரன் செல்லுதல் போல விளங்கும். குளிர்ந்த மான் மதஞ் சிந்தியுள்ள சேற்றின்மேலே விரும்பி வண்டுகள் பொருந்தியிருக்கும். பெண்கள் ஊடி எறிந்த மணிக்குவியல்களின் பிரகாசம் எங்கும் உள்ள இருளை யோட்டும். சந்திரகாந்தக்கல் விளங்கும் பொன்மேடையில் பந்துகளை எறிந்த மைந்தர்கள் அதனைக் காண்கிலாராகி மாதர்கள் ஒளித்துவைத்துக்கொண்டார்களென நினைத்தும் பந்தென விளங்கும் முலைகளின் மீது தரித்துள்ள அழகிய பட்டிகைகளை நீக்கு

வார்கள். சிறப்புப் பொருந்திய பெண்கள் கூட்டத்தில் அம்மா தர்களின் இடை மின்னல்போல விளங்குதலாலும் கறு நிறம் பொருந்திய மெல்லிய கூந்தல் மேகம்போல விளங்குதலாலும் உலாவும் மயிற்கூட்டங்கள் மருண்டு தம் கலாபத்தை விரித்து ஆடிக்கொண்டிருக்கும். பிறைச் சந்திரனைப் போலும் நெற்றி யையுடைய மாதர்களெறிந்த சேதகமும், இருள்போலுங் கறு த்த கூந்தலின் கண்ணுள்ள பூக்களின் தேனும், எங்கும் ஓட அதோடு இரதமும் ஓடுதலால் வீதிப் பறப்புகளிளெல்லாம் சேறு மிகுந்தன. பேற்றைத் தருகின்ற நெறியின் பெருமைகளைச் சொல்லுகின்ற வேதங்கள் கூறும்படியான அந்தப் பொருள் களை நிறைந்துள்ள தன்மையைப்போல மிக்க எப்பொருளையும் (உண்டுபண்ணக் கூடிய) விளைவிக்கக் கூடிய வான் நதியாறு போல ஆவண வீதிகள் விளங்கும்.

பெண்களின் கீதங்களைக் கானத்தையுடைய மகரயாழிசைக் கும். வேதத்தை யோதும் புங்கவர்களின் இசையை கிள்ளைக ளும், புள்ளினங்களுமிசைக்கும். பாததாமரைகளிலுள்ள சில ம்பின் ஓசையைப் பாலனம் பகரும். வீதிகளிலே சங்குக் கூட் டங்கள் முழங்குஞ் சப்தத்தை ஒலி செய்யும் வண்டினங்கள் பாடும். விருப்பந் தரும் மேடைகளிலெல்லாம் பரிவாக அம்ம னைகளாடுவார்கள். வாசனை பொருந்திய மலர்போலுந் தளிர் போலுங் கையையுடைய மின்னல் போலுஞ் சாயல் மாதரின் வெள்வளைகள் சப்திக்குஞ் சப்தம்போல சுரிவளைக் கமலவாவி யில் சூழ்ந்திருக்குஞ் செந்தாமரையில் வசிக்கும் கருத்த வண்டு கள் இசைகாட்டக் காமுகர்கள் களிப்படைவார்கள்.

ஒளி வளரும் மணி மாடத்தின்மீது பொருந்திய சாளரங்க ளிலெல்லாம் நுழைகின்ற சிறிய தென்றற் காற்று அங்கு காம நோய் மிக மிக அமளியிற் கிடக்கும் வெள்ளிய பிறைபோலும் நெற்றியையுடைய பெண்களின் பிரிவையும், அவர்கள் நோயை யும் தெரியாமல் தளிர் நிறத்தாளக் கொங்கையைத் தைவரத் தழுவும். கலவியினிடத்து ஊடலைப்பேசும் பெண்களுக்கு இதஞ்

சொல்லாமல் மூலேமிசைக் கொழுநர் புல்ல முறுவல் செய்து மன ங்கோணி அவர்கள் விலகிட, அவர்கள் விலகிய இடங்களிலெல் லாம் போய்ப்போய் மெல்லிய பாதத்தில் விழுந்தோறும் புலவி யால் அவர்கள் மிதித்த குஞ்சி—(குடுமி) உடனே செவந்தது.

மயில்கள் வளரும் மாடம் நீடும் மாளிகையின் இடங்களி லெல்லாம் சித்திரம்போலும் அழகிய மாதர்கள் தேவர்களைப் போல பலவிதமான நடனங்களைச்செய்யுந் தன்மையைக்கண்டு இமைப்பிலாதவிழிப்பையுடைய அயில்போலும்விழியையுடைய அரம்பைமாதர்களுந் தேவர்களும் ஆச்சரியப்படுவார்கள். மாதர் விழியையுங் குமுதச்செவ்வாயையுமுடைய மங்கையர்கள் குழ லில் ஊட்டும் முதிர்ந்த அகிற்புகையும், வேள்வியினிடத்தே எழு கின்ற புகையும், சமையல் அறையில் எழுகின்ற புகையும், கக னத்தே பொருந்தியுள்ள மேகங்களோடும் வேற்றுமையின்றி விளங்கும். யானைச்சாலைகள் கோடி, வெற்றிதருங் குதிரைச் சாலைகள் கோடி, ஆபரணச் சாலைகள் கோடி, அழகிய மணிச் சாலைகள் கோடி, போர் அணிகளின்சாலைகள் கோடி, புதியமணச் சாலைகள்கோடி, தார் அணிச்சாலைகள் கோடி தமனியச்சாலைகள் கோடி, மாதவர் சாலைகள் கோடி, வேள்விபுரிபவர் சாலைகள் கோடி, நீதிசெய்பவர்கள் சாலைகள் கோடி, அன்னநிலையறச்சாலை கள் கோடி, கல்வி பயிற்றுஞ் சாலைகள் கோடி இவ்வாறு கோடா னுகோடிச் சலைகளோடு திருநெல்வேலித் தலமானது தெய்வ லோகம்போல விளங்கும். நாகலோகத்துள்ள விஞ்சையர்களும், சித்தர்களும், முனிவர்களும், தேவர்களும், யோகியர்களும், கந்திருவர்களும், பூதர்களும், தானவர்களும், இயக்கர்களும், போகர்களும் தாமிருக்கும் இடங்களைவிட்டு நீங்கிவந்து இங் கேயே வசிப்பதினால் அவர்கள் வாழ்ந்த பதிகளெல்லாம் மிகையா யின (அவசியமற்று இருப்பது). நெல்லைமாநகரத்திற் பொருந் திய மனிதர்களெல்லாம் செவ்விய நல்லகனிகள், தேன், பால், சீனி, பசுங்கரும்பு, நெய்முதலியவற்றோடு உண்ணக்கூடிய அமு தைச்சமைத்து அதிதியர்கள் அருந்தும்படிச்செய்து பொருந்திய சுற்றத்தார்களோடும், சிவனடியார்களோடும், விருந்தினர்களோ

டும் உண்பார்கள். மனிதர்களின் வெவ்வியபடையின் சப்தமும், மதம் ஒழுகப்பெற்ற யானைகளின் ஆர்ப்பும், வேகத்தோடு கூடியதும் தாக்கும் வன்மையுடையதுமான குதிரைகளின் ஓதையும், மாலைபூண்ட தேர்களின் சும்மையும், செல்வம்நிறைந்த பெரியநகரில் மாதர்கள் அணிசெய்யும் மங்கலத்திளுர்ப்பும், தினந்தினமும் நீக்கமின்றி சமுத்திரத்திளோடு இகலி (இகலி=பகைத்து) ஆர்க்கும். அங்குள்ளார்களில் சிலருக்கு கரி பரி தேர் செலுத்தியும், விரும்பும் வாசமலர்சூடிய குழலையுடைய மாதர்களின்புலவிதிருத்தியும் அவர்களைச்சேர்ந்தும், பிரகாசிக்கின்ற மணிகளிழைத்துச் செய்த ஆபரணங்கள் விளங்கும்படிப்பூண்டும், இன்பந்தரும்படியான கலைகளை ஆய்ந்தும் பொழுதுபோகும். சிலருக்கு இனிய கீதங்கள் பாடியும், பாடல்களை இயல்புறக்கேட்டும், பொய்கையிலுள்ள நல்ல நதிகளில் குளித்தும், நல்ல நாடகங்களை இனிமையோடு பார்த்தும், அழகிய மலர் முடித்தும், சந்தனம் பூசியும், புகழ்பெறு தானஞ் செய்தும், நீதிகளை ஆய்ந்தும், பொழுது இனிது கழியும். சிலருக்கு நந்தன வனங்கள் பார்த்தும், நறுமலர்ப் பழுதுபார்த்தும், சிந்து பூந்துறையில் நீராடி சிவார்ச்சனைகளை முறையாகச் செய்தும், அந்தணர்களுக்கும் வறியோர்களுக்கும் ஈந்தும், ஆகமபுராணங்களைத் தேர்ந்தும், மனதுறப் பஞ்சாட்சர மந்திரத்தை யோதியும் பொருந்தியபொழுது இனிதுகழியும். அழகிய தெய்வீகமுள்ள இந்தத் திருநெல்வேலி என்னுந்தலத்தில் பிணி, பேதித்தல், பிணங்குதல், மாய்கை, சோர்வு, நல்குறைவு, தாகம், சோகம், தளர்வு முதலிய எல்லாம் உயிர்களைச் சாராதிருத்தல்கண்டு தேவர்கள் யாவரும் இத்தலத்தில் பணிவிடைபுரிந்து வளர்தருவாய் வாழ்வார்கள். பொன்னுலும் மணியாலுஞ் செய்துள்ள எயிலைச் சூழ்ந்துள்ள மிக்க ஒளி எங்கும் ஓங்கும், நெல்லின்மலைகள் எங்கும்பெருகும், நிதிமலைகள் எங்கும் விளங்கும், பலமணிகளின் மலைகள் எங்குந்தோன்றும், சிறப்பித்துக் கூறப்படும் அன்னமலைகள் மலியக்காணும், ஆதலால் தென்மலைகள் ஓங்கியுள்ள திருநெல்வேலிச் சிறப்பு செப்புந் தன்மைத்தோ ?

அன்னத்தையொத்த மெல்லிய நடையைக்காட்டி, அமுதவாய் முறுவல் காட்டி, விளங்கும் நெடுவேற் கண்ணுங் கொம்மை வெம்முலையுங் காட்டிக் காமுகருக்கு ஆசையை வருத்திய விரும்பிச்சேரும் பொன்முலை மகளிரின் வீதியிலெல்லாம் பொன் மனைகள் திகழும். ஆயர் வீதிகளிலெல்லாம் பாலின்விலை பகரும் ஓசை, கண்ணாளர்வீதிகளிலெல்லாம் கலன்பலதொருக்கும் ஓசை, செக்கார் வீதிகளிலெல்லாம் எள்ளாடும் ஓசை, குயவர்கள் வீதிகளிலெல்லாம் மண்பாண்டங்கள் செய்யும் ஓசையே மிகப்பெருகி நிற்கும். சித்திரகாரர்களும், கைத்தொழிலாளிகளும், இன்னும் மற்றைச் சாதியார்களும் யானைப்பாகர்களும், சூதர்களும், இடங்களிலெல்லா நெருங்கிவாழ்வார்.

நலமிகுந்த நெல்வேலி நகரின் வேளாள நற்குடியிற் சிறந்த பெருஞ் செல்வர் வசிக்கும் தழைத்த திருமாளிகைகள் விளங்கியோங்கும்.

விளங்கும் மணிக்குவைகளும் பொன்மலையும்மேருநாகமென நாடோறும் வளர்தலானும், புகுவளங்கள் பலகோடி மனைகள் தோறும் பொன்மாலினுதரமெனப் பொருந்துதலானும், இந்தத் திருநெல்வேலி அளகாபுரிக்கு நிகராக விளங்கும். அந்தத் தனதன் போல மிக்க வணிகர்கள் ஆவணங்கள்தோறும் நீண்ட மேடையின்மேல் விளங்குவார்கள். அழகியமணிக் கோலவீதிகளில், அலகிலாப் பலகோடி அண்டங்களை அளிக்கும் எங்கோன அனவரதநாயகரிடத்து அன்பும், இலகுவடிவேற்கரமும், திறலும் செங்கோல் எடுத்தரசாளுந்தன்மையும், எழிலும், வேதஞ்சொல்லும் நெறியின் வழிநடத்தி உயிரைக்காக்குந் தொழிலும், மனப்பொறையறிவும், துலங்கும் வேந்தரின் குலவும் உயர்மாட கோடிகளும், நீண்ட கோபுரங்களும் இலகும். வேதங்கள் பல புகலும் அழகிய சாலைகளும், தேவர்களுக்கு அவி கொடுக்கும் அழகிய பொற்சாலைகளும், சீருற்ற நீள் புரிசைசூழ் மந்தரச்சாலைகளும், சிறந்த ஆகுதிசெய்யும்சிகரச்சாலைகளும் பூரணகும்பங்கள்நிறைந்த ஒப்பற்ற சாலைகளும், போற்றும் அறுதொழில் புரியும் புனிதச்

சாலைகளும், தோரணங்கள் நிறைந்து எங்கும்மறையோர் வாழும் மாளிகைகளும் சூழப் பெற்றிருக்கும்.

நீண்ட பழம்நகரத்தின் சோதியும், மாடங்களின் நிறைவும், ஊடுமைந்தரும் மாதரும் ஓங்கிய சிறப்பும், பக்கத்தே ஆடும் பெண்களின் ஆடலும், அழகிய முரசத்தின் சப்தமும் விளங்கும் பொன்வீதியில், விழவொலியே மலியும். திருவாயில்களிலெல்லாந்தோரணம் நிறையும். மேடைகளிலெல்லாம்வந்து மேகங்கள் தங்கும். சந்திரன் தவழும் மனைகளிலெல்லாம் வாத்தியங்களொலிக்கும். அந்தரத்தையும் ஊடும் பொற்கொடிகள் தூர்த்துவிடும். அழகுபொருந்திய திருக்கோயிலினிடமெலாம் கூட்டங்கூட்டமாகச் சீலம் மிகுந்த தொண்டர்கள் நெருங்குவார்கள். மிக நீண்ட வீதிகளிலெல்லாம் பொன் விளங்கும். நாலு திக்கிலும் மடங்கள் நலம் பெறவிளங்கும். *அந்தணர் புரியும் வேள்வியே தீயன, விளங்கும் பூங்கொத்துகளையுடைய செழுமையாகிய சோலையே பயத்தன, கூந்தலைச் சூழ்ந்த அழகிய மலர்களே பிணியன, தூய்தாம் சந்திநீள் வழிவிலக்கதே கவலையதாகும், பெண்களின் நூல்போலும் இடையே தளர்வது, மாடங்களின் மீதுகட்டிய கொடிகளே அசைவன, மலர்ந்த பூக்களையுடைய மாலையே தாழ்வன. பூவின்தாதுக்களே துவள்வன.

பாலர்கள் யாவரும் வண்டிகளுருட்டுவார். பார்ப்பாரின் சிலமைந்தர்கள் தேரினையுருட்டுவார்கள். சிறந்த வேலைத்தாங்கிய ராஜபுத்திரர்கள் யானைமேல் சவாரிசெய்வார்கள், மந்திரி மைந்தர்கள் யானை பரிமுதலிய ஊர்வார்கள்.

அரம்பை மாதர்களுந் தேவரும் பொருனை நீராடவிரும்பி நந்தனவனந்தோறும் மெல்லியமலர்களையெடுத்து, கரும்புபோலு மொழியையுடைய கவுரிபாகனை மேலான கதியைத்தரும் பராபரநாதனைத் தாழ்ந்து அருச்சிப்பார்கள். நாட்டின் வீதிகளிலெல்

* கீழ்வருவன சிலேடைப்பொருள். இதனை 'ஒழித்துக்காட்டணி' என்பர் இலக்கண நூலார், வட மொழியில் "பரிசங்கியாலங்காரம்" என்பர்.

லாம ஆனைமாமுகத்தையுடைய ஐங்கரக்கடவுளினுடைய வாகன மாகிய பெருச்சாளியின் அடியும், மாட்சிமைபெற்ற வேலைத்தாங் கிய குமரக்கடவுளின் வாகனமாகிய மயிலின் அடியும், ருத்திர கணம் முதலிய ஏனைத்தேவரின் வாகனங்களின் காலடிகளும் நனிவிளங்கும். மகாவிஷ்ணுவின் வாகனமாகிய கருடனின் அடியும், பிரம்மாவின் வாகனமாகிய அன்னப்புள்ளின அடிக ளும், தருக்களுக்குத் தலைவனாகிய இந்திரனின் வாகனமாகிய வெள்ளையானையின் அடிகளும், தினந் தினந் தோறும் வந்து வந் துதான் தெருவில் எங்கும் நிறைந்துவிடும். தேவேந்திரன் உல கம், மற்றுமுள்ள தேவர்கள் உலகம் ஆகிய இவற்றில் ஆசையில் லாமலே சிவபெருமானின் மலரடி விரும்பும் அறிவு உடையோர் கள் பேசும் பஞ்சாட்சர மந்திரத்தின் ஓசையே திசைகள்தோ றும் பெருகும். ஈசனின் அன்பர்களே இடந்தோறும் இடந் தோறும் இருப்பார்கள். பொன்னே மரமாகி அதன் கிளைகள் அனைத்தும் ஆகி நீண்ட இலைகளும் தளிர்களும் பவளமாகி நிறைந்த மலர்கள் மணிகளாகி உள்ளும் பொய்கையின் பக்கத் தும் உதித்தேயுறு நிழலும் பிரியாத பெருமையை உடையத னல் இதற்குத் தென்காஞ்சி நகரென்றும் பெயராகும். பிர மன் உறங்கும் இரவினிலும், முடிவில் துஞ்சுந்தோறும், மறுவிய ஊழிகள் தோறும், வாரியுலகழிந்திடுங் காலத்தும், இந்த மேலான பதியழியாதபடி ஒரு சத்திகாத்திடுந் தன்மையால் இந்நெல் வேலி பிரளயச்சித்தென்றும் பெயர் பெற்று விளங்குகிறது. முன்னே அழகிய கைலயங்கிரியிலே கடவுளின் கண்ணைப்பொத் திய பாவம் அகலப் பார்வதி வந்து பரமசிவனைப் பூசைசெய்யப் பொன்போலுங் கம்பை நதியில் மூழ்கிப் போற்றுதலால் இந்த நெல்வேலி சிவபுரம் என்றும் பெயர் பெற்றது.

திரிமூர்த்திகளும், ஆநந்தத்தோடு இப்பதியில் இருப்பதனல் இந்நெல்வேலி நகர்க்குத் திரிமூர்த்திபுரம் என்னும்பெயர் விளங் குகிறது. இந்திரனின் யானைசெய்த அரிய தவத்தினுல் வெற் பாகிப்புந்தியன்பால் போற்றுகின்றபடியினலே இந்நெல்வேலிக்கு இபபுரி என்று பெயர் விளங்கும். பிரமன் செய்த தவத்

திற்கு விஷ்ணு வந்தருள் செய்ததினால் இத்தலத்திற்கு விண்டு தலம் என்றும் பெயர் வழங்கும். மேலான நற்கதி, உண்மைப் போகம் முதலிய விரும்பியவற்றைத் தருதலினாலே திருநெல் வேலி தென்காஞ்சிக் காமக் கோட்டமாம். பிரம்மனாதியோர் தவஞ்செய்து மேலானபேறு பெற்றிருத்தலினாலே இவ்வூரின் பெயர் தபோமயமும் ஆகும். செங்கண்மால் கமடமாகிச் சிவ பூசை செய்தலாலே இவ்வழகிய நகர்க்குக் கச்சபாலயமெனும் பெயராகும். பிரமன் பூசை செய்து பரிவுடன் இருத்தலினாலே வளநிறைந்த நெல்வேலி பிரமபுரமெனவும் பெயர் விளங்கும்.

சிவபெருமான் கயிலைக்கின மலையை நீவி என்ன, அதனைக் கருநிப் பரைதான் நீத்த காளிமங் காளியாகப், புரிசடைப் பர மன் பிட்டாபுரத்தி இந்நகர்கா என்ன, கருணையோடவளேகாக்க இந்நகர்க்குக் கன்னிகாப்பு என்னும் பேராம்.

மூன்றுலகங்களிலும் உள்ள அறங்களிலும் மிகுதியாக இவ் வுலகில் அறம் உண்டு. பெரிய நகரங்களிலுள்ள தருமங்களி லெல்லாம் மிக்க தருமம் இந்த நகரத்திலுண்டு. ஆகையினாலே இந்நகருக்குத் தரணி சாரம் என்று பெயராம். இந்தத் திரு நெல்வேலி அட்டமா சித்திகளையும் நல்கியருளுதலால் இதற்கு சகல சித்தி என்றும் ஒரு பெயருண்டு. உலகத்திலுள்ள உயிர்க ளெல்லாம் உய்யும்படிக்கு உமாதேவியார் முப்பத் திரண்டு தரு மங்களைச்செய்து சாரும் இக்காயக்கோட்டத்தைச்சூரியன் சந்தி ரன் முதலிய கணங்கள் சூழ்ந்திருத்தலாலே திசை மயங்காத படிக்கு இப்பணைவனத் திருநெல்வேலி இப்பூமியிற் சிறந்து விள ங்கும். தென்பாலுள்ள பொதியமலை சிறந்து ஓங்கப்பெற்ற திரு நெல்வேலியானது அயோத்தி, மாயை, மதுரை, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகை முதலிய பூமியில் உயர்ந்த நகரங்களிலெல் லாம் மிகமிக உயர்ந்ததாகும். பாவங்கள் எவ்வளவு செய்தா லும், சொல்லும் இப்பதியில் தீர்ந்துவிடும். ஒரு தருமஞ்செய் தால் அது கோடானு கோடிதருமமாகப் பெருகும். இத்தன் மையுடையதனாலேயே தேவரும் தினமும் இங்குவந்து தவங் கள் செய்வார் பூலோகத்தில் நெல்வேலிக்கிணை வேறுண்டோ?

பிரமன் முதலிய தேவர்கள் இறக்கும்போதும் பூமியில் இறைவர் உறையும் நெல்லை அழிவில்லாதிருப்பதினாலே இது பிரமனாலே படைக்கப்பட்டதன்று, சூலபாணியாகிய சிவபெருமானாற்படைக்கப்பட்டதேயாகும். தமிழ் பெருகும் சாலிமா நகரத்தில் உரிய எல்லாவொலியும் வேத ஓசைகளாம். ஊரிலுள்ள மணல்களெல்லாம் சிவலிங்கமாம். அந்நகரில் விரும்பி வசிப்போர்கள் தேவர்களாம். அங்குள்ள மரங்களனைத்தும் கற்பதருக்களாம். அந்நகரத்தார்க்குக் கதிதரும் வேள்வி, செபம், ஊண், பூசைநடத்தல், வலம் வருதல், சிந்தித்தல், தியானம், தருமனைப்படுத்தல், பரணடிவணக்கம் ஆகிய இவைகளே தொழிலாம். விளங்கும் தண்டேந்தியவயிரவக்கடவுளும், வேதங்களெல்லாம் இசைக்கும்படியான ஓறாமைக்கிம்புரிக்கோட்டோராகிய விநாயகக் கடவுளும், ஆறு திருமுகங்களையுடைய சுப்பிரமணியக் கடவுளும், கரும்பனை வீரர்முதலியவர்களும், நீலியும், புலிவாகனத்தையுடையவிசையையும், பொன்னிறத்துப்பிடாரியும், இந்தத்திருநெல்வேலி காக்கப் பொருந்தியிருப்பார்கள். நெல்லைமாநகரமாகிய இந்தத் தலத்திலுள்ள சிலைகளும், மரங்களும், இடங்களும், கூவலும், நதியும், மடங்களும், தீர்த்தங்களும், பிலங்களும், பழனங்களும், சோலைகளும், குளங்களும், நித்தியசபைகளும், மாலையவளங்களும், நிலைபெற்ற நீண்ட கோபுரங்களும், சத்தியுஞ் சிவமும் பொருந்திய சிறப்புந் தழைத்திடும், பாடலங்கள் சூழ்ந்த கம்பை யூடு சேர்ந்த பிலத்தில் பணிமணிக்கோயிலினுள்ளிருந்த பொன் மலை பயந்த பாவை அறங்களெல்லாம் வளர்த்தபின்பு அன்பாய் பெருமையுறத்தவஞ்செய்து வழிபடுகின்ற பிராட்டி மிக்க பூசை செய்ய நீடியகாரணத்தினாலே சிவகலைகளெல்லாம் நிறைந்துள்ளது இந்தத்திருநெல்வேலி.

இந்தத் திருநெல்வேலி பிரம்மனானவன் தன் படைத்தல் தொழிலை மறந்து துன்பப்பட்டு வருந்துங்காலையில் பஞ்சாட்சர மந்திரத்தை ஓதுவித்தபதி. கும்பத்திலுதித்த அகத்தியர் மன மகிழும்படிக்கு உமாதேவியை இடது பாகத்திலுடைய சிவபெருமான் மணக்கோலங்காட்டியருளியபதி. கல்ரிஷபம்

புல்லையருந்தும்படிக் காட்டிய பதி, வில்வம் மலப்பொன்னிதழி மேல் அலரவிளங்கும்பதி, நல்ல வன்னி மரங்கள் மாங்காய்க்கும். மூங்கில்கள் தாமரையை உகவும். உலகத்தோர் துன்பமற உமையால் அறங்கள் வளர்க்கப்பட்ட பதியாகும். கம்பை நதியூடுவரும் கருமாரிப்புனல் விளங்கும். செம்பொன் அம்பலமுடீ மீது ஓங்கும். பரமரின் நாமத்தால் உயர்ந்த பதியாகும் இந்த விம்பவளமுடைய நெல்வேலிமாநகரம்.

இந்தத் திருநெல்வேலி மாநகரத்தில் யாரேனும் இறந்தாலும் பிறந்தாலும தங்கினாலும் ஒருகணம் வசித்தாலும் வேணுவனத்தில் வேணுவின் நிழலிலிருக்கும் நாதரைத்தெரிசித்தாலும் தாம்பிரசபையில் ஆரும் நிர்த்தனத்தைக் கண்ணுற்றுத் தரிசித்தாலும் அவர்களே மேலான கதியை யடைபவர்கள் ஆவார்கள். இந்த நாட்டில் அமலர் தேவவருடம் அறுபதுனாயிரம்வரை ஆண்டதன்றி, விஷ்ணு, பிரம்மா, இந்திரன், கோறக் களிற்றையுடைய முழுதுகண்ட ராமன் முதல் அரசர்களும் நெடுமாறனும் ஆண்ட நீதி சூழ்ந்தது.

காசி, நல்லகயிலே, சிதம்பரம், காஞ்சி இவைதன்றியும் சிவபெருமான் வாழும் தலங்களிலுள்ள பெருமையும், வளப்பங்களும், அழகும், மற்றுமுள்ள எல்லாம் வாசமாக இன்றும் இருக்கும்படி உமாதேவியார் சிவபெருமானைக் கேட்டுக்கொண்ட வரத்தால் நேசமாய் அந்த வளமெல்லாம் பொருந்தி நெல்லைமாநகரத்தில் நிறைந்தன.

திருநெல்வேலியானது ஆலயமருங்கு சூழ்ந்துள்ள திருமதிள்களேயும், அழகிய மணிச் சிகரங்களேயும், கோபுரங்களேயும், சிலமிகுந்த மூலதானத்தையும், மூங்கிலிலே பிறந்த முத்தர் விளங்குந் தானத்தையும், நடன சபையையும், வாலே காந்திமன் ஆலயத்தையும், பொற்றாமரை கருமாரிவாவிகளேயும், அழகுமிக்க கொடிமர வாசல்களேயும் இடபங்களேயும் நெருங்கப்பெற்று விளங்கும்.

சொல்லும்படியான திருநெல்வேலியின் நான்கு எல்லைகளாவன: கிழக்குத்திக்கில் குமரக்கடவுள்வாழ்கின்ற திருச்செந்தூரும், தென்றிசையில் குமரிவாழ்கின்ற பதியும், மேற்குத் திசையில், அழகிய நதியாகியபொன்றுைம், வடதிக்கில் திரிகூடாலயமும் பொருந்திடத்திகழும். சிவபெருமான் உமாதேவியாரைக் கல்யாணஞ்செய்துகொண்டு இருந்து இத்தலத்தைக் காப்பதினுலும் மாதமும் மும்மாரிபொழிவதினுலும் தேவர்கள் அநுதினமும் பணிய மங்கலமிக முழங்கவளமிகப் பெருகி வளரும்.

இத்திருநெல்வேலியின் பெருமை பிர்மாவினுலும் அளந்து சொல்லுதற்கு அரிய பெருமையதாகும். இம்மட்டோ நான்கு வேதங்களுக்கும் எட்டாத தன்மையுடையது.

ஆகையால் இந்த நகரின் வளமெல்லாம் அருந்தவச் சூதமாமுனிவன் மிக்க அறிவோடுங்கூறி, நெல்வேலி முதல்வர்தம் மருளினுல் மிக்க தவம்புரிந்து வேதங்களே வேணுவனமான காதையின் மகிமையை நீதியே தழைக்கும் நைமிசாரணிய நிலைபெறு மாதவர்களுக்கு உரைக்கின்றார்.



## 4-வது வேணுவனச் சருக்கம்



வித்தக வேத மெல்லாம் விமலனைக் கயிலைத் தேவைச்
சித்தம தொன்ற நோற்றுத் திகழுவ னருளைப்பெற்று
முத்தம தாக வீசன் முளைத்திடத் தம்முட் டாமும்
ஒத்தநல் வேயாம் வேணு வுயர்தலம் போற்றி போற்றி.

திருமாலும்பிரம மனும் தேடும் சிவபெருமான் சிற்பரமதாகிய தாம்பிரசபையிலிருந்து நடம்புரிவர். பூர்வமாம் பிரளயத்தில மால் பிரமர் சூரியசந்திரர் மற்றைத் தேவரெல்லாம் அழிந்திடுவர்; இதனைத் தெரிந்த வேதங்கள் அரன் கயிலையிற் சென்று ஓரிடத்திருந்து தவங்கள் பல செய்து அருச்சித்தன. இதனைக் கண்டருளிய சிவபெருமான் பார்வதி தேவியாரோடு

ரிடபாரூடராய்த் தோன்றியருளினார். வேதங்களெல்லாம், ஆயிரங்கோடி ஆதபர் போல் விளங்குகின்ற பெருமானாரைக் கண்டு, கண் களிகூர்ந்து, தொழுது, பணிந்து, ஏத்திக் களிப்போடு குனித்து ஆடிப் பண்பாடித் தோத்திரங்கள் பல புகன்றன. சிவபெருமான் மிகவும் மகிழ்ந்து வேதங்களை நோக்கி ஓ! வேதங்களே நீங்கள் என்னை நினைத்துச் செய்த தோத்திரங்களையும் தவங்களையும் கண்டானந்தங்கொண்டோம், நீங்கள் விரும்பிய வரங்களைக் கேளுங்கள் இப்பொழுதே தருகின்றேன் என்றார். அதற்கு வேதங்கள் கூறுவனவாயின. ஐயனே! நாங்கள் ஆதியில் உன்னிடத்திற் றோன்றுதலாலே இன்னும் தேவரீர் தாம்பிரசபையில் நடிக்கும் மேன்மை காணவேண்டும்.

ஆதியாகிய பிரளயத்தும் அழிவில்லாத தலம் ஒன்றை நல்கி அந்தத்தலத்தில் நாங்கள் தருவாய் நின்று பிரகாசம் பொருந்திய நினது திருமேனி எல்லாம் நிழலைச்செய்து கெடுதலின்றி நித்தியமாயிருக்கக் கிருபை செய்யவேண்டும். இந்தவிதமாக நித்தியமாக இருந்திடும் எங்களிடத்தே தேவரீர் முத்தெனத் தோன்றுதற்கு நாங்கள் மூங்கிலாம் தாயுமாகப் பெருங்கருணை புரியவேண்டும், அதனாலேயே அவ்விடத்திற்கு அத்தருவின் பெயரே பெற்று நித்தமும் நிலைபெற்றிருக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்ளச்சிவபெருமான் புன்முறுவல்செய்து அற்புதமறைகளே! உங்களுக்கு அந்த நல்வரங்களுந் தந்தோம், கற்பங்கள் அழிந்தாலும் கடவுளாய் நாம் அந்தப்பதியில் இருப்போம். அந்தப் பதியின் சிறப்பைக் கூறுகின்றேன் கேளுங்கள் "வடகயிலையத்திலே உயர்ந்த தாம்பிரசபையில் நித்தமும் நடனஞ்செய்யுந் தன்மைபோல் என்றும்நீங்காமல் மனதொடு அந்தத்தட்சண கயிலாயத்திலும் சத்தியோடு கூடியிருந்து தாம்பிர சபையில் நடனஞ் செய்வோம். பூமியில் நடனஞ்செய்யுந் தானங்கள் இருபத்தொன்றாம், அவ்விருபத்தொன்றிலும் மிக விசேஷமுடையது ஏழுதானமாகும், அந்த ஏழுதானத்தும் முதற்றானமாவது தென்காஞ்சி என்று சொல்லப்படும் தேன்பாய் பொழில்சூழும் நெல்லை. அந்த நெல்லையிலே நாம் நடனங் காட்டுவோம்"

என்று இவ்வாறு சிவபெருமான் கூறக்கேட்ட வேதங்கள் சிவபெருமானை நோக்கிப் புண்ணியப் பொருளே! தென்பாற் கயிலையும் தென்காஞ்சியும் எங்கேயிருக்கின்றது? ஏழு நிர்த்தன சபைகள் எங்கேயிருக்கின்றன? அவற்றைச் சொல்லியருளவேண்டுமென்றன. அதற்குச் சிவபெருமான் சொல்கின்றார். "யாம் பார்வதியோடும் மகிழ்ந்திருப்பதற்கு உரித்தாகிய தலங்கள் தோறும் விளங்கிய சபைகள் ஓர் ஏழையும் சொல்லுகின்றேன் தாம்பிரசபை நெல்வேலியிலும், வெள்ளிச்சபை மதுரையிலும், பொற்சபை தில்லையிலும், ஆகாசச் சபை காஞ்சியிலும், சித்திரசபை குற்றாலத்திலும், வேதசபை வேத வனத்திலும், மாணிக்கசபை தேவமாசபையிலுமாகும். இந்தச்சபைகள் ஏழிலும் விருப்பத்தோடு நடனஞ்செய்வோம். இதில் விரும்பிவந்து தரிசிப்போர் மேலான மோட்சவீட்டை அடைவர். இதுவேமுறையாகும். இதிலேயாமும் அடுத்த முறையாய் நடனஞ் செய்வோம். கடல்சூழ்ந்த உலகத்தில் ஒவ்வொரு பதியிலும் நடிப்பதென்றாலும் திவ்விய முதல்தானம் சிறந்த திருநெல்வேலியாகும், அந்தத் தலத்தில் தாம்பிர மன்றத்தில் உமையாளோடு கூடி தினமும் நடிப்பதல்லாமல் ஒழுங்காகப் பிரதோடத்தும் சித்திரை மாதம் முதலாகச் சங்கிராந்தி தோறும் வித்தகத் தனுச்சங்கையும் விசேடமாய் நடனஞ்செய்வோம். ஆதியாகிய கைலாயத்தில் அழகுடனிருக்கும் மணிகள் சூழ்ந்த தாம்பிர மன்றத்தை மகிழ்ந்து காண்போர் நினைப்போர் துதிசெய்வோர் மூதறிவுடையராகி முத்தியை அடைவார்கள். இச்சபையில் ஓங்கியுள்ள மணி நிறைந்த தூபியை நினைத்தாலும் கண்டாலும் தொட்டாலும் கேட்டாலும் அவர்கள் தம் கோடி சென்மத்திலுறும் பாவங்களெல்லாம் நீங்கப்பெறுவர். கயிலையை ஒத்த பல பதிகளிருந்தாலும் ஒண்கொடு முடியில் ஒன்றாக உயர்ந்த நெல்வேலிதானே நீண்டவேல் போலுங் கண்ணையுடைய பராசத்தி பதியும் ஆகும். நண்புடைய நம் அடியவர்களோடு நாமும் அங்கிருப்போம். விஷ்ணு, பிரம்மா, மற்ற தேவர்களும் நீங்களும் உய்யவேண்டிப் பூமியில்வந்து அந்தப் பதியில் நடஞ்செய்வோம், வடகாஞ்சிக்கதிக மேன்மையுடையது. இது திடமு

கீடய சைவம் விளங்கும் தெட்சணகாஞ்சி என்று சொல்லப் படும். அந்த இடத்தில் யாம் என்றும் பெரு மூலப்பிரளய காலத்தும் பெயராது பிறங்கிவளர் திருமூலத்தானமெனச்சிறந்து விளங்கும். கருவுக்கு மூலமாகிய பாவந்தொலையவும் அடி யார்கள் காதலுறவும் வரும் மூலத்து ஆதிலிங்கமாகவும் மகிழ் ந்து இருப்போம். சிவசத்தியும் சருவசித்தியும் சிறந்திடு உருவ மும்ஆக யாமிருப்போம். பூமியில் நமக்கு அன்பானபொற்பதி அதுவேயாகும்.

ஆகையால் ஓ வேதங்களே! அந்தத் தலத்தில் வேணுவாகி நவசித்தியமாக நலம்பெற இருங்கள், உங்கள் உட்பொருளாயிருக் கின்ற நாம் உலகெல்லாம் உய்யும் வண்ணம் உயிர்களுக்குப் புத்திமுத்திகளைத்தந்தருள உங்கள் நிழலின் மத்தியில்லிங்கமாயி ருப்போம். அதன் பெருமயை யோகரும் அறிஞரும் அறியமாட் டார்கள். ஆதலால் அதன் பெருமை உங்களாலும் அறிதற்கு அருமையாகும், நெல்வேலிச் சிவலிங்கத்தை அன்பாய் வேதமே எமைப்பூசித்த மேன்மையாக முன்புதோன்றக் காதலோடு அருள்வோம். நீங்கள் காண வுங்கடவீர் என்றார். பெருத்த பூமியில் வேணுவாயிருப்பது வேதங்கள் என்பதே எங்கும் பிர சித்தியாகும். பக்கத்தேயுள்ள எம்மரங்களும் ஆகமங்களும் கலையும் ஆகும். பட்சியும் மிருகமும் சாத்திரபுராணங்களாகும்.

அத்தலத்திலிருக்கும் வேதியர் தேவர் சித்தர் அன்புடைய மெய்யடியார் சிவகணங்கள் முத்தமிழறிவோர் தவம்முயல் முனிவோர்கள் வெண்மணல் ஆகிய இவைகளெல்லாமுஞ் சிவ லிங்கமே.

அத்தலத்தில் பால்சொரியும் பசுவெலாம் காமதேனுவே. பூமியிற் பிறந்து ஊறுவன மணிகளும் இருநிதியும் ஆம். மலர்ந்து கீழ்விழும் மலர்களெல்லாம் எம்மை அருச்சிக்கும் மலர்கள். அங் கிருந்தவர்களுக்கு நாம்நல்லபலனைத்தருவோம். பதினாறு உலகத் திடையும் உள்ளபதினாறுகோடிப் பெருந்தீர்த்தமும் ஊறும், பத் திசேர் கயிலையிலுள்ள மாநதிகள் வடகாஞ்சியிலுள்ள தீர்த்தங்

கள் கங்கை யமுனாநதி முதலாகவுள்ள நதிகளும், ஏழ்கடலும், புண்ணியப்பொய்கைகளும் குளத்து நீர்களும் தங்குநீர் நிலைக்குளநதியோடையுமாகும். அத்தலத்துக்கிணையாவரே சொல்வார். பொருந்திய தீர்த்தங்கள் யாவையும் இடந்தோறும் பொருந்தி மேலான தாம்பிரசபையோடு விமானமும் ஓங்கி இடது பக்கத்தேயுள்ள பரையோடும் நாமிருக்குஞ் சிறப்பினுமில நெல்வேலி தட்சணகயிலாயமாகச்சிறந்திருக்கிறது.

தருமதேவதை ரிஷபமாகவந்து கருமங்களெல்லாங் கடந்து நீங்கிய போதினினால் நினைத்து இணையற்ற பூசைசெய்து எம்மைப் போற்றினதினால் அத்தலத்திற்குத் தருமசேத்திரம் என்னும் பேராம்.

குற்றமற்ற கங்கையும் அகத்தியரும் அப்பதியில் வந்து பெரும் வரங்கள் பெறுதலால் இத்தலத்திற்குச் சர்வதீர்த்தபுரம் என்றுஞ் சொல்லலாம். வானவர்களெல்லாம் பூமியில் தருக்களாக வந்து நம்மைப்போற்றினபடியாலும் விருப்பத்தோடு அகலாதிருப்பதினாலும் இத்தலத்திற்குத் தேவதாருவனமெனப்பெயர் சொல்லலாம்.

இந்தத்தலத்தில் நல்ல அறத்தை நிதம்செய்கின்றவர்களும், அத்தலத்தில் வசிப்பவர்களும், அதில் பிறக்கின்றவர்களும், எத்தன்மையுடையவரானாலும் இறக்கின்றவர்களும்,என் உருவத்தை அடைவார்கள். ஆதலால் அத்தலத்து அமையுங்கள் என்று சிவபெருமான் வேதங்களுக்குச் சொல்லியருளினார். இவற்றை எல்லாம் சூதமகாமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குக் கூறினார். அந்த நற்கதையைக்கேட்ட அருந்தவர்கள் அழகுமிக்க சூதமுனிவரை வாழ்த்தி அந்த மாமறைகள் தாருவனந்தனில் வந்து போற்றிடும் ஆறென்ன சொல்லியருளவேண்டுமென்று வேண்டினார்கள். பின்னும் அந்தச் சூதமுனிவர் பெரிய தவத்தைச்செய்யும் முனிவர்கள் எல்லாம் சந்தோஷப்படும்படி சொல்லுகின்றார். சிவபெருமான் அவ்வேதங்களை நோக்கி நீங்கள் அந்தத்தலத்தில் சென்று தவமியற்றுங்கள் அப்பொ

ழ்ந்து நாம் அவ்விடத்தில் வந்து உமக்கு வேண்டும் வரந்தரு வோம் என்று சொல்லியருளினார்.

அவ்வரங்களைப்பெற்ற வேதங்களெல்லாம் அவரை வாழ்த்தி எந்த வரமுந் தரக்கூடிய தலமாகுந் திருநெல்வேலிப் பதிக்கு இனிமையுடன் வந்து திவ்வியமாகிய திருமூலலிங்கம் இருக்கப் பெற்ற கோயிலை வலஞ்செய்து போற்றிக் கடல்சூழ்ந்த பூமா தேவிக்கு இதுமுகமென வேதங்களெல்லாம் நிலைமைபெற்ற தவத்தை நியமஞ் செய்து, மன்றில் நடம்புரியும் மாட்சிமை பெற்ற லிங்கத்தைச் சூழ்ந்து மகிழ்ச்சிகூர்ந்து நெருங்கிய பெருங்கணுக்களால் அவ்விலிங்கத்தின்மேல் நிழலைச்செய்து அங்கு அன்று முதல் எந்தநாளும் நித்தியமாய் வேணுவெனவாயின. அந்த வேதங்கள் ஆயிரம் வருடந்தோறும் அரும்பரும் இலைகளாலும் செம்மையான கற்பகப் பூமலராலும் அருச்சனைகளைத் திருத்த முறச்செய்து, கொடுமை நீங்கிய உச்சியில் வசிக்கும் கிளிகள் வேதத்துதிகள் மிருதியாகச்செய்துகொண்டிருக்க எம்மருங்கும் நிழலையுண்டாக்கித் திருமூலநாதனையினிது போற்றின. அப்பொழுது வேதங்களெல்லாம் இவ்வாறு தவம்புரியுந்தன்மையை நினைந்து நெல்லை நாதர் மூலலிங்கத்திலிருந்து அருளுருவத்தோடு பூதக்கூட்டங்கள் பக்கத்தே சூழ்ந்திருக்க தேவர்களெல்லாம் மலர்மழைபொழிய பார்வதிதேவியார் இடதுபுறம் விளங்க ரிஷபத்தின் மேற்றோன்றினார்.

வேதங்களெல்லாம் நாதனைக்கண்டு செந்தாமரைபோலும் பதம்பணிந்து போற்றிவாழ்த்தி உளமுருகி உடல்பரவசமாய் ஆனந்தக் கண்ணீர்வர நெறி நீங்காமல் நின்று இருகைகூப்பி இறைவர் முன்னிருந்து;

சித்தனே போற்றி! முழு முதற் பொருளே போற்றி! சிமலனே போற்றி! நிகரிலாக் கருணையங்கடலேபோற்றி! கூற்றுதைத்தாளாய்போற்றி! மழுவுடைக்கரத்தாய் போற்றி! சுத்தியம்பரனே போற்றி! வரதனேபோற்றி! அமலனேபோற்றி! திரிபுரமெரித்தாய் சரணம்! புண்ணியப்பொருளே சரணம்! புராணபூரண

னே சரணம்! புனிதனே சரணம்! நெல்லைநாயகனே சரணம்! ஆதியே சரணம்! அத்தனே சரணம்! சூலமேந்திய சுந்தரா சரணம்! முக்கணுர் முதல்வா சரணம்! தாம்பிரசபையில் நடித்தருள் நாதாபோற்றி! புலியினுடையை யுடையாய்போற்றி! கந்தனே வடிவாள்பாகக் கடவுளே போற்றி! எங்கள் காரணப்பொருட்டாய் வந்த நித்தனே நிமலனே நேசனே நெல்லைவாச போற்றி போற்றி என்று பலவாறு போற்றின.

அதற்குச் சிவபெருமான் உள்ளக் களிகொண்டவராகி நீங்கள் செய்த பூசைக்கும் தவத்திற்கும் அதிகமாக ஆநந்தங்கொண்டோம் இனி உங்களுக்கு வேண்டியது என்னவென்று கேட்க அரிபிரம்மர்க் கெட்டாத ஐயனே! யானைத்தோல் போர்த்தவனே பண்டு யாங்கள் செய்தவத்தினுல் பெறும் இந்தப்பணைவனம் திசைதொறுங்கொண்டதோர் பிரசித்தியாய் உலகெலாங் கூறவும், உலகத்துள்ள பலதவங்களினும் இது மிக உயர்வு உடையதாகவும், மனிதர்கள் பாவம் நீங்கி இன்பம்பெற்று நின்னருள் சேரவும், எமக்கு தேவரீர் வரமளிக்கும் இந்தத் தாம்பிர சபைமீது நீ நடனஞ்செய்ய நாங்கள் காணவும் வேண்டினோம், இதையருளொடுதந்தருள வேண்டும் என்று தாழ்ந்து வேண்ட, மாதுபாதியர் ஓ புனிதவேதங்களே! நீங்கள் கேட்ட வரங்களை எல்லாம் விருப்பத்தோடு கொடுத்தோம். இன்னும் பந்தமாகிய பவத்தைத் தொலைக்கும் இப்பதிபராசத்திபதியும் ஆகும். மூன்று காலமும் வரும் பிரளயந் தோறும் முடிவில்லாப் பதியும் இதுவேயாகும். நாம் நிலைமையதாக நெல்லையிலிருப்போம் நீங்களும் முன்போற் கழைவனம் ஆவீர்களாக என்று சொல்லி மலைமகள் பாகன் மகாலிங்கத்தூடுகரந்தருளினுர். விண்ணவர் பணியும் எங்கோமான் வேணுவாகிய வேதம்கேட்ப நண்ணியே வந்து இந்த நலமிகுந்த நெல்வேலியின் உண்மையாகிய தலத்து மேன்மையை யுரைத்த நற் காதைகளை எல்லாம் புண்ணிய முனிவர்கள் கேட்கும்படி ஒப்பற்ற சூதமுனிவர் சொல்லியருளினுர். அதனைக்கேட்டு வேதவேதியர்களெல்லாம் ஆசையோடு அத்தலம் எங்கிருக்கின்றது சொல்லியருள வேண்டுமென்று

தாழ்ந்து கேட்க, கல்விஞானங்களையுடைய முனிவர்களே நல்வளம் நீங்காத நெல்லையின் எல்லைவளம் பெருமைமுதலியன இயற்கையிலேயுள்ளன சிலசொல்லுகின்றேன் என்றுசொல்லுகின்றார்.

வேணுவனமானது விளங்கும் மணியருவி சொரியும்படியான குற்றாலத்துக்கு நேர்கிழக்காகும். முத்தமிழ் விளங்கும் மதுரைமா நகரத்திற்கு ஏழுகாதத்திற்குத் தெற்காகும். வண்டுகள் இசைபாடும் கடம்ப மாலையை அணிந்த சுப்பிரமணியக் கடவுள் வசிக்கும் திருச்செந்தூர்க்கு மேற்காகும். சுசீந்திரமா நகர்க்கு வடக்காகும்.

கோயில் பொருநை நதிக்கு வடக்கே யிருக்கும் பொற்றாமரை கோயிலுக்கு மேல்பாலிலிருக்கும். கருமாரிவடிவுடைய கவுரி மஞ்சணீர் ஆவிகலந்த கோயில் இருபாலும் இருக்கும். மாலும் அயனும் போற்ற மகாலிங்கம் நடுவிலிருக்கும். தென்பால் தருதானர் அனவரத தானநாயகர் சிகரத்தனிப் பொற்கோயில் விளங்கும். மேற்கே பொல்லாத பிள்ளையார் கங்காளநாதர் குமரேசர் கோயில்களும் வடகீழ் பக்கத்தில் திருமூலத்தான லிங்கமு விளங்குங் கோயிலும் நடராசர் பரிவாரமுடனே யிருக்குங் கோயிலும் இருக்கும்; இன்னும் கங்காள வயிரவன்கோயிலும் துற்கையும் வாழும் கோயிலும் உண்டு. கோயிலில் திருமதில் ஏழும் கோபுரங்களும் தூவிகளும் துலங்கி யோங்கும். ஆழ்ந்த நெடு நீரகழி சூழ்ந்துள்ள கோட்டைக் கப்பாலுள்ள கடல்கள் போல விளங்கும். முனிவர்களும் வேதியர்களும் வேள்விசெய்யுஞ் சாலைகளும் மதிநுதன் மடவார் விளையாடும் மேடைகளும் பொலிந்து தோன்றும். மாடநெடுவீதி எல்லாம் மகரதோரணம் நீண்ட வானில் ஓங்கும். ஆலயங்களிலும் மாளிகைகளிலும் ஆடும் கொடி அணியணியாய்த் தோன்றும். இயலிசைகள் முழங்கும் பல்லியங்கள் மிக முழங்கும், சூழ்ந்த மேடைதோறும் நல்வளங்கள் மேவிய பூரண குடங்கள் விளங்கும். பொதியமலையிலிருந்து வரும் தென்றற் காற்று பொருநை நதி யூடு உலவி வந்து உலாவும். அழகு மிகுந்த பொற்றாமரைகள் யோசனை தூரம் வாசனை வீசும். ஆறு இருதுகளிலும் பலமரங்களும் பூக்களைத் தாங்கி

சொரிந்துகொண்டு நிற்கும். கலை பயிலும் முனிவர் ஆச்சிரமங்கள் இடங்கள்தோறுங் கலந்து நிற்கும். நவமணிகள் கொழிக்கும் பொருநையும் வடக்குமுகமாகவேசென்று சூழ்ந்துவலம்புரி உலவப்பெற்ற கம்பை பொருநையொடு பாதலத்தில்வந்து கூடும். விளங்கும் நீர்வற்றுத சிவதீர்த்தமாகிய சிந்துபூந்துறை சேர்ந்த செல்வத் தலமாகும். விளங்கும் வேணுவனமென்னும் தமிழ் தழைக்குந் திருநெல்வேலி சிறந்து தோன்றும்.

தென்னைமரம் கமுகமரம் பலாமரம் மாமரம் இவற்றோடு மந்தாரை புன்னை வன்னி கோங்கு வில்வம் சண்பகம் மல்லிகை பிச்சி மணப்பூந்தாரு கொன்றை பஞ்சவில்வம் முதலாகிய தருக்களும் பூஞ் செடிகளும் கொடிகளும் நிறைந்த சோலைகள் இப் பதியில் எந்நாளும் வளரும்.

தாமரை நிறைந்த வாவிகளும், கழுநீர் ஓடைகளும், வாய்ந்த கூவங்களும், நீர் நிறைந்த குளங்களும், இணர்மலர் நந்தனவனங்களும் எங்குஞ் சூழ்ந்து நிற்கும். பேரறிவுடையோர்களும் வேதியர்களும் முனிவோர்களும் போற்ற நிலவணியும் பரமன் அன்பாய் நீங்காதிருக்கப்பெற்ற பதி வேணுவனமென்னும் திருநெல்வேலியாம்.

இந்தவிதமான சீருஞ் சிறப்பும் பெற்றதென்று வேதங்களாற் போற்றப்படுகின்ற சிவபெருமானிடத்து மிக்க பக்தியையுடைய தவமுனிவர்கள் கேட்கும்படிச் சூதமகாமுனிவர் கூறியருளினர்.

போதமே தழைத்து ஞானம்பொருந்து நல்ல சிவகதை கேட்ட வேதபாரகர் மிக்கதாக விளைந்த பேரறிவுதோன்றி, நாதனின் புராணஞ்சொல்லும் நற்றவமுனிவர்கோவே! இன்னம் அந்தப் பெருந்தலத்தின் சிறப்பைக் கூறியருளவேண்டும் என்று வேண்டினர்கள். அப்பொழுது கேட்ட முனிவர்களைநோக்கி அரியமறை முழுதும்வல்ல சூதமாமுனிவர் சொல்கின்றார். வேதங்களெல்லாம் வந்து வேணுவனமான தலத்தின் மேன்மையெல்லாம் அறிவில் யானறிந்தமட்டும் கூறினேன் இனிமேல் தரும

தேவதை எம்பெருமானைக் குறித்துத் தவஞ்செய்து இடபமாகும் பெரும் பேறுபெற்று சிவபெருமானை விட்டு அகலாதிருந்த தன்மையையுங் கூறுகின்றேன் கேளுங்களென்று கூறுவாராயினர்.

---

## ரு-வது, தருமதேவதை இடபமான சருக்கம்.

தழைத்திடுந் தரும மெல்லாந் தனிமலைக் கொடிநேர் பாகன்
விழைத்திடத் தவங்க ளாற்றி விமலனு ரூருஞ் செய்ய
குழைத்திடும் விடையே யாகக் குலவிய சரிதங் கேட்டோர்
மழைத்தடங் கண்ணுள் பாகன் மலரடி மருவி வாழ்வார்.

அண்டகோடிகளும் அகலிடங்களும் அதனின் உள்ளமாயன் நான் முகன் வானவர் மற்றவர்கள் யாவரும் அழிந்திடும்படி வருகின்ற புதிய நீர்ப்பிரளையங்கள் வந்தகாலத்தும் விளங்கும் மெய்ப்பிரமம்.

அப்பிரமமாகிய சிவபெருமானிடத்திலே சத்திதோன்றி இரண்டுருவானபிறகுஆதிசத்தியும் அரனும் அன்பாய்வெள்ளிய கயிலைமலைமேலே இனிதாக வீற்றிருப்பார்கள் இவ்வாறு இறையும் இறைவியும் வீற்றிருக்கும்பொழுது, இறைவர் சிந்தையில் எண்ண மெய்மை திரண்டதோர் சோதி பொங்கும் சுந்தரச் சொரூபத்தோடும் தோன்றிய தருமதேவன் பிறப்புள தேவர்போலப் பிரளையகாலந் தோறும் இறப்பு உள்ளதாகும் என்று பயந்து கயிலை மலைக்குச்சென்று சிவபெருமான் தாள்களை வணங்கித் தொழுது வாழ்த்தி,

கயிலையில் வாழுங் கடவுளே போற்றி!
அயில்விழிபாகத் தப்பனே போற்றி!
திரிபுர மெரித்த தேவனே போற்றி!
நரிபரியாக்கும் நாதனே போற்றி!
நிரந்தரா போற்றி! நின்மலா போற்றி!
அரவணி அத்தா போற்றி! போற்றி!

சந்திரனணிந்த சடையாய் போற்றி !
அந்தரர் கருத்த கண்டா போற்றி !
அண்டருக் கரிய ஐயா போற்றி !
விண்டுவுங் காணு விமலனே போற்றி !
எம்மையாள் இறைவ போற்றி !
வெம்மையை தவிர்தாள் விகிதனே போற்றி.

எனப் போற்றித் துதித்து மெய்ப் பிரளயத்திலும் அழி வெய்தாதபடி ரிஷபமாகத் தேவதேவனுகிய உம்மைச் சுமந்தருளும்படி வரந்தந்தருள வேண்டுமென்று இரந்து பணிந்தவேண்டச்சிவபெருமான் மனமகிழ்ந்து நீ வேண்டியபடியே அழிவில்லா திருக்கும்படி ரிஷபமாகும் வண்ணம் வரமளித்தோம். நீ நமது வாகனமாகவும் நமது திருமுன்பாகவும் கொடியின் மேலும் கோபுரத்தின் மேலும் மதிளின் மேலும் இருப்பாயாக, இதே விதமாக உலகத்திலும் எல்லாவிடங்களிலும் இருக்கும்படிக்கும் வரமுந்தந்தோம், நாலு உகங்களிலும் முதல் இடைகடை என்பன வரும் அப்பொழுது அவ்விடங்களில் மெய்தரும் நீதிகள் ஆகவிலையாய் நின்று சஞ்சரிப்பாயாக இன்னும் என்னைப் பரிந்து வணங்குவோர் செய்யும் பாவங்களும் புண்ணியமாகும், எம்மைப் புறக்கணிப்போர் புண்ணியஞ்செய்தாலும் அது பாவமாம்,என்று ஆகமங்களெல்லாங் கூறும், அதனை நீ அரியக்கடவாய். இன்னுங்கேள் பூமியில் யார்க்கும் புதுமையாயும் நமக்கு அன்பாயும் இருக்கும்படியான நாட்களையுடைய மாதந்தோறும் பட்சங்கள் தோறும் பதின்மூன்ரும் நாள் பிரதோடமென்று சொல்லப்படும். பிரதோட காலத்திலேதான் நாம் முன்னோர்காலம் மாலாதியர் அழியுங்காலத்து விரும்பி இவ்வுலகத்தை எல்லாம் தகனம் பண்ணி நின்று நடனஞ் செய்தோம். அத்திரு நடனத்தை எவரும் அறியார் அம்பிகை ஒருத்தியே அறிவாள். அப்போழுது நீயும் பத்தியோடிருந்து பார்த்தாய். அத்தகைத்தருணத்தில் சுத்தமானவுனது உள்ளத்தில் நாம் இருப்போம் என் மனத்தே நீயிருப்பாய். பிரதோடம் தீரும்போதில் திரமாக இலிங்கத்துள் சேருவோம். பிரதோடகாலத்தில் பிரியமாகிய உனக்கும் மேலானபரைக்கும் நமக்கும் பூசை விரும்புறுசேவை தானும் செய்கின்ற

பலன் இதுவொன்றுக்குமென்றும் கூறியருளினார். இவ்வாறு உமையொரு பாகர் கூறியதைக்கேட்ட தரும தேவன் சிவபெருமானைப்போற்றி செய்து அடியேன் வேண்டும் வரங்களெல்லாம் பெற்றேன் அடியேன் பெறவிரும்பும் வரம் இன்னுமொன்றுளது அது என்னவென்றால் நித்தியமான தலமொன்று கூறவேண்டும் அதிலே நான் வசிக்கவேண்டுமென்று கூறச் சிவபெருமான், நானும் பரையும் இனிது வசிக்கும் நெல்வேலியே என்று கூறியருளிப் பின்னுஞ் சொல்லுகின்றார். அந்தத்தலத்தின் பெருமை அகத்தியனேயறிவன். அந்தத்தலத்தில் வேதங்கள் எல்லாம் என்பால் வரம்பெற்று அதில் வேணுவாய் வளரும் அந்த சத்திபதியில் நீயும் சேருவாயாக என்று கூறியருளி நம க்கு முன்னே சென்று நலம்பெறுவடிவோடு அங்கு துலங்கி வாசமாயிருப்பாயாக என்று சொல்லி நல்ல பலவரங்களை ஈந் தருளினார். உடனே தருமதேவன் சிவபெருமானிடம் விடை பெற்றேகி வேணுவனத்தைக்கிட்டி அங்கே எம்பெருமானார் அருளியவண்ணம் இடபமாக இருந்தார். சிவபெருமானும் கயிலையிடத்தைவிட்டு நீங்கி ஏறும் இடபந்தன்னில் சேர்ந்து உமாதேவியோடு இனிதாக வேணு வனத்துக்கு வந்தார். ஜக த்தை யுண்டுபண்ணுங் கருணையுடையவர் ஆனார். உடனே சத் தியிடத்திலிருந்தும் இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தியுடன் அநேக சத்திகள் உற்பத்தியாக மனமகிழ்ந்து பராசத்தி சிவ பெருமானைப் பார்த்து முறுவல் செய்தாள், உடனே சத்தி கள் மால்பிரமன் முதல் மூவரும் உண்டாயினர். முக்கண் இறைவரருளால் அம்மூவரும் சகங்களை யுண்டாக்கித்தமது முக் குணத்தாலும் காத்துவந்தனர். இது பரமனுக்கும் கவுரிக்கும் ஒரு விளையாட்டாகும். இந்தவிதமாகவே இந்தத்தலத்தில் எல் லாச்சகமும் உண்டாக்கி அந்தத் தருமதேவனுக்கும் அன்பாய்க் கருணைபுரிந்தருளிச் சிந்தைசிறந்த விமலைபரமை தேவியோடு நெல் வேலி வேணுவனத்தில் என்றும் எப்பொழுதும் தனிமுதல் இருந்தருளினார். சிந்தை மகிழ்ந்து இன்பேயோடு போற்றி இக் கதையைக் கேட்பவர்கள் படிப்போர்கள் எழுதுவோர்கள் எல் லோரும் இப்பூமியில் தம்பாவம் நீங்கப்பெற்று விந்தையொரு

ந்த மிகுந்த செல்வம்பெற்று வேணுவனத்துறையும் எந்தை மகி ழும் திருக்கயிலாயத்தில் பொருந்தும்படியானருத்திரகணங்க ளாவார்கள். என்று சூதமகாமுனிவர் நைமிசாரணியவாசிகளுக் குக் கூறியருளினார். இதைக்கேட்ட நைமிசாரணியவாசிகளெல் லாம் மகிழ்கொண்டு சூதமுனிவரை ஏத்தித்துதித்துச் சிவபெரு மான் அகத்தியருக்கு மணக்கோலங்காட்டிய கதையை உரைத் தருளவேண்டுமென்று வேண்ட சிவபெருமான் அடிபோற்றி அவர் தம்மணக்கோலங்கண்டருளிய அகத்தியரின் சரித்திரங் கூறக்கேட்ட நைமிசாரணியவாசிகளை நோக்கி அவர்கள் மகிழ்ச்சி கூறச் சூதமகாமுனிவர் கூறுகின்றார்.



## ௬-வது அகத்தியர்வரவு, தக்கன் வேள்விச் சருக்கம்.

பார்வதி பாகன் றன்னைப் பரிவுடன் வணங்கா ஞகி
நேர்தரு முமையைத் தேவை நிந்தைசெய் தக்கன் மாளக்
கூர்தரு மமரர் சேனே கொழுந்தழல் வேள்வி யோடும்
பார்மிசை வென்ற வீர பத்ரனைப் பணிந்து வாழ்வாம்.

சிவபெருமான் றிருவருளினாலே, பிரம்மன் வழியிற் றோன் றிய தக்கனுக்குச்சில பெண்கள் மகளாகப் பிறந்தார்கள். நன்மை மிகுந்த காளிந்தி நதியில் தாமரை மலரின்மேல் ஒளி பொருந்திய வளையைப்போலப் பராசத்தி பரிந்து இருந்தாள். அதனைத்தக்க னென்னுஞ் சிறுவிதி தன் கைகளால் எடுத்தான், அப்பொழுது தேவர்கள் வாழ்த்த அது ஒரு பெண்ணாக மாறிற்று அதனைத் தன் மகளாகக் கொண்டுவளர்த்து வந்தான்.

அப் பெண்ணிற்கு சதி என்னும் பெயர் இட்டான். இவள் சிவபெருமானை நாயகனாக்விரும்பி மணந்து கயிலையில் இருந்தாள். பிரம்மன் பெற்ற தக்கன் ஒருவேள்வி செய்ய வேண்டுமென்று மனதில் நினைத்து எங்கும் உள்ளதேவர்கள் எல்லோரையும் அழைத்துப்பின் மங்கைபாகனை அழைக்கக் கையிலைக்கு வந்தான்.

வந்ததக்கன் என்னையாளுடைத் தேவியாகிய பார்வதி தேவியோடும் சிம்மாசனத்திருக்கும் பரமசிவனைக்கண்டனன்.

விதி வழி மதிபோனதனால் எம்பெருமானை மனத்தொடுந் தொழானாகி நெறியில்லாநீசன் நிந்தையாய்ச்சில நினைத்துவிட்டான். அதுஎன்னவென்றால், என்னை எதிர்கொண்டு அழைத்திலன், அதுதான் இல்லை என்றாலும் கண்டபின்னாகிலும் எழுந்திலன், அதுதான் இல்லை என்றாலும் முகமன்பேசினானில்லை, இது என்னபெருமை, இனிமின்னையொத்த சதியோடு வெள்ளி மலையில் வசிக்கும் இவனை நம் வேள்விக்கு அழைக்கலாமோ? என்பனவே.

மாட்டின்மேல் ஏறுவான், எலும்பை ஆபரணமாகப் பூணுவான், எங்கும் இரப்பான், சுடலைச்சாம்பலை அணிவான், வாசனையில்லா ஊமத்தம்பூவோடு சர்ப்பத்தையணிவான், இத்தன்மையை உடைய இந்தப்பித்தன் ஒருவரும் தனக்கு நிகரில்லை என்று நினைக்கின்றான்; இப்படிப்பட்ட இவனுக்கு நாமும் அறிவில்லாமல் ஒரு பெண்ணையும் கொடுத்துவிட்டோம். போனாற்போகட்டும் இனி இந்தக்காளகண்டனோடும் அவன் மனைவியோடும் நமக்கு உறவில்லை என்று மனத்தில் எண்ணிக்கொண்டு நாசம் கிட்டியமையால் திரும்பித் தன்பதிவந்து சேர்ந்தான்.

வேள்விசெய்ய விரும்பியதக்கன் தன்னினத்தார் சுற்றத்தார் நட்பினர் முதலியவர்கள் சூழ நீண்ட யாகசாலையைக்கட்டித் திருத்தமான வேதியர்கள் சூழயாகத்தைச்செய்தான். அப்பொழுது திருமால் பிரமன் இந்திரன் சூரியசந்திரர்கள் ஏனைத்தேவர்கள் முனிவர்கள் கிம்புருடர் இயக்கர் விஞ்சையர் கின்னரர் திக்குப்பாலகர் பன்னகாதிபர்கள் உருத்திரர் அவர்கள்தம்மாதர்கள் அரம்பையர்கள் ஆகிய எல்லாரும் நெருங்கி அவ்யாக சாலையைச் சூழ்ந்தார்கள். தக்கன்வந்தவர்களுக்கெல்லாம் ஆசனமும் அருக்கியமும் வழங்கி மனமகிழ்ச்சி உண்டாகும்படி முகமனுஞ் சில சில கூறி தந்தையாகிய பிரமனையும் அவன்றந்தையாகிய விஷ்ணுவையும் வணங்கி அவர்களோடிருக்கும்பொழுது, கயி

லையில் சிவபெருமானோடு இனிது வீற்றிருக்கும் எமதன்னையாகிய பார்வதி, சிவபெருமானைநோக்கி நாதனே! என் தந்தை செய்யும் வேள்விக்குச்செல்லும்படி உத்தரவு தந்தருள வேண்டுமென்று வேண்டச் சிவபெருமான் அம்மையாரை நோக்கி நகைத்து, நீ போதல் உசிதமல்ல, நீ போனால் உன்னை மதியான் மரியாதை செய்யான் அவமதிப்பான் உனக்கு மனம் பொறாது ஆகையால் நீ போகவேண்டாம் என்று தடுத்தார். அதற்கு எமதன்னை மீண்டும் எழுந்து தந்தை என்று தயவால் வேள்விக்குப் போகவிரும்பி இரந்துகேட்கச் சிவபெருமானும் உத்தரவு கொடுத்தருளினார். பார்வதி தேவியும் ரிஷபத்தின்மேல் ஏறிக்கொண்டு தோழியர் கூட்டஞ்சூழவேள் விச்சாலைக்குச் சென்றாள். எண்ணற்கரிய கணங்கள் கோடியும் கற்பகநாட்டில் இணங்கி வாழ்தேவரும் வணங்கும் மேன்மையுள்ள மற்ற முனிவரர்களும் வரவே தெய்வப்பெண்களும் அரம்பையரும் ஆடினர் பாடினர் ஆர்த்தனர். முன்னே நந்திநாதனும் சிவகணங்களும் நடக்கவும், முந்தியோடியகணங்கள் வாத்தியத் தொனி முழங்கவும் வேள்விக்குவந்த தேவர் முதலியவர்கள் அதிசையமடையவும் பூரணச்சந்திரனையொத்த திருமுகத்தை யுடையகவுரி யாகசாலை வந்துற்றாள்.

அங்குவந்து மால்பிரமர்சூழ வீற்றிருக்கும் தக்கனைத்தனது தந்தை என்று எண்ணி தேவியாகிய பார்வதி வணங்கினள். அண்டமெலாமீன்றளிக்கும் அன்னை வணங்கியும் அழைக்காத படிக்குத் தனக்கு நாசகாலம் வந்தமையால் இங்கு ஏன் வந்தாய் என்று கேட்டான்.

அவ்வாறு தக்கன் சொல்லிய வார்த்தையைக்கேட்டு மெய் துணுக்குற்று நடுங்கிப்பிறகு தன் தாயெனமதித்துத் தக்கன் மனைவியைப்போய் வணங்கினாள். அவளும் பேசவில்லை. முன்னம் அங்கிருந்த தன் தங்கையர்களென்னும் தக்கன் புத்திரிகள் முகங்கடுத்தார்கள். இவைகளை எல்லாம் கண்டு பராசத்தியாகிய எமதன்னை சிவபெருமான் சொல்லியருளிய துண்மையாயிற்றென்று எண்ணி ஒளிபொருந்திய முகத்தினில் கோட்டமும்

வருத்தமுந் தோன்ற நாணி நின்றாள். அப்பொழுது அவனுடைய பெரிய நீண்ட சுற்றத்தார்கள் எல்லாரும் நகைத்தார்கள். உயிரெலா மீன்றளிக்குந் தாயான சத்தி அதனையும் பொருத்துக்கொண்டு இவ்வாணவம் கொண்டிருக்குந் தக்கன் நாதனாகிய சிவபெருமானுக்கு அவிப்பாகம் தருவதைக் காண்பமென்றிருந்தாள்.

ஆனால் தக்கனோ அவிப்பாகம் சிவபெருமானுக்குத் தருவதில்லை என்று தீர்மானித்து விண்டுவுக்கும் பிரமனுக்கும் மற்றைத் தேவர்களுக்கும் கொடுத்தான். இது கண்ட கருந்தடங்கட் கவுரியும் கனன்றாள். திங்கள் சூடிய சிவபெருமானுக்குக் கொடுக்கவேண்டிய அவிர்ப்பாகத்தைச் சங்கையால் கொடுப்பது தவிர்த்த இத்தக்கன் றலையைத் துங்கவாள்கொண்டு வெட்டி இவன் வேள்விக்கு வந்த வரையும் பங்கப்படுத்துகிறேனென்று கோபித்து தேவியாகிய பார்வதியும் எழுந்தாள்.

தன்னோடுகூட வந்தவர்களையெல்லாம் மீண்டும் அழைத்துக்கொண்டு கயிலைக்குவந்து இந்துசேகரன் அடியிணைகளில் தாழ்ந்து சொல்லுகின்றாள், நெறியறியா மூடனாகிய தக்கன் நிந்தையாய் எனை அவமதித்தான், ஆகையால் அந்த வேள்வியோடு அவனை அழித்திட வேண்டும் என்றாள். இவ்விதமாக உமாதேவிசொல்ல, என்னையாளுடைய சிவபெருமான் கோபங்கொள்ள உடனே நெற்றிக்கண்ணிலிருந்து ஆயிரஞ் சூரியர்கள் புறப்பட்டதுபோல ஆயிரம் முகங்களும் படையேந்திய ஈராயிரம் கைகளும் ஒவ்வொரு முகத்திலும் நுதல்விழி சிறந்து தோன்ற ஆயிரஞ் சிரங்களிலும் ஆயிரம் மகுடங்கள் விளங்கக் குண்டலங்கள் ஒவ்வொரு காதிலும் விளங்க அகோரவீரபத்திரக் கடவுள் தோன்றினர்.

வீரபத்திரக்கடவுள் முன் நின்றது கண்ட உமாதேவியும் மகிழ்ந்து பின்பு தானும் அதேவிதமாக ஒரு பெண்ணைப் பெற்றாள். அவர் இருவரையும் நோக்கி அன்புடைய நீங்கள் இருவருஞ் சென்று தக்கனைக் கொன்று அவன் வேள்வியையும்

மாற்றுங்கள் என்றருளினர். உடனே வீரபத்திரனும் வீரபத்திரையும் உத்தரவு பெற்றுக் கொண்டு கயிலையை விட்டு அகன்றனர். பாரிடங்களும் அண்டமும் பற்பல படைகள் நெருங்கிப் பேரும் இடஞ் சிறிதும் இல்லையென்று சொல்லும்படி பெயர்ந்தன. வீரபத்திரனிடத்து அவனருளிய ஆயிரங்கோடி பூதங்கள் வந்தடைந்தன.

வீரபத்திரையினிடத்து அவளருளிய பத்திரகாளியர் பற்பல ஆயிரங்கோடியர் வந்தடைந்தனர். துணங்கை கொட்டின. பற்பல பூதங்கள் காளமுஞ் சின்னமும் ஊதின. இணங்கிய பல வாத்தியங்கள் எங்குஞ் சப்தித்தன. பூதங்கள் ஒருகோடி சங்கவாத்தியங்களை முழக்கின. கோடி கோடி பூதங்கள் கொற்ற வெண்குடை எடுத்தன. கோடி கோடி பூதங்கள் கற்றைவெண் கவரித்தொகைகளை வீசின. கணங்களும் மற்றும் வேறுள பூதங்களும் மகிழ்ந்து ஆடின. இந்த விதமாக எல்லோரும் தன்னைச் சூழ்ந்துவர வெற்றிவீரனாகிய வீரபத்திரக் கடவுளும் பத்திரையும் விமானமீது ஏறிவந்தனர். கோடி கோடி குறட் பூதங்கள் ஆடி ஆடி ஆர்த்தலினால், அண்டங்கள் பற்பல அழிந்தன. பல பேதங்களையுடைய பெருமை மிக்க பூதங்களை யாவர் எண்ணிட்டு அறியவல்லவர். இந்த விதமாகச் சென்ற பத்திரரும் பத்திரையும் பத்துத் திக்குகளிலும் வேள்விக்கு வந்தவரும் காவல் செய்யும் வீரரும் தப்பித்து ஓடி ஒளிக்காதபடிக்கு காவலை ஏற்படுத்தித் தானும் பத்திரையுமாக வேள்விச்சாலைக்குள் போர்குனித்துப் புகுந்தனர். ஆயிரம் முடிகளிலும் கிரீடங்கள் ஆயிரமும் நிரை நிரை தோன்றவும், விளங்கும் எலும்பு மாலைகளும் தலை மாலைகளும் வெளுத்துத் தோன்றவும், அதனோடு முந்நூலும் ஆரங்களும் புரளவும் இரண்டாயிரங் கரங்களிலும் அழகாய் சூலம், வாள், மழு, தோமரம், வில், கணைகள், ஆலம், குந்தம், முள், எழு, முசலம், ஆழி, கதை, குலிசம், வெம்பலகை, வெண்பிலி முதலிய நீண்ட சிறந்த படைக்கலங்கள் விளங்கவும், பிறங்கும் நல்ல மணிகள் பதித்த பலமணிகள் கூடி விளங்கும் உடம்பினில் இடை யிடையே சர்ப்பாபரணம் விளங்கவும், அல

இல்லாத திறல் கொண்டவன் வர அவனருகில் இதே கோலத்தோடு வீரபத்திரையும் வந்தாள்.

வந்த இவர்கள்யாகசாலையில் தேவர்கள் எல்லோரும் எத்திசையிலும் கவிந்திருப்பதைக் கண்டனர். அருந்தவத்தோரும் மால் பிரமரும்சூழ அங்கிருந்த தக்கனை நோக்கிக் கிட்டச் சென்று வேள்விசெய்யும் திறத்தைப்பார்த்துச் சிரித்தனன். வெற்றிச்சங்கத்தை முழக்கினன். உடனே அங்குள்ளோரெல்லாம் இற்றது அண்டமென்று எழுந்தனர் நடுங்கினர் ஏங்கி விழுந்தனர்.

முற்றும் நம் வேள்வியை அழிப்பவன் எவன்? இவன் திரிநேத்ரங்களையுடைய சிவபெருமானோ? அல்லது பெருமானின் கோபத்தினுருவமோ? என்று இரங்குவார்கள், அஞ்சுவார்கள், இடியுண்ட அரவம் என்னச் சோர்வார்கள், ஓடுவார்கள், செல்ல வழி இல்லாமையால் மீளுவார்கள், திகைப்பார்கள், நன்றாயிருக்கிறது இவ்வேள்வி இத்தக்கன் கபிலை நாதனைத் தவிர்த்து மற்றெல்லோரும் பொன்றும்படிக்கல்லவா? இவ்வேள்விசெய்யத் தொடங்கினனென்று மருண்டஞ் சியலருவார்கள். தேவர்களே இந்தவிதமாகத் துன்பம் அடைவார்களேயானால் பூலோகத் தவரின் தன்மையை யாவரேசொல்லுவர். எல்லோரும் தம்பமில்லவராகி மெய்தளர்ந்தார்கள், தவித்தார்கள். இந்தவிதமாக யாவரும் நடுங்கவந்த வீரபத்திரக்கடவுளை நீயாரென்று தக்கன் கேட்க நான் சிவபெருமானின் குமாரன் இங்கு வந்தது உன் வேள்வியில் இனிதாக அவிப்பாகத்தைச் சங்கரன் அருளால் பெறுதற்கு வந்தேன் என்று வலிமிக்க வீரபத்திரக்கடவுள் சொல்லப் பிரம்மன் பெற்ற தக்கன் கூறுகின்றான்.

மேலான இந்த நல்ல வேள்வியில் மேவிடும் பாகம் உன் தந்தையாகிய முக்கண்ணற்கு உதவாது என்றான். அப்பொழுது பழைய மறைக்குடிலையும் உடனே எழுந்துநின்று சிவபெருமானே எல்லா அண்ட கோடிகளிலும் பொருந்திய பொருளாகவிருக்கிறான், அவனல்லாது தெய்வம் வேறில்லை, அவனையன்றி

அவியின்பாகம் எவர் பெறுவார்கள். இந்த ஏழைமை மதியை விட்டுப் புவன கோடிகளெல்லாம் அழிவின்றி உய்யும்படி அப் புனிதனுக்கே அவியைத் தருவாயாக என்று சொல்லியும் தவமிலான் கொடாமை கண்டு தமதிடத்திற்குப் போயிற்று. அது போன பின் வீரன் அந்தப் பொறையிலாதவனைக் கண்டு, நான்முகன் சொல்லியவற்றையும் அறிந்தாய் இனியாகிலும் அவிப்பாகம் நமக்குக் கொடுப்பாயாக என்று கூறத் தக்கன் மறுத்து அந்தச் சுடலையாடிக்குக் கொடேன் என்றான், அங்கவன் அதனைச் சொல்லக்கேட்ட அடுதிறல் வீரன் சீறி நெடுமால் பிரம்மன் முதலியவர்களை நோக்கி உங்களுக்கு இவன் நட்பாக உறைகின்றீர்.

எம்மைச் சிறிதும் எண்ணாமல் இங்கு இவன் இவ்வாறு இகழ்வது உங்களுக்குச் சம்மதமோ? என்றான். அங்குள்ள மற்றவர்கள் பேசாதிருக்கவே வலிய வீரன் பகைமிகக் கொண்டு சீறிக் கோபித்து தேவர்களும் மயங்கும்படிச் சப்தித்துத் தன் தந்தையாகிய சிவபெருமானை மனத்துள் எண்ணி இவ்வேள்வி அழிந்ததென்று இடிபோல் முழங்கிச் சிரித்தான். கொண்ட கோபத்தாலே கொழுங்கனலைப் போலப் பொங்கி அண்ட கோடிகளும் வானத்து அமரர்களும் முனிவர்களும் மற்றுமுள்ளவர்களும் கண்டவர்கள்யாவரும் அஞ்சத்தன் கையிற்றாங்கிய மகா மேருவை யொத்த தண்டாயுதத்தினால் அடித்தான் அடிபட்டவுடன் அவனும் தரையில் வீழ்ந்தான். சமீபத்திலிருந்த பிரமனைத் தலையில் இரத்தங் கொப்பளிக்கும்படித் தலையில் குட்டினான். குட்டைப்பெற்ற பிரமனும் தன்றந்தையும் அஞ்ச வெருவிமெய் சோர்ந்து விம்மி ஏங்கித் தரையில் வீழ்ந்தான். வாணியையும் லட்சுமியையும் கோபித்து மூக்கையும் குயத்தையும் கொய்தான் வன்னியை நாக்கையும் கையையும் அழித்தான். சூரியனைப் பல்லை யுடைத்தான்.. தன் பங்கய பாதங்களால் சந்திரனைத் தரையில்தேய்த்தான். இந்திரன் குயிலுருவெடுத்துத் தன்னுடைய அந்தரலோகத்திற்கு ஓட அவனைக்கையாற் பந்தெனப்பிடித்து அவன் மெய்பதற ஆருயிர் சிதற வாளால் சிரத்தை வெட்டினான். யமனை, நிருதியை, சாரும் வாயுவை வருணனை, செவ்வாயை,

சனியை, தனதனை அடர்த்து அவர்கள் தலையைத் தன் கைவாளா ல் வீசினான். சிவனருளாற் பெறப்பட்ட அகோரவீரபத்திரன் செய்யும் அவ்வேள்வியாக்தெய்வநாதனை கையிலுள்ள மழுப் படையால் சிரஞ்சிதரவீசினான். மொய்த்தகூந்தலையுடைய ரம்பா ஸ்திரீகளின்முலையையும் மூக்கையும் கொய்தனன். மற்றுள்ளதே வர்களையும் வலியவீரரையும் நற்றவமுனிவரரையும் நாடிச்சீறியே எற்றிடும் கதையாலும், இருப்பு உலக்கையாலும், கணங்களடித் தன. மழுப்படையை உடையசிவபெருமானின் ஐந்து எழுத்தை மாற்றியே குழுமிய வேதியர் கூடிக் கூறிடும் விழுமிய மந்திர வேள்விச்சாலையில் அழுகுரல்ஓசையே யெங்கும் ஆயின. உருத்தி ரர் பதினொருகோடியோரையும் சிறந்தபதினொருபேரையும் கரு த்துற நோக்கினான், கனன்று சீறினான். நிருத்தனார் வடிவினால் நெ றியிற்போக்கினான். சேவுடையாளர் ஈசானதேவரைக்கூவிமுன் நிறுத்தி தக்கனாகிய கொடிய பாதகன் மேவியவேள்வியை விரு ம்பி எய்தினீர். நீர் செய்தது சரியல்லன ஆகும், ஆகையால் அக லப்போம் என்றான். இந்தவிதமாகச் சிலரை இரக்கத்தாற் போகவிடுத்தும் மற்றவரைத்தண்டித்தும் சிவபெருமான் அருளி னால் வேள்விச்சாலை முழுதுஞ் சுற்றிக்கொண்டுவரும் வீரபத்திர க்கடவுளை பிரமன்புத்திரனாகிய தக்கன் கண்டு தானாகவே அறி வில்லாமையால் அரனைப்போற்றிலேன் சிறுமையை அடைந்தேன் மறுமையையும் இழக்கின்றேன் புத்திக்கெட்டுபோயினேன் இங்கு வந்த தேவர்களெல்லாம் என்துன்பத்தைத் தணிப்பார் களோ என்றிது கூறி இரங்கிக்கொண்டிருக்கும் தக்கனை அவன் சிகையைப்பற்றிப்பிடித்து இழுத்து அவன் தலையை வெட்டி அவன் இயற்றிவந்த வேள்வித்தீயிலே எறிந்தனன் தக்கன் இற ந்தவுடனே அவன்மனைவியும் மக்களும் மற்றுள்ளோர்களும் எல்லோரும் வந்து அழுதனர். அவர்களை எல்லாம் வீரபத் திரை கொன்றனள். தக்கன் வேள்வியைக்காத்தவீரர்கள் அமை ச்சர்கள் யாரையும் சூலத்தையேந்திய கணங்கள் கொல்லவே அவர்கள் அழிவை அடைந்தார்கள்.

சிவபெருமானை நிந்தை செய்த தக்கனும் அவன் படை களும் அவனைச்சார்ந்தோரும் அழிந்தனர். பின்னர் வீரப்பத்தி

ரன் வெஞ்சினத்தரியேறென ஆர்த்து உலாவினான். கணங்க ளெல்லாம் ஆர்த்தனர் ஆவலங்கள் கொட்டினர் நிர்த்தனே அம லனேச் சிவபெருமானை உன்னியேகீர்த்தனம்பாடினர். இந்த விதமாக நிகழ்ந்த வேள்வியின் அழிவையும் பூதங்களின் ஆர்ப் பையும் திருமால் கண்டுமனத்தில் மதித்து செவ்வியதிறலுடைய வீரா! சிவனை முன் நிந்தை செய்தோனைத் தண்டிப்பதல்லாமல் தேவர்களை எல்லாம் கோபித்து அழிப்பது ஏன்? என்றான். இதினைக்கேட்ட வீரன் சீறி, நன்று உறைசெய்தாய் நம் பனே இல்லாமல் இவ்வேள்வி ஒன்றினவர்கள் அவிப்பாகம் உண்டோர் கூடவசிப்போர் எல்லோரையும் கொன்றிடுவே னென்று கூறிக் கோளரிபோல் ஆர்த்தான். புயல் வண்ணனுஞ் சீறிப்போர் செய்யும் எண்ணம் உடையனாகித் தயவுடைக்கருடன் முன் உடைத்தான் என்றுதழலுடைக் கோபச் செயலுடைக் கரு டனில் ஏறி என்சேவகம் பாரென எதிர்த்தான். தன்னுடைய கரத்திலே வில்லை ஏந்தி ஒருகணத்துக்குள்ளே பலபாணங்களை ப்பிரயோகித்தான். திரிபுரதகனரைநிந்தைசெய்யும் பாதகனோ டும் அவன் செய்யும் வேள்வியையும் அழித்தோம் நீயும் போர் புரிசெயலோடு வந்தாய் ஓ விஷ்ணுவே உனக்கு அறியும்படியான அறிவில்லை இப்பொழுது அறிந்து கொள்ளென்று சேனைகளாக வந்த பல பூதர்களும் ஆர்த்தார்கள். வீரபத்திரன் தோள்துளங்க நகை செய்தான். இந்த இடத்தில் இவ்விதம் நிகழுங்காலத்து விளங்கும் கயிலையிலிருந்து திவ்விய தேர்வர அத்தேரின் மேல் வீரன் ஏறினான்.

இவைகளை, அயர்வுறும் பிரமன் அறிவினிலறிந்து கௌவிய துயரந்தீரக்கடவுளின் பொற்றேர்மிசை வந்தான். வந்தவன் வீர பத்திரக்கடவுளின் சேவடிபணிந்து செய்திடுபிழைபொறுத்தரு ளவேண்ட ஐயனுஞ்சிறிதருள்புரிந்தான் வேதங்களாகிய ஆயிரம் பரிகள் பூட்டியசத்தியமாகிய தேரைச்செலுத்துகின்ற பாகன்யா னெனப் புரவிகளை முன்னடத்திமுகில் வண்ணன்முன் விடலும் வீரனும் விண்டுவைநோக்கிப்போர்புரிஎன்றான். மாயனும் வீரன் சொல்லும் மொழிகேட்டனன், கேட்டு அதிகோபங்கொண்டு

தூயவீரபத்திரன் அழகியபுயத்தில் பலந்தெறுந்திருந்து பல கோடி வாளிகளைத்தொடுத்தான் அதனைப்பத்ரரும் மகாமேருவை ஒத்த அழகியவில்லைவளைத்துப்பலகணைகள் தொடுத்து அவைகளை அழித்துப்பின் ஆர்த்தான். சிவனருளால் வந்த வீரபத்திரரும், எல்லோரும் அண்டம்இடிந்ததென்று சொல்லும்படிக்கு வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து போர்செய்யும் மாயனைநோக்கி வலியையாயின் இதனை மாற்றுகமாற்றுகஎன்று பலவாளிகள் மார்பில் எய்தனன், எய்தவாளிகள்எல்லாம் உடம்பிற்படுந் தொறும் மிகவருந்தி ஒருவாறு தெளிவடைந்து மாயவன் ஒரு கோடிவாளிகளைஎய்தான் அதனைக்கண்ட ஐயன்உடனே சிறிவாளிகளால் அதனை நீக்கினன் விலக்கிநின்றவீரன்மேல்பலகோடியெ ங்கணைகளைமாலும் எய்தான் தன்சங்கத்தைமுழக்கினன். கலக்க மில்லாத வீரனும் அக்கணைகளைக் கணைகளால் விலக்கியே இலக் கமில்கணைகளை விண்டுவின் நெற்றியிற்படஎய்தனன். கோபத் தோடும் கணைகளெல்லாம் நெற்றியிற்பட நெடியவனும் மயங்கி நின்றான் அமலன்கொற்றவில்லும் தேர்மிசைவிடும்கணையும் மற்ற வும் நீங்குமளவுங்கணை தொடுத்தான். துயர்சிறிது நீங்கியபின் பின்னுந்திருமால்வில்லெடுத்துப் போர்செய்யவர வீரனும், விண் டுகளை நீங்கிப்போருக்கு மீண்டும் வந்தானென்று தானும்வில்லெ டுத்துப்போர்செய்தான். புயபலத்தொடுஇருவரும் போர்செய்த போர்த்தொழிலை மயக்கத்தினின்றும் நீங்கியஎவர்கள் மொழிந் திடவல்லார்? இவ்விருவரும்போர்செய்கையில் அத்தனார்மகன்மா லின்மேல் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்தான், அது, அப்ப டிமுழு தளர்ந்தவன் புயத்து ஊன்றலும் மனஞ்சிறிது அயர்ந்தான். தேறி, வறெனச்சீறித் தெய்வப்படைகளாகிய வேறுவேறுகணை கள் எல்லாந் தெரிந்து உடனே விடுத்தான், அதனைப்பரனருள் பாலன் அப்படைக்கு அப்படைகளையே விடுத்துத் தடுத்தான். அதுகண்டமால் அயன்படைவிடுத்தான்வீரனும் அப்படையே வி டுத்து அதனைத்தடுத்தான் அத்துடன் நில்லாமற்பின்னும்ஆயிரங் கணைவிடுத்தான் அவன்பிடித்தகணைஇருபிளவுபட்டுக் கீழேவிழு ம்படிச்சரமொன்று தொடுத்தான். உடனேமாயவனும் தன்மா யையால் அளவிலாமாயவனுயினன், இதனைவீரபத்திரன் வெண்

ணையருந்தியகள்வனின்மாயமென்றுவீரனும்தன்நெற்றிக்கண்ணி ைற்களைந்தான். சக்கரப்படையைவிடுத்தான் அதனைவீரனணிந்த தலை மாலையிலொன்று விழுங்கிவிட்டது. இது கண்டு கார்வண் ணன் வெட்கிப்பின்னும் முகங்கறுத்து வலிமிக்கதண்டமொன் ருக்கினன் அதனை வீரனும் வேறுதண்டத்தால் பொடித்து ஆர்த் தான். தண்டாயுதம் போனபின் மால் தன் வாளைச் செலுத்தி னன் கங்காதரன் தருகாளையும் ஓங்காரஞ் செய்தடக்கினன். இவ்விதம் தன்வரப் படைகள் எல்லாம் பயனிலவாய் அழியமா லும் நிராயுதனாக நின்றான். ஆனாற் சந்திரமௌலிதனையனேதன் கோபந் தணியாது இருந்தான். எம்மையாளுடைய வீரபத்திரக் கடவுள் என்னசெய்ய நினைந்தனரோ அதற்குள் வானத்திலே உன்கோபந்தணிகஎன்று உரைக்குஞ் சத்தங்கேட்டு துணுக்கு ற்று அறிவுடை அமலன் தன் கோபத்தைத் தணித்துக்கொண் டான். கோபந்தணியக்கண்ட பாகனாகிய அயன், தான்சொல்வது இன்னதென்றறியாத் தீயதறுகனன் வேள்வியில் வந்து அவிர்ப் பாகம் உண்ணும் அறிவில்லா எனக்கு அருள் செய்யவேண்டு மென்று போற்றி முன்பணிந்து செய்ய பூங்கழற் சரணம் பூண் டான். ஐயனும் பிரம்மனை நோக்கி அஞ்சற்க என்றருளினன்.

விண்டுவும் வீரபத்திரனைப் போற்றித்துதித்து, செய்யனே! என்னை இங்கே ஜெயங்கொண்டாய் திறலுங்கொண்டாய் ஓ துய்யனே! சிவனை நிந்தை சொன்னவன் செய்யும் வேள்விக்கு எய்தினேன் அறிவில்லாமல் அப்பிழை நீ பொருத் தருள்வாய் இன்னும் அண்டங்களிலெல்லாம் உள்ள உயிர்களுக்கெல்லாம் பிறையணிசடையானன்றி இயக்கம் உண்டோ? இல்லை யென் பதை நன்றாயறிவேன், அறிந்தும் இவ்வேள்விக்குப் பின்னும் வந்தேன் இந்த மயக்கந்தீர நீயறிவித்தாய், இப்பொழுது நான் அறிகின்றேன். ஆதலால் எங்கள்பால் நின்னருள் சிறிது அருள வேண்டும். ஓ சோதிசொரூபனே! நின்னை வாழ்த்தித் துதிசெய் யார்க்கு அறிவு உண்டாகுமோ பேதியாகிலைமையையும் போக்கிப் பெருமையையும் இழந்தப்பாலுந் துன்பம்உடையவராகி இருமை இன்பத்தையும் இழப்பார்கள். இவற்றை எல்லாம் அறிந்து உன்னோடு எதிர்நின்று போர்செய்தேன் அதனையும் கருணையோடு

பொருத்தருளவேண்டுமென்று பணிந்து போற்றினன். அதற்கு அகோர வீரபத்திரக்கடவுளும் அகமகிழ்ந்து ஆழியாய்! அஞ்சேல் அஞ்சேல் என்று திருவருள் செய்யும்போது, கடல்விடமுண்ட கண்டரும் கவுரியோடு விடைமேற் றோன்றி நந்திகணநாதர்முன்னே செல்லவந்து தோன்றினர் வீரனும் அச்சத்தோடு விரும்பியே தொழுது நின்றான், விண்டுவும் பிரமனும் நதிச்சடையார்தம் நளின பதம் பரவித்துதித்து வணங்கிப்போற்றி நின்றார்கள்.

அப்பொழுது அம்பிகை வேள்விக்கு முன்னுற வந்ததேவர்கள் முனிவர்கள் யாவரும் சின்னபின்னங்களாகச்செருக்களத்திற் கிடப்பதைக் கண்டு, முன்தான் கொண்ட கோபந்தணிந்து, சிவபெருமானை நோக்கிக் கூறுவாள், ஓ நீரணிந்த நித்தியனே! நெற்றிக்கண்ணனே! அடியேன் நான் முன்னம் சீறித் தேவரையும் தக்கனையும் கொன்றதற்கு உலகம் என்னைக் குறை சொல்லாதிருப்பதற்காக நின்னுடைய திருவருளிரங்கி நின்செல்வவீரனுல் உருவம் நீங்கிய கடவுளர் உயர்ந்த வேதியர் முனிவர்கள் மற்றுமுள்ளோரையும் பிழைக்கும்படியானவரம் எனக்குத்தந்தருளவேண்டுமென்று சொல்ல இறைவியின் அன்பிது நன்று நன்றெனப் பரன் நகைசெய்து ஆர்வத்தால்வெற்றிகொண்ட வீரனை விரும்பி நோக்கி நீ கொன்ற தேவரை யெல்லாங் கொண்டுவருகவென்றார். சிவபெருமான் அவ்வாறு கூறவே வீரன்போய்க் கைகாலற்றுந் தலையற்றும் இறந்து கிடந்த தேவரையும் மற்றவரையும் நோக்கிஇறந்ததேவர்களே! செய்யரே! எழுந்திருங்கள்என்றனன் அம்மொழி செவிபுகுந்ததும் தேவர்களும் மாதவத்தோரும் பொம்மென எழுந்து புகழ்ந்து போற்றினர். வீரனும் அவர்களை அழைத்துக்கொண்டு நாதனை வந்து சார்ந்தான். தேவர்களும் ஏனையவரும் கருணை நாதனைக் கண்டனர், தொழுதனர், துண்டவெண்பிறை சூடிய சோதியை மாலும்பிரமனும் பின்னும் போற்றினர். சித்தத்தில் அன்பில்லாதவன் செய்தவேள்வியில் புத்தியும் போதமும் இல்லாது போயினோம் பத்திரன் வாளினுற் பாவம் நீங்கினோம் ஆகையால் அத்தனே! நீயருளவேண்டும் என்றனர். அஞ்சவேண்டாமென்று அவர்களுக்கு அபயம் நல்கி அறிவினை

பூட்டி மாலையும் பிரமனையும் அவர் அவர் உலகத்துக்கு ஏகும்படி விடை தந்தருளினர். அப்பொழுது பிரமன் தன் மகனாகிய சிறிய பிரமனைத் தேவர் கூட்டத்துள் தேடிக்காணாதவனாகிச் சிவபெருமானைப் பணிந்துபோற்றி சிற்றறிவாற்செய்த பிழைபொறுத்தருள வேண்டுமென்று வேண்டினன். அதுகேட்டுச்சிவபெருமான் மனம் உருகித்தன்புத்திரனை நோக்கித் தக்கனைப்போய் அழைத்து வாவெனக்கட்டளை யிட்டனர், அதுகேட்ட மைந்தனும் பணிந்து சென்று தக்கனின் வேள்விச்சாலை போய்ச் சார்ந்தான்.

அவ்விடத்தே தக்கனின் உடம்பைக்கண்டு தலையைக்காணாமையால் அங்குள்ள ஒருஆட்டின் தலையைப்பொருந்தப் பூட்டிச் சிவபெருமானுக்கு முன்பு கொண்டுவந்து விட்டான். தக்கனும் நிந்தனை செய்யும் நாவையுடையதலை நீங்கி ஆட்டின் தலையை உடையவனாகி அரனைப்பணிந்து அருள்செய்ய வேண்டுமென்று அரவிந்த அடியிணை பூண்டுநின்றான். அவற்கும் அமலன் அருள் செய்து விடைதரத்தக்கன் தன்னிடஞ்சார்ந்தனன் பின்சிவபெருமான் இமையம்பயந்தமயிலொடும் கருணைநாயகன் கயிலைசார்ந்தான். சார்ந்தபின் தான் பெற்ற வீரனை உச்சிமோந்து அகமகிழ்ந்து என்னரும்புதல்வா! இந்தமாதொடும் அந்தரத்தொருஉலகம் அமைப்பித்திருக்கின்றோம் அதில் இனிதுவாழ் என்று ஆசீர்வதித்து அனுப்பியருளினர். அகோர வீரபத்திரக்கடவுளும் வீரரும்தலைவரும் மிகுந்துசூழ அகோரவீரபத்திரையும் பக்கத்தேவர ஆயிரம் பரிபூண்டதேர்மேல் ஏறிக்கயிலையைவிட்டு நீங்கிப்போய்த்தந்தை தனக்குத்தந்தருளிய உலகம்போய்ச்சார்ந்து இனிது வாழ்ந்துவந்தனர், என்றுசூதமகாமுனிவர் நைமிசாரணியவாசிகளுக்கு உரைத்து இனிப்பரை இமையமலையில் வந்துதவஞ்செய்தகதையையும் சொல்லுகின்றேன் கேளுங்களென வகுத்துக்கூறுகின்றார்.

*தக்கனுக்கு மகளாகித் தனைமதியா திருந்ததந்தை தனையும் வேண்டி*
*மிக்கதிருக் கயிலைதனை நீத்துவந்தும் விழையாமை விளங்கக் கண்டு*
*தக்கமதி யில்லாமைக் கிரங்கிப்பின் தலைவனையும் தழுவா நின்ற*
*ஒக்கவுரைத் திடவெறுத்தே யருளுமையின் மலரடிகள் ஓதின் வாழ்வாம்.*



## எ-வது இமைய் பருப்பதச்சருக்கம்.

இந்திரனைத் தரித்த பெம்மான் இணையடி மறந்த தக்கன்
தந்தபெண் என்னும் பேருந் தயவினால் வளர்த்த மெய்யும்
புந்தியில் விரும்பா ளாகிப் பூரண னருள வெற்பின்
பந்தநற் புதல்வி யான பரைபதம் பாடி யுய்வாம்.

விளங்கும் கயிலாயத்தில் பார்வதியும் பரமசிவனும் இனி திருக்கும்பொழுது உலகெலாம் ஈன்ற அன்னை ஒருகாரியத்தை மனதில் உன்னிச் சிவபெருமானை நோக்கிக் கூறுகின்றாள். தங்களை நிந்தைசெய்த தக்கன்மகள்யான் என்பதும், அவனால்வளர்க்கப்பட்டது இத்தேகமென்பதும்,தங்களுக்குவிரும்பத்தக்கதாகுமோ? சிறிதும் பொருந்தாததேயாகும். உமது திருவுள்ளம் என்னோ? அதனை உரைத்தருளவேண்டுமென்றுபணிந்து கேட்டாள். இவ்வுரைகேட்டலும் மலைமகள் பாகன் மகிழ்ந்து நம்பால் உனக்குள்ள காதலும் அன்பும் மெய்ப்பக்தியும் கண்டனம். கருதி நீதியால் உலகு உய்ய நினைந்திது பகர்ந்தாய். ஆதலால் உனக்கு அவ்வகை கூறுகின்றேன் மாதே கேட்பாயாகவென்று கூறுகின்றார். மேரு மால்வரைச்சுற்றமாகிய இமையவெற்பரசன் உன்னை மகளாகப் பெறுதற்கு வெகுதவஞ்செய்துகொண்டிருக்கின்றான். ஆகையால் அவன் மலையினிடத்துக்குழந்தையாகப் போய்ப்பிறந்து நம்மைக் குறித்துச் சிறிதுநாள் தவஞ்செய், அப்பொழுது நான் தேவர்கள் சூழவந்து கலியாணஞ் செய்தருளுகின்றேன் என்று விருப் போடும் என்னையாளுடைய மாதவன் கூற, அன்னையும், மன மகிழ்ச்சியும் பெருமையும் முகத்தில் விளங்கப் பெருமானைப் போற்றி விடைபெற்று இறைவர் விளங்கும் கயிலையை நீத்து இமைய மலைக்கு வந்து சேர்ந்தாள்- இமையமலையிலே வெள்ளை மேகங்களுங் கார்மேகங்களும் அவ்விடத்தே பொருந்திக்தோன்றுந் தோற்றம் பொன்மேருவில் கருந்தடங் கண்ணியும் கருணை நாதனும் பொருந்தி யிருப்பதுபோற் றோன் றிற்று. பனிமழை சொரிந்து நிற்கும் காட்சியானது எவ்வுலகும் புகழ்ந்து கொண்டாடும் இமைய மலையானது முத்துமாலையோடு

விளங்கும் பொன்னுலகம் போலிருந்தது. விளங்கும்-பனியோடு கூடிய இமையமலை உலகத்தில் உயர்ச்சியாயும் தேவர்கள் போற்றிடப் பலகலைமறைகளும் பகர்ந்து அழகோடும் விளங்கும் குளிர்ந்த சந்திரனைச்சூழப்பெற்றுள்ள குருவைப்போலிருந்தது. விண்ணை அளாவிய பொன் வயங்கும் மால்வரை சிறந்திடச் சரயுமாநதி மேனிலையதனிடை விளங்கித் தோன்றும் அம்மலையரசன், அந்நதிக்குச் சமீபத் திலுள்ள பஞ்சாக்கினி சூழ்ந்த மத்தியில் உலககாரணியைப் புதல்வியாகப் பெறநூறுயிர வருடம் மேலான தவங்களைச் செய்துவந்தான். தேவி தனக்கு மகளாகவும் அம்மகளைச் சந்திரசேகரனுக்கே தயவோடுங் கொடுக்கவும் மனதில் நினைத்துச்செய்த மாதவம் முடிந்தபின் தீர்த்தமாடப் போயினன். அங்கே அத்தடத்தில் நிரைந்த பூம்புனலில் இறங்கி நின்று உலகமெலாம் ஈன்றருளும் தாயையும் என்னையருளுந் தந்தையுமாகிய பார்வதியையும் பரமசிவனையும் தன்னுடைய நேய நெஞ்சில் நினைத்து அன்போடு முழுகி எழுந்து பார்த்தான். அத்தடத்தில் பூத்து விளங்கும் கமலங்களில் ஒரு புண்டரீகத்தில் (வெண்டாமரை) ஒரு குழந்தையின் வடிவமாகித் திரிநேத்திரங்களோடும் ஆயிரங்கோடி சூரியர் உதித்ததுபோல மிக்க அழகோடும் புன்னகையோடுஞ் சீரிய வதனஞ் சிறந்து தோன்ற விளங்கும் பெண்ணை மலையரசன் கண்டான். அற்புதம் நிறைந்ததோர் அமுதப்போலப் பொற்புறு வடிவோடு பொலிந்து தோன்றுதலால் தான் செய்த தவத்திற்கு மனமகிழ்ந்து கவுரியே மகளாக வந்தனள் என மனந் தேர்ந்து மனத்தெழும் ஆசையோடு சென்று நோக்கினன். இஃதோர் சுந்தர வனமெனத் துதித்து மெய்புளகெழ அந்தரத்தே நின்று உகந்து ஆடிப்பாடினன். வெண்டாமரையில் விளங்கிக் கொண்டிருக்கும் அவ்விமலையைத்தன் தவத்திற்சிறந்தகைகளால் எடுத்துச் சென்னிமேல் வைத்துக்கொண்டு உவகையோடும் போற்றினன். தன் மனைக்குச் சென்றான். தன்னை எதிர்கொண்டுவரும் மேனையாகிய தனது மனைவியிடம் கொடுத்தனன், அவளும் அகமகிழ்ந்து மகளைக் கையில் வாங்கித் தன்வீட்டிற்குள் சென்று இப்பெண் உனக்குக்

கிடைத்த விதம் எப்படி அதைச்சொல்லியருள வேண்டுமென்று கேட்டனள்.

மலையரசன் கூறக்கேட்டு பரையெனவறிந்து கொண்டாள். அவள் பரவசத்தோடும் கொண்டமெய் உவகையை யாரே விளம்ப வல்லவர்கள். இருந்து தன் மடியில் வைத்து இனிப நெஞ்சகம் பரிந்து தன்னுயர் முலைப்பாலையூட்டவே திருந்திழை குதலைச் செம்பவள வாய்திறந்து சராசரமனைத்தும் உய்யவே அருந்தினள்.

பாடகம், தண்டை, பரிபுரம், சூடகம், மணிவளைத்தொடி முத்தாரம், பொன்னரைஞாண், நீலரத்நவாரம், ஆடகச்சுட்டி, தோடுமுதலிய அணிகள் பூட்டினர்; மாணிக்கம், மரகதம், நீலம், வச்சிரம் ஆணிப்பொன் முத்தினால் அமைத்த தோட்டின்மேல் பூணுக்கும் அழகுசெய்யும் பொன்னைத்தான் வைத்தும் கரத்தில் வைத்தும் பரிந்து காத்தனர். குழந்தை பிறந்தநாட் சடங்கியற்றிப் பன்னிரண்டாம் நாளில் பார்வதி என்னும் நாமமிட்டு வாழ்த்தினன். ஆறுவது மாதத்தில் அமுது அருத்தி, ஏழாவது மாதத்தில் நடைவருத்தி ஒரு வருஷத்தில் வருஷப்பூர்த்தி கொண்டாடி, பெற்றோர் மிகப்பெருமையாய்ப் பாராட்டிவந்தனர். அண்டமெலாம் வயிற்றிற்றாங்கிப்பெற்ற அன்னையாம் குழந்தையும் பூர்வபக்கத்துப் பிறைபென வளர்ந்து வந்தாள். மழை போன்ற குழலும், பிறைபோன்ற நெற்றியும், சிலைபோன்ற புருவமும், வேல்போன்ற விழியும், முத்தையொத்த பல்லும், குமுதம் போன்ற வாயும், வள்ளைபோன்ற காதும், கமுகுபோன்ற கழுத்தும், முழுமதிபோன்ற முகமும், கரும்பு போன்ற சொல்லும், தாமரையின் நறுமுகைபோன்ற தனமும், மூங்கிலையொத்ததோளும், காந்தள்போன்ற கரமும், அகண்ட கோடிகளை எல்லாம் ஒய்வுறுத டக்கியருள் வயிறும், மிகத்தேய்ந்த இடையும் மருங்கு அரைநூல் மணிமாலையுடையும், பதுமநிதி போலும் பதத்தையும் உடைய தேவியைப் பெருங்கருணைப் பிராட்டியை பெற்றதற்கு மிகமகிழ்ந்து சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனள்மேனகை என்னும் பெருந்தவத்தினள்.

இப்படி வளர்த்து வருகையில் நாரதர் மலையரசனிடத்தில் வந்து நீ பெற்ற பெண்ணாகிய கவுரியை, என்னையாள் ஒருவனாகிய விமலனுக்குக் கொடு என்று சொல்லிப்போயினார். இதைக் கேட்ட மலையரசன் தன் மனைவியிடத்து நாரதர் சொல்லியதைச் சொல்லி நான் முயன்றதவம் நன்குபலித்தது என்று கூறி மகிழ்ந்திருந்தான்.

மிஞ்சிய அழகோடு மேல் அறிவு உண்டாகவே சிவபெருமானைத்தனக்கு நாயகனாகக் கொள்ளும் கல்யாணத்தை விரும்பி ஐந்து வயதிலேயே நிமலை கடவுளை நோக்கித் தவஞ்செயக்கருத்திடை எண்ணித் தந்தைமுன் சென்று தவம் புரிகுவனென, தந்தை கேட்டு அதிசயித்துத் தாயே! இந்த நல்ல இளமையில் பெரிய தவஞ் செய்தல் எளிதோ? பைந்தொடி உனது உடம்பு வருந்தும். ஆகையால் அந்த எண்ணத்தை விட்டுவிடு என்று சொல்லத்தேவியும் புன்னகை செய்தாள். ஐயனருள் அல்லது விண்ணவர்களாயிருந்தாலும் எவர்களாயிருந்தாலும் உய்திறமில்லை. உயிர்களெல்லாம்இயங்காது ஆகையால் அந்த மணிகண்டன் வரும்படிக்கே இனிமேற்றவஞ் செய்வேன் என்றாள். உலகுயிர் யாவையும் பெற்றதாயே தவஞ்செய்தல் இவ்விளமையிற்றகாதென உரைக்க, தாயானவள் தவஞ்செய்தால் நலம் வருமென்று சொல்லவே மலையரசனுஞ் சிறிது சம்மதித்தான். கருதும் இக்கிரியில் கவுரி வளரும் பொற்கிரகத்து உரிய பொற்கோட்டின் முடியூடே அதன் நடுவில் நவமணிகளால் ஒரு சாலையமைத்து அதில் பல தோழியர்களையும் அமைத்து நீ இனி விரும்பிய படித்தாயே தவஞ்செய்யென உவகையோடு விடைதர, மகிழ்ந்து அமலையுந் தோழியருடனே நவமுறுசாலையை நோக்கி நடந்து சாலையின் சிறப்பெலாம் நோக்கி யாகந்தங்கொண்டு மன்றலங்கோதையும், அங்கிருந்தே கொன்றையும் அரவும் அணிந்த கூத்தப்பிரானை நினைத்து ஒரேமனதோடும் உயர்தவங்கள் செய்தாள். தந்தையும் தாயும் தினமும் வந்து பரிவொடு போற்றிக்கொண்டிருந்தார்கள். இங்கு இவ்வாறு நிகழ்ந்து வரும்பொழுது, கவுரிபிரியச் சோதிசுந்தரர் விரும்பிக் கயிலையில்

இருந்தார். கவுரியைப் பிரிந்ததாலும், காரணப்பெருமையினு லும், அவுணர்கள் சூழச் சூரபன்மனுமசுரன்றேன்றி பாவத்தை எங்கும் பரப்பி உள்ள பண்ணவர்களும் பரிந்த தேவர்களும் புவன மும் நடுங்க அண்டம் புரந்திடும் இறைவன் ஆனன். இஃதிப் படியிருக்கும் பொழுதில் அரியதவத்தையுடைய சனகராதியரா கிய தூயநான் மறையோர் நால்வர் சோதிமெய்ஞ்ஞானங்கேட்ப தற்குச் சிவபெருமானின் கயிலையைக்கிட்டி நந்தியின் அருளும் பெற்று வாயிலூடுசென்று வரதனை மழுவுடைய கரத்தனைப்போற் றி அவன்செய்யமலரடி வணங்குவார். பின் எழுவார் மெய்பொடிப் பஉள்ளம் இரங்குவார் கண்ணீர்வரக்குழுமிமுன்னுடுவார். கைகூப் பிச் சென்னிவைத்துத்தொழுது உடன்போற்றி நின்றே தோத் திரங்கள் பலசொல்லி ஓ நாதனே ! எத்தனைகோடியண்டம் எத் தனை புவனகோடி இவைகளிலுள்ள உயிர்கள் அத்தனைக்கும் நீயே யருளுடைக்கடவுள் இதனைச்சித்த மீதுணர்ந்து கொள்ளா மல் சிறுமையை உடையவர்களாய் மறுமைகாணுமாய் மரு ண்டு புண்ணியம் இது பாவம் இது எனப்புலப்படாமல் கண்ணி னுல் பலவுங்கண்டோம் காண்பதொன்றைக் காணும். தினைய ளவு பொழுதாகிலும் உன்னைப்போற்றுதவர் சிந்தியாதவர்கள் அன்னை வயிற்றில் அடுத்து அடுத்துப்பிறப்பர். உன்பால் அன் புடையவர்களுக்கு இவ்வாறுருகுமோ ? உன்னை மலர்கள் தூவிப் போற்றி நன்மை அறியோம் என்றாலும் உன்னையறியும் மெய்ஞ் ஞானம் உணர்ந்திடவேண்டும் என்று வேண்ட ரிஷபத்தைச் செலுத்தும் கருணையானே ! பிறையைச்சூடும் சடாபாரத்தை யுடையவனே ! நற்றவப் பொருளே ! நாதனே அருள்செய் வாயா என்றார்.

சிவபெருமானும் உற்ற மெய்ஞ்ஞானம் உங்களுக்கு உணர் த்துவேன் நீங்கள் இருங்களென்று சொல்லி இருக்கச்செய்து நந்தியை நோக்கி நாதன் நலம்பெறு தேவராதியர்வந்தால் இங்கு வாராதபடி தடுத்திடு அப்பால் மலர்வாளியை உடைய மன்மதன் வந்தால் உள்ளே வரவிட்டுவிடு என்று கட்டளையிட்டருளச் சிந் தையிலிவற்றை யறிந்த நந்திதிகழ்திருவாயிலிற் சார்ந்தான். பின்

சிவபெருமான் சனகராதி நால்வரோடும் வடதருநிழலில் வைகிச் சிவஞான முழுதையும் முறையே நால்வருக்குங் கனிவாய் திறந்து சொல்லாமல் தெட்சணாமூர்த்தியாகி நின்று மௌனமாக இப்படி இருங்கள் என்றுசொல்ல மற்றும் அவர்கள் தாமும் அப்படியிருந்து ஞானம் அறிந்தனர். ஞானம் அறிந்திடும் அவர்களுக்காக காளகண்டன் மோனமாயிருந்தது ஒரு கணந்தான். தேவர்களுக்கு அது அநேக கோடிகாலம் ஆயிற்று.

இஃதிவ்வாறுனகாலையில் என் ஐயன் அமலையைப் பிரிதலாலே தேவர்களும் பிரமனும் மாலும் இன்னும் மற்றோரும் தம் மனைவியரைப் பார்க்கவுமில்லை. அவர் தம் மனைவியாரும் தங்கள் கணவர்களை நாடவில்லை. கானத்தே மலரில்லாமல் காமனும் கரும்புவில்லை எடுக்கவில்லை. உலகத்துள்ள நெல் முதலிய அசரமெல்லாம் பாலொடு குருத்துவாங்கி நின்றன பழுக்கவுமில்லை காயவுமில்லை- சரப்பொருள்களோ அசையாது அவ்வாறே இருந்ததென்றால் ஆலமுண்ட தேவரையன்றி வேறு தேவரும் உண்டோ? எவர்தான் தெய்வம் ஆவார்?

சர்ப்பத்தைபணிந்த சடையையுடைய கடவுளை அம்பிகை பிரிந்தபோது சராசரந்தானும் எண்ணும் தபவுறு காமமின்றி நிராசையாய் இருந்ததினால் நிமலனே எவர்க்கும் மேலோன். அவனே பராபரவஸ்துவென்று வேதங்களெல்லாங் கூறின. சிவபெருமான் மெய்மறைச் சிறுவர்களாகிய சனகாதியருக்கு அவர்களும் உலகும்உய்யும்படி மெய்ஞ்ஞானபோதமருளி அங்கிருந்த காலையில் வெய்யவெஞ்சூரன் மைந்தன் விண்ணுலகழிக்கும் போது தையலாஞ்சசியுடனேடும் இந்திரன் பூமியுற்சார்ந்து மேருமலையிற் றவஞ்செய்காலையில் விமலனும் விடைமேற்றோன்றி இத்தவம் எதற்காகச் செய்கின்றாயென்று கேட்கச் சிவபெருமானிடத்தில் இந்திரனும் கொடிய சூரன் செய்தியெல்லாஞ் சொல்லிப் பாதத்தில் விழுந்து வணங்கிப் போற்றி எம்மைக் காத்தருள வேண்டுமென்று குறையிரக்கச் சிவபெருமான் அஞ்சேல் என அபயஸ்தங் கொடுத்து நமக்கொரு மகன்பிறப்பன் அவனால் சூரனும் அவன் கிளைஞரும் அழிவர் என்று சொல்லியருளிச் சென்

ரூர். இதனைக்கேட்டானந்தித்துச் சிவபெருமான் கருணைத்திறத்தை வியந்து போற்றி ஆவன உரைத்திடப் பிரமனிடம் சென்ருன். சென்று பிரமனை ஏத்திப் போற்றிச் சூரன் விண்ணுலகத்தை யழித்தலாலே அஞ்சினேன் காத்தருளவேண்டும் என்ன அதற்குப் பிரமன் நம் துயரங்களையெல்லாம் நாராயணனிடத்திற் சொல்வோமென்று இந்திரனையுங் கூட்டிக்கொண்டு வைகுண்டஞ் சார்ந்து விண்டுவைக்கண்டு தொழுது போற்றினன். தாமரைக் கண்ணினனும் வந்தகாரணம் யாதெனக் கேட்கப் பிரமன் கூறுகின்ருன். பாமகளும் நானும் பாலர் நால்வரையும் பார்த்துப் படைத்தற்ருெழிலைப் புரியுங்கள் என்ருேம் அந்த நால்வரும் ஆதிக்கம் இதுவேயென்று புன்னகை புரிந்தனர். இந்தப் புன்ருெழில் புரியோம் என்றனர். பிறகு கைலைக்குச் சென்று சிவ ஞானபோதம் வேண்டும் என்ருர் நாயகனும் உரைப்பதானன். பார்வதியைப் பிரிந்து ஞானம் பகருகின்ற காரணத்தினல் ஒப்பற உயர்ந்து விளங்குஞ் சிவபெருமான் உரையில்லாது மோனமாயினன். தரையெல்லாம் இயங்குஞ் சரமெல்லாம் அசரமாயின. தேவர்களெல்லாம் அஞ்சியோடச் சூரனே ஜெயம்பெற்ருன். அத்துயரம் ஆற்ருது இங்குவந்து உன்னைச் சரணடைந்தோம் ஆகையால் நாங்களெல்லாம் இத்துயரினின்றும் நீங்கும்படிப் புத்தி புகன்றருளவேண்டுமென, திருவிளங்கிய மார்பையுடையவனும் பிரமனைநோக்கிக் கூறுகின்ருன். நாமெல்லோரும் அருளில்லாத தக்கன் வேள்விக்குப் போயிருந்த குறையினலே இருமையும் இழந்துவிட்டோம் இந்த இடரினும் இடைந்தோம். சூரனின் பெருமையும் அறிந்திருக்கிருேம். ஆகையால் இனிப் பேசுவதொன்றிருக்கிறதோ? ஆதியாங் கடவுள் வட ஆலின்கீழ் மோனமாயிருந்தகோலம் பேதியாதிருக்கில் இந்தப் பிரபஞ்சத்தை நடத்தமாட்டோம் ஆகையால் இமைய அரசன் பெற்ற விமலையை விமலன் வேட்க பூவாளியானைவேண்டி இரந்து, போகச் செய்து, அவன் தன் ஐந்துபாணங்களையும் ஆதியான்மேல் தூவினல் அவ்விமலர் உமையை மணந்தருளுவர் கந்தக்கடவுளையும் தருவர், அக்கந்தக்கடவுள் சூரனைக் கிளையோடுங் கொன்று நம்மைக்காப்பன் உலகமெல்லாம் இன்பம் அடையும் நம் துயரங்

தீரும். ஆகையால் நீங்களெல்லாருஞ் சென்று மன்மதனை நல் முறைத்தனுப்புங்களென்று கார் வண்ணன் கூற, நளினத்தோன் உவந்து தேவர்கள் பலரோடும் விடைகொண்டேகி மனோபதி நகரிற் சென்று, இந்திரர் முதலிய தேவர்கள் எல்லாம் எங்கும் சூழ்ந்து நிற்கவும் வேதியர்கள் பலரும் போற்றவும் அழகிய தவிசில் இருந்து கொண்டு மன்மதனைச் சிந்தித்தான். மன்மதனும் வந்து பங்கயன்றன் பங்கயப்பாதந்தொழுதானென்று கூறிச்சூதர் மேலுஞ் சொல்லுகின்றார்.

## அ-வது காமதகனச் சருக்கம்.

தென்முகமாய் வடவாலின் நிழலிருந்து நால்வருக்குந் திசழும் மோன
நன்குறிகள் காட்டுபிரான் திருமேனி மிசைவாளி நாட்டுங் காமன்
முன்னெரிய விழித்தழித்தே யுருவிலியாய்ப் பின்னருளி முறையே செய்து
பொன்மலையின் மகளைமணந் திடுங்கடவுள் மலரடியைப் போற்றி செய்வாம்.

தன்னை வேண்டியழைத்த பிரமனின் கமல பாதங்களில் விழுந்து வணங்கிப் பதுமத்தோனே! புங்கவா! கருணையோனே! இங்கு நீ அழைத்த காரணம் என்ன? கூற வேண்டுமென்று பணிந்து கேட்கப் பிரமன் கூறுகின்றான், ஓ! கரும்பை வில்லாக உடைய காமனே! திரிநேத்ரதாரியாகிய சிவபெருமான் வடவால விருட்சத்தடியில் மோனமாகி இருப்பதைத் தவிர்க்கவேண்டும், ஆகையால் வெள்ளிப் பொருப்பில் விருப்பில்லான்மேல் மலர்க் கணை ஏவுக என்றார். இதனைக் கேட்ட மன்மதன் திடுக்கிட்டு அஞ்சி, இரு கரங்களாலுங் காதினைப் பொத்திக்கொண்டு அரகரா! சிவசிவா! சிவபெருமானின் நிலையை நீ தெரிந்திருந்தும் நீ இவ்வாறு சொல்லலாமா? எந்தையாகிய மாலின் மார்பில் மாவினைப் பொருந்த வைத்தேன். புயத்திலும் பூதேவியைப் பொருந்தவைத்தேன். உன் நாவில் வாணியை வாழவைத்தேன். அதுவும் போதாதென்று திரும்பவும் திலோத்தமைக்காக உருகி வைத்தேன், சந்திரனைத் தன் குரு பத்தினியைப் புணரும்படிச் செய்தேன், சாயையினிடத்து சூரி

யனைப் புணர வைத்தேன். இந்திரனை இந்திராணியோடு சேர வைத்ததுமல்லாமல் அதிகாயம் அகலிகைபால் உற்று ஆயிரங் கண் உடலெல்லாம் பெறவும் வைத்தேன். இவைகளெல்லாம் என் பாணஞ்செய் வெற்றிதானே. இன்னும் சிற்பரமுணருந் தெய்வச் சிவமுனி சிந்தை வேறாய் சொற்பகரா மானைத்தொடர்ந்து போய்ப் புணரவைத்தேன். இன்னும் என் வெற்றியாலே எத்தனையோ கோடி முனிவர்களை எல்லாம் மாதினைப்புணரும் படிக்குவைத்தேன். காசிபன், வசிட்டன், அத்திரி, ததிசி, கோசிகன், கௌதமன், கோதிலாத்தேசிகர் இவர்கள் தம்மைச் சிந்தை மயக்குவிக்கும் ஆசையால் புதல்வர்களைப் பெறவைத்தேன். பூமியில் அரசு செய்யும் அரசர்கள் தம்மை எல்லாம் தம் மரபு நீக்கிக் கணிகை மாதரைப் புணரும்படிச் செய்தேன். இன்னும் வைசியர்கள் முதலியவர்களில் என் கணைக்குத்தப்பினவர்கள் யார்? இவைகள் எல்லாம் என்சிலையின் வெற்றியல்லவா? இவர்களிடத்தில் என்னை அனுப்பினால் அவர்களைவென்று உன் அடிமலர்தொழவைப்பேன். அவ்வாறின்றி உன்னையும் என்னையும் உலகங்களையும் எனது தந்தை மாலினையுங் காத்தருளும் பேராற்றலுடைய பெருமானிடத்திற்சென்று அற்ப என்னை மலர்க்கணை தொடுக்கச் சொல்லுகின்றாய் இந்த அற்பமொழி யென்னிடத்திற்கூறலாமா? என்னையாளுஞ் சிவபெருமான் இடதுபாகத்தில் உமையைப்பொருந்தவைத்தது உன்னுடைய வெற்றியல்லவோ என்றால் அறியாது கூறினாய் அதுவும் உலகமாதாவே அரிய தவங்கள் செய்து பெற்றதன்றிவேறல்ல. அவ்வாறின்றி என் வெற்றி என்று பேசுவீரேல் அது பிழையாகும். பூதநாயகன் பால் வரமும் வாழ்வும் பெற்றிருக்கின்றேன். ஆதலால் அம்பு கொண்டவனை எய்யமாட்டேன். ஓ வேதனே! எனக்கிவ்வார்த்தை வேதனையை யுண்டாக்கும், நீதியைச் சொல்லுகின்றேன். இது எல்லாம் நமக்கு அடாது. ஆகையால் இந்த நினைவுகளை முற்றும் மறந்து விட்டுவிடு என்றான். அதற்கு பிரமன், " தேவர்களும் உலகும் உய்யவே கயிலைநாதன் மேற்கணை தொடுக்கச்சொன்னேன்; நீயோ அது நினைக்கவில்லை துயரைத் தீர்க்க மனங் கொள்ளவுமில்லை. சிவ பெருமானின்

செய்திகளைத் தெரிவிக்கின்றாய். என்ன சொல்லினும் ஓ மன்மதனே! உன்னையன்றி எங்களைக் காக்கக் கூடியவர்கள் வேறுஇல்லை; நீதான் காக்கவேண்டும்" என்றனன். அதற்குப் பிரமனைநோக்கி மலர்க்கணையோன் கூறுகின்றான். செஞ்சடைக் கடவுளின் றன்மையை நன்றுகூறியும் நீ நினைக்கவில்லை. ஒன்று சொல்லுகிறேன் கேள்; மால்முதலிய தேவர்களிடத்தில் என் ஆணையைச் செலுத்துவேன் சிவபெருமான் முன்பு போகவும் அஞ்சுவேன். ஓ பிரமனே! ஒருக்கால் நீ சொல்லியபடிநான்போவேனேயானால் கட்டாயம் நானும் வில்லும் கணையும் நீறாக, விளிவேன். ஆகையால் இனி அறிவில்லாது இம்மொழிகூறவேண்டாம். திரிபுரத்தைச் சிறுநகையால் சாம்பராக்கிய அவனை என் பூக்கணைவெற்றி கொள்ளுமோ? நஞ்சை அமுதமாகக்கொண்டவன் மேலும் என்னுடைய அஞ்சுகணைகளை ஏவுவனோ? ஆகா! அவன்முன் கணைதொடுக்கச்செல்லின் என் ஆவிசூறைக்காற்றின் முன் பஞ்சுபோற் பறந்திடுமே. முன்னாளில் நீயும் விஷ்ணுவுந் தேடியும் அறியமுடியாத நாதனை நீமதியாது நிந்தித்தமையால் உன் தலையில் ஒன்று அறுபட்டது ஞாபகமில்லையா? மாலைப்பொருளென்று கொண்டு உமையாள்பாகனை நிந்தித்த தக்கன் தன் வேள்வியுமழிந்து உயிருமிழந்து பின் அவர் கருணையால் ஆட்டு தலை பெற்றதும் அறியாயோ? பலமுற்ற பகாசூரனும் சலமுற்ற சலந்தரனும் மற்ற அவுணர்களும் தங்குலத்தோடு அசஞ்சல கொன்றிட நலமுற்று மகிழ்ந்தாய், நான்முகனே! சிந்தாகுலட உற்று வருந்தும் தேவர்களெல்லாம் உயர்ந்தோம் உயர்ந்தோட அரகர என்று ஓலமிட மந்தாகினியை (கங்கையை) ஒரு மழை த்துளிபோல் ஆக்கி ஜடையிற் சூடியதை அறிந்திலையோ? தாரு காவனத்து இருடிகளால் ஏவப்பட்டுத்தன்னைக் கொல்லவந்த யானையையும் புலியையும் கொன்று விளங்கும் மூலப்பொருள்மேல் கேவலம் பெண்கள்மேல் எய்யும் பூக்கணைகளை எய்வனோ? நீயும் அக்கணிவோன்மேல் அக்கணையை எய் என்று சொல்லலாமா? என்றும் பழகிக்கொண்டிருக்கும் பழமறைகளாலும் காண்பதற்கு அரியவனும் வட ஆலின்கீழ் தட்சணாமூர்த்தியாக யோகியாய் எழுந்தருளியிருப்பவனும் ஆகியபெருமானின் நெ

தீவிழியின் ஒரு பொறியன்றோ அழலெழ உலகை அட்டது. இது உனக்குத்தெரியாதோ ? என்றால் ஒரு காரியம் ஆகவேண்டும் என்கின்றாய். என்னவென்று கேட்டால் இதமானவற்றைச் சொல்லாமல் சிவபெருமானின் நெற்றிக்கண்ணின் பொறியால் அழிந்துபோ என்கின்றாய். இது உனக்குத்தகுதியா ? உள்ளத்திலே தயவு உடையவரானாலும் எள்ளத்தனை எண்ணுவ தெண்ணிலரேல் சிவபெருமான் அவர்களை வெறுத்துத் தள்ளிவிடுவர் இது சத்தியம். அப்படியிருக்க நீ என்னை அழைத்து என் முன்னவன் முன்சென்று மலர்வாளி தொடு என்கின்றாய். நீ சொல்லுவதை நோக்கின் அன்பில்லாதவர்கள் சொல்லுவது போல் இருக்கிறது. பல்லாயிரங்கோடி பரப்புலகம் எல்லாம் உதரத்தில்வைத்துஈன்றருளுந் தேவிபாகன்மேல் அவன்மேற்செல்லுந் திறமில்லா மலர்வாளியை நானுஞ் செலுத்துவனோ ? உடம்பிலும் சிரிப்பிலும் விழிக்குங்கண்ணிலும் கையிலும் நெருப்பைக்கொண்டுள்ள காரணனாகிய அமலனின் அருகு சென்று நான் வாளிதொடுப்பனேல் என் உடல் எரிவது உண்மையேயாம். கருணைநாதன் ஓலமிட்டு அஞ்சிவரும் உங்களுக்காக ஆலம் உண்டார். மார்க்கண்டேயற்காகக்காலனையும் உதைத்தார். அந்நிமலனைக்கருத்திற்குறியாதார் மண்ணில் இறந்து அழிவர். யுகாந்தத்து எல்லாம் அழிந்து ஒழியும்; உருத்திரன் ஒருவனே எப்பொழுதும் உள்ளகாரணனவன்.

அவனை என்மலர்வாளியும் வருத்துமோ ? என்று இவை கூறி மன்மதன் மறுத்திடவே பிரமன் உள்ளக்கவலையோடும் பெருமூச்சோடும் கூறுகின்றான். நான் சொல்லியவற்றைக்கேளாது சிவபெருமானின் பெருமை எல்லாம் கூறுகின்றனை, நீ சொல்வதெல்லாம் உண்மையே ஆனாலும் நீ தேவர்களின்துயரை நீக்கச் சிறிதும் எண்ணவேயில்லை நீ உன் சிற்றறிவை அகற்றி நான் சொல்வதைக் கேள். இப்பொழுது தேவர்களுக்கு வந்துற்ற துயரத்திற்கு நீக்கம் என்னவென்றால் பரன் உலகம் ஈன்ற தாயை மணம் புரியவேண்டும். அதற்கு உன்னுடைய கணையாலன்றி வேறு ஒன்றாலுஞ் சாத்தியப்படாது. இயலும் எச்செயலும் ஈறிலா நம் இறைவன் தயவோடு நடத்துவதன்றி

மற்றதொன்றுண்டோ. அவனன்றி அணுவும் அசையாதே. நீ எம்வேண்டு கோளுக்காக இவ்விடம் விட்டு நீங்கிப்போய் செய்யச்சொல்லும் செயலும் அச்சிவன் செயலேயாகும்; நன்றாய்க் கவனித்துப்பார். பொருளெனத் தம்மையே புகழுந் தேவர்கள் மருளும்படி ஒரு துரும்பினை வரதன் நாட்டி அருளினால் எவ்வுலகத்தையும் அமைத்து அளித்து அழித்த அத் திருவுளத்தின் பெருமை நாம் செப்புந் தன்மை உடையதோ. எல்லா உலகங்களையும் படைத்தவன் அன்போடு உயிர்களெல்லாம் உய்யும்படி அருள் செய்வான் பிறகு அழித்து நீக்குவான் செவ்வியோய்! இது சிவன் செயலே ஆகும். போகமாரனே! இன்னங் கேள் கரும்பு வில்லாற் கணைகள் பூட்டிப் பொன்மலையை வில்லாகக் கொண்ட புராதனன் பாற்போக முன்னர் ஏற்பட்டுள்ள ஒரு ஏதுவும் உண்டு. இதல்லாமலும், யாரேனும் தங்கள் பால்தீது வந்தால் உதவி நீ செய் என்று ஒருவரைவேண்டினால் அவர்களுக்கு ஆதரவு கூறாமல் அருளில்லாதவர்களைப் போல் மறுத்துக் கூறுவது ஒழுங்காகுமோ? அப்படிக்கூறில் உலகுஒறுக்குமே, இவைகளை எல்லாம் நீ அறியாயா? இன்னுங் கேள் விருத்திராசுரனை அழிக்க எண்ணி இந்திரன் ததிசி முனிவரிடம் முதுகெலும்பைக் கேட்டபொழுது அவ்வாறே கொடுத்து ஆவி நீங்கினன் அதனால் அவனுக்குப் புகழல்லவா? நாகமணியும் நாதர், தேவர்களும் உலகும் உய்யும்படி ஆலமுண்டார் அதனாலல்லவா தேவர்கள் அமுதம் உண்டு உய்ந்தார்கள். கடலில் வரும் விடத்தைத் தேவர்கள் பொருட்டாய் எதிர்த்து நின்றதனாலல்லவோ மாலும் மேனி கறுத்தான். இஃதன்றி, பேரருளால் யாவரேனும் பிறருக்கு ஏதேனும் உதவிசெய்திடலல்லாமல் சும்மா இருப்போர் பூமியிலே மிகக் கொடிய துயரங்களை அனுபவிப்பவராவர் என்று மேலோர் சொல்லுவார்களே, அசுரர்களிலெல்லாம் வலியவன் என்று சொல்லப்படும் சூரபன்மனாலே நாங்களும் துயர் உறுத்தப்பெற்று அவனுக்கு அடிமையாய் அவனிடம் பணி செய்கிறோம். ஆகையினால் இந்தக் கவலையொழிய சிவபெருமான் முன் வாக்களித்திருக்கிறபடி ஒரு குமரனைத்தர நீ கடிதுசென்று ஐம்படை ஏவும்படிச் சிந்தித்தோம், காரியங்கள் இங்ஙிலையில்

இருப்பதனால் எங்கள்துயரம் தீரும்படிப் போய் உதவி செய்வாயாக. நீ போனகாலத்து உனக்குச்சாவு கிடைத்தாலும் அதனால் உனக்குப்புகழல்லாமல் வேறாகுமோ? ஆகையினால் ?மாகனவேளே! இனிவேறொன்றும் சொல்லாதே நீ போய் ங்கள் துயரை எல்லாம் நீக்கிக்காப்பாயாக என்று வேது னும் வேண்டினான். அதற்கும் மன்மதன் என்னையாளுடையவனிடத்தில் ஏதம் வரும்படிக்காகப் பூக்களை தொடுப்பனோ? இதல்லாமல் மற்றவரிடத்திற்போ நீ என்றால் அவர்களிடஞ் சென்று வென்றுவருகின்றேன், என்று கூறினான். இந்தவிதமாக மன்மதன் சொல்லவும் பிரமன் மிகுந்த கோபத்தோடும் மனம் அஞ்சும்படி, சிவபெருமானுக்கு திரே செல்லுகின்றாயா? அல்லது என்சாபத்தைப் பெறுகின்றாயா? என்று கேட்டான். சாபம் இடுவேன் என்றவுடனே தனும் நடுங்கிப் பெருமூச்செறிந்துமலரவனை நோக்கிச் சொல்லுகின்றான். திசைமுகக்கடவுளே! கேட்டீ, நீ வழங்கும் பல இல்லாத வெங்கொடுஞ்சாபத்தால் பழியுறுவேனோ! செஞ்சடைக்கடவுள் விழிக்கெதிர் நின்றும் எரிந்தால் நலம் எனக்கு ண்டாகும்; நானும் உய்குவன் இனிமேல் ஐயா! நீ கோபிக்க வண்டாம். ஆதியாகிய அமலன் முன்செல்வேன் என்று சொல் மதைக்கேட்டு உலகம்படைத்த உந்திவந்தோன் மகிழ்ந்து சொல்லுகின்றான். எங்கள் வேண்டுகோளை மேற்கொண்டு அன்போடும் போகத்துணிந்துகொண்டாய் அதனால் நாங்களும் துன்பத்தினின்றும நீங்கினோம். நீ கயிலைநாதன் முன்செல் லுக, நாங்களும் உனக்குப் பின்னேயே வருகின்றோம் என்று ஆதரவு கூறிப்பின்னுஞ் சொல்லுகின்றான், நாங்கள் மிகத்துன்பப்பட்டோம் என்பதை நீ அறிவாய், ஆதலால் கவுரியைக் கங்கைசூடி கனிவின் மணந்துகொள்ள நீ சீக்கிரம் போய்ச்செய்க எனவேண்டினன். உடனே மன்மதனும் பிரமனிடத்தில் விடை பெற்றுப் பிரமலோகம்விட்டு நீங்கித் தன்பதியிற்சேர்ந்து விஷயங்களை எல்லாம் தன் காதலியினிடத்திற்கூறி தான் நல்லறிவினாலே அவள் துக்கத்தைப்போக்கித் தெளிவுபடுத்தி வில்லுங்களையும் வாளும் மற்றையபடைகளையும் வீக்கி மதிக்குடை மேலே

விளங்கவும்,மீனக்கொடி பக்கத்தேபடரவும்,போர்க்காளம் சூழ்ந்து சப்திக்கவும், கடலாகிய முரசம் ஆர்க்கவும், தென்றற்காற்றாகிய சிறியதேரின்மேல் ஏறிக்கொண்டு தன்பதியைவிட்டு நீங்கித் துன்னிமித்தங்கள் பலதோன்றச்சிவபெருமான் வசித்தருளும் கயிலைமலையைச்சார்ந்து அதனைக்கண்குளிரக்கண்டு தன்தேரை விட்டு இறங்கித் தன்னைச் சூழ்ந்து வந்த பரிசனத்தைவிட்டுநீங்கி, தன்மனைவியுங்கூடவர மலர்வாளிஏந்திச்சிங்கக்குகையில் யானை நுழைந்ததுபோற் புகுந்தான். அங்குள்ளபறவைகள் விலங்குகள் முதலியவற்றின்மேல் தன்ஐங்கணையைச்செலுத்தினான் அப்பொழுது அவைகள் சிந்தனைவிரும்பிக்கூடுஞ் செயலைவிரும்பாது அரற்றுகின்றதையுங்கண்டான். புண்ணியன்கயிலைவாசன் பூவையைப்பிரிந்திருந்ததினால் எண்ணில் கோடி அண்டத்துஞ்சராசரங்கள் எல்லாம் உண்ணிறைவிருப்பம் இன்றிக்கூடுதலும் ஊடுதலும் இல்லாமல் வீணேயானவென்றால் என்கைவாளி அவர்பால் நண்ணவுஞ்செய்யுமோ? என்று சிந்தித்து இரங்குங்காலையில், சிவபெருமான் மலர்த்தாள் சிந்தையில் வைத்துத்துதிக்கும் நந்திகண்டு இவன்யாரோவென்று எண்ணிப்பிறகுதெரிந்து சிவபெருமான்செல்லியவேள் என்றுகொண்டு மன்மதனைநோக்கினான் அப்பொழுது மன்மதன் மனதும் உடலும் அஞ்சி,கரும்புவில்லோடும் தன்மனைவியாகிய இரதியோடும் விரைந்து நடந்துவந்து அந்நந்தியின் பொன்னடிபணிந்து நின்று போற்றிவணங்கினான். அவ்வாறுநின்றவேளை நந்திநாதனும் இனிதுநோக்கி நீ வந்தகாரணம் என்ன கூறுகஎன்னலும், நடந்தவிஷயங்கள் எல்லாவற்றையும் ஒன்றுவிடாது புகலவே உணர்ந்த நந்தியும் சிவபொருமான் கூறியகுறிப்பும் இதுவேஎன்று உட்கொண்டு, நெற்றிக்கண்ணை யுடையவர் வேள்விக்குப்பசுவைப்பலிகொடுத்துத்திரும்பவும் எழுப்புந்தன்மைபோலவாலையக்கல்லியாணம் செய்யும் வேள்விக்குச் சில மதன்தனை அழித்துத்திரும்பவும் எழுப்பச்செய்வார், மால் அயன்முதலியதேவர்களின் வருத்தமுந்தீரும்என்று எண்ணித்தேவர்களின் துன்பமெல்லாந்தீரும்படி வந்தனேயோவென்றுகாவலனாகிய நந்திகூறிட, மதனன் புட்பபாணத்தைப் புனிதர்மேல் ஏவி அவர் நெற்றிக்கண்ணால்அழிவதுதிண்ணம் ஆகையால் என்னைத்தடுக்கா

மல் அவர்பால் ஏகுமாறுவிட்டருள் புரிய வேண்டும் என்றனன். அதற்கு நந்திதேவனும் உன் மனநினைவு இதுவானல் மேலைவாயிலோடுமேகென்றுவிடைகொடுத்தருளினர். உடனே இரதியோடும், நந்திதேவனைவணங்கிப்பூரணன்தன்னை நண்ணிப்போனன். அங்கு வடஆலின்கீழ் தட்சணாமூர்த்தியாகயோகுசெய்யும் புராதன மூலப்பழம் பொருளைப்புண்ணியப்பேற்றால் கண்டனனாக ஆநந்தங் கொண்டுமயங்கி அஞ்சிவிழுந்து மூர்ச்சையுற்றிருக்க இரதிதேவிதன்கரங்களால் வாரிஎடுத்துத்தன் மடிமேல்வைத்து மெய்வெயர்வையைமாற்றிப்பண்டைய விதியினலே பரமனை மலர்க்கணை எய்யவந்ததிண்டிறல் இதுவேஎன்று தியங்கித் தேற்றுதல்செய்தாள். உணர்வுவந்தபின் ஐயோபுன்னகையால் ஒருகணத்திற் புரங்களைச் சுட்ட கடவுளைப்பொருவேனென்று அயன்செல்லவந்ததும் இறுதி எய்திடற்கேவந்தேன். இதற்கு இனிமேல் என்செய்வேன், கிட்டவந்து இந்தக் குழகனைகண்டபோதே என்னுடைய அறிவையும் ஆவியையும் காணவில்லை என்றால் என்னுடைய ஐங்கணைக்கும் பலமிருக்கின்றதோ? இந்தச்சொல்களைத்தேவர்கள் அறியாராகிக் கூறினர். பண்டியான் செய்த பாவத்தால் பிரமன் ஏவ இங்கு வந்தேன். அண்டகோடிகளை உண்டாக்கி அழித்திடும் முதல்வனை நான் கொண்டுள்ள மெல்லிய பூவால் எய்யக்கூடுமே? நானே அழிதல் திண்ணம்.

ஆதியில் எனக்கு மன்மதாதிக்கம் இரதியோடு நீதியாலுதவிக்காத்த நிமலனர் முன்புநின்று காதல்செய்விப்பேன்போலக் கரும்புவில்வளைத்துமலர்களைக்கொண்டுஎய்வேன், இந்தப்புதுமை என்னசொல்லுவேன் என்று இவ்விதமாகப்பலவிதம் எண்ணிப் புலம்பிப்பயந்து பயந்து இரதியோடும் பக்கத்தில்வந்து நின்று கரும்புவில்லைவளைத்துக்கணையைப்பூட்டி நின்றான். இஃதிப்படியிருக்க இந்திரன் பிரமனின் இணை மலரடிகளை வணங்கி நோக்கிக் கயிலையிற் சென்ற காமன் சிந்தனை அறியும் படிக்கு நாமுஞ் செல்லுவோம் என்றான். பிரமனும் அவ்வாறே விரும்பி அன்போடு தேவர்கள் கூட்டஞ் சூழக் கயிலைக்குச்சென்று அங்கு ஒருபக்கத்தில் நின்றான், காதல் செய்விக்க வந்த

காமன் கணைகளாகிய ஐந்து பேரைகொண்டு எய்தலைக் காண்பதற்குப் பூவையும் பின்னே நின்றாள். அப்பொழுது கணையைப் பூட்டி நின்ற காமவீரனும் சூர மோடே எரியத் தானே துணிந்து நெஞ்சக்கு உறைந்துத் தேறிக் கார்மலி கண் டன் மீதுவாளி ஐந்தையும் மார்புறத் தொடுத்து விட்டான், எய்து விட்ட வாளிகள் ஐந்தும் என்னையாளுடைய நாதன் மெய்யினிற் பட்டதும் நெற்றி விழியாற் சற்று பார்த்தார். உடனே மதனும் வெந்து நீறானன். கயிலை முற்றும் புகைமயமாக இருந்தது. அப் புகையின் மாலை அழ லோடும் கீழ்பால் தாவ வாசலிலிருந்த நந்தி புகையினைக் கண்டு மாரன் சிலையொடும் எரிந்தான் என்று நேய மோடு இருந்தவர் களிடத்திற் கூறி, சிந்தையின் அறிவு மிக்கவ ர்களே நான் சொல்லும் செய்தியைக் கேளுங்கள் சிவ பெருமா னின் தழல்விழி எரிக்கவில்லை, இந்த மன்மதன், நான் ஈசனை எய் வேன் என்று வந்த துணிவு என்னுந் தீயே வளைந்துடன் அட் டது. இனிஎண்ணிப் பிரயோசன மில்லை, தன் கொழுநனுக்காக இரதி சிவபெருமானிடத்திற் சென்று மனஞ்சோராமல் இரந்தா னால் புண்ணியப் பொருளாயுள்ளோன் புகழ்பெறு கருணை யால் மன்மதனைத் திரும்பவும் படைத்துத் தருவன் என்று சொ லவும், அவனைச்சூழ்ந்திருந்தகணத்தோர்கள் எல்லாம் துன்றுபல் அண்டம் எல்லாம் தோன்றலால் உய்யும் என்றே பொன்னிகர் சடையினனைப் புகழ்ந்தனர் போற்றி ஆர்த்தார். கிள்ளையைத் தன க்குப் பரியாகக் கொண்ட மன்மதன் கொடிய வல்வினையால் அரனை எய்து எரிந்தான் அல்லால் அவனோடுங் கூடநின்ற இர தியை எரித்தான் இல்லை. எரிந்திடா மூவர் நிற்க புரத்தைத் தக னஞ் செய்த புண்ணியனாகிய புனித மூர்த்தி பிறகும் முன்தன்மை போலவே அதே நிலைமையில் மோனமாய் இருந்தான். இரதியும் எரிந்த கணவனை நோக்கினாள். கரிந்துடல் சாம்பலாங் கரியில் விழுந்தனள் பொரிந்தனள் துள்ளினள் பொருமிக் கண்கள் நீர் சொரிந்தனள் பதறினாள் துணுக்குற்று ஏங்கினாள். தலையிலும் மார்பிலும் மோதிக்கொண்டாள். அணிகளை எல்லாம் நீக்கினாள். நம்பியர் உலையில் இட்ட மெழுகென உருகினாள், வாடினாள். அழு வாள் பின் இரங்குவள், அலறி நெஞ்சுழன்று எழுவள் மெய்

பதறுவள், இறப்பு இதுவோ எனவழுவள். பெரு மூச் சோடும் விம்முவள், நெருப்பின் மத்தியிலுற்ற குயில் போல் சோர்ந்து வீழ்வள், இவ்வித மாகத் துயருற்றுச் சாம்பலான மே னியைத் தடவிப் பார்த்தனள். ஆம்பல இடங்களிலும் தடவிப் பார்த்துங் காணாது வேறு எங்கு காண்பதெனத் தேம்பினள்,வெ தும்பினள், தியங்கினள். பாம்பின் வாய்த் தேரை போல் பதறிச் சோருவாள். மன்மதன் பிரிவிற்காக இரங்கி அரற்றித்தன் காதல னைக் காணாது கருத்தழிந்தாள். "சிவபெருமான் உன்னை எரி த்த சாம்பலின் அருகா இருந்து அழுகிற குரல் திருமால் மகனே உனக்குக் கேட்கவில்லையோ? நீ கேட்க மாட்டாயோ? திரிபுரத்தை எரித்தோன்முன்பு போகாதே என்று அப்பொழுதே சொன்னேனே, அதுவும் நீ கேட்கவில்லையே! விண்ணோர் கூறு வதையே கேட்டுவந்து, என ஆர் உயிருக்கு உயிரே!இப்பொழுது நீ எங்கே ஒளித்துக் கொண்டாய்? தேவர்களுக்கு முன்னே என்னைக் கல்யாணஞ் செய்து கொண்ட மன்னவனே! என்னை மற வேன் எனவுரைத்தாய், இப்பொழுது என்னை மறந்தாயே? உன் கட்டழகைக் காணாமல் இன்னும் உயிர் வைத்திருக்கின்றேன்! உயிர்வைத்திருக்கின்றேன்! திருமகளின் புத்திரனே!தேவர் துயர் தீர்வான் நீ சென்று சிவபெருமானின்மேல் மலர்க்கணை ஏவு என்று பிரமன் அனுப்பச் சென்று நீறாயினையே! நம்பாமர் செ ய்தி அப்பிரமன் அறியானோ? அந்தோ! உன் கையைக் காணேன். கரும்பு வில்லைக் காணேன் உன் தேகத்தைக் காணேன். உன் அ ழகைக் காணேன், விளங்கும் முடியைக் காணேன், எய்யும் மல ர்க்கணைகளைக் காணேன், இசைக்குங் குயில்களைக் காணேன், நான் செய்த தவப்பயனே! சிறியேன் என் செய்வேன் வந்து ஓர் வார்த்தை சொல்லாயோ ?" என்று புலம்பி அழுதாள்.

செல்வம் இழந்தாலும் உயிர் இழக்கச் செய்வாருண்டோ? பூமியின் மேலோ விண்ணின் மேலோ? பிரமன் மேலோ? நின் மேலோ? நீ பொடியான பழி சுமக்கும் சிறியேன் யான் அறிந்து கொள்ள முடியேன். தேவர்கள் அறிந்தனரோ? பிரமன் அறிந் தனனோ? மற்று முள்ளவர்கள் அறிந்தனரோ? இந்திரன் அறிந்

தனனோ? அதுவுங் காணேன். நால்வருக்கு மோன நிலைகாட்டுஞ் சிவபெருமான் மேல் மலர்க்கணை விடுத்து முடிந்தனையே உன்னுடனே தேவர்கள் முடிந்தனரோ? முன்னை வினையிதுவோ? மாலின் மகனே! பாலாழியிற் றோன்றிய பொன்னின் வயிற்றிற் பிறந்த பொன்னே! பூதேவியின் கண்மணியே! பொருவிலானே! சிவபெருமானின் நுதல்விழிச் செந்தீ உன்னுடலம் பொடி படச்செய்து விட்டது. என்னுடலம் பொடி படுத்தாது விட்டு விட்டதே, அந்தோ! என்னைத்தான் அது அழிக்காது விட்டு விட்டாலும் ஏழையேன் உயிர்வைத்திருப்பேனோ? செய் நன்றிமறத்தல் தேவர்க்குத்தகுதியோ? செய் நன்றி மறந்தோர்களும் சிறப்புறுவதுண்டோ? கா என்றும், சிவனிடத்தில் போ என்றும், விடுத்த பிரமன் நீறுய உன்னை அப்போர்க் கோலத் தோடும் வா என்று கூறுனோ? அவனுக்கும் அவ்வலி யுண்டோ? இங்கு அவன் வரவும் இல்லையே, நான் படும் துன்பமோ சொல்ல முடியாது, அறிவை உடையதூயோர்க்குத் துயர் செய்தேனோ? என் போலும் மடவார்களுக்கு என்ன துன்பஞ் செய்தேனோ? உன்போலும் அழகுடையார்கள் உண்டோ உண்டோ என்று இந்த விதமாகப் பல பல வற்றைப்பன்னிப் பன்னி அரற்றி அழுதாள். பிரமாவும் தேவர்களும் இந்திரனும் சிவ பெருமானிடத்தில் உன்னைப் பிரியமுடன் விடுத்தார்கள். நீ இறந்தாய் இப்பொழுது அவர்கள் பிழைப் பித்தார்களோ? உன் தாதையோ நன்றாய்த் தூங்கிக் கொண்டிருக்கின்றான். எல்லோரும் அவனை வலியன் என்பார்கள். அவனும் உன்பாடு அறிந்திலன் போலும்? நீ இவ்வாறு முடியவேண்டுமென்று தலையில் எழுத்து இருந்தால் அவர்கள் எல்லாம் என்ன செய்வார்கள். நெடுமாலை, பங்கயனை, விண்ணவரை விரைந்து நீதான் மலர் வாளியால் மருட்டி வென்றனையே! இப்போது சிவபெருமான் மேல் இங்கு வாளி துரந்து உடலழிந்தாயே! என்கணவா என்னரசே! என்னுயிரே! என்வாழ்வே! நீ தான் படுதீயில் அகப்படவும் அயலார் போல் பார்த்திருந்தேன். அந்தோ! யான் பதைக்கின்றேனே. பூஞ்சோலையிற் புகுந்து புது மலர் கொய்து இருவரும் புணர்ந்து வாசக் கோங்காரும் களபமுல்லைக் கொடிப் படை

கனி புடைசூழக் குயிலுங் கூவப் பாங்காக வசந்தன் விழாக் கொண்டாடிப் பஞ்சணைமேற் பள்ளி கொண்டே நீங்காமற் கூடி விளையாடினதும் பொய்யோ? மறந்தனையோ? நினைந்திடாயோ? நாமகளும், திருமகளும், புவிமகளும், தருமகளும், தங்கள் கணவரோடு இருந்து அவர்கள் கணவரால் கட்டப் பட்ட பொற்றாலியோடு மகிழ்ந் திருக்கும் பொழுது, நான் மாத்திரம் உன்னை நினைந்து நினைந்து உருகிப் புலம்புவேனோ? மன்னா! நான் உன்னோடும் வருகின்றேன்! வருகின்றேன்! என்று கூறிப் பொருமி வருந்தினாள். என்று சூத முனிவர் நைமிசாரணிய வாசிகளுக்கு உரைத்து மேலுங்கூறுகின்றார்.



## கூ-வது மோனம் நீங்குசருக்கம்.

துதித்திடுந் தேவர்கேட்டுத் துணைவற விமைய மின்னைக்
கதித்திடு களிப்பால் வேட்போம் கவலையை ஒழிமி னென்றும்
மதித்திடு மிரதி வந்தே வாய்விடுத் தலறி வேண்டப்
பதித்துவேள் வருவ னென்றும் பரிந்தருள் இறைதாள் போற்றி.

இந்தவிதமாக இரதி வருத்தப்பட, அயனும் மாலும் இந்திரனும் அந்தரத்துறை தேவரும் மன்மதன் தன் மலர்வாளியோடு அழிந்ததும் இறையோன் முன்னிருந்த மோனத்தில் இருப்பதும் கண்டனர். மன்மதன் இறந்தது குறித்து இரங்குவார் விழுவார் எழுவார். அழுவார்கள் உள்ளம் அயர்வார்கள். கண்ணீர் விடுவார்கள்: வயிற்றிலுஞ் சிரத்திலுங் கைகளால் அடித்துக் கொள்ளுவார்கள். கலங்குவார்கள் கவலைப்படுவார்கள்.

“மங்கைபாகனை எய்யென மாரனை விடுத்தோம், அங்கவன் செல்ல அரன் பொடித்தனன், பிறகும் மோனத்திலிருக்கிறான், ஆகையால் நாம் தங்கும் பொன்னுலகு இழந்தோம், இந்தவிதமாகத் தளர்ந்தோம், இங்கு இதற்கு என்செய்வோம் ஐயகோ!” என்று தேவர்கள் கலங்கினர். மலர்கொடுதைத்த மாரனை எரித்தனர், நம்துயரமெல்லாம் தீர நாமெல்லாம் இனிக்கூடி ஆர்த்து

ஏத்துவோம் என்று பகர்ந்தனர். பிரமன் முதலாகிய கடவுளர் எவரும் கயிலையின் நடுவேயுள்ள கோபுரஞ்சூழ்ந்த கோயிலினுள்ளிருக்கும் நாதனை வாயிலில் நின்றே பலபல தோத்திரங்கள் உரைத்து ஆர்த்து நின்றார்கள். கங்கையைச் சூடியும் கடல்விடம் அருந்தியும் கனன்று பொங்குந் தீமழுவேந்தியும் புரமெரித்தும் வெவ்வலிப்பகைஞரைத் துரந்தும் உடன் றொலைத்தும் முன்னம் காத்தனை, அதுபோல் இன்னும் எங்களைக் காத்திடவேண்டுமென்று கூறியிரந்தனர். அன்பர் செய்பிழைகளை அடிகளே! பொறுத்திடவேண்டும். சூரனால் வலியிழந்து இடர்ப்படுகின்றோம். காத்திடவேண்டும். உனக்குக் காக்கக் கருணையில்லையோ? நீயோகுசெய்யும் ஒவ்வொரு கணமும் எங்களுக்குப் பலயுகங்கள் ஆயின. உன்னை அருச்சித்துப்போற்றி மால், அயன் ஆதியோராகிய நாங்கள் சிறப்புப்பெற்றோம். இப்பொழுதோ பெருந்துன்பப் படுகின்றோம். நீயேகருணையாற் காக்கவேண்டும். ஐயனே! நீ மலைமகளைக் கல்யாணஞ்செய்து கொள்ளும் பொருட்டு வேளை முன் அனுப்பினோம் அவனையும் எரித்தனை இன்னும் மோனத்தே இருக்கின்றாய் நாங்கள் உய்யுமாறு அருள்செய்யவேண்டுமென்று போற்றித்துதித்து வேண்டினர். இவர்கள் இவ்வாறு துதித்து வேண்ட, அவ்வளவில் வல்வினை நீங்குங் காலமுந் தொடர்ந்ததால் அருளுடையிறைவர் நந்திதேவனை நினைந்தார், நினைத்தலும் நந்தியறிந்து கடிதில் வந்து அடியிணைபணிந்து போற்றி எதிரில் நின்றான். அப்பொழுது சிவபெருமான் நந்தியை நோக்கி நம்வாயிலில் வந்திருக்கும் மால் பிரமர் முதலியவர்களை இங்கு அழைத்துவா என்று கட்டளையிட்டிடவும் உடனே கோபுர வாயிலில் வந்து நின்றார், உடனே தேவர்கள் எல்லோரும் வணங்கினர். அவர்களை நோக்கி "உங்களை அமலன் அழைத்தனன். கவலை நீங்கிப் போய்க் காணுதிர்" என்றான். தேவர்களெல்லாம் நந்தி கூறிய மாற்றத்தைச் செவிக்கமுதெனக்கேட்டு ஆர்த்துத் துதித்தனர். முக்கண் நாயகன் கருணையை நினைந்து முனிவர்கள் துதித்தார்கள். ஆடினார்கள் பலரும். அயன் முதல் யாரும் உளம் மகிழ்ந்து அரகரா! வென்று உடனே தொடர்ந்துவர நந்திமாதவத்தோன் களமிருண்டவன் முன் ஒரு

கணத்திற் கொண்டு வந்து விடுத்தான். மலர் மிசை யிருந்த வேதனும் இந்திரனும் மற்றைத் தேவரும் நலமுறும் அன்போடு சென்று நாதனை வந்து கண்டனர். அளவிலாப் பலகோடி அண்டங்கள் தந்தவனே போற்றி! நிலவுலாம் பவள மேனி நிமலனே போற்றி போற்றி! எனப் போற்றிசெய்து இருகரங்கள் கூப்பி இறைவனே ! இணையிலானே ! செஞ்சடையினனே ! தூயனே! சோதியானே! பாலனுக்காகப் பாலாழி ஈந்த தேவே! நீதிருவருள் செய்து எம்மை நிலைபெறச் செய்யவேண்டும். சூரன் அளப்பிலா அநேகயுகங்கள் பூமியை ஆண்டான் துன்பசாகரத்தில் நாங்கள் வீழ்ந்தோம். இன்னும் அவன் அரசாளத் துன்பசாகரத்திடையே வீழ்ந்திருக்கிறோம். நீ மோனமோடு இருந்தால் முறைசெய்து எங்களை யாவர் காப்பவர்கள்; தேனமர் கொன்றையானே! திருவுளமிரங்கியருளவேண்டும். சூரனை வதைக்க ஒரு புத்திரனை யருளவேண்டும். இமையமலையில் தவம்புரியும் கவுரியை மணம் புரிந்தருளவேண்டும். என்று இரந்து வேண்ட எம்மிறைவனும் அவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி அவர்களை நோக்கிச் சொல்லுகின்றார். "அதேவிதமாக உங்களுக்கு நன்மை எய்த அந்த இமையமலையிற் சென்று உமையை மணந்தருளுவோம் ஆகையால் நீங்கள் கவலைநீங்கிக் கனகமலையிடைப் போங்கள்!" என்று கட்டளை இட்டு அருளினார். இவ்வாறு அரன்கூறக் கேட்ட அயன்மால் முதலியோர் பணிந்தார்கள். பணிந்தார்கள். பிறகு விடைபெற்றுக் கனகமலையை நோக்கிச் சென்றார்கள். பிறகு இரதி அங்கு எய்தி எங்கோன் இணையடியிற்றாழ்ந்து கருணையங்கடலே! காளகண்டனே ! கடவுளே ! பிரம்மன் முதலிய தேவர்களெல்லாம் என் கணவனை உன் மேல் மலர்வாளிவிடும்படி ஏவினார்கள். உனக்கு மையல் உண்டாக்கும்படிச் சொல்லினார்கள். அவ்வண்ணம் செய்ய அவர்கள் பலவந்தத்திற்கு வந்து எரியுண்டான். சரபப்பட்சி கோபங்கொண்டால் சிங்கத்தைக் கொல்லும், ஒரு கொசுவைக் கொல்லுமோ ? கொல்லாதல்லவா ? கரும்புவில்லும் மலர்க்கணையுங் கொண்டு இரவுறு காமவேளா எரிவிழிக்கிலக் காகினன். மான் ஏந்தேந்துந்தேவே! எரிந்த என் கணவனைச் சிறியேன் செய்தபிழை எல்லாம் பொறுத்துக் கிரு

பையோடும் எனக்கு அருளவேண்டும் என்று பணிந்து போற்
றிக்கேட்டாள். இதுகேட்ட மோனத்திருந்த மூர்த்தி இரதி
யை நோக்கி நீபுலம்பவேண்டாம் இமயமலையில் தவஞ்செய்கி
ன்ற உமையினை மணஞ்செய்போதில், அங்கே உன் கணவனை
அழைத்து உனக்கு அருளுவோம். அங்கே நீ பாங்குடன்
செல்க என்று அமுதினை யுகுத்தது போற் கூற இரதியும்
பணிந்து விடை பெற்றுச் சென்றாள். இரதியும் இமய
மலையிற் சென்று இமைய வல்லியை மணக்க இளம்
பிறை சூடி வருவானென்று இருந்தாள். இஃதிப்படி யிரு
க்க வேதம் பாடிடுஞ் சரணன் ஞானப் பரையை மணம் புரிய
எண்ணி, சனகர் சனந்தனர் சனாதனர் இனிய சனற்குமாரர்
தம்மை நோக்கி, "இது, அருநூற் பொருளுரைக்கும் அதுபோல
ன்று, உரைக்கவும் நினைக்கவும் அரியது ஆகையால், எனை நினைக்
கும் மனத்தில் நன்னெறிசேர் ஞானமோன மோடிருங்கள்"
என்று கூறி யருள, அவர்களும் அத்தன் உரைப்படியே மோன
முடன் இருந்து முத்தி நிலைவழி தேர்ந்து பேரறிவு தோன்ற
அருண்முழுதுந் தோன்றிச் சித்தமுவந்தன் போடு அச்சிவனடி
யை வந்தனைகள் செய்து, "நாங்களெல்லோரும் இத்தகைய மெ
ய்யறிவினால் மருள் நீங்கி உய்ந்தனம்" என்று இனிது போற்ற இ
வ்வகைவந்த திருஞான மோனத்தை இனி இடைவிடாமல் அந்நி
லை நிட்டையி னிலிருந்து ஐம்பெரும் பூதமும் புகுதா தழியா
வீடாய் விளங்கும் நம்பதம் அடைவீர்கள், ஏகும் என்று சொல்
ல, தொழுது இறைஞ்சி விடைகொண்டு அன்பாய் நான் மறைச்
சிறுவர்கள் நால்வரும் மகிழ்ந்து போயினர். பிறகு கவுரிதவஞ்
செய்யும் இமயமலைக்கு வர நினைந்தருளினார்; என்று சூதமுனி
வர் நைமிசாரணியவாசிகளுக்கு உரைக்க முனிவர்கள் பேரானந்த
த்தோடுங் கேட்டு மனமாரப் பல விதமாகப் போற்றிசெய்து
மேலும் பெருமான் கவுரியை மணம் புரிந் தருளிய விதங்களெல்
லாங் கூறியருளவேண்டுமென்னச் சூதமகா முனிவர் சொல்லு
கின்றார்.



## ௰-வது, தவங்காண் சருக்கம்.



காணருங் கைலை நீத்துக் கவின் தரும் இமையம் போந்து
வேணரு மவாவாற் கௌரி விழைந்திடுந் தவத்தைக் கண்டு
தோணரும் வதுவை நின்னைத் தோன்றவே நாளை செய்வேன்
மாணவிர் மங்காய் என்ற மலைவிலி மலர்த்தாள் வாழி.

நான் மறையின் நலமுடைய சனகாதியர் நால்வரும் ஏகினர். உமையவள் செய்தவமும் அவள் காதலும் தேவர்களின் துயர் நீங்கு காலமும் உலகில் வானவர் முதலினோர் தாம் அறிய மணஞ் செய்காலமுங் கிட்டின படியால் சிவபெருமான் தமனிய வரையி னிடத்து வரஎண்ணினார். எண்ணிய பெருமான் காவி வஸ்திரத் துடனும் விபூதியுடனும் விளங்கிய மெய்யுடையவராகியுங்குடை யும், குண்டிகையும், தடியும் உடையவராய்த் திருமார்பில் உபவீ தம் விளங்க வேதங்கள் பயிலும் விருத்த கூனப்பிராமணராய் இமையமலையில் கவுரி தவஞ் செய்யுஞ் சாலையின் முன்னே வந்து தங்கினர். அப்பொழுது அங்கு அச்சாலையிற் காவல் செய்யுஞ் சில மாதர்கள் வந்து அந்தணரே! முதியவரே! மெய்யறிவு உடைய வரே! ஆரணரே! எனத்தொழுது மலரடி வீழ்ந்து வணங்கி இர வியின் வெயிலொளி தெரியாத இந்த இமையமலையில் தனியாக வர நினைப்பதுவுமே எளிதல்ல. நீரோ இந்த விருத்தாப்பியத் தோடு இங்கு வந்துற்றீர்! காரணம் என்ன? என்று கேட்டனர். அதற்குச் சிவபெருமான் இமைய அரசன் புத்திரி தவஞ்செய்வது காண வந்தேனென்று அன்புடைய இனிய மறுமொழி புகன்ற னர். அதனைத் தோழியர்கள் உமாதேவியிடத்திற் கூறத் தேவியும் மறைமுதியவாராகின் அழைத்து வாருமென்னத் தோழியரும் அவ்விருத்தவேதியரை அழைத்துவந்து உலகமெல்லாம் ஈன்ற அன்னைமுன் கொண்டுவந்து விட்டனர். அவரைக்கண்ட அம் மையும் சிவபெருமானடிக்குத் தொண்டு பூண்டவரென எண்ணி எழுந்து வணங்கிப் போற்றி மணியணித் தவிசு ஒருபாலிட்டு வீற்றிருக்கச்செய்து ஒருபக்கத்து நின்றுகொண்டிருந்தனள். வந்தபெருமானாகிய விருத்த வேதியரும் தேவியைநோக்கி இத் துணை ச்சிரமத்தோடு தவஞ்செய்கின்றனையே ஏதைவிரும்பி இத்

தவஞ்செய்கின்றாய், மனதில் நினைத்திருப்பதைச் சொல்லென்று கேட்டனர்.

உடனே, உமையும் விசையையை நீ உரை என்று திருக்கண் கடைகாட்ட, அவளும் விருத்தவேதியரிடத்தில் உரைக்கின்றாள். "செப்பரிய பரம்பொருளாஞ் சிவபெருமான் வந்து மணஞ்செய்யவேண்டி இந்தவிதமாகத் தவம் புரிகின்றாள்" என்று கூறினள். இதனைக் கேட்ட விருத்த வேதிய வடிவங்கொண்ட சிவபெருமான் புன்னகை செய்து மால் பிரமர்க்கரிய நாதன் இம் மடக்கொடி புரி தவத்திற்கு வருவனோ? அப்படியே வந்து விட்டாலும் மணஞ்செய்வனோ? திடப்படவே சொல்லுகின்றேன் "இவள் அருமைப் பெண்ணரசி, இவள் தன் திவ்வியமான உடல் கருகவேண்டாம். ஒப்பற்றவன் உங்கள் உமைக்கு எளியவனோ? அரிய பெரிய தவத்தினரெல்லாம் முன் தவம் புரிந்து சித்தன் எதிர்ப்படாமையால் நெடுங்காலந் தவமுயன்று உடலிளைத்தனர். ஆதலால் நான் சொல்வதைக் கேள், உமையே! நீ எந்தத்தவங்கள் புரிந்தாலும் ஈசன் உமக்கு எதிரே வந்து எய்தமாட்டான். இத்தவசு புரிவது புத்திசாலித்தனமுடையதாகாது" என்று கூன் வேதிய வடிவங்கொண்ட புரமெரித்தோன் கூறினன். அதுகேட்டு உமை இவ் விருத்த வேதியனை நான், எம் பிரானை உன்னும் அடியவனென்று எண்ணினேன். இவன் உவப்பிலாது சொல்லிய மொழியால் துணுக்குற்றேன். ஆகையால் இனி இவனுக்கு அறிவு உண்டாகச் சொல்லுவேனென்று மெய் நாண் நீங்கி முன்னே நின்று சொல்லுகின்றாள். "ஒப்புயர்வு அற்ற புனிதன், யான் புரியுந் தவத்திற்கு உவந்து அருள் புரியானேயானால் கருதிய இந்தத் தவத்தை விடமாட்டேன். அளப்பில்லாத காலந் தவஞ்செய்து உருவோடும் என் உயிர் கழிவேன், உடல் பழுத்த மூப்பினாலே உணர்வில்லாமல் பெருமையில்லாச் சிறுமை மொழி பேசுகின்றாய். நீ என்ன பித்தனோ? பெரியோய்" என்றனள். இந்த விதமாக உமை கூறலும் பிராமண முதியவனும் "நீ சிவபெருமானை விருப்பத்தோடு மணப்பதற்கு நினைத்தனையே, அவன் குணங்கள் சொல்லுகின்றேன் கேள். மாட்டின்மேல்

ஏறுவான். தலையோட்டிற் பிச்சை எடுப்பான், இப்பூலோகத்தி லுள்ள சுடுகாட்டிலெல்லாம் ஆடுவான், வெண்பொடி பூசுவான், யானைத்தோலையும் புலித்தோலையும் அணிவான், பாம்பை ஆபரண மாக அணிவான், நெருப்புக்கையன், சங்கக்குழையை உடையன் எலும்பை அணிந்த மார்பையுடையன், கங்கையணிந்த விரி சடையையுடையன், வெள்ளெருக்கு, அறுகு, கொக்கிறகு, ஊமத்தை முதலியவற்றை விரும்பிச் சூடுவோன் கொடியவிடத் தை யுண்டு கண்டங்கருத்தோன், பூதப் படை சூழப்பெற்றோன், தந்தை தாயில்லாதவன், அநாதியானவன், ஆதி அந்தமில்லாதவன் சுற்றமில்லாதவன், பற்றில்லாதவன், குணமில்லாதவன், வடிவில் லாதவன், குறியில்லாதவன், இந்தத் தன்மையை உடையவன். அப்படிப்பட்டவன் உனக்கு வந்துதான் எய்தத் தவஞ்செய்கின் றாய் வருத்தப்படுகின்றாய் இப்படிச்செய்வது மலையரசன் மகளா கிய உனக்குமேன்மையோ? இதுவும் உனக்கொரு விருப்போ?" என்று கூறினன். கங்கை வேணியன் இம்மொழி கூறலுங் கவுரி கேட்டு இருகரங்களால் செவி பொத்தி, சிவ! சிவா! எனப்புகன்று மிகுந்த கோபத்துடனேயும் பொருமலுடனேயும் பங்கமில்லாத கற்பையுடையபரை பரிவோடுபகர்கின்றாள். ஓ! அந்தணனே, எம்பிரானிடத்து உனக்கு அன்புதான் இல்லையாகும். நீயோ நீறுபூசி யிருக்கின்றாய், நிந்தனைபேசினை. நீ தரித்திருக்கிற வேடத் தை நோக்கினால் புலித்தோல் போர்த்து வரும் பசுப்போலிருக் கிறது. உன்னை நான் இந்த மாதவச் சாலையில் அழைத்தது என் எழமையேயாகும். உன்னைப்போல் சிறுவிதி நிந்தனைசெய்து தன்வேள்வியோடும் அழிந்தது அறியாயா? நரைதிரையால் பய னில்லாது மூப்படைந்தனையே! மதியில்லாமனம் பெற்றாய் அறி வில்லாது வார்த்தைகள் சொல்லினை அதனை அறிவுடையவர் கேட்டால் உன்னை இகழ்வார்களே.

வேதங்கள் ஆய்ந்து வேள்விகள் செய்து நல்ல ஒழுக்க முடையவராக இருந்தாலும் சிவபெருமானை நிந்திப்பின் பயன் பெறாதுநரகில் இடர்ப்படுவரென்று வேதங்கள் கூறுவதை யறிந் திலையோ? தன் புருஷனைப்பழிக்கும் புன்பூவைபோல் நின்றலை

வலைப் பழிக்கின்றாயே. பிரமன் 'இகழ்ந்து அவன் ஐந்து தலையில் ஒரு தலை இழந்தனனே. உபநிடதப் பொருளாய் விளங்கும் எம்பெருமானை இகழ்ந்து எவர் பதம்பெற்றார்? அல்லது மறந்தவர் எவர் பதம் பெற்றார்? அந்தணாளரில் அருமறை விதிப்படி அஞ்செழுத்தையும் ஓதி சுந்தரத் திருவேடமும் நீறும் மெய் துலங்கவேயணிந்து கந்தரங்கறுத்தவரைப் பூசித்துக்கதி அடைந்தவர் அனேக கோடியர். நீ இந்த வேடம் தாங்கியது நிந்தை சொல்லவோ? நீ தரித்த வேடம் எதற்கோ? யான் அறியேன் விருப்பு வெறுப்பில்லானை விமலனை அறிவின்றி உரைத்த நிந்தனைக்கு என்சொல்வேன்? மால் அயன் உள்ளத்தில் மகிழ்ந்துகாண்டற்கு அரியவனை அடியார்களுக்கு எளியவனைப் போற்றிப்புகழ்ந்து வணங்குவதே நீ பூண்ட கோலத்திற் கழகாகும். கருத்தினால் எவர்க்கும் முக்கணன் பெருமை கருதற் கரிதாகும். மால் பிரமர் ஏத்தும் இறைமையுடையவனை, அவர்களுக்கு அருள் செய்து அவர்களுக்குப் படைத்தல் காத்தற்றொழிலைத் தந்தருள் செய்பவனை வேதப் பொருளாய் விளங்குபவனை நீலகண்டனையிகழ்ச்சி செய்தாய். இது, உனக்கு நெறியாகாது, மறையவனே! நிந்தையிற்றீயவனாகையால் இம்மாதிரி சொல்லினை. பெரியோர் போல் வந்தது பொய்வேடம். இனி இங்கு நில்லாதே வாசலின் புறத்தே உடனே போய்விடு என்றனள். ஆதி நாயகி இம்மொழி கூறலும் "ஓ! அன்னமே! வேதங்கள் சொல்லும் நீதிமிக்க இத் தவம் செய்யும் உன் தவத்தைக் காணவும், உன்னை வேத நெறியின்படி மணந்துகொள்ளவும் அல்லவோ இங்கு வந்தது நீ என்னைப் புறம் போ என்று சொல்லுவது நீதியாகுமோ என்றனன்" விருத்த வேதியனாஞ் சிவபெருமான். பொய்வேடத் தோன் இம்மொழி கூறலும் பூங்கொடி கேட்டு இரு செவிகளையும் கரங்களாற்பொத்திக்கொண்டு கலங்கிமெய்நடுங்கி ஓ பெண்களே! இவன் போகான் நான் இனித் தரிக்கமாட்டேன் எனச் சொல்லித் தானே செய்யசீரடி வருந்துற அன்னமென நடந்து சென்றனள். மங்கை வெருண்டுபோதலும் அவள் மனத்து இயற்கையும் அன்பும் திங்கள் வேணியன் அறிந்து தான் முன்புள திருவுருவம் நீங்கிப்பொங்கியார்த் தெழும் பூதங்கள் புடைசூழ விடைமிசைத்

தோன்றித் தங்கும் ஆர்வமீதூறவானத்தில் தகவோடு எதிர் வநதான். கருணை நாயகன்றன்னையே விடையின்மேற் கவுரியுங் கண்டாள். அருகுபோய் நாணொடு சென்று அடிபணிந்தனள். ஆர்வமோடயல் நின்றே மருவு நீதியால் தவநிலை சோதிக்கும் மாயையை அறியாமலிருக்கும் அன்பினே னறிவிலா திகழ்ந்திடுமுறை பொறுத்தருளென்றாள். மாதே! கேட்டி. நம்மிடத்தன்புள மனவலித்திறத்தாலிப்போது சொல்லியே இகழ்ந்ததை நம்மை நீ புகழ்ந்தாக உளங்கொண்டோம். ஆதலால், இனி நற்றவம் இழைத்திவண் அயரும் அவ்வகை வேண்டாம் காதலாகவே நாளை நாம் வந்து உனைக் கடிமணஞ் செய்வோம் என்று கூறியருளி மறைந்தருளினார். நாயகன் அருளிய பெருங்கருணை கண்டு போற்றித் துதித்து மகிழ்ந்து வுமையவளிருந்தாள். இவைகளை எல்லாம் இமைய அரசனுக்கு உரைத்திட விரைவோடுந் தோழியர் போயினர். போய்த்தோழியர் சிவபெருமான் வந்தருள் செய்ததை வரையரசனுக்குரைக்கக் கரையிலா வானந்தங்கொண்டு தானும் மனைவியுமாக வந்து உமையைக்கட்டித்தழுவி மகிழ்ந்து போற்றித் தன்னரண்மனைக்குக் கொண்டேகினன் என்று சூதமகாமுனிவர் கூறிப்பின் சிவபெருமான் செய்தருளியவற்றைச் சொல்லுகின்றோம் என்று நைமிசாரணிய முனிவர்களுக்குக் கூறுகின்றார்.



## கக-வது, மணம்பேசு சருக்கம்.



இமையமால் வரையின் பெண்ணை இயைதரு மணத்தாற் கொள்வான்
தமைமிகர் முனிவர் தூய்ய தனியெழு பெயரை யேவி
யமைதரு முமையின் றந்தை யவாவினை யறிக வென்ற
உமையொரு பாகன்றாளை ஓதுவார்க் கடிமை நானே.

உலக மாதாவாகிய உமாதேவியாரின் தவநிலையைக்கண்டு நாயகன் விருப்பத்தோடு நலம்பெற அருளும் நல்கி, கயிலைக்குச் சென்று பரிசுத்தமுள்ள இருந்தவர் எழுவர் தம்மை வரும்படிக்கு எண்ணினார்.

உடனே அந்தமுனிவர்கள் எழுபேரும் முழுதுணரறிவுண்டயோராதலால் இறைவன் கருத்தறிந்து உடனே விருப்பத்தோடு கூடிவந்து ஞானக் குடிலைநாயகனைத் தாழ்ந்து கரங்கள் கூப்பி வணங்கித் தொழுது நின்று, மால் பிரம்மர்கள் நின் அடி பணிந்து ஏவல்செய்ய ஆர்வமோடு தவஞ்செய்து கொண்டிருக்க அவர்களுக்கருள் செய்யாது ஒன்றுக்கும் பற்ருச் சிறியர்களாகிய எங்கள் பாட்டுக்கருணை கொண்டு அருளச்சிந்தித்து அழைத்தருள என்ன தவஞ் செய்தோமோ இதனினும் மிக்க தவமுண்டோ என்று கூறி, நிமலனே! கருணையானே! நித்தனே! அமலனே! எங்கள் தம்மை அன்போடும் நினைத்தலாலே சிறப்புடையவர்கள் ஆனேம். காலனின் சினத்தீமை தீர்ந்தோம் தேவர் களுக்குங் கிட்டா இன்பம் எய்தப் பெற்ளும்.

ஐந்தொழிலைச் செய்து புவன கோடிகளை எல்லாம் மெய்க் கருணையாற் புரக்கும் நாதா! எம்மை விரும்பி அழைத்த பணியைச் சொல்லியருளவேண்டும் என்று அவ் அருந்தவ முனிவர், பெருமானை இரந்து பணிந்து போற்றி வேண்டினர். அதற்கு அனகன் அவரை நோக்கி "பனிமலை அரசன் பாற் சென்று, புனித மெய் உமையை நாளையே புதுமணஞ் செய்ய வேண்டும் அதற்கு அவன் விருப்பத்தை வினவி அறிந்து சீக்கிரம் வாருங்கள்'' என்ருன். இந்த விதமாக இறைவன் கூறத்தாழ்ந்து வணங்கி முனிவர்கள் எழுவரும் இமையநல் வேந்தன் பாற் போயினர். இவர்களைக் கண்ட மலைஅரசனும் அவன் மனைவியாகிய மேனகையும் அன்போடு எதிர்கொண்டு ஏத்திப் பன்முறைபணிந்து வாழ்த்தி, இம்மலை புனிதம் எய்தவும் எங்கள் பாவந்தீரவும் உங்கள் செய்ய பாதம் நோவவும் உங்கள் உடல் வருந்தவும் அடியேனுகிய என் மேற்றயவுடனே நீங்கள் வந்த காரணம் என்ன சொல்லியருளவேண்டுமென்று பணிந்து் கேட்க முனிவர்கள் ஓ இமைய வெற்பரசனே! எம் கோ கையிலைநாதன் உனது காதற் புத்திரியாகிய உமாதேவியை மணந்தருள விரும்பி உன் எண்ணந் தெரிந்து வரப்பணித்தனன் உன் எண்ணம் என்னவென மலையரசன் கூறுகின்ருன் " வானவர்களுக்கும் அயன்மால் முதலிய எல்லாத்

தேவர்களுக்குந் தலைவனான மூர்த்திக்கு என் மகளை ஈந்து நானும் அவனுக்கு அடிமை ஆவேன்" என்றனன். அப்பொழுது மேனகை அவ்விடத்து வந்து முன் நிகழ்ந்த தொன்றை நினைத்துச் சொல்லுகின்றாள் "ஓ முனிவர்பெருமான்களே! பிரம்ம புத்திரனாகிய தக்கன் தன் புத்திரிகளில் ஒருத்தியைச் சிவபெருமானுக்குக் கொடுத்துத் தான் செய்த வேள்வியிடத்திலேயே வேள்வியோடழிந்தான் என்கின்றார்கள். ஆதலால் அதனை நினைக்கும் பொழுது எங்கள் மனம் அச்சப்படுகிறது ஆகையால் எங்கள் பெண்ணை யார் கொடுப்பவர்கள்" என்றாள். இந்த மொழிகளைக் கேட்ட சப்த இருடிகள் அவளை நோக்கி அறிவில்லாத் தக்கன் செருக்கினாற் சிவநிந்தை செய்து அழிந்தான். அவன் தான் செய்த வேள்வியில் இறைவர்க்கு அவிப்பாகம் நல்காதிருந்ததல்லாமல் நிந்தையுஞ் செய்தான் ஆதலால் அவன் சென்னியை வீரனால் முடிவு செய்தார். அடியவர்க்கு அருளை நல்கி அருளில்லாதவரை எல்லாம் முடிவுசெய்திடுவன், எங்கள் நாதனுக்கு இதுதான் தன்மை, நடலையன்றிது மெய்யேயாகும், நடுங்கலை மேனையே! நெஞ்சிற் படரொழிந்து எந்தையைப் பரிவோடும் நினைவாய் என்றனர். முனிவர்கள் இந்தவிதமாக மகிழ்ச்சியோடு கூற, முன்புநின்ற வரையரசனும் அந்தப் பான்மையே என்று கூற, மேனகை அஞ்சி கண்ணுதலின் மேன்மையை ஓராமல் இப்படிப்பட்ட வார்த்தைகளை மொழிந்தேன். பிறையணியும் பெம்மான் பெற்றி பேதையேன் அறியாமல் அறிவில்லா துரைத்தேன் என்று அருந்தவமுனிவர் பாதம் நெறிமுறை பணிந்து நின்று நிமலனை வாழ்த்தியுள்ளப் பொறுமையுள்ளவர்களே நீர் என் புன்மொழி பொறுப்பீர்களாக என்றாள். இந்த சொற்கேட்டு முனிவர்களும் அருள்செய்து மகிழ்ந்தார்கள். இமைய அரசனும் நீங்கள் ஆண்டகை அமலர்க்கேற்ற கன்னியை மணஞ் செய்ய நாளைகடிது வரச்சொல்லுங்கள் என்று பணிந்து மொழிந்தான். அரசன் அங்கு அவ்வாறு உரைக்க அருந்தவர் அதனைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சி கூர்ந்து பேரருளோடும் ஆசி கூறி இனிது அவ்விடம் விட்டு நீங்கிக் கயிலை மலைக்கு வந்து நந்தியின் அருள்பெற்று உள்ளே சென்று சிவபெருமான்

அடியில் தாழ்ந்து வலமாகச் சூழ்ந்து வந்து "ஓ கடவுட் பெருமானே! ஆதிநாதா! துங்கவெற்பரசன் தன் மகள் உமையைத் தங்களுக்கீந்து மங்கலவதுவை செய்ய மகிழ்ச்சியோடுஞ் சம்மதித்தான்" என்றனர். கங்கையை அணிந்த கடவுளும் நன்றெனக் களிகொண்டு அம்முனிவர்களைத் தத்தம்பதிக்குப் போகும்படி விடைகொடுத்தனுப்பினர். இறைவனின் செய்ய அடி பணிந்து போற்றிப் பண்ணவர் எழுவருந் தங்கள்தங்கள் பதிக்குப்போயினர் என்று சூதமகா முனிவர் நைமிசாரணிய வாசிகளாகிய முனிசிரேஷ்டர்களுக்குக் கூறி, மேலுஞ் சொல்லுகின்றார். "தவசிரேஷ்டர்களே! பிறகு இமையராசன் செய்த ஏற்பாடுகளெல்லாங் கூறுகின்றேன்" என்ன, முனிவர்களும் முகமன் பல கூறி நன்றி பாராட்டிப் போற்றி, விரும்பிய எங்கள் தவப்பேற்றாற் கிடைத்த பெருமானே எங்கள் பால் அருள் சுரந்து கூறும் தன்மைக்கு என்ன கைமாறு செய்யப்போகிறோம் என்று புகன்று ஆவலுடன் கேட்பாராயினர்.



## கஉ-வது, வரை அலங்காரச் சருக்கம்.



அண்டமெல்லா மணிவயிற்றி லடக்கி யீன்றே
　　யளியினொடும் புரந்தருளு மன்னை தன்னைக்
கண்டனைய மொழியுமையைக் கவுரி மின்னைக்
　　காதலொரு மகளாகக் களியிற் பெற்றுக்
கொண்டபெருங் களிப்பினொடுங் குலவப் போற்றிக்
　　கூற்றுதைத்த திருத்தாளர் கொள்ள வென்னப்
பண்டரற்குப் பரிந்தீயும் பனிமால் வேற்பைப்
　　பரவினிதம் போற்றினுயர் பயனும் மன்னே.

இமையநல் அரசன், தன்மகள் தவத்தினை விரும்பி முன் வந்தே சிவபெருமான் தானே மணஞ்செய்வோம் என வுரைத்ததையும், பிறகு சோதின் மாதவர் எழுவரும்கேட்ட குறிப்பையும் மனத்தினில் நினைந்து, உலகத்து உயிர்க்கு எல்லாம் உயிராகும் கபில நாதன், உமைதனை மணஞ்செய்ய வருதலினால் நக

ரத்தை நவமணிகளாலும் பொன்னாலும் அலங்கரிக்க மயனை வரும்படி நினைத்தனன். இமைய அரசன் நினைத்தவுடனே மயனும் அன்போடு வந்துவணங்கினான். மயவுடன் என்னை நினைத்தனை எனக்கு இட்டருளும் கட்டளைகள் ஏதேனும் இருந்தால் பணித்தருளுக என்று வேண்டினான். இமோற்பத ராசன், "என் புத்திரி பரையை சிவபெருமானுக்குத் தக்க நன்மணம் புரிஎன அளிப்பன், இத்தரைமேல்மேலானதாகிய இம்மலையை இக்கணத் திலேயே பொன்னுலகம்போல் ஆக்குக" என்றான். மலையரசன் சொல்லக்கேட்ட மயனும் மனமகிழ்வுற்று யானும் என் குலமும் உய்ந்தோம் என்று கூத்தாடிக் கொண்டு ஆநந்தக்கடலில் மூழ்கி அணிபெற அலங்கரிக்கத் தொடங்கினான்.

அழகிய இமாசலப் பூந்தருக்கள் கால்களாய் விளங்கவும் அதன் கிளைகள் பரப்பிய கழிகளாய் அமையவும் மின்னும் மேகங்கள் மேல் உறப் பொருந்திய மேன்மை நெருங்கிய பந்தல் போற்றோன்றவும் மலை முழுதுஞ் சிறந்து விளங்கிற்று. மாடங்களிலும் மாளிகைகளிலுங் கோபுரங்களிலும் மண்டபங்களிலும் ஆடும் அரங்குகளிலும் அம்பலங் களிலும் கொடிகளையுந் தோரணங்களையும் பல மணி அணிகளையும் நிரைநிரையாக நிறைத்தான். பல மணிக் கதலிகை நெடிய கேதனங்கள் அளவற்றனவாகி ஆகாசத்தில் மேலே செல்ல அமைத்தான். காவணங்களிலும், மணிமேடைகளிலும், உப்பரிக்கைகளிலும் பல அலங்காரங்களையுஞ் செய்து பூம்பந்தல்களும் அமைத்தான். வெண்ணிறக் கவரியும் பொன் மாலையுந்தூக்கிச் சிதமுத்தினால் இந்திர நீலத்தால்விளங்கும் மலையையும்புனைந்தான். நன்மணி ஒன்பதும் பதித்துள்ள தூண்கள் மிக எங்குஞ் சூழும்படிச்செய்தான். பாய்ந்த பேரொளியுடையதாகவே வாய்ந்த பூங்குலைகளையும் வாழைகளையும் நாட்டினான். தெய்வலோகத்தின் வளங்கள் இமைய மலையில் எங்குங் காணும்படிச் செய்தான். ஏகமாக நிரைத்திடுந் தூணெலாம் பூகத்தை அதன் பழுக்காயொடு பூட்டினான். தேவேந்திரனின் உலகத்தைக் காட்டிலும் பல்லாயிரமடங்கு ஒளியையுடையதாக அலங்கரித்து ஆதிக்கும் அம்மைமக்கும் மணம்

நாளையெனவியக்குங் கொடியை வெண்கொடி மேலுறக் கட்டினான். பரையை மணக்கவரும் பெருமானுடன் வரும் தேவர்களுக்கும் அடியாருக்குந் தங்கும்படிப் பாகாசாலைகள் இயற்றினன். தளியின் ஓர் பக்கத்தில் பதினாயிரம் யோசனை விசாலம் உள்ள புரிசையொன்றைச் செய்து அந்தப் பரப்புக்குத் தகுந்தபடி கல்யாண மண்டபம் ஒன்று மாட்சிமை பெற்ற கனகத்தினால் புதிதாகச் செய்தான். அதனைக்கண்டோர் கயிலைக்கிரியிலுள்ள கோயில் எனவே மதித்துத் தியங்கினர். அந்தமண்டபத்தில் சூழவும் சந்தனம் மான்மதம் குங்குமம் முதலியவற்றின் சேற்றில் பன்னீர்விட்டு இளக்கிய பொன்னிறச் சுவர் எங்கணும் பூசினான்.

பூவிதானம் பொருந்திடச் செய்துடன் நாவிவாச நன்னீர் முதலிய தூவிய தேவர்கள் சேரவும் இருக்கவும் வெவ்வேறு ஆசனங்கள் இயற்றினான். தாமரை சொர்ணம் மணி சண்பகம் முதலியவற்றை வேதிகையைச்சுற்றி அழகுறவமைத்தனன். வந்தபேர்கள் மனங்களிக்க இடங்களிலெல்லாம் வாசனை மிகுந்த பூந்துணர் கண்ணாடி செம்மணி பைந்தொடை வெண்கவரி பல துகில்கள் இவற்றைக் குறைபாதபடி அமைத்தான். கவரியையும் வீணையையும் மாலையையும் கையில் ஏந்தி இருக்கும்படித்தேவமாதர்கள் போல் பாவைகளமைத்து அவற்றிற்கு உயிர் உண்டாக்கி நவரசம் பெறச் செய்தொழில்களும் நல்கினான். அங்கு வசிக்குந் தெய்வப் பெண்கள் போலும் பாவைகள் உயிர் பெற்றுக் கிட்டி இன்னிசை கொண்டு கொண்டாடியே மறுவில் சஞ்சங்களும் மத்தளங்களுங் கொட்டவும் சிறு பாவைகளாடவும் செய்வித்தான். மயில் கிள்ளை அன்னம் பூவை முதலிய பட்சிகளையும், மான் கரி பரி பசு முதலிய மிருகங்களையும் பொன்னாலும் மணிகளாலும் இயற்றி அழகு பெற எங்கும் நாட்டுவித்தான். தேவர்கள் போலவும் பொருநர் போலவும் ஓவியங்கள், மணிகளாலுங் கனகங்களாலும் இயற்றி அமைத்தனன். இவ்விதமாக விளங்கும் மண்டபத்தின் மத்தியில் அளவில்லாத இந்திர நீலத்தால் அரியணை ஒன்றை மலைவில்லானும் மாதும் இருக்கவே குலவு பேர் ஒளி கொண்டு

உறச் செய்தான். வட்ட மண்டல வேதிகைகளும் வேள்வியின் குண்டங்களும் இயற்றினன். பட்டியத்தலந்தோறும் நற் பண்டமும் அட்ட மங்கலங்களும் வைத்தான். சூரிய காந் தம் சந்திர காந்தம் வச்சிரம் காஞ்சனம் முண்டகம் பூந்துகில் மணி முதலிய வெறுக்கையால் ஏய்ந்த மண்டபம் எங்கணும் இயற்றினன். தாமரைப் பொய்கைகள் ஓர் புறத்திலும், வாவி சூழ் இனியவாவிகள் ஓர் புறத்திலும், உற்பலம் நிறைந்த கயங் கள் ஓர் புறத்திலும் ஆக்கினன். வச்சிரம் நித்திலம் வெண் பளிங்கு பச்சை முதலிய ஆய்ந்த நன்மணிகள் ஆடகம் முதலிய வற்றால் பூந்தடங்களி லெல்லாம் பாசறைகள் பொருந்தவும் இயற்றினன். ஒப்பில்லாத கற்பகம், பூகம், சந்து, அகில், கன் னல், கதலி, பலா, மா, புன்னை முதலிய மரங்களைக் கனகத்தா லும் மணிகளாலும் இயற்றினன்.

இந்த விதமாக அளவில்லாத வளங்களும் அணிகளும் அழகு பெறச் சிந்தை கூர் தெய்வக்கம்மியன் செய்தலும் இமைய அரசனும் வந்து கண்டு மகிழ்ச்சி யடைந்தான். உமா தேவியாரின் கல்யாணத்திற்கு வரும்படி மாயன் நான்முகன் இந் திரன் மற்றுமுள்ள தேவர்களெல்லாம் வரும்படிக்கு நல்ல தூதர் கள் பல்லாயிரம் பேர்களை அனுப்பினன். தூய தூதர்கள் சென் று ஓதுதலும் தேவர்களும் முனிவர்களும் மாதவர்களும் எம்ஆதி நாதனை எம்ஐயனைச் சூழ்ந்துடன் வருகின்றோம் என்று புகன் றனர். புலிக் கொடியை உடைய கொற்றவை யாமளை சொடுங்கா ளிகள் முதலியவர்களும் நீர் அரமகளிரும் தாட்டுணைக்குத் தகும் பரி சேசந்தினர்கள். திருமகளும் நாமகளும் மற்றத் தேவர்களின் பன்னி மார்களும் சசியும் தம்பதி ஏவலால் பொன் இமாசலமீது போய், எமது அன்னை தாள் தொழுது அன்பினல் வணங்கினர் கள், திருவும் வாணியும் தேவ மாதர்களுங் கூடி அமலன் தமக்கு நாயகனாகவரும்படி அருந்தவஞ் செய்த கவுரிக்கு நன்னலஞ் செய்ய வந்தனர். பரையின் தவ வேடத்தை நீக்கி இறை மணந் து கொள்ளக்கூடிய கோலம் இயற்றினர். மேலாகிய மந்தரம் முதலிய மலையின் அரசர்களுஞ் சுற்றமும் சூழ்எழு கடலுஞ்சு

தில் உள்ளவர்களும் பக்கத்தேயுள்ள மன்னரும் பன்னக வேந் தரும் திக்கயங்களும் சேரவே வந்தனர். அப்பொழுது இமைய அரசன் மலையிலுள்ளவரோடுங் கயிலைக்குவந்து நந்திதேவனின் அருளால் வாசலில் விடைபெற்றேகித்தூயவன் அடியிணையைத் தொழுது உத்தமியாகிய உமையை மணஞ்செய வுன்னினை, அதற்குக் கணிதர்கள் குறிக்கும் பங்குனிச், சித்திரைத் திங்களிற் சிறந்த உத்தரம் இத்தினமாகும் முகூர்த்தம் நன்றாயிருக்கிறது இமையத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று வேண்டினன். இதனைக்கேட்ட அமலனும் அதிமகிழ்கொண்டு இமையராஜனைநோக்கி நீ முன்னே செல்லுக பின் யான் வருகின்றேன் என்று அருள்நாதன்புகல அவனும் அடிபணிந்து துதித்துச்சென்றான்.



## கரு-வது, கணங்கள் செல் சருக்கம்

கூற்றடுங் கழலார் வெற்பின் குலமகள் தன்னை வேட்டல்
நோற்றிடுங் கணங்கள் கண்டு நுவல்மனங் களித்தே யுய்யப்
போற்றரு மிறையின் சிந்தை பொருந்திய கருத்தே போல
ஆற்றவு மழைத்த நந்தி யலர்ப்பதம் பணிவா மன்றே.

எம்பெருமான் இமைய அரசனுக்கு விடைகொடுத்தனுப்பி விட்டு நந்தியை நினைத்தருளுதலும் நந்திதேவரும் வந்தடி பணிந்தார், வந்த நந்தி தேவரை நோக்கி நாம் பார்வதியை மணம் புரிதல் காணுதற்கு நம் கணங்களையும் மால்பிரமர்முதலிய தேவர்களையும் அழையெனக் கட்டளை யிட்டனர். இவ்விதம் நாதன் கூற நந்தி தேவரும் அக மகிழ்ந்து கணங்களுந் தேவர்களும் வரும்படிக்கு மனதில் நினைத்தார், உடனே கணங்களுந் தேவர்களும் அறிந்தனர் மகிழ்ந்தனர். புவன கோடிகளெல்லாம் உய்யப் பொன்மலை மகளை அன்பாய்ச் சிவன் மணஞ்செய்யவுனுஞ் சிறப்பினைத் தெரிந்து போற்றி உவகையுங் களிப்பும் மிக்க உளத்திடை மகிழ்ச்சி முந்தப் பாவத்தை நீக்கிப் புனிதத்தைத் தந்தருளுங் கயிலை மலைக்குப் புறப்பட்டு வந்தனர்,

நெற்றித் தீவிழிப் பஞ்சவக்த்திரனோடு நிகரிலா வெற்றித் தீம் பொறை விடைப் பெருங் கேதுவும் வேறு வேறணியாக வந்து நிறைந்தனர். சுற்று சூலத்தர் ஆயிரங்கோடியர் புடைசூழத் துன்னினர். உற்றகாலத் தீப்பெயருடைய உருத்திரனும் உவகையோடு உற வந்தான். தம் உயிர்ப்பினுல் சூறையும் வடவையுங் கழிந்து ஓடப் படவகை யுயிர்த் தொகை அலமர விழித்திடும் பார்வையர் பிளந்த வாயை உடையவர் எழுபத்திரண்டு கோடியராகிய குறட் பூதங்கள் இடமின்றி நெருங்கின. வலிமழுப்படை கொண்ட கூர் மாண்டரும் மகிழ்ச்சி முந்துற வந்தார். பாதலத்துறை பவர்களும், கனல் சொரி நெற்றி விழி யுடையவர்களும், கொடுமை தங்கிய ஆயுதங்களுடையவர்களும், சடையை உடையவர்களுமாகிய கோடி கோடியர் ஆகும். நெருங்கிய உருத்திர கணங்கள் நிறைந்து எங்கணும் இருபாலுஞ் சூழ, வலிமிக்க உருத்திரனுடகேசனுங் கடிது அன்பினுல் உடனே வந்து சேர்ந்தான்.

நந்தைக் கையிற் றூங்கிய நரசிங்கம் நடுங்கும் படிக்குச் சரபப் பட்சியானவனும், அத்தனுரைமுன் இகழ்ந்த சிறு விதியின் சிரத்தை அறுத்து அவன் வேள்வியையும் மாய்த்தவனுமான, வீரபத்திர உருத்திரன் பத்து நூறுயிரங் கோடியாகிய தன் படைசூழச் சித்தவன் பொடு ஒரு நொடியில் வந்தான். வீரத்தை யுடைய வர்களும் உலகங்களை எல்லாஞ் செங்கையின் விரல் ஒன்றினுல் தாங்கும், கோரத்தால் பல அண்டத்தின் உயிர்களைக் கொன்று கொன்று உடனே யுண்ணும் பாரக் காத்திரர் பாரிடம் நூறெனப் பகரும் கோடிகள் ஈண்டக் காரிப் பேருடைக் கடல் நிற வண்ணனுங் கயிலையைச் சார்ந்தான். முன்னம்பிரமன் அகந்தையால் படைப்பினை மறந்த பொழுது செகந் தழைக்கும் படிச் சிவபிரானின் திருவருளினுல் அப்பிரமன் நெற்றியில் உற்று அவனுக்கு உறுதொழில் விதி எல்லாங் கூறி அறிவு ஊட்டிய உருத்திரர் பதினொருவரும் வந்தார். இந்த விதமான சிறப்புடைய ருத்திரர்களும் இவர் களல்லாமல் எண்ணரும் உலகங்களை எல்லாஞ் சிந்தச் செய்து திரும்பவும் படைத்துக் காத்து உள்ள மகிழ்ந்து கொன்றை சூடிய குழகரின் கருணை பெற்றவர்

களாகிய ருத்திர கணங்களும் புத்தி யட்டர்களும் உடனே வந்தார்கள். கடல்களை எல்லாம் தன்காலில் உள்ள தூசியினால் தூர்ப்பவர்களாகிய எட்டு நூறாயிரங் கோடி பூதங்களும் இன்னும் மற்றச் சேனைகளுஞ் சூழ்ந்து கூடவரத் திசைகாக்கும் எட்டுப் பெயருங் கயிலைக் குவந்தனர்.

முதல்வன் அம்பகம் ஈன்ற அக்கமணி நீறுடன் புனைந்திடும் அன்பினர் நூறு கோடியர் சாரதப் படையினர் இருபுறத்திலுஞ் சூழ்ந்து வரக் குண்டோதரனும் அக்கணத்திற் கயிலையைச் சார்ந்தான். ஊன தண்டங்கள் யார்க்கும் ஒன்றாகச் செய்து அடர்ந்து அழிந்து, அழிவாகப் போன அண்டங்களைத் திரும்பவும் வர அருள் புரிபவராகிய உயர்ந்தபூதர் மிக்க வெற்றி உடையோர் நூற்றிரண்டுகோடியர்வந்து இருபக்கமுஞ்சூழப் பினகண்டகண்ணனும், பிஞகினியும் அரன் கயிலையைச் சார்ந்தனர். ஆயிர முகங்களும் ஈராயிரங் கைகளும் வரையை ஒத்த மேனியும் உகங்கள் ஆயிரஞ் சென்றாலும் பொருந்துந்திறல் உலைவு இல்லா வீரர் நாற்பதினாயிரங்கோடியர் அணியணியாய்ச்சூழ. பானுகம்பனும் மகிழ்ந்து கயிலையை வந்து சார்ந்தான். தம்மைத்தானே புகழ்ந்து கொள்ளுந் தேவர்கள் தலையினைச் சீற்றத்தால் நொடியில் தொலைத்துவிடும் வெற்றிகொண்ட விறல் வீரர் பலகோடியர்களும்பூதர்களும் புடைசூழச் சங்குகன்னனும் உடனே கயிலைமலையைச்சார்ந்தான். நீலனும், விறற்றண்டியும், வாட்படைக், கரனும்விச்சுவமாலியும், காளகண்டனும், வலியுடைய பலபூதர்கள் புடைசூழக்கடிதுவந்தனர். எமன் பலத்தைவென்ற கடுஞ்சினப் பூதப் படைநூற்றுமுப்பதுகோடியர் புடைசூழ அடியர்களுக்கு அருள் புரியுங்கருணையை உடையவனும் அரனைப்போற்றி இடபவாகனம் பெற்றவனுமாகிய ஈசான தேவீசனும் உடனே கயிலைக்குன்றிற் குனித்தருள் குழகனைக்காண வந்தனர். மாலும், அயனும், இந்திரனும், மற்றைத்தேவர்களும், உலகத்தைச் சுமப்பவர்களும், சூரியர்கள் சந்திரர்கள் மற்றைக்கோள்கள், வசுதேவர்கள், விஞ்சையர்கள், முனிவரர்கள், யோகியர்கள், மெய்அடியார்கள், மாமறைகள், ஆகமங்கள், மந்திரங்கள்,

நிலமுதலாகிய ஐம்பூதங்கள், அட்டகஜங்கள், அட்டநாகங்கள், சப்தமேகங்கள், கடல்கள், மலைகள், உலகங்கள், திக்குகள், காலங்கள், முதலிய எல்லாம் என்னை ஆளுடைய அப்பன்கைலை மலையைச்சார்ந்தன.

இந்த விதமாகச் சரமசரங்களெல்லாங் கயிலையில் இட மின்றி நெருங்கக்கண்டு மகிழ்ந்து நந்தி, நாதருக்குத் தெரிவிக்க இறைவரும்களிமிகக்கொண்டு என்முன் அழைத்துவாவென்றரு ளிச்செய்ய,நந்தி அடிகளும் அவ்வாறேதேவர்களையுங் கணங்களை யும் கயிலை மத்தியிலிருந்த கனகக்கோயிலுள் போகவிடுத்தான். இவர்கள் உள்ளே சென்று நவமணி அழுத்திய சிம்மாசனத்தில் பரமனிருப்பதைக் கண்களாற்கண்டு மனதார மகிழ்ந்து புகழ்ந்து தொழுது துதித்துப்போற்றினர்.

ஆடினர். பாடினர். பலப்பல துதிகள் சொற்றனர். நந்தியங் கடவுள் உருத்திரர்களையுங் கணங்களையுந் தேவர்களையும் முனி வர்களையும் மற்றயவரையும் பந்தி பந்தியாய் நிறுத்தி அவர்களை யெல்லாம் கயிலை நாதர்க்கு விரலாற் சுட்டிக்காட்டி இன்னின்னு ரென்று கூறிப்பேரை யுரைத்துப்புகழ்ந்து தோத்திரஞ்செய்து நின்றான்.

பஞ்சவத்திரன், கூர் மாண்டன், ஆடகேசன் வீரபத்திரன் ஆதியாகிய ருத்திரகணத்தலைவர்களெல்லாம் இறைவனைத்தஞ் சம் என்று கூறிக் கை கூப்பி வணங்கிநின்றனர், அப்பொழுது பிரமன் வணங்கிவந்து அணி மணிப்பணிகளையும் முடியையும் கனகபீடத்தில் வைத்து நாதனே தேவரீருக்கு விருப்பு வெறு ப்பு இல்லை என்றாலும் எங்களுக்காக உமாதேவியை மணஞ்செ ய்து கொள்ளப்போகின்றபடியால் தயைபுரிந்து அரவப்பூணையும் என்புமாலையையும் எருக்கமலர்த்தொடையையும் நீக்கி இவ்வணி களை அணிந்தருளவேண்டுமென்றுபணிந்து இந்தஒருவரம் எங் களுக்காகத்தந்தருளுகஎன்றுவேண்டினன். பிரமன் இவ்வகையா கவேண்டவே முறுவல் செய்து அன்போடு கீயுதவிய அணிகளை அணிந்து கொள்ளுவோமென்று அணிந்து கொண்டருளினர்.

இன்னும் பிரமனின் அன்பைக்கண்டு இவ்வாறு அருளிச்செய் தவிமலன் மற்றுந்தன் மெய்யிலணிந்துள்ள பணிகளும் என்பும் நலம்பெறு மணியணிகளாக நினைத்தனர்.

உடனே அவைகளெல்லாம் ஒப்பற்றமணி அணிகளாய் விளங்கின. இதனைக்கண்ட தேவர்கள் மகிதலம்பலகோடி படைத்து அளித்துத்துடைக்கும் ஐயனுக்கு இதுவும் ஒரு அருமையோவென்று புகழ்ந்து போற்றினர். சிவபெருமானும் கவுரிமானிடத்திற்குப் போக மனத்திலெண்ணிக்குறிப்பாலெல்லோர்க்குந் தெரிவித்துப் புறப்பட்டனர்.



## கசு-வது, இமயமலையிற் சுவாமி எழுந்தருளின சருக்கம்.

ஏர்பூத்த செழுமறைக்குந் தொடர்வரிய பரம்பொருளி னினிய வாமப்
பேர்பூத்த பாகமுறை சத்திபிரிந் திமையவெற்பின் பிறைபோல் நெற்றிக்
கூர்பூத்த உமையாகித் தவமுஞற்ற மணம்விரும்பிக் குறையாவன்பால்
கார்பூத்த கணத்தோடு மிமையமுற்ற நாதரடி நயந்து வாழ்வாம்.

திருஅருட்கருணை நந்திதேவன்முன்னே புகழ்ந்து செல்லத் தேவர்களும் முனிவர்களும் போற்ற நாரதரும் தும்புருவும் புகழ்ந்துபாட, விஞ்சையர்கள் வீணைவாசிக்க அரம்பையர்கள் ஆட, சுருதி ஆகமங்களெல்லாம் துதித்து இருபுறமும்வர, குருமணி அணியும் குண்டோதரனுடைய இரண்டு குவவுத்தோள்களின் மேலும் அருமறைகள்காணா அடியிணைவைத்தே தருமமாகிய மால்விடை யேறியருளினார். இதனைக்கண்ட தேவர்களும் கணங்களும் மற்றையோரும் புகழ்ந்துபாடிக்கடலென ஆர்த்துப் போற்றினர். திங்கள் சூடிய இறைவன் சேவிடைமேற்போகும் போது விநாயகக்கடவுளும் தன் பெருச்சாளிவாகனத்தில் ஏறிக்கொண்டு தன் பூதப்படை சூழ்ந்துவரமுன்னே சென்றார்.

சந்திரரும் சூரியரும் அன்பாக குடையேந்த, அந்தி நற்கவரிவீச, அருணன் விசிறிவீச, இந்திரன் ஆலவட்டம் ஏந்த மற்றுமுள்ளதேவர்க ளெல்லாம் முந்துறுவரிசைகளெல்லாம்

முறை முறை வந்திச் சென்றனர். சல்லிகை, தடாரி, பீலி, குடமுழாம், துடிகை, தாளம், கொக்கரை, எக்காளம், தண்ணுமை, பேரி, கரடிகைமுதலியபல்லியங்களைப் பாரிடத்தலைவர்கள் முழக்கினார்கள். ஐயனின் விருப்புறு பணியை விடாதவர்களாகிய மாயன் வேதன் முதலிய தேவர்களும் முனிவர்களும் மற்றவிண்ணவர்களும் அமலன் அருளாற் சூழ்ந்த உருத்திரர்களும் ஏறிவருந் தேர் யானை குதிரை பறவை விமானம் முதலிய விரவிச் சூழுவந்தனர். பணிவிடை புரிந்து போதும் பாரிடத்தலைவர் உள்ளத்து உணர்வு உடைய தமிழ்ப்பாவாணர்கள் உம்பர்கள் பூதர்கள் ஏனைக்கணமுடன் சூழ்ந்துவரக் கயிலையை விட்டு நீங்கி இமயமலையைக்கிட்டி வந்தனர்.

ஆனகம் படகம் ஆதியபல்லியங்கள் சப்திக்கும் ஓதையும், தானையர், பூதர், விண்ணோர் சார்ந்திடும் ஓதையும், சூழ்ந்துள்ள ஏனையோர்கள் புகழும் ஓதையும், எட்டுத்திக்குமுழுதும் போந்து வானநாட்டை அணவிஎழுகடல் போல் ஒலித்தன. இந்தவிதமாக எம்மிறைவர் இமயமலைக்குவர இமய அரசனும் தம்மவர்களோடும் எதிர்கொண்டுவந்து வாழ்த்திப்பொன்னடி பணிந்து போற்றிப் பொன்னகரைவிட மிகச் சிறந்த தன்னகருக்கு அழைத்துக் கொண்டுபோனான்

பொன்மலை நகரத்திற்குப் புனிதன் வந்து சேரலும் கன்னியர்கள் கண்டு கண்களித்துக் காதலாய் முன்னினர், கைகுவித்து வணங்கினர். அந்நகரத்திலே விழா அணிநடத்தினார்கள். வீதிகளிலெல்லாம் வர இளமாதர்களெல்லாம் ஆதிநாயகன் உருவத்தைக் காண்டலும் காதல்செய்யும் விரகக்கடலில் வீழ்ந்தனர்.

எப்பெருமானுக்கு அணிந்துள்ள அணிகலன்களும் பொன்னுடையும் மலர்மாலைகளும் நறியு சாந்தமும் இறைவர் மெய் அழகினை மறைத்ததென்று மடவாரெல்லாம் மனம் அழுங்கிச்சோர்ந்தனர். நாயகன் அழகுரு நம்முடைய மனதிற்போயுருக்கி மெய்பொடிப்பக்காய்தலால் தூயமறை அனுதினம் தொழுதுபோற்றிய வேய்தருமுத்து வேய்முத்தென்பார் சிலர். கருமணிவண்ணனும் கமலத்து அண்ணலும் தருபுவனங்கள் தழைக்கும்

படி அருள்செய்யவருபவர்உருகியகாதலால் உடையும் உள்ளத்தெம் பருவரல் தணியவும் பார்ப்பரோ என்பார்கள். இலட்சுமியை ஒத்த அழகை உடையவர்கள் தம் கொங்கையின் குறியினைக் கூர்ந்து பார்த்தனர். அது சிவபெருமான்றங்கும் கயிலை மலைபோல் தோன்றுதலால் இங்கு இதில் எம்மிறைமேவும் இசையுமுண்டாம் என்பர். நல்லியல் மாதர்கள் நம்பன்தாள் தொழுமுன் வந்தனர், உடைநெகிழ்ந்ததால் முல்லைமெல்லரும்பு போலும் முறுவலார்க்கு இடையில்லை கொலோ என இசைக்கின்றார் சிலர். உடைவிழவிழவிரைந்து ஓடியே மடமையும் ஆசையும் மயக்க இடையிற்கலையை இருக்கியேஏகுவர், பின்னும்படைவிழியார்களெல்லாம் திகாம்பரர்போல ஆகுவர். சிலர் ஓடினர். ஒருவருக்கொருவர் முந்தினர். பாடினர். அழகெலாம்பார்த்தனர். ஆடினர், கலைநெகிழ்ந்து அவிழ்தல்கண்டிலர். தேடினர்சிலர். சிலர்மனதைத்தேடினர். மலைமடந்தைதன்னை சிட்டர் மணஞ்செய்பவந்தனர் காண்க சடையைமறைத்துப் பொன்முடிதரித்தனர் என்பர்சிலர். பூஞ்சடையில் வெள்ளெருக்கும் மத்தமும் பாந்தளும் இல்லைஎன்பர் சிலர். அவிழ்ந்தகூந்தலையும் கலையையும் தொடாமலேஏந்திளநீருங் கொண்டு சிலர் ஏகுவார்கள். காமனை எரித்தவன் என்பார்சிலர். பார்வதி தவஞ்சிறந்த தெனச்சிலர் செல்வார்கள். தம்மனையில் நுழையாது பலர் தளர்வார்கள். அரிபூஜைசெய்யும் பாதர்மேல் நமக்கு ஆசைவந்ததும் அழகென்பார்சிலர். இந்திரநீலம்போல் இருண்ட ஆலமே கத்தூரி என்பர். சேவின்முன்வந்து புல்லுங்கழுநீரும் வைப்பர். மாந்தளிர்மேனியர் மற்றமாதர்கள் ஏந்திளங்கொங்கைமேல் இருக்கும் வெண்மையைக்கண்டு சாந்துறுபொடியென எண்ணித்தானுவைச்சேர்ந்தன ரென்று சிலர் சீறுவர். மங்கையரும் மடந்தையரும் வளைந்துகூடியே புங்கவன்முன் வந்துநின்று எங்களைவிட்டோடுசினந்துகாயுந் திங்களைத்திருமுடியில் வைத்ததெதற்கென்பர்? இந்த ஐயனை மணப்பதற்கு அரசன் மங்கை செய்த தவம் போல்நாம் செய்திலோம் இனி என்செய்வோம் என்பர் சிலர். அவர்தம் கொன்றை மாலையை வாங்கென்பார் சிலர். கருப்பெறுபிறவியுங்கடக்கலாம் உருப்பெறத்தவஞ் செய்வோம் என்பர் சிலமாதர். நன்றாயிருக்கிறது! நன்றாயிருக்கிறது!! நமக்கெல்லாம்

நலிவையுண்டாக்கி வானவர்கள் இன்பம் அடைய மலைமகளை மன்றல் செய்யப்போகின்றார் என்பர் சிலமாதர். சிலமாதர் ஓ இடப்மே உனக்கு அன்பில்லையோ? மெள்ளெனச் செல் என்பர். மலைமகளை மணப்பதற்கு மறுகின்எய்திஞர், நாதனார் நமக்கு அருள் நல்கிடார் இது அவருக்குத்தக்கதாகுமோ என்பர் சிலமாதர். விரகனோயி ஞல் வேற்று உருவமடைந்தோம் மாற்றுதற்கு இவரல்லால் வேறு மருந்து காண்கிலோம் ஏற்றுடை வருகின்றவரின் இனியருப மே எங்குங்காண்கின்றதென்பர் சிலர் மாதர். கருணை நாயகன் வரக்கண்டு பருவம் ஏழுடையமாதர்கள் தாமும் காதலாய் உருகி நெஞ்சழிந்தனர். உம்பர் மாதர்கள்போல் இருவிழியும் இமைக்கா மல் இருந்தனர் எண்ணிலாதோர். இந்தவிதமாக திகழும்பொன்ன கரம்போல் விளங்கும், பொன்மலை பெற்ற கமலையும் மனம்விரும்பும் புறம் நல்லநகரத்தின் வீதிகள் நான்குங்கடந்து போய் இம்ப ரும் உம்பரும் இனிது வாழவே பலகணங்களுஞ்சூழ நம்பன் எவ் வுயிருக்கும் நலஞ்செய்ய நயந்து அம்பிகை கோவிலின் அருகு சார்ந்தனன். இறைவன் ஏவலால் ஆரணமுனிவர்கள் அளப்பிலா தோர் தாரணிசூழ்ந்து தீர்த்தமும் பத்தாங்கு பொற்பூரணகும்பங் கள் ஏந்திக்கொண்டு வந்தனர். புண்ணியமங்கையர்கள் பதினறு ருவகைமங்கலங்கள் ஏந்திப் பல வாத்தியங்கள் முழங்கநம்பனார் முன வந்தனர்.

இரு கனதனக்குடம் ஏந்தியேவரும் தெரிவையர் எதிர் எதிர் சென்று சென்றே கருவோடுமும் மலங்களைத் தீர்ப்பவனு கியபரமனுக்கு அங்கு இசைந்த பணிகளைச் செய்தனர். எண்ணி லாமடந்தையர் ஆலாத்திசுத்தினர். அப்பொழுது அரன், அறஞ் செய்யும் அம்பிகையின் மணச்சாலையைச்சேர விரும்பித் தூய விடையை விட்டு இறங்கினர். ஏனைய சூழ்ந்ததேவர்கள் எல்லாம் கம மூர்த்தியை விட்டு நீங்கினர். வெண்பிறையினன்வரலும் மேலை ஆலயமடந்தையர் சூழவந்து பசும்பாலைக்கொணர்ந்து நம்பரமன் பங்கயக்காலினிற்சொரிந்து தொழுது போயினர்.

நாயகன்பிறகு நந்திகொணர்ந்த தூய்பாதுகை அடிச் சுவடுசேர்த்தி மாலும் பிரமனுங்கைலாகுதர ஒரு நன்மணிக்

கோயிலைச் சார்ந்தான். வாத்தியங்கள் எங்கும் சப்திக்கவும் விஞ்சையர் இயல் இசைபாடவும், பலபூதர்கள் புயங்கள் கொட்டியார்த்திடவும், இந்திரன் புகழ்ந்து ஏத்தவும், ருத்திரர்கள் யாவரும் மருங்குடன் சூழ்ந்து வரவும், நயங்கொண்டேகி வாசப் பூமலர்ச் சோலைகள் தேம்புனல் வாவிகள் மலமேரடை விளங்கிய நிறம் வேறு வேறாகவே செய்த மண்டபங்கள் மேடைகள் வத்திரங்களினால் அழகு செய்யப்பட்ட காவணச் சாலைகள் முதலியவற்றையெல்லாம் நேசத்தோடு அங்கு நந்தி தேவன் காட்டி உரைசெய்யநிருமலன் கண்டான். தேவர்கள் எல்லாம் நமது பொன்னகர் தானே இம்பர் வந்துமேவி வைகியே இருந்த தென்று கூறி மகிழ்ந்து அழகிய பொற்றாமரை வாவிகள் பூவலர் சுனைகள் குடைந்தாடி மலர் கொய்தனர். சோலையில் மகிழ்வொடு திரிந்தனர். கருதி நந்திதான் காட்டாலும் நல்வளங் கருணையினால் நோக்கி அழகிய வாசனைக் கொழுந்தா லலங்கரித்திட்ட மணஞ்செய் சாலையிற் சென்று மிக்க பேரொளி யிந்திர நீலத்தால் விளங்கிய அரியணை மீதே தரும வேதங்கள் துதி செய்யத் தயவோடுஞ் சிவபெருமான் வீற்றிருந்தான். அப்பொழுது வீரபத்திரக் கடவுள் அடலினுடைகன் அழற் பெயரானுடைமான கூர்மாண்டேசன்மிடல் செய்வெற்றியர் முதலியோரும் உருத்திரரனை வரும் விதியும் நெடுமாலும் விண்ணோரும் புடையி லெங்கணு மாசனத்திருந்தனர்.



## கரு-வது, அகத்தியரைத்தென்பாலனுப்பியசருக்கம்.



திங்களஞ் சடையார் மன்றல் தெளிவுறக் காண வந்த
துங்கநற் குழாத்தாற் பூமித் தொடர்வடக் காழ்ந்து தென்பால்
பங்கயன் மாலு மஞ்சப் படர்ந்துவான் ஓங்கக் கண்டு
அங்கணன் அருளாற் சென்றே யடக்கிய முனிதாள் போற்றி.

ஆயகாலையில் அமலனின் நன்மணமது காண, பொருந்திய அண்டத்துள் எப்புவனத் தரும் கலந்து நேய மோடவுண்

பொருந்திச் சுமையுற நெருங்கி நிறைந்ததால் இமயகிரியானது இடரால் துளங்கியது. இமைய மலையானது துளங்குங்கால் புவனங்கள் எவையும் சுமை கொள் சேடன்பாற் றலையிருதட்டில் அன்பா லமைந்ததாகிய வடபால் தாழ்ந்திட அணிசேர் விமலத் தென்றிசை யாவரும் அஞ்ச உயர்ந்தது.

தென்புவி உயர்ந்ததினாலே உம்பர்களெல்லாம் அயர்ந்தனர். மண்ணுலகோர்களும் இடுக்கண் உற்று அழிந்தனர். பண்ணவர் மாலயன் பதறிப் பயந்து வயின் றொறுங் குழுமியே மயக்கமுற்றார். இந்த விதமாக மால் அயன் இந்திரன் இமையோர் துன்னு மாதவர் யாவருந் துணுக்கம் உற்றனர். பிறகு சிவபெருமான் நம் துயரத்தைத் தேற்றுவா னெனத் தேறித் தேவர்கள் எல்லாம் பாற்கடல் போலத்திரண்டு ஆறு சூடிய அமலன் முன்சென்று "கங்கை சூடிய கடவுளே! கருணை நாயகனே! மங்கை பாகனே! வரதனே! மான் மழுக் கரத்தாய் அங்கையார் அழல் அண்ணலே! அண்ணலே! அரனே! சங்கரனே! கடல் விடமுண்டு எங்களைக் காத்த ஐயனே! நடம் பயின்றைந் தொழில் ஆக்குறும் அத்தா! வடதிசை தாழும் இத்துயரை மாற்றி உலகம் யாவையுங் காத்தருள் செய்வாய்" என்று வேண்டினர். பணிந்த தேவரை அருளுடன் பார்த்து அஞ்சவேண்டாம் நாம் இத்துயரைத் தீர்ப்போமென்று சொல்லிப் புன்னகை செய்து கல்யாணத்திற்கு வந்துள்ள கூட்டத்தின் நெருக்கத்தால் வந்ததா மென்றெண்ணித் தேவர்களை நோக்கி எனக்குச் சமமானவன் ஒருவன் தென்றிசைக்குச் சென்றால் இத்துயர் நீங்கும் என்று கூறி என்க்குச் சமமானவனைத் தென்றிசைக் கனுப்புங்கள் என்று கட்டளை இட்டருளினார்.

இதனைக் கேட்டமால் பிரமனாதி தேவர்களிற் சிலர் சிவனுக்கு ஒப்பவர் யாரெனத் தேர்வார். சிலர் அவனுக்கு ஒப்பவர் இல்லை என்பர். அச்சிவபெருமானுக் கிணையாக யாரைச் சொல்வோமென்று மயங்குவர். இந்த விதமாகத் தேவர்கள் எல்லாம் மயங்கிப்பின் பிரமனையும் நாரதனையுங் கிட்டிச் சிவபெருமானுக் கொப்பவ ரொருவரைக்காண எங்கள் மதிக்கு எட்டவில்லை புத்தி

பின் மிக்க நீங்களாகிலுங் கூறியருள வேண்டுமென்று கூறினர், தேவர்களுக் கெல்லாங் குருவாகிய வேதங்களில் வல்ல நாரதர் அரனுக்கு ஒப்பவர் இல்லை என்று அறிந்தே பரனையே துதித்து அவன் திருவருளையே பகர்ந்தனர். சிலதேவர்கள் அரனுக்கு ஒப்பாக நாராயணனைக்கூறலாம் என்றனர். அதுகேட்டமால் அரகரா நானோ புங்கவனுக்கு ஒப்பாவேன்? முப்புரத்தைப்புன்முறுவலால் அழித்தோன் எப்புரங்களையும் எரிப்பவன், பிறப்பிறப்பில்லோன், கங்கையைத்தன் சடையில் பனித்துளிபோல வைத்தருளியோனுகிய அச் சிவனுக்கு என்னையோ ஒப்புக்கூறுகிறீர். ஆரும் ஒப்பிலாச்சிவபெருமானுக்கு யான்சரியல்லேன். கறைமிடற்றவருக்கு ஒப்புயாரையுங் காணேன். ஒப்பிட்டால் அப்பாவத்திற்குத்தப்பாமல் நரகஞ்சார்வீர்கள். இதுசத்தியம் என்றனன். தந்தைக்குச் சமம்பிள்ளையைக்கூறுதல் போலாம் இதுசரியல்ல என்றுமால் கூறப்பிரமன் சொல்லுகின்றான் அன்னமாகவும் ஏனமாகவும் உருவெடுத்து யானும் அரியும் முன்னந்தேடியுங்காணமுக்கணான் முதலோன் றனக்கு ஒப்பு வேறில்லை. நம் அமலனுக்கு இணையாரே? தேவர்கள் முனிவர்கள் இவர்களில் எவரும்சரி ஆகார். இல்லாத ஒன்றை இருப்பதாக்கூறின் நரகத்தில் வீழ்வர்கள் என்றனர். மற்றை இந்திரன் தேவர்கள் முனிவர்கள்யாரும் கற்றைவார்சடைக் கண்ணுதல் அருளினாலுண்டானோர். பெரும் பாற்கடலில் ஒருதுளியையே ஒத்தவர்கள் நாங்கள்! வேதங்களே இவ்வாறு கூறுகின்றன என்றனன். இந்தவிதமாக இவன் கூறலும் நாரதன் சிறிது யோசித்து சிவபெருமானின உடம்பிற்பாதியாயிருக்கின்ற உமாதேவியே தன்னை ஒப்பில்லாத்தனிமுதற்கு ஒப்பெனச்சாற்றுவோம் என்றான். அப்போது மால் ஆதிதேவர்கள் எல்லோரும் அதுவே தக்கது என்று நந்திதேவனிடத்திற் கேட்டு அவர்திருவருளினாலே அரனின் சன்னிதானத்திற்சென்று பணிந்து நித்தனே! பரைநேசனே! மங்கை தன்னொடும் உனக்கிணையாய் யாரெனநினைப்போம்! இணை உண்டோ? புரமெரித்தவனே! கடல்விடமுண்டகடவுளே! கருணைத் தேவே தென்திசையோடு வடதிசை சமன் வரச்செய்து எங்கள் துன்பத்தைப் போக்கிக் காத்தருள வேண்டுமென்று துதித்துவேண்டினர்.

அண்ணலே! உனக்குஒப்புயாரையும் அறியோம். பண்ணவா! இனி யாங்கள் உன்பரம் என்றுபணிந்த தேவர்களையும் பிரமனையும் மாலையும் நோக்கிக் கூறுகின்றார். உங்கள் துயரத்தை மாற்றுவோம் என்னையும் தேவியையும் ஒத்தவர்கள் உண்டு அதை நாம் அறிவோம், அவர்கள் யாரென்றால் அகத்தியனும் அவன் தேவி உலோபாமுத்திரையுமே. நம்மை முறைதவராமல்மும் மைக்காலமும் அர்ச்சித்துப் போற்றிடயாம் அவர்சிந்தையில் இருப்போம் ஆகையால் அவன்யாமெனவறிக, அவன் ஏகுந்திசை அகத்தியத்திசை என ஆகும். அத்திசைக்குப் பாவங்கள் இல்லையாகும் என்றனர். நம்பன் இந்தவிதமாகக்கூறி நந்தி தேவனை நோக்கித் தேவர்களும் உலகும் உய்ய பூமியைச் சமமாக்க அகத்தியனை இங்கே கொணர்க என்றனர். உடனே நந்தி தேவர் சென்று தென்மலைமுனியைக் கொணர்ந்து வந்து அமலன் சன்னிதியில் விடவும் அம்முனியும் பணிந்து துதித்துப் புகழ்ந்தெதிர்நின்றார். நின்றமுனிவரை நிமலன் நோக்கி நம்திருமணங்காண எல்லோரும் இங்குவந்ததால் வடதிசை தாழ்ந்தும் தென்றிசை உயர்ந்தும் அதனால் வானமும் நிலத்தொடுதாழ்ந்து உலைந்தது. பொருந்தும் ஆர்உயிர்களெல்லாம் பொன்றினர்போல வருந்தினர், வடவரைமந்தரமுதலிய நொந்தன, இருந்த வேதண்டம் அலைந்தன, இமையவர் அயன் மால் முதலிய தேவரும் தம்தொழில் மறந்து அழுங்கினர் ஆகையால் இந்த வருத்தமெல்லாம் நீங்க நீயும் உன் மனைவி உலோபாமுத்திரையுஞ் சென்று சந்தனமலையிற்றங்கினால் பூமிசமமாகும் என்று கூறி என்னை ஒப்பவன் நீயலாதில்லை நீயே செல்கெனப்பலமணி அணிகள் முதலிய மெய்யிற் பூட்டித் தென்றிசை செல்கஎன விடைகொடுத்தார். போவென்று சொல்லிய வார்த்தையை ஒப்பற்ற முனிவன் கேட்டு ஆ! என அச்சம் எய்தி அன்பிலாமனத்தனேன் ஏவலிற்குறைசெய்ததுண்டோ? எளியேனைச்சேணசென்றுமேவென உரைத்தாய், எங்கும் நிறைந்தகருணையாளனே! எவ்வாறு நான் அகன்றுஉறைவேன்என்றான். அவ்வாறுசொல்லிய முனிவனைப்பார்த்துத் தூயபரஞ்சுடர்சொல்லுவின்றார் உன்னைப்போல் உலகில் முனிவர்கள் தேவர்கள் இல்லை

உனக்குப்பிரமனும் இணை அல்லன் ஆகையினால் பல்லுயிர்களும் உய்யப்பரிவோடுஞ் செல்லுக என்றருளினர்.

அயன் மால் மற்றைத் தேவர்கள் எவர்கள் சென்றாலும் இத்துன்பத்தை நீக்கமாட்டார்கள். இச்சமயம் அங்கே ஒன்றும் யோசியாது செல்க என்றருளினர்.

கடல்விடமுண்டோன்கூறக்கடலுண்டோன் எந்தாய்! நெடியமால் அயன்! விண்ணோர் மற்றத்தவமுனிவர்கள் இருக்க இடர் உறுவகை ஏதெனஎன்னைக்கூறினாய் இதுநான் செய்ததவப்பயனே ஆனாலும்,மைப்படிகுழலாளை மணம்புரிவதுகாணாமல் நான் பொருமனந்தள்ளாட எப்படிச் செல்லுவதென்றான்? அதற்கு நாதர் அகத்தியமுனியே! கேட்டி ஆதிப்பிரளயங்கள்தோறும் செகத்தினில் நிலையாய் என்றுஞ் சிறந்து இனிதிருப்பதாகிய திருநெல்வேலிப்பதியில் வளர்வேணு வனத்தில் நாம் செய்யமலைமின்னொடும் தயவொடும் இனிது இருந்து வாழ்வோம்.

அப்பதியோ பிரமனும் மாலும் அளப்பில்லாத காலம் நம்மை மனப்பரிவாகப் பூசை செய்த இடமுமாகும். அவ்விடத்தே உனக்கு கனக் குழல் உமையாளோடும் கலந்து வெள்ளை விடை மேற்றோன்றி அங்குவந்து மணக் கோலங் காட்டுவோம், சகத்தில் அநேககோடித்தலங்கள்உண்டு, அத்தலத்துக்கெல்லாம் நெல் வேலித்தலமே மிக மகத்துவ முடையது, அதில் வாழுவோர் வினைபுரி கொடியாரானாலும் சுகத்தோடு இனிது வாழ்ந்து தூயநல்கயிலை சார்வர். மிருகங்களும் பட்சிகளும் வளர் தருக்களும் ஈயும் எறும்பும் உற்றபல் உயிர்களும் ஒங்கும் நல் கயிலை சாரும். நீ சற்றும் ஐயுறேல், முத்தித்தலமும் அத்தலமேயாகும் என்று கூறி மேலுஞ் சொல்லுகின்றார். தாருகாவனத்தில் தாம் பிரசபையில் உமையாள் காண நித்தலும் நடனஞ் செய்வோம். அதனை விருப்பத்தோடு ஆதிரை நாளிற் காண்பவர்கள் பூமியில் செல்வத்தையும் சுகத்தையும் பெற்று கடைசியில் நற்கதி சேர்வார்கள். அவ்விடத்தே இருபத்தைந்து உருவத்தோடு இருப்போம் எம்மை அன்போடும் அந்தந்த உருவத்தை அறிவில் ஓர்ந்து முன்புற வந்து நின்று தரிசிப்பவர்கள் துன்

பம் நீங்கித் தூயநற் கயிலை சேர்வார்கள். இவ்வளவு சிறப்புவாய்ந்த இத்தலத்தில்வந்து சிந்து பூந்துறையில் ஆடித்தினம் எமைத் தரிசிப்போரும், வந்து உள மகிழ்ந்து பொற்றாமரை மூழ்கி வணங்கு வோரும், பந்தமாம்பிறவி நீங்கிப் படை மழுமறிமான் ஏந்தி வாழுந் தூயநற்கயிலை சேர்வார். தகவொடு திருநெல் வேலித் தல புராணத்தைக் கேட்போர் அக மகிழ்ந்து எழுதுவோர் படிப்போர் அருத்தஞ் செய்வோர் எல்லோரும் இகபரம் இரண்டும் நல்கும் எமது உருவத்தை எய்துவார்கள். இப்பொழுது நான் கூறிய எல்லாம் உண்மையே ஆகும். இன்னுங்கேள், நாம் ஒரு இமைப்பொழுதும் நீங்காமல் மன்னு நெல்வேலியில் வளம்பெறஇருப்போம் நம்மிடத்து வடிவாள் விரும்பும் நல்லறங்களைச் செய்து கொண்டு வேதங்கள் தன்னைச்சூழ்ந்து துதிக்க மேவி யிருப்பாள். நாம் அனவரததான நாயகராகிப் பதினன்கு உலகங்களையும் அரசு செய்து உயிர் களுக்கெல்லாம் ஏற்பட்டுள்ள காமமே முதாலன சஞ்சிதக்கட்டு நீக்கி நற் கயிலையில் தகவோடும் இருக்கவைப்போம், நம்கோயிலின் மதில் கோபுரம் முதலிய வற்றைத் தரிசிப்போர்கள் நலன்உறுகயிலை எய்தி நமது உருப்பெற்று வாழ்வார்கள்.

நம் கோயிலை ஒரு தரம் வலம் வருவோர் பூமியை ஆயிரந் தரம் பிரதட்சணம் வருவதை ஒக்கும். பிரளய முடிவில் நாமும் பரையும் மூங்கில் வனப்பதியில் மேவி திரமுற அண்ட கோடிகளைப் படைத்து உயிர் அளித்துப் பின்னும் இருவினைத் தொடர் நீக்கி இன்ப வீடு உதவுவோம். அப்படிப்பட்ட அந்தத் தலத்தில் அன்பாய் இனிது அமர்ந்திருந்து நம்மை நித்தலும் பூசைசெய்து நீதியாய்ச் சிலநாள் வைகி முத்தமிழ் பலவும்பன்னி முடிவிலா இன்பம் எய்திச் சித்தமது உவப்பினேடும் சிறந்து இவண் வருவாயாக என்றனன். அதே செய்கிறேன் என்று உள்ளத்தில் அன்பு கொண்டு பிறகுஞ் சொல்கின்றான் நீ செய் பெருமணக் கோலம் என் ஆவல்தீர இருந்து நான் பார்த்தபின் நான் நெல்வேலியிலுள்ள வேணு வனத்திற்குச் செல்வே னென்றான். அதுகேட்டுச் சிவபெருமான் புன்னகை செய்து மிக்க அறிவை யுடைய கும்பமுனியே கடலில்! பாரத்தாழும் படகு

போல் வடதிசைதாழ்ந்து தென்றிசை உயர்ந்து ஆருயிர் அனைத்தும் அஞ்சுகின்ற தென்பதைக் கண்டும் நீ இப்படிச் சொல்லலாமோ? என்று இருகையாலும் தழுவி அருளுற நோக்கி அன்புடைய முனியே இங்கே அரைக்கணமுந் தங்க வேண்டாம் உடனே தென்புவிக்கு லோபா முத்திரையோடுஞ் செல்க என்றருளினர்.

பரமனே! கருணையானே! கட்டளை யிட்டருளிய படியே செய்கிறேன், அங்கே சென்றிருக்கும்போது இம்மணக் கோலங் காட்டி அருளவேண்டும் என்றான். அதற்குச் சிவபெருமான் பிரளயங்கள் தோறும் மகாப் பிரளயங்கள் தோறும் நாமும் பரையுஞ் சிறப் பொடுஞ் செல்வம் ஓங்கப் பொருந்தி அங்கு இருந்து மீளப் புவனம் உண்டாக்குவோம்.

நீ செல்லுமிடம் உம்பரின் அளாவிய உயர் கொடிமுடியினோடு இம்பர் மாதவத்தோர்போற்ற இருப்பதும் உலகுக் கெல்லாம் தம்பமாய் உள்ளதுமாகிய தமிழ்வரைப் பொதியம் ஆகும். அந்த வரையின் கீழ்பால் தேவர்கள் சந்ததங் தருவாய்ப் போற்றுந் தாருகா வனமும் இருக்கின்றது. பந்தமாம் வினைகள் தீர்க்கும் பதிபல நமக்கு உன்டானாலும் விந்தை சேர் திருநெல்வேலி விசேடமாய் நமக்கு அன்பாகும். சிறந்ததிருநெல்வேலி தென்காஞ்சி என்றும் பெயர்பெறும். அறஞ்செய்து அன்புடன் காந்திமதி அங்கிருப்பதாகும். அத்தலத்திற்கு நடுவே உத்தரகயிலை விளங்கும். அதனில் இறந்தோர்கள் எல்லாம் எனதுருவம் பெறுவர். இக்கயிலை மூன்று கொடுமுடியுடனேவைகும் தென்பால் வடிவாள் கோவில் வடபால் தாம்பிரசபை கீழ்பால் மூலலிங்கம் மேவும். கருத்துறயாவரேனும் கண்களால் தரிசிப்போர்கள் விருப்புறும் இனிய முத்திவீடுறமேவுவர். மூலலிங்கத்தை அருச்சிப்பவர் பெருமையையாரும் ஓதுதற்கு முடியாது. அதனை நீயும் உறுதியாய் உகந்து அந்தச் சோதியாம் இலிங்கந்தன்னை துதித்து வாழ்த்திப்பூசைசெய்து நம்மை நினைப்பாயாக. காஞ்சியிலுள்ள தீர்த்தம் கயிலையிலுள்ள தீர்த்தம் சிவபுனிதவேணி ஆகாசகங்கை சரஸ்வதி காவேரிமுதலிய புண்

ணியதீர்த்தமெல்லாம் வாஞ்லகயோடு இனிதுவைகும் வளப்பமுடையபதி திருநெல்வேலியாகும். மூவகைக் குற்றமும் நீங்கிய கும்ப முனிவனே! முன்னும் நாமே தேவியோடிருந்து அநேக திருவிளையாடல்களைச் செய்தோம் பாவமும் அழியும், அந்தப்பதியில் இருப்பவர்களே மெய்அடியார்கள் ஆவார்கள். இமைப்பிலா வானோர்கள் மற்றஇருடிகள் அயன் மால் இன்னோர்க்கு இனிமை எய்தத் தாம்பிர சபையில் நடனஞ்செய்தே அமைத்த பல உயிர்களுக்கும் வேண்டுவன வளித்தலால் நமக்கு அனவரத தான நாயகர் என்றும் பேர்வந்தது. கங்காதேவி பிலத்தில்நண்ணிநின்று எம்மை நினைத்துப்போற்றி நெறியொடு தவங்கள் செய்தாள், அவளுக்கு அன்பாய்ச்சென்று காட்சி கொடுத்தருளினோம், அவ்விடத்திலே ஆதிலிங்கமாகவும் மூலலிங்கமாகவும் இருப்பது நாமே. ஆகையால் அங்கேவந்துவலஞ்செய்து வணங்குவோர்கள் பாராளுலும் நற்பதம் அடைவார்கள். தோன்றும் அவ்விலிங்கத்தைக்கோயிலுக்குள் சென்று பொற்றாமரையில் மூள்கி மூன்றுநாள் சேவைசெய்வோர்முடிவிலாமுத்தி சேர்வர். விருச்சிக மாதத்தில் சோமவாரத்தில் உருத்திராபிஷேகஞ்செய்வோர் முடிவிலாமுத்திசேர்வார், சிவலோகங்காண்பர். பெருத்திடுபிணியர் மூப்போர் முதலியவர்களை நீராட்டி வலஞ்செய்வித்தால் அவரும் நம்பதத்தைச்சேர்வர். நாயிறு, சோமவாரம், குருவாரங்களில் நம் மூலலிங்கத்திற்கு எதிரிலே வலப்பாகத்திலே நின்று பஞ்சாட்சரத்தைவிரும்பியேசெபிப்போர் எல்லாம் நேயமார்கயிலாயத்தில் நிட்சயமாய் இருப்பர். வில்வம் முதலிய பத்திரங்களாலும் நறுமலர்களாலும் நலம்பெற அருச்சிப்போர்கள் நெல்லையில் வந்து ஒருநாள் நிசியிடைவைகுவோர்கள் தங்கள் எல்லையில்லாப் பாவந்தீர்ந்து இன்பவீடடைவார்கள். இந்தத்திருமூலலிங்கத்தின் சன்னிதிமுன்பு வந்து பத்தியால் மலர் அர்ச்சித்து பரிவுடன்பூசை செய்து நளன்தன்பால் சேர்ந்தகலியை நீக்கிப்புத்திரரோடும் நல்ல போக போக்கியங்கள் பெற்றான். இந்த மூலலிங்கத்தைத் தரிசித்துப் பூசைசெய்து இராமன் இராவணனைச்சம்கரித்து மிகக்கற்புடைய ஜானகியைக்கலந்து அரசாண்டான். இந்தத்திருமூலலிங்கத்தைத் தருமனும் தம்பிமாரும்[1] வந்து தரிசித்துப்

பகைவென்று, பாரரசுசெய்து சுகமுற்றனர். திருமூலலிங்கத்தை இந்திரன் ஒருநூறாண்டு பூசித்து தன்வெவ்விய பகைவனாகிய விருத்திராசுரனை வென்று மூன்று லோகங்களையும் அரசு செய்தான். வேறுபதிக்குப்போவோர்களும் திருநெல்வேலிவாழ் வேணுநாதா! என்று கூறி அவ்விடம் சேர்வார்களேயானால் தாம் குறித்த நற்பொருளைப்பெற்று மிக்ககளிப்பினோடு தம் பதி மேவுவார்கள். உலகத்தில் யாராகிலும் நெல்வேலி நாதரைத்தரிசிக்கச் செல்லுகின்றேன் என்பவர்களுக்கு அன்னமும் சொர்ணமும் அளித்தால் பாவங்களெல்லாம் நீங்கி என்உரு எய்துவர்.

இப்பதியில் வந்தாகிலும் நினைத்தாகிலும் விபூதி முதலிய சிவசின்னங்களை அணிவோர் வளம்பெறு சிவலோகத்தை மருவி வாழ்வர். வேதியர்க்குப் பால், நீறு, கண்டிகை, பூமி, இல்லம் ஆ, முதலியன இத்தலத்திலிருந்து அன்பொடும் ஈவார்களும், இத்தலத்தில் பிறந்தோரும், இருந்தோரும், இறந்தோரும் என் உருவத்தைப்பெறுவர். இத்தலத்தில் நம் அடியவர்களுக்கு உதவிசெய்தோர் தமது தாய் தந்தை மூவேழ்தலை முறையுள்ளோர் எல்லாம் செய்த பாவங்கள் அகன்று நல்கயிலை மேவி என் உருப்பெற்று என்றும் என்னுடன் இருப்பர். இந்தப்பெருமையை எல்லாம் எண்ணித் தேவர்கள் யாவரும் இருக்கப் பெற்ற தலத்தில் லோபாமுத்திரையோடும் அன்பாய்ச் சென்று மூலலிங்கத்தை விரும்பிப் போற்றின் நாம் அங்கு உனக்கு மைப்படி. குழலாளோடும் மணக்கோலங் காட்டுவோம் என்றருளினர். புண்ணிய முதல்வன் இந்தப் பொற்பதிமேன்மை எல்லாம் உள்நிறைவிருப்பினோடும் உரைத்திட உவந்து கேட்டுப் பண்ணவர் பெருமான் நெல்லைப் பரமனைப்பணிந்து போற்றி அந்த நெல்லைநகருக்கு நண்ணுவேன் என்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றான். பெருமானே! கருணையோனே! பதிகளிலெல்லாம் மிக்க நெல்வேலிக்கண்ணே அதிசய நதியுண்டாக்கும் விருப்புடையவனாக இருக்கின்றேன். ஆகையால் இப்போது ஏகும் எங்களுக்கும் மற்ற இருடிகளுக்கும் இன்பயோக மெய்த்தவங்கள் செய்வதற்கு உரித்தாகும் மா கங்கையினும் மிக்க மாநதி அருள

வேண்டுமென்று பணிந்து துதித்து வேண்டினன். ஈசன் இவைகளை மொழிந்த கும்பமுனிவனை இனிது நோக்கி நன்று நதி உனக்கருள்வோம் என்று தன்றுணை வியாகிய உமையவள் கையிற் சிறப்புடன் பிறந்து வெள்ளிமலையிற் பொருந்தி அந்தப் புரத்தில் மேவும் தாம்பிரபன்னியை மனத்தில் நினைந்தான். உடனே அவளும் செந்திருப்போல நேரே வந்து கத்தனே! நாதனே! என்னையாள் கடவுளே, சரணம்! சரணம்! எனத்துதித்து மலர்த் தாள் வணங்கி அன்புடன் எதிரே நின்று "கருணையங்கடலே, என்னைக்கருதிய கருத்தென்ன" என்று, உருகிய சிந்தையோடும் உவந்து அகமகிழ்ந்து கேட்டாள்.

அதற்குச் சிவபெருமான் "அறிவுடைய பொருநைமானே! கும்பமுனிதன் மனைவி லோபாமுத்திரையோடும் தெற்கேயுள்ள திருநெல்வேலிக்குச் செல்வான் அவனோடுகூடச்சென்று எல்லா வுயிரும் எல்லாப் பொருளும் உய்ய மலயமலையத்தின் மேலும் சையமலையத்தின் மேலும் இன்பநதியாகி நல்லமு தளித்தி" என்று கூறினர்.

அதற்குப் பொருநை மாநதி கடவுளை "நோக்கி ஆதியே! கும்பமுனி தீதற்றவன் என்றாலும் ஆண்பாலாயிற்றே அவனோடு போகலாமா?" என்று கேட்டனள். அதற்குச் சிவபெருமான் கும்பமுனியோ தீதற்றவன் குணத்தின் மிக்கவன் செம்மையன் எமக்கன்பான மாதவத்தின் மிக்க முனிவன் அவனைப்பற்றிச் சிறிதுஞ் சந்தேகங்கொள்ளாதே அவனோடு கூடவே போவென்று சொல்லினர். பின்னுங் கேட்கின்றாள். "ஆம் நான் தீங்கிலாமுனி வன் பின் செல்லநீங்கு நாள் என்றென்று புகன்றருள்க" என்ன அதற்கு நித்தன் அவன் எப்பொழுது பூமியில் விடுகின்றானோ அப்பொழுது பூமியிற் செல்க என்றனன். உடனே பொருநை மின்னுங் கும்பமுனிவரனருகு சார்ந்தாள்.

உடனே சிவபெருமான் தாம்பிரபன்னியை நோக்கிக் கைலையில் எம்பூங்காவினில் இனிது இருந்த நீ தென்பாற்சென்றால் அத்திசை புனிதமுடையதாகும் உன் இருபுறங்களில் உள்ள தலங்களெல்லாம் விசேடமுடையதாகும். உன் தீர்த்தம் பொ

ருந்திய இடங்களிலெல்லாம் மனிதர்கள் மிருகங்கள் பறவைகள் முதலிய மனதில்லாமல் வந்து ஆடினாலும் அவர்கள் வினையை நீக்குக, அவர்கள் முத்தி வீட்டையடைவார்களாக, அழகிய திருநெல்வேலிச் சிவதீர்த்தத்துடன் கூடிப்பெருகிடில் இனிய சிந்து பூந்துறை என்று பேராம், மருவி நீ வடபால் ஏகும் மகத்துவ விசேடத்தால் தென்காசி என்று கருத்து வந்துரைக்கலாம், மேலுஞ் சந்திரன் சூரியன் ஆகிய இவர்களைக் கேதுராகுகள் தீண்டு நற் காலத்திலும் மகாமகம் மாகமாதம் ஆகிய இத்தினங்களில் கங்கை முதலிய கூடிய சிந்து பூந்துறையில் மூழ்கினால் சிறந்த முத்தியை அடைவார்கள். ஈராறு மாதங்களிலும் வந்து சோம வாரத்தில் ஆதிரை, சங்கிராந்தி, அமாவாசி, பிறந்த நாள் முதலிய நாட்களில் சிந்துபூந்துறைபடிவோர்கள் எம்வெள்ளிமலைமேல் விளங்க வீற்றிருப்பர். சிந்து பூந்துறையின் பக்கத்தே ஒரு வருடம் ஆறுமாதம் அல்லது ஒரு நாளாகிலும் வசிக்கின்ற மாந்தர்கள், கடவுளர், மிருகங்கள், பட்சிகள், இவைகட்கு அந்தியகாலத்தில் பஞ்சாட்சர மந்திரத்தை யுரைப்போம், என்றருளினார்.

கும்பமுனியே நான், லோபா முத்திரையே உமையவள், ஆகையால் அவர்கள் சொல்லியபடி அவர்கள் உரையைத் தூய மனத்தில் வைத்து நட நாம் எப்பொழுதும் உன்னோடிருப்போம். உன் அண்ணனாகிய குமரவேளை உனக்குத் துணையாகத் திருச் செந்தூரில் இருத்துவோம். வேணுவனத்தில் சிந்து பூந்துறைத் தீர்த்தத்தில் எவர் இறந்தாலும், எலும்புகளைப் புதைத்தாலும், சமஸ்காரங்கள் செய்தாலும் அவர்கள் ஓங்கிய கயிலையில் உற்று இனிது இருப்பார்கள். தாம்பிர பன்னி மாதே! சிந்து பூந்துரைத்தீர்த்தமேவி நாமும் நம்பரையும் நித்தம் நலம் பெற வீற்றிருப்பதால் அம்மாணிக் கன்னிகைப்பொன் மகிமை பெற்றுள்ளதேயாகும். வரும் கம்பைநதியும் பொற்றாமரை, கருமாரி ஆகிய இவைகளும் திருநெல்வேலியிற் சிறந்திருப்பதாகும், பேரூழிக் காலத்தும் கரந்திடாது. இனிது தோன்றிப் பொருநைமானே நீயும் போய்ப் பொருந்துவாயாக. பொதியை மலையைச்சிறக்கச் செய்து பிறகு பூமியிற் சென்று பிரவாகமாகப் பெருகி இருமருங்கும் பவளம் பொன் நவமணி

களை ஒதுக்கிச்சென்று கடலிற்கலப்பாயாக. வாரணாசியில் நாமும் மலைமகளும் அன்பாய்ப் பூரணப் பெருமையால் சொல்லும் புது மைபோலத் திருநெல்வேலி யூரினிலிருந்து சிந்து பூந்துறைக்கு வருபவர்களுக்கெல்லாம் தாரகப் பிரமந் தன்னைத் தயவோடும் உரைப்போம் இந்த முனிவனுடனும் அவன் மனைவி லோபாமுத் திரையோடும். இனிது செல்க. நாம் அங்குவந்து உங்களுக்கு மணக் கோலங் காட்டுவோம். இன்னும் அத்தலத்தில் வாழும் அருந்தவர் சனகர் ஆகிய நால்வருக்கும், பதஞ்சலி, புலிப்பாதர், கும்பமுனிவர், லோபாமுத்திரை, இவர்களோடு நீயுங் காண நாம் தாம்பிரசபையில்வந்து திருநடனஞ்செய்வோம். பொருநைமாதே! உன்னிடத்தே யிருக்கின்ற கல்களும் மணல்களும் சிவலிங்கமா கும் நீ செல்லும் இடங்களிலெல்லாம்செந்நெல்லும் கரும்பும் உண்டாகும். தாம்பிரமும் உண்டாகும். கடலில் நீ கலக்கு மிடங் களிலெல்லாம் உயர்ந்த முத்துண்டாகும். நீ உற்பத்தியாகும் இடத்தும் மத்தியிலும் சங்கமமாகும் இடத்தும் மத்தியிலும் நாம் உமையோடு இனிது எப்போதுங் கோயில் கொண்டிருப் போம் மூழ்குவோரைக் கருவை ச்சாராத படிசெய்து முத்தியிற் சேர்ப்போம்.

எவர்களானாலும் எந்த நதியிலும் உன்னை மனதில் எண்ணி மூழ்கினால், அவர்கள் பாவமெல்லாம் நெருப்புற்ற பஞ்செ ன அழியப்பெற்று முத்தி வீடடைவர். உலகத்திலுள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் நதிகளிலும் நீ யேசிறந்த தாவாய் உன்னை யொத்த நதியேனுந் தீர்த்தமேனும் உலகத்தில் இல்லை. ஆகை யால் கும்பமுனிவனோடு செல்லுக என்று உரைத்தருளிக் கும்ப முனியைப்பார்த்து ஓ கும்பமுனியே! இத்தாம்பிர பன்னி என் னும் பெண் நம்பரை யிடத்திற்றோன்றி உவகையோடும் அந்தப் புரத்திடையுற்றுளாகும். நீ நம்பால்மிக்க அன்புடையவன் ஆதலால் உன்னோடனுப் பினோம். அவளோடு தெற்கேயுள்ள மலையமலைக்குச் செல்க இவள்பால் வந்து நன்கு ஆடின எவரும் நரகிற் சேர்க்கும் பாவங்களி னின்றும் நீங்கி இன்பமாக நமது லோகத்தில் இருப்பார்களென்று திருவாய்மலர்ந்தருளினார்.

பொருநை மாநதியில் சிந்துபூந் துறையில் பொருந்தி மூழ்காதவர்களும், தாம்பிர பன்னிக் கதையினை உவந்து கேளாதவர்களும் தங்கள் பிறப்புகளி லெல்லாம் வறுமை யாலும் பிணியினாலும் வாடிச் சங்கட மனத்தினோடும் உழலுவர். தாம்பிர பன்னியானது கயிலையிலுள்ள ஏழு நதியைக் காட்டிலும் மிகப் புனிதமுடையது ஆகையால் இப்பொருநைப் பெண்ணை அப்பொதிகையின் பாங்கருத்துப் புவி இடைவிடுப்பாய் என்று மாலயன் காணு மாதொரு பாகன் கூறியருளினர்.

அவ்வாறு சொல்லிய பொழுது தாம்பிர பன்னி சிவபெருமானின் தாளிணைகளை வணங்கி நிற்க, அமலனும் இனிது நோக்கி உன் உள்ளத்தில் இருக்கின்றோம் அகத்தியரோடு ஏய தென்திசைக்கு ஏகென்றருள விருப்பொடும் விடைபெற்றுக் கொண்டாள். சிவபெருமான் குறு முனியைப்பார்த்து இத்தாம்பிர பன்னியைக் குண்டிகையில் கொள்ளுக என அவ்வண்ணமே அவனும் கொண்டான் அண்டரும் வியப்ப நின்ற அகத்தியரை நோக்கித் தென்றிசைக்குச் செல்லுக என்று செப்பினான்.

என்னையாளும் நாதன் ஏகெனச் சொன்ன வுடனே பொன்னடி பணிந்து நின்று புகழ்ந்து செங்கைகள் கூப்பி மின்னிவர் சடையினானை விதிமுறை அருச்சித்து ஏத்தித்தொழுது போற்றி விடைகொண்டு, விம்மினான்,விபந்தான், மீண்டுந், தடைபடுவான், தற்பரா, சரணம், என்பான், இடம் வலம், சூழ்வான், போதற்கு இரங்குவான்,ஏங்கி உள்ளம் உடை படுவான்,பின் உவகை யோடும் ஒரு வகை தேறித் தேவர்கள் முனிவர்கள் சித்தர்கள் மற்றும் ஆனவர்கள் எவருஞ் சூழ விரும்பிமுன் வந்தவர்கள் எல்லோருக்கும் தக்கன புகன்று விடைகொண்டு பண்ணவர் புகழும் எங்கோன் பதமலர் நினைந்து போற்றித் திரு நீரணிந்து கொண்டு ருத்திராக்கத்தை யுடலி லெல்லாம் அணிந்து அழகிய தண்டுகமண்டலங்களைத் தாங்கி லோபா முத்திரை யோடு விமான மீதில் ஏறி வேணு வனத்தை நோக்கிப் புறப்பட்டான்.



## கசு-வது, கிரவுஞ்சகிரிச் சருக்கம்.

சொல்லரும் மாயை செய்து தொடர்வழிக் கிடும்பை செய்த
புல்லிய வவுண னான புகழிலாக் கிரவுஞ் சப்பேர்
வல்லியன் றன்னை வென்று வலங்கெடச் சாபந் தந்தே
செல்லையை விரும்பி யெய்தும் நிலைதமிழ் முனிதாள் போற்றி.

கடலைக் கடுகளவாக்கிய கும்பமுனி இமையமலையை விட்டு, வருதலை மூரியெயில் சுற்றிமைய மூதூர்காக்குங் காரிருள் அனையகிரவுஞ்சன் கண்டான். விண்ணை மண்ணாகவும், மண்ணை விண்ணாகவும், கடலை மலையாகவும், மலையைக் கடலாகவும், கடலைப்பூமியாகவும், பூமியைக் கடலாகவும், வடவையை நீராகவும் நீரை வடவையாகவும், மதியைச் சூரியனாகவும், சூரியனைச் சந்திரனாகவும், மகமேருவை அணுவாகவும், அணுவை மகமேருவாகவும், ஏழுமேகங்களையும் ஓர்நீர்த்துளியாகவும், ஒரு துளியை ஏழுமேகங்களாகவும், ஆக்குபவனும் மலையாசென்னமலையுருவாவோனும், இன்னும்பலவுருவங் கொள்வோனும், வானவரையும் முனிவர்களையும் ஒருகணத்தில் பலமாயை களியற்றிப் பங்கமுறும்படித் துன்பப் படுத்துபவனுமாகிய கிரவுஞ்சனென்னும் அவுணன் எவராலும் அறிதற்கரிய மாயை நிறம்பியதிறலோன். இத்தகைய கிரவுஞ்சன், அகத்தியர் செல்லும் வழியில் அவர் விமானத்தேர் செல்லுதற்கு வழிதோன்றாதபடி சிகரங்களையுடைய ஒரு பெருமலை உருவாக நின்று அகத்தியர் செல்லுஞ் செலவைத் தடுத்தான்.

நற்றவம் இயற்றும் முனி நண்ணிவரத் தனக்கு எதிர் தோன்றிய மலையைக்கண்டு வழியிலே இருக்கும் மலையென நினைந்து நிற்கையில் மற்றோர் வழிதனக்கு எதிரிற் றோன்றக் கண்டு, ஒரு குரோச எல்லை செல்ல அதற்கு அப்புறஞ் செல்லாது அவ்வழி நிற்கையால் தியங்கிவந்தவழியே திரும்புகையில் வேறு ஒரு வழிதோன்ற அதன் வழியே செல்லுகையில், அதன் வழியே சென்றும் செல்லுதற்கு வழியின்றித் தடைபட்டு நிற்கப்பிறகு

வந்தவழியே மீண்டுந் திரும்பிவரப் பழய வந்தவழியுங் காணுது போகவே இங்கு ஒருவழியுண்டெனநினைத்து அங்கு அப்பொழுது தோன்றிய ஒருவழியில் போயினுன். பிறகு அங்கே ஆரமுனிேேடும் வல்விஷமும் கனலுஞ் சூரையும் பொருந்திய கருமேகங்கள்வந்துசூழ்ந்து பெய்யவும் மின்னலும் இடியும் கறங்கி இருள் மூடவும்இந்தவிதமாகப்பலமாயைகளைக் கிரவுஞ்சன்இயற்றினுன். முனிவரும் இதைக்கண்டு கற்பனையாகச் செய்கின்ற மாயமென ஞானதிருட்டியால் அறிந்து அவுணர்கள் செய்யும் மாயமெனத் தெளிந்து கையொடு கைஅறைந்து நகைத்தார்.

நான் செல்லும்பாதையில் வஞ்சனையாக நின்று இக்காரியங்களைச் செய்து என்னை இகழ்ந்த அவுணன் வலிமையை முடித்து விடுகின்றேனென்று முனிவரும் தண்டத்தால் அக்கிரௌஞ்சனின் உடல்குன்ற அடித்துத் தூளாக்கி, உன் பண்டைவலிமை நீங்கி மலையாக ஆகக்கடவை என்றுகூறி, உன்னைக் கொடிய அவுணர்களெல்லாம் தங்கும் இடமாகக்கொண்டு பெருமுனிவர்களுக்கெல்லாம் பொருத்தமில்லாத காரியங்களைச்செய்து நீண்டநாள் கழிப்பாராக. என் கைத் தண்டால் உற்ற புடைதொறும் இவண் உள்ள இடமெல்லாம் வினைமாயை பற்றி பலவாகி நிலை நிற்பதாக, அப்பொழு சிவபெருமானின் குமாரனுன சுப்பிரமணியக் கடவுள் உன்னைவதை செய்வாராக எனக் கொடியசாபத்தை இட்டுக் குண்டிகையில் நிறைந்தநீரைக் கையினுல் வாரி மணிமந்திரஞ் செபித்து இறைத்தார். உடனே வெவ்விய மாயைகளெல்லாம் மறைந்தது. பிறகு முனிவர்கள் புடைசூழ நெடுமானத்தேர் மிசை ஏறித் தென்றிசை நோக்கிச் சென்றுர்.



## கஎ வது, விந்தகிரிச்சருக்கம்.

---

*மேருவைப் பழிக்க வெண்ணி மிகவளர்ந் தோங்கி நின்றே*
*சேருநற் சுடர்கள் செல்லுந் தெரிநெறி தடுத்து விண்ணும்*
*பாருடைத் துயரங் கொள்ளப்படுத்திய விந்த வெற்பைக்*
*காருடைப் பிலத்தி லிட்ட கலையமா முனிதாள் வாழி.*

கிரவுஞ்சப்பெயருடைய அவுணனும் முனிவர் சாபத்தால் குன்றுருவங்கொண்டு அவுணர்கள் வசிப்பதற்கு இடமாயினன். கும்பமுனிவர் இமயமலையின் எல்லைகடந்துபோய்,நீலமலை சிவேத மலை இடபமலை ஏமகூடம் முதலிய இடங்களுக்குச்சென்று, அங்குறை நிமலனுரைத் தொழுது, அவ்விடம்விட்டு நீங்கிக் கேதாரத்துக்குப் போய்ச்சிவ தீர்த்தமாடியே நீலகண்டரைச் சேவித்து, நீங்கி விமானத்தில் ஏறியே ஆகாசமார்க்கமாகச்செல்லும்போது, இமயமலையில் விமானத்திலேறி விரைவாக உமாதேவியாருடைய மணங்காணும் அன்பாகவே வருவோர் கண்டு அதிர்ந்தனர். இந்தப்பேரொளியோடு எதிரேகாணுதலால் பொன்மலைதான் இவ்விடம் வந்ததோ ? என்றும்,சூரியன் தென்றிசை வந்ததோ ? என்றும், எல்லோருமெண்ணும்படி விமானம் வந்தது. அதனைக் கண்டோர் வந்து தொழும் கருத்தில் கொண்ட பேரன்பினுல் தமிழ்முனியும் ஆசிகள்கூறித்தன் செய்தியெல்லாங் கூறி எல்லோரையும் அனுப்பிவிட்டுத் தென்றிசை நோக்கிவந்து கொண்டிருந்தனர். லோபாமுத்திரையோடு தான் வரும்வழியி லுள்ள ஸ்தலங்களிலெல்லாம் தங்கித் தாழ்வொடு தொழுது போற்றிக் கருணையங் கடவுள் வாழும் காசிமாநகரைச் சார்ந்து கங்கையாடி விசுவநாதர் விசாலாட்சி அம்மை ஐங்கரக்கடவுள் முதலியவர்களை வணங்கிப் பூஜை செய்து போற்றி அப்பதியை விட்டு அகன்று சென்றார். வழியிலுள்ளகங்கை கூடுஞ்சமுத்திர சங்கமமாடி மற்றுமுள்ள சரஸ்வதி, யமுனை, சிந்து, கவுதமை, கோதாவரி, கிருஷ்ணு, சோணபத்திரை, துங்கபத்திரை, பாலநாசம், ஆகதை, விபாசை, முதலிய நதிகள் ஆடிச் சிவபெருமானின் பழம் பதிகளை எல்லாம் போற்றிவணங்கிக் கொண்டே

வந்தனர். அப்படி வரும்பொழுது, கருவங்கொண்டவிந் தமலையை அடக்கினார்.

அதனைத் தெளிவாகச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொல்லுகின்றார். சிவ பெருமானின் அருளைப் பூர்த்தியாகப் பெற்றவனும் மகதியாழ்தாங்கியவனுமாகிய நாரதன் பூமியிலுள்ள விந்தமலையினிடத்து வந்து ஆசிகூறவே விந்தமலை அரசனும் சிந்தை மகிழ்ச்சியோடு தேவர்தம் வடிவமாகி நாரதர்தம் அடியில் வீழ்ந்து வணங்கி எந்தையே என்னிடத்தில் வந்தகாரணம் என்ன என்று கேட்டனன். முன்னருண்முறைமையை எண்ணி நாரதரும் கூறுகின்றார். ஓ விந்தமலையே! இமயமலையானது சிவ பெருமானுக்கு வில்லானதனாலும் உமைதன்மரபிற் பிறந்ததனாலும், தான் எல்லாமலைக்கும் அரசாகவிளங்குவதனாலும், வானத்தை யளாவி மிக வளர்ந்திருப்பதினாலும், பூமியைத் தான் தாங்கியிருப்பதினாலும், ஆயிரமுடிகளிருப்பதினாலும், வெள்ளிவெற்புக்குச் சமீபத்தினாலும், சூரனாலும் அழிக்கப்படாப் பெருமையினாலும், சூரிய சந்திரர்களுங் கணக்கற்றகோள்களும் கருதியே தன்னைச் சூழ்தலினாலும் பிரமன் மால் முதலிய தேவர்களிருப்பத் தோடிருந்தலினாலும், பொன்னொளிர் உருவத்தினாலும், புனிதத்தினாலும், பல நீண்டவரைகள் சூழ்ந்திருப்பதினாலும் தவத்தினோர்க்குவருங் கதிவழங்குதலினாலும் தன்னை ஒப்பவர் இல்லைஎன்று கருதித்தருக்கோடு நிற்கின்ற தென்றனர். அதுகேட்டு விந்தமலையரசன் நாரதமுனிவரைப்பார்த்து, மேருமலைமேற் பொறாமையும், சீற்றமும் மிகுந்தெழ உள்ளடக்கிக் கொண்டு கண்களில் கனலெழநகைத்தது. ஓமுனிவர் பெருமானே! முன்னொருகாலம் எங்கோன்முப்புரம் எரிக்கும்போது தன் இருமாப்பு நீங்கச் சகலரும் இகழவில்லாய் வளைபட்டமையைத் தானே மறந்தும் நாண் இல்லாமல் பேசுதல் பெருமையாமோ? தவப்பெருமையினாலே இமயவெற்பரசனிடம் போய் தேவருய்ய விளையாட்டாக அண்டங்களெல்லாம் ஈன்ற அன்னை அங்கிருந்தாள். அதனை அவன் பெற்றமகவென்று சொல்லுதல் தக்கதோ? உலகமெல்லாம் நான் தாங்குகின்றேன் என்று அவன் சொல்லுதல் தக்கதாகுமோ? மேருவாகிய அவனையும் மற்றெல்லாவுயிர்களையும்

தாங்குகின்றவன் எங்கும் உள்ளவனாகிய சிவபெருமானல்லவா! தனக்குப் பலகோடிகள் உண்டென்று பெருமை சொல்வதென்ன? சேடுறுகள்ளிக்கோடுந் திகழ்வது கண்டிலானோ? பெருமை மிக்கதலை நான்குடைய பிரமனினும் உயர்ந்தவன் ஆவனோ? இஃதென்ன அப்பொன் மலைக்கு அறிவில்லா மயக்கம்? சந்திர சூரியர்கள் தேவர்கள் மற்றக் கோள்கள் வந்து அவனைத் தான் சூழ்கின்றதோ? எங்களை எல்லாஞ் சூழ்ந்திலரோ? எழு கடலும் மற்றைத் திசைகளிலுள்ள மலைகளேழும் அந்தவா றென்னையுஞ் சூழும். அதனால் இவ்வகந்தையாமோ? மிக்கவெஞ் சூரன்தானும்மேருவைக்கல்லாய் எண்ணிப்பக்கத்திலும்நோக்கவி ல்லை, பார்த்தால் அது அவனுக்கு ஓர்இலக்காகுமோ? இப்பொழுதே கொல்வன் என்றுசென்றபிறகு அவனுக்கு அஞ்சி ஒளித்த மாலினும் பலத்தால் மிக்கவனோ? பொன்னொளி உடையவனாயி ருக்கின்றேன் என்று தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளலாமோ? பிறர்புகழ்வதன்றோ மேன்மை? அறிவில்லாது தன்னையேபுகழ்கின்றானே பலநெடுவரைகள்பாரில் பொன்னாகவிளங்குவதைக்கண்டிலனோ? சிவன்மால்பிரமர் முதலியதேவர்கள் தன்னிடத்தில் விருப்புடையவர்களாய் இருக்கின்றார்கள் என்றால் என்னிடத்தில் விருப்பமுடைய வர்களாக இருக்க வில்லையோ? அங்குள்ள மிருகங்கள் பட்சிகள் மரஞ்செடிகள்எ ன்னிடத்திலுந் தான் இருக்கின்றன. ஆதிசேடன் அம்மலையின்.முடிகளை மூடின காலத்து, வாயு அவன்முடிகள் மூன்றையும உருளச்செய்த தறியானோ? சிம்புள்நரசிங்கத்தின் வலியடக்கி உலகத்தை யெல்லாம் மடுத்து உளப்புற வப்போது தன்னிலையடுக்கவெல்லாம் தகர்சிறு பரலதாகும். அந்நிலையை அவ்வறிவிலாமேரு அறிந்திலனோ? அச் சரபப்பட்சியின் சிறைக்காற்றால் அண்டகோடிக ளோடுதானும் மின்மினிபோலவும் காற்றாடிபோலவுந் திரிந்த தன்னிலைமையைம றந்தனனோ? விநாயகக்கடவுள் பாரதக்கதையைத்தன் உடம்பில் கொம்பால்எழுதும்போது தன்மேனியெல்லாம் பிறங்கும் புண்ணால் மாழ்கியே வெறுவிய உளத்திற்குங் களிப்புண்டாகுமோ? வேறுளம் பெற்றதுண்டோ? பூமிக்கு அரசனோ? தேவேந்திரனோ? பிரமனோ? மகாவிஷ்ணுவோ? இவர்கள் அல்லாத நூற்று

டைக்கல்லுக்கு என் தன் வலிமை சொல்லித் தன்னை வலியனென்று சொல்லுவது? இவ்விதமாகத் தன்னை வியந்து கூறும் மேருமலையின் அகந்தையை அடக்குகின்றேனென்று கூறி, மாயத்தேடு கூடியமாயவர் ஒருகோடியர் வந்து தன் ஆயத்தோடு ஒருஉருவம் ஆனதுபோல் ஒருவிஞ்சையால் நினைத்து உடனே நிமிர்ந்து பிரமலோகம் வரைவளர்ந்து ஒருபெருமலையாக நின்றது. நீண்ட அம்மலையின் பரப்பு இமையமலை அளவிற்கிட்ட முன்னம் உலகளந்தமாலின் பொன்முட்டைபோல் ஒளிவிளங்கிற்று. இந்தவிதமாக டிவிந்தம் எழுந்து அந்தரம் எல்லாம் கவிந்ததினால் சூரிய சந்திரர்கள் தாம் செல்லுவதற்கு வழியின்றி பை நொந்து இது என்ன! மாயம் அசுரர்செய்புதுமையோ? அரக்கர் செய்தீமையோ? திருமால்பிரமன், இந்திரன் முதலியவர்களுடைய செய்கையோ? என்று இன்னணம் தம்முட்பேசிப்பிறகு மலையேதோன்றுகின்றதென்று தம் அறிவால்விளங்கக்கண்டு துன்றிய செஞ்சடைத்தூயவன் அருளினால் சொல்வார். "விந்தியமலையானது மேருமலையோடு மாறுகொண்டு இந்தவிதமாக உலகமெல்லாம் இடங்கொண்டு ஆகாயமெல்லாம் பரவி ஓங்கிநிற்கின்றது. இது சிவபெருமான் அருளினால் தென்திசைக்குவரும் அகத்யமுனிவரால் வலி அடங்கும். அப்பொழுது நாம் நம் பேரிடரிலிருந்து நீங்குவோம்" என்றுகூறிக்கொண்டனர். பிறகு அகத்தியமுனிவர் சிவபெருமானின் கட்டளைப்படி தென்திசை வரும்பொழுது எல்லோரும் துதித்து. முதலையைக்கொன்று கஜத்தைக்காத்தமால் போலவும், பிரமபுத்திரியைக் கிளியாய்த்தொடர்ந்து வந்தவனின்றும் காத்த சிவபெருமானைப்போலவும், நீ முனம் வேலையை உண்டு உலகத்தைக் காத்தது போலவும், இப்பொழுது இம்மலையின் கருவத்தை அடக்கிக்காத்தருள வேண்டுமென்று வேண்டினர்.

அப்பொழுது குறுமுனிவர் விந்தமலையண்டை வந்தனர், அது விண்ணுறவளர்ந் திருப்பதைக்கண்டார். உள்ளெழுந்தகோபத்தை உள்ளே அடக்கிக்கொண்டு சிவபெருமான் கழல்களை மனதில் நினைத்து விந்தமலையை நோக்கி, வழியில்லாதபடி நீதியின்றி பிரமலோகம் வரை நிமிர்ந்து நிற்கும் மலையே! கேட்பா

யாக, நான் தெற்கே போக வேண்டும் என்னும் எண்ணத்தோடு வருகின்றேன் பிரியத்தோடு எனக்கு ஒருவழி உதவுக என்று வேண்டினன். சூரிய சந்திரர்களுமே ககனத்திற் செல்லாதபடி தடுத்து நிற்கின்றேன். நிதிதருங்கலை நெடியவன் போல் நிலை நின்றேன், பொதியமலைக்குப் போகும் குறு முனியே நான் உனக்கு அஞ்சேன். என்னைச் சிறிதும் மதியாது ஏன் இவ்வழி வந்தாய், நீ தென்றிசைக் கேகவும் வழிவிடேன். முன் நின்று பேசுவதனால் பிரயோசனப் படாது திரும்பவும் வடதிசைக்கேகென்று கூறினன். இவ்வாறு விந்தமலை செப்பவே குறுமுனி சிறுநகை செய்து சிவபெருமானின் கமல பாதங்களை உள்ளத்தே நினைந்து மலையின் உயரம் வரைதன் கையை நீட்டி அதன் உச்சியில் வைத்தே அழுத்திட விந்தமலை தாழ்ந்து சேடன் உலகத்தே சென்றடைந்தது. தேவர்கள் வியந்தனர். விந்த வேந்தன் உடனே அஞ்சிக் கும்பமுனிவர் பாதத்தில் விழுந்து வணங்கிப் போற்றி பிழை பொறுத்து மன்னிக்கும்படி வேண்டத் தண்டமிழ்முனியும் கருணைகூர்ந்து நகை செய்து திரும்பவும் இங்கு நாம் மீண்டு வருகையில் உயர் வாயாக என முன் நாரத முனிவர் தனக்குச் சொல்லியிருந்த படிச் சொல்லி யருளினார். விந்தம் பிலத்தில் ஆழ்ந்ததும், அவ்வரை முனிவர் பாதத்தில் தாழ்ந்ததும், முனிவர் அருள் செய்ததும் ஆகிய இவற்றைக்கண்டு குறு முனியை எல்லோரும் துதித்துப் புகழ்ந்தனர். கும்பமுனியும் தன் கரத்தைக் குறுக்கிக் கொண்டுபலத்தை நல்கும் நெல் வேலியாம் பழம் பதியைக் கொண்டுள்ள தென்புலத்தை நோக்கினன். வானவர் பூமழை பொழிந்தார். விந்தகிரி அசலிடத் தழுந்தலே அகன்ற வானமெல்லாம் வளம்பெற வெளியாயிற்று. ஞான நாயகன் புகழெனச் சூரிய சந்திரர்களின் ஒளி எங்கும் பரந்தது. அப்பொழுது இந்திரன் முதலிய தேவர்கள் வந்து பொதிய முனியைத்துதித்து நீ செய்த உதவியை யாங்கள் மறவோம் தயவுசெய்து எமக்காகத் தென்பதியிலே சிறப்புடன் இருக்க எனப் போற்றினர். அதனைக்கேட்டுக் குறுமுனி மகிழ்ந்து விழுமிது என்று இயம்பி வானவர்களைத் தத்தம் இடங்களுக் கனிப்பிவிட்டு தென்றிசை

நோக்கியே வந்தார். வரும் வழியிலுள்ள சிவதலங்களிலெல்லாம் தங்கிப் பூசித்துக் கொண்டே வந்தனர். என்று சூத மகாமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குக் கூறி மேலுஞ் சொல்லுகின்றார்.

## கஅ-வது வில்வலன் வாதாவிச் சருக்கம்.

பல்வளத் தமிழைத் தந்த பகர்குறு முனிவன் முன்னாள்
வில்வலன் வயாபி என்னும் விரகரைக் கொன்று பின்னர்
புல்லிய பிரமகத்தி பொருந்திடா வண்ண மீசன்
நல்லருங் கழலைப் போற்று நயந்தெரிந் துய்வ மம்மா.

ஓ முனிவர்களே! கேளுங்கள்! தண்டமிழ் முனிவர் சிவ பெருமான் திருவருளினாலே தென்பாகமாகவரும் பொழுது மேலைத் தேயத்தில் வாழ்வோர்களானவில்வலன் வாதாவி என்னும் அவுணர் ஆவி இறக்க எதிர்நின்றார். அகத்திய முனிவரைக் கண்டார். கண்ட அவர் தம்முள்ளே, இக்கும்ப முனியால் கொல்லப்பட்ட அவுணர்க்கோ அளவில்லை. இவன் தேவர்களைக் காப்பதற்காகத் தென்றிசை வருகின்றான் இவனுக்கு உணவளித்து எப்படியாகிலுங் கொன்று முனிவனை உண்ண வேண்டுமென்று பேசிக் கொண்டனர். இந்த விதமாகப் பேசிக்கொண்டு இளையவனாகிய வாதாவி ஒரு ஆடாகித் தழை புல்லருந்திக் கொண்டிருந்தான். மூத்தோனாகிய வில்வலனோ மாதவர் போல் வேடம் பூண்டு அகத்தியமுனிவருக்கு முன்வந்து புறத்தே தவவேடமும் அகத்தே அவவேடமுங் கள்ளமும் விளங்க வந்து கும்ப முனிவரிவன் மலர்ச்சேவடி வணங்கி நீ இங்கே வருதற்கு அரிய தவங்கள் பல செயதேன், நீ இங்கு வந்தருளப் பெற்றதனால் மேலான முனிவர்தம் நிலை பெற்றேன். கையன் இருக்கை இது ஆகும், சீக்கிரம் வீந்தருளின் புனிதமாகும். அடியேன் உய்யும் படி நினது திருவுளத்தில் இரங்கென்று வேண்டினான். நெடு நீருண்ட குறுமுனிவர் அவ்வவுணனின் வஞ்சத்தை உணராது

உள்ளம் மகிழ்ந்து கருணையஞ்ய் அன்பால் உவகைமிகத்தோன்றி அழகுமிகுந்த தவத்தோனே! எழுகநீஎன்று கூறி மேலான முனிவனே நீ தங்கும் இருக்கை எங்கே? புதிதாய் ஏகும் நெறி எங்கே? போவோம் இனி நீ சொல்லென்றான், உடனே பொய் வேடம் தாங்கிய வில்வலன் தன்னிருக்கைக்கு அழைத்துக் கொண்டு சென்று மறையின்படி பூசைபுரிந்து மகிழ்வோடு இனிது புகலுவான் "கும்பமுனியே! யானும் எம்மவரும் உய்ந்திட நம்பன் அருளால் இங்குவந்தனை, இன்றைக்கு இவ் விடத்தே வந்து நான் அளித்திடுவது கூழாயிருந்தாலும் தகவோடு அயின்றருளி நின் சேடம் எனக்கு நல்கியருள்க என்று வேண்டினன். அதற்குக் குறுமுனியும் சம்மதித்து அறிவுடையோய் நின்பால்உணவு செய்தே இன்று இங்கிருந்து பிறகு தான் போவோம் என்றனர் உடனே வில்வலனும் மகிழ்ந்து இருக்கவைத்து நீராடி, சமையற் சாலைசென்று மெழுகிக் கோலமிட்டு, வேண்டும் பொருளைச் சேகரித்து உலைவைத்து அரிசியைச் செம்மையாக மூன்று தரங்கழுவி உலையிற்பெய்தான். மண்டுதழல் மூட்டிப் பதமாயமுதாக்கி அப்பால்வைத்து, முதிரைசமைத் துப்பாலும் இனியகன்னலும் ஆகும் பலவிதமாகச்சமைத்தான். இன்னும் பலகறிகள் சமைத்தான். பிறகு உலகெல்லாம் அழிப்பவனும் ஆட்டுருவமுடையவனுமாகிய வதாபியை இழுத்துக்கொண்டுவந்து கும்பமுனிக்கு முன்னாலறுத்து எலும்பையுந்தோலையுநீக்கித் தூநீரால் கழுவிஊன்முழுமையும் பதமாய்ச்சமைத்துக் கனிச் செய்தான். கன்னல்பெய்து தேன்சோறுசமைத்தான். நெய் பெய்து கறிகள் செய்தான். மிளகுப்பொடியுங் கந்தத்தூளும் காயமுங்கூட்டி கறிகளை வளமாகச்சமைத்திருந்தான். பருப்பும் நெய்யுங்கூட்டிப்பொங்கல்செய்தான். வற்றல், வடகம், துவையல், கரியல், பொரியல், துவட்டல், புறட்டல், முதலிய பலபல வகைப்பக்குவங்கள் செய்து முனிவர் அடியிற்றாழ்ந்து நெடுநேரம் பசித்திருந்து விட்டீர்கள் அடியேனை மன்னித்துப் பேரருள் செய்து அமுதுசெய்தருளுக என்று வேண்டினன். முனிவரும் இசைந்து போயினர்,

போசனசாலையில் புனிதனைக்கொண்டுபோய் ஆசனத்தே இருத்தி வஞ்சன் அன்பர்போல் முகமன் கூறி வானநீர் நறியகந்தம் மலர்புகை தீபங்கொண்டு நேசநல்பூசைகள் செய்தான். நினைத்த எண்ணத்தை முடிக்கவேண்டிப் பொற்கலத்திருத்தி முன்னே பொன்வள்ளங்கள் பலநிரையாய்வைத்து அமுதவுண்டியை அற்புதமாகவாவும் அளித்து அதில்நெய்யும் வார்த்தான். பருப்புச் சாதமும்வைத்து ஆட்டின் கறியும்வைத்து விதம்விதமானகறிகளையுங் கிண்ணங்களில் நிறப்பினான். இனியநற்கனிகளையும் வகைவகையாகவைத்து கையிற்கரகநீரும் உதவினான். கடல் நீரைக் கையிற் கொண்டபெருமான் வார்த்திடுந்தோயத்தை ஆரவே உண்டிருழ அங்கையால்சுற்றி மீள ஒருதரம் நுகர்ந்து பல்காற்கு தனி மற்றுள தாஞ்செய்தே உணவை உண்டுபின்எழுந்துகோலநல் வாசனைப்பொடியினால் கைவாயைக்கழுவித்தேகத்தின் எவ்வகையிடத்தும் மாசுநீக்கிச்செவ்விய மற்றையகாரியங்களையுஞ் சிறப்புறச்செய்து கொடியவினைகளைச்செய்யும் அவுணனின் சாலையில்சிறப்பொடு வீற்றிருந்தார். அப்பொழுது வில்லவன் தான்நினைத்தகாரியத்தை முடிக்கஎண்ணித் தன் இளைஞனாகிய வதாபியைச்சங்கையின்படிக்கூப்பிட்டான். விடத்தினை அமுதமாக உண்டருளிய சிவபெருமானின் மலரடியை மனத்துள்வைக்கும் கும்பமுனியின் வயிற்றைக் கிழித்துக்கொண்டுவா என்று முன்னர் தாம் பேசிக் கொண்டவண்ணமே ஆட்டுருவுடனே சிறுவயிற்றினுள்ளே கிளம்பிஎழுந்து அண்ணனைநோக்கிக் கூறுகின்றான். கடலினை அருந்தியதுபோலநினைத்துக் கொஞ்சமும்யோசியாது என்மாமிசத்தையுண்டு இங்கிருக்கும் இந்தக்கொடியபாவியின் உயிரைக்கொண்டன்றோ தாமதிக்காது அவன்வயிற்றைக்கீறி உன் அருகுவருவேனென்று உருத்து முழங்கினான்.

இவற்றை எல்லாம் கண்ட எழிலுறும் அகத்திய முனிவர் இவைகளெல்லாம் அவுணரின் வஞ்சமென்று தெளிந்து வயிற்றினுள்ளிருக்கும் ஆட்டுருக்கொண்ட வாதாவி மடியவேண்டுமென்பதை உன்னி "வாதவி ஜீரணி" என்று தன் கையாற்றடவினர்.

உடனே வாதாவி வயிற்றினுள்ளே சாம்பல் ஆக ஆயினன். இதனைக்கண்ட மூத்தோன் பழைய உருக்கொண்டு மேகம்போல் சீறித் தண்டேந்திச் சமர்செய்ய வந்தான். உடனே கும்பமுனி வரும் நகைத்துக் கையில் ஓர் குசையை எடுத்து அமலனின் படையாய் எண்ணி அவ்வவுணன் மேல் விடுத்தார். அவனும் மாய்ந்து தம்பிபோல் அழிந்தான். பிறகு கும்பமுனிசெல்லைத் தலத்தினை நோக்கிச் சென்றார் என்று கூறி மேலுஞ் சொல்லு கின்றார்.



## ௧௯-வது, திருக்குற்றாலச் சருக்கம்.



மறுகுறு மனத்துமாயோன் மதத்தவர் தடையை மாயம்
உறுவழி யுளுற்றிச் சென்றே யுலகுயக் குற்றாலத்து
நறுமலர்த் துளவ மாலை நவில்சிவ லிங்க மாகக்
குறுகுக என்று கூறுங் குறுமுனி பதமுட் சேர்ப்பாம்.

கும்பமுனிவர் சிவபெருமானின் தலங்களிலெல்லாஞ் சென்று சென்று பணிந்துபோற்றிப் பொதியமலையைநோக்கி விமானத்தின் மீது செல்லுகையில் முன் இறந்தவில்வலன் வாதாவி என்னும் இருவரும் முனிவராகக்கிட்டிவருவர், எதிர்த்து வருவர், பிறகு மறைவார்கள். பின்னும் முன்னும் வருவார்கள். கருத்தமேனியராய்க்காற்றாடிபோல் முன்வந்து சுற்றுவர். பிறகு மகமேருபோல் வளர்ந்து காணுவர், தேவர்கள் போல் எதிர்வர், பழைய முன்னை ரூபத்தோடும் வருவர்கள் பிறகு அகன்று முடிந்தே போய்விடுவார்கள். பிறகு கோரத்துடன் வருவர், சூழுவர், சுற்றுவர், திரிவா. இந்தச்செயல்களை எல்லாம் அருந்தவத்து மாமுனிவன் கண்டு நனமுறும் அவுணர்களை இறக்கச் செய்தோம், இவர்கள் மாட்சிமைமிக்க குருவாசுரின் புதல்வராகையால் நம்மையே நாடித் தானவர் போலவும் மாதவர்கள் போலவும் வருகின்றார்கள் என்று நினைத்து இந்தப் பிரமகத்திதோடம் நீங்குமாறு சிவபெருமானைக் குறித்து அருச்சனை செய்வோமென்று உடனே அவ்விடத்தேயுள்ள

கொங்கு நாட்டுக்குச் சமீபமாக ஒரு இலிங்கத்தைக்கருத்தாகச் செய்தே கையிலுறும் குண்டிகை நன்னதி நீராலும் தூயகான மலராலும் தூபதீபத்தாலும் வஞ்சகரைக் கொன்ற பாவம் நீங்க அருச்சித்து வணக்கஞ்செய்து வஞ்சகரைக் கொன்ற பிரமகத்தி நீங்கி வேணுவனத்தை நோக்கி வரும்பொழுது சயிலகிரி வந்து சயிலேசர்தாளைப்போற்றி உமாதேவியாரை வாழ்த்தி வணங்கி விரசாநதியில் மூழ்கிப் போற்றி அதனை நீங்கிக் காளத்திநாதர் திருத்தாள் வணங்கி அப்பாற் சென்றார். காஞ்சி நகரத்தைக்கண்டு விமானத்தைவிட்டு நீங்கிப் பம்பை நதியிலும் கம்பை நதியிலும் மூழ்கி ஏகாம்பரநாதரையும் காமாட்சி அம்மையையும் பணிந்து போற்றிப் பிறகு விமானமேறிச் சென்று பிராந்தீசுரத்தைச் சார்ந்து அங்குள்ள கந்தநதியில் மூழ்கிச் சிவனைப்போற்றி கோகன்ன முக்கண்ணரையும் போற்றித் துதித்துக்கொண்டு சதுர் வேதபுரத்தை நண்ணி விமலனுரின் அடிபரவி வழிச்சகாய சுந்தரரையும் பணிந்து பிறகு தூயகோ பருவதத்தைச் சூழ்ந்து போற்றி, அத்தலத்தில் அம்மையார் பூசித்து அருச்சித்த சத்திகேசுரரை அன்பாய் வணங்கி மெய்ஞ்ஞான தீர்த்தத்தில் மூழ்கி, அப்பால் விருத்தாசலத்து வந்து முத்தாநதியிற்றீர்த்தமாடி முத்திதரும் நம்பரனையும் பெரிய நாயகியையுந் தொழுது பிறகு தில்லைக்குவந்து நடராசரை வணங்கிக் காவிரியாடி அங்குள்ள துரோணீசர் கங்கேசர். மாயூரேசர் பசுபதிச்சுரர், மங்களாவடேசர் அக்கினீசர் எமேசர் தம்மை ஆவலொடு கும்பமுனி பரவி ஏத்தி அரன் உறையும் அத்தியர்ச்சுனத்தில் வந்து அப்பதியிலுள்ள அம்மானைக்கும்பிட்டு ஏத்தி ஐயாறு, வீழி, கும்பகோணம், திருவாரூர், நாவலூர், சீகாழி திருவண்ணாமலை, திருவானைக்கா, திரிசிராமலை முதலிய சிவத்தலங்களெல்லாஞ்சென்று சிவபெருமானை வணங்கிப் போற்றிக்கொண்டே வந்து மதுரை மாநகரத்தைச் சார்ந்தார். அங்குள்ள சொக்கேசரையும் மீனாட்சி அம்மனையும் வணங்கி இந்திரனளித்த சிந்தையகிழ் இரசத விமானச்சேவை செய்து பின் திருக்கூடத்திற்குச் சென்றார். அங்குள்ள சித்திர சபை வாசனை உமைபங்கன்வாழ் குற்றாலப்பதியினைக்கிட்டிப்

போய்த் திருமுற்றம் என்னும் இடத்தைச் சேர்ந்தார். அங்கே அநேக வயிணவர்கள் வாழ்வார்கள். அவ்விடத்தில் விஷ்ணுவுக்கு ஓர் ஆலயமுண்டு. அங்குள்ள வேதியர்களெல்லாம் வேதங்களை நன்றாய் உணர்ந்திருந்தும் தம்மதத்திலேயேபற்றுடையவர்களாக இருந்தார்கள். அந்த வேதியர்கள் அரனடியாரைக் கண்டால் சிந்தை வெகுண்டு உடன் சீறி செருநரனவே இகழ்வர். வந்தவர் தம்முகநோக்கார் வார்த்தை சொல்லார், பதில் கூறார். இந்த வகையாகச் செய்து தங்கள் இயற்கை நெறி இகழ்ந்தனர். அங்கு அவர் தம் செயலையுணர்ந்து அருந்தவத்து முனிவர் குற்றாலத்தலத்திடைச் சார்ந்தார். செங்கமலக் கண்ணனுறை திருமுற்றத் தேவாழும் வைணவர்கள் நோக்கித் "திருநீறுங் கண்டிகையும் புனைந்தனே, வேண்டாரினுகி ஒரு வேத்திரமுங்கரத்தேந்தி நீண்டார் முன் குறியவனே வந்த காரணமென்ன? உன்னை ஆண்டானின் இடங்தேடிப்போ" என்று உரைத்தார்கள். அது கேட்டுக் குறுமுனிவர் வேகுளாராய்ப் புன்னகைசெய்து பெரியீர்! நீவிர் போந்திருப்பதறியேனுல், இந்தவகைசொல்வார்களில்லை அதனுல் இங்குவந்தேன். நீங்கள் கோபித்துக் கொள்ளவேண்டாம் நான் போகின்றேன் எனச்சொல்லிப் புறப்பட்டனர், அப்பொழுது வைணவர்கள் சீறி நீ இங்கு வருதலைத் தவிர்க என்ற உடனே கும்பமுனிவருங் குதூகலமுடையவராய் மறை உரையும் இதுவேயாகும் உண்மையைச் சொன்னீர்கள் என்று சொல்லி வெளியேபோய், விண்ணவரும் அறிதற்கரிய விமலனடியாரகள் தம்மை எண்ணிடாமல் துன்பங்கள் பலவும் இயற்றும் இச்சமயத்தோர் மறைதிறம்பும் பாதகராம், இவர் கமலத்து அண்ணல் அருள் சிறுவிதிப்பால் அகந்தையை உடையவர்கள் என்றும் நந்திநாயகன், கமலநான்முகத்தோன், துருவாசன், பிருகு, ததீசி, கோதமன், கண்ணுவன் முதலான சீரியோர்கள் புந்தி வெகுண்டு இடுஞ் சாபம் பொய்க்குமோ எனப்புகன்றான். இந்தவிதமாக உரைத்தருளி ஏகிய தமிழ் முனியும் பரம்பொருளைப் பழித்திடுவோர் தங்கள் மதமுன்னி உறும் அகந்தையினை முதலோடுங்களைகுவன் என்று எண்ணித் தன் உருவம்மாறி சிறந்துவிளங்கும் அழகிய தோற்றத்

தோடு கூடிய பாகவத உருவங்கொண்டு மீண்டும் அங்கே சென்றனர். அப்பொழுது அவரைக்கண்ட வயிணவர்களெல்லாம் பாதத்தில் வந்து விழுந்து வணங்கினார்கள். அப்பொழுது கண்ணனுக்கினிதாகவென்று களிப்பின் ஓதி அவர்களை நோக்கி நீங்கள் பெருமானுக்கடியவராகிய தன்மையால் நான் காண வந்தேன். அகலிடத்து உமக்கு ஒப்பவர் யாருமில்லை, என்னுந் தன்மைகேட்டு விருப்பமோடு வந்தோம். உமது தகவினாற் றெருட்பேருணர்வு உற்றனம் அதனால் சொல்லுவதுண்டு நீங்கள் கேளுங்கள் என்று சொல்லுகின்றார். இன்றைவரையிலுந் திருமலையிடத்து நாமிருந்தோம், இவ்விடத்தில் நாரணன் உண்டென நவின்றனர். அவர் எங்கேயிருக்கின்றார் சொல்லுங்கள் என்றார். என்னலும் வயிணவர்கள் மேல் நடக்கப்போவதை அறியாதவர்களாய், நாரணன் திருக்கோயில் இதுவெனத்தெரிய விரலினாற் சுட்டிக் காட்டினார்கள்; அப்போழுது கும்பமுனியும் சென்னிமேற் கைகூப்பித்தொழுது, அக்கோயிலின் பிராகாரங்களை வலஞ்செய்துவந்து, நாராயணன் முன்சென்று, சேவடி இறைஞ்சி, சமீபத்திலிருந்த அடியார்களை அழைத்து, நம் கண்ணனை வழிபடற்கான மஞ்சன முதலியவை கொண்டு வாருங்களென்று உரைத்தான். அப்பொழுது வயிணவர்கள் அகமகிழ்ந்து நன்றிதென்று, தேன், பால், தயிர் முதலிய மஞ்சனங்களும் மலருஞ் சாந்துந் நல்துகிலும் இன்னும் வேண்டுவன பலவும் கொணர்ந்து பரிந்து முன்வைத்தனர். கும்பமுனியும் நான் வருவளவாலும் மாயவனை சகமுய்ய வரன்முறையே செய்யும் பூசையைப் பாருங்களென்று சொல்லி அரியின்கிட்டச் சென்றனர், இவ்வெருமானை நெஞ்சினுள் நினைத்து, உருகும் அன்பொடும் உட்குழைவோடும் பரனெனப்பாவகம் பண்ணி மாலின்சிரத்தில் தன் மலர்கரம்வைத்து கோலநீடு மெய்குறுகுக குறுகுக எனக்கூறித்தடவி சீலமார் சிவலிங்கத்தின் வடிவாக்கினார். அப்பொழுது வடபூமியும் தென்பூமியும் முன்னிலைப்படி சமதளமானது. செஞ்சடைக்கடவுளின் உருவங்கண்டபின் குறுமுனிதன் பழைய உருவொடும் விளங்கினர். மாலும் அயனும் பணியும் பாதங்களையுடைய மங்கைபாகனைக் கங்கை

யாட்டி அருச்சித்தார், இதனைக் கண்ட வைணவர்கள் எல்லாம் சீறித் தீயெனச்சினங்கொண்டு சிவனின் நேசத்தால் முன் நம்மிடம் வராதபடி வெகுண்டோம் என்று எண்ணி மாயத்தால் வைணவவேடந் தாங்கிவந்து நம்சமயத்தை முற்றும் ஐயோ! அழித்துவிட்டான் பற்றுமின் என்று கூறிக் கோபித்துக் குறுமுனியை வளைந்துகொண்டனர். உடனே குறுமுனிவர் சீறிக் கோபத்தால் விழியிற் கனற்பொறி பறக்க விழித்தார். வைணவர்களெல்லாம் உளந்திடுக்கிட்டுப் பயந்து தம் உரமெலாஞ் சுடவே களைத்து தம் பதிக்குக் கலங்கி ஓடினர். இந்தவிதமாக இவர்கள் ஓடிவிடவே இந்நகரம் இனிச் சிவபெருமான் நகரென விளம்பிச்சிவபெருமானுக்கு அருச்சனைகள்செய்து பொன்னடித்துணைகளை வணங்கிப் பல தோத்திரங்கள் புகன்று பிறகு உமையையும் ஐங்கரக்கடவுளையும் சுப்பிரமணியக்கடவுளையும் முறையே துதித்து வணங்கிச் சங்கு வீதியும் தரணிபீடமும் பிலந்தரு பொன்வாசலும்போற்றி மால் பிரமர்கள் பணிந்தேத்துங் குறும்பலவினைப்பணிந்தேத்தி சித்திரசபையையும் தொழுது அரன் பொன்னடி தொழுதார். இரண்டுவகைப்பட்ட அருவியையும், சீரிடை இந்திரதனுவையும், அரிய பொங்குமா கடலோடு சண்பகாடவியழகும், சிவமது கங்கையின் எழிலும், முனிவரர் சிவயோகியர்கள் பொருந்திடங்களையும் பார்த்தார், கொத்து மாமலர்ச் சோலை சூழ்ந்திடு திரிகூடத்தின் வளம்பார்த்தார், இன்னும்உள்ள வளங்களை எல்லாம் பார்த்தார், அதிசயித்தார், பிறகு சித்தனார் மனம்பொருந்திக் கூறிய நெல்வேலியை நினைத்து அதன் நெறியே சென்றார்.



## உ௰-வது, அகத்தியர் வேணுவனத்துற்ற சருக்கம்.

முத்தென முளைத்த மூர்த்தி மொழிப்படி கும்பன் வந்த
வித்தகத் திருநெல் வேலி விரும்பிவாழ் பொதிய வெற்பு
தத்தியே தரணி பாயுந் தாம்பிர பன்னி யின்ன
உத்தம வுவைகள் மூன்று முளத்திடை யுறுக மன்னோ.

கேளுங்கள் நைமிசாரணியவாசிகளே என்று சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். கும்பமுனிவர் சண்பக வனத்தைவிட்டு மாதவர்கள் சூழவும் இசைகள் பலரும் பாடவும் விமானமீதேறிச் சென்று கந்தமாதன வெற்பொடு விளங்கித் தோன்றும் இராமேச்சுரத்திற்கு வந்து சன்னிதித்துறை நீராடித் தனுக்கோடியில் மூழ்கிக் கோயிலை வலம்வந்து இராமலிங்கப் பெருமானையுந் தேவியையும் பூசித்துப் போற்றிச்சோமகுண்டத்தைச் சேர்ந்து நீராடி சோமநாதரையும் சோமகுலவல்லித் தாயையும் வணங்கிப் போற்றிச் சிந்துபூந்துறைவந்து சேர்ந்தார். திருநெல்வேலியில் சிறந்து இனிதுவாழும் வசிட்டர் கண்ணுவராதிய முனிவர்கள் அகத்தியரின் வரவு கேட்டு விரும்பிவந்து கண்டு முனிவர் பெருமானே உன்னைக்காண நாங்கள் என்ன தவஞ்செய்தோமோ எனக் கூறி இனிய பலமுகமன்களுங் கூறி அளவளாவியிருந்து கும்பமுனிவரோடுஞ் சென்று சிவதீர்த்தமாடி நித்யகருமங்களை முடித்து மன்றினிலாடுவோரை மதித்துத் துதித்துச் சிந்துபூந்துறை விநாயகன்பாதம் போற்றி நறுங்கனி தேங்காய் கன்னல் முதலியவை படைத்து வாழ்த்தி இயல்பொடு அருச்சித்தார். பிறகு முனிவர்சூழ விமானத்தோடு பன்னகவணியான் வாழும் பணைவனப் பதியைச் சார்ந்தார். லோபாமுத்திரை மகிழ்வுகூறவும் தாம்பிரபன்னி தயவுகூறவும் விமலனார் வாழுங் கோயிலைக்கண்டு தரிசித்துப் பொற்றாமரையில் மூழ்கி வலஞ்செய்து சன்னிதிமுன் புநின்று பணிந்து போற்றி விதிப்படி அருச்சித்தார். முன்னால் நின்றுகொண்டிருந்த முனிவருக்கு அருள்செய்ய மூலத்தானத்திலிருந்து கவுரி தோன்றி வரம் நல்க அவ்வரங்களைப் பெற்று

மகிழ்ந்துபோற்றி வலம்வந்து கருமாரி அம்மனைத் தரிசித்துப் புகழ்ந்து போற்றிப் புனிதவேணுநாதர்வாழும் பொற்கோயி லுக்குள் புகுந்தார். கம்பத்தடியையும் இடபதேவரையும் தாழ்ந்து வணங்கி எழுந்து, திருவாயிலிலுள்ள நந்திநாதரைப் பணிந்து போற்றி விடைகொண்டேகி வலஞ்செய்தே ஆதி திருமூல லிங்கத்தின் முன்னே வந்து வீழ்ந்து எழுந்து போற்றி விதிமுறை யாற் பூசித்தார். அனவரதநாயகரையும் சிதம்பரேசுரரையும் போற்றிப் புனிதர் திருக்கங்காளக் கோலத்தையும் போற்றிப் பொல்லா விநாயகனைப்புகழ்ந்து போற்றித் தனிமுதல் விரும்பி நடனஞ்செய்யுந் தாம்பிரசபைதனைக் கண்டு தாழ்ந்துபோற்றி மற்றைத் தேவர்களையும் போற்றி சன்னிதியின் முன்புவந்தார். சிவபெருமானைப் போற்றித் துதித்து அங்குள்ள முனிவர்களுக்குத் தன் வரவைக்கூற, முனிவர்களெல்லாம் நின்னாலன்றோ பூமி சமப்பட்டு உலகெலாம் உயர்ந்ததெனெ மகிழ்ந்து துதித்தனர்.

அதற்குக் கும்பமுனி பாம்பணிந்தபரனாலன்றோ பூமிசமனானதென வுரைத்தனர். பிறகு முனிவர்களெல்லாம் நீ கொண்டுவந்திருக்கு நதியை நெல்வேலிப் பரனருளால் இப்புவிக்கோர் அமுதமாகப்பொதியமலையிலிருந்து குண்டிகையினின்றும் வழிந்துபிரவாகஞ் செய்யச் செய்யில் இவ்வுலகு உய்யுமென, உடனே சிவபெருமானைப் புகழ்ந்து போற்றி விடைபெற்று லோபா முத்திரையோடு சென்று, தாம்பிரபன்னி மாதைமுகநோக்கி உன்னால் இந்தப் பெருமை பெறுதிசை விளங்கப் பாவந்தீரச் செல்லுக எனச் சொல்லி, முனிவர்களிடம் விடைபெற்று விமானத்தில் ஏறிப் பாவநாசத்தைக்கண்டு மகாலிங்கத்தைக் கருதிப்போற்றி அர்ச்சித்தேதத்தி மலையமலையில் நற்றவர்கள் போற்ற நம்பனருள் பெற்ற முனி நடந்து சென்றார். அம்மலையில் பண்ணினான் மறைமுழக்கமும் படர்மழை முழக்கமுந் தேவர்களின் களிப்போசையும் வேதியர் முழக்கும் நாற்புறமும் முழங்கின. சந்தனம், சண்பகம், வேங்கை இத்தருக்களின்றாது அவண் நிறைதலால் பொன்வரைபோல் விளங்கிற்று. வெண்மேகங்கள் வந்துறைதலால் வெள்ளிமலைபோல் தோன்றும், அம்மலையின் பக்கத்தே செம்மணிக்குவை பல தோன்றிடும் பான்

மை சூரியன் அம்மலை கடப்பரிதென்று ஒற்றையாழியந்தேர வன் ஒதுங்கியவிதம்போல விளங்கும். மூக்கனியின் தேன் கள் ஆறென ஓடும். ஆவும் அரியும் உடன்படுத்துறங்கும், யானை யுஞ் சிங்கமுங் கூடி விளையாடும். மான்மரையோடு புலிகூடி உறவுகொண்டாடும். சோலையின் பூவைகள் பாட மயில்கள் ஆடும். ஏழு மூன்றுலகத்திற்கும் மேன்மை பெற்றுளது. இறைஞ்சு வோர் பாவங்களை நீக்குந்தன்மையை யுடையது. தேவர்கள் முனிவர்கள், யாணர்கள், விஞ்சையர்கள், கின்னரர் முதலியவர்க ளுக்கு இருப்பிடமாயிருப்பது. சந்தனம், அகில், வேங்கை, கற்பகச்சோலையில் உள்ள மலர்த்தாதளைந்து உறும் இளந்தென் றல் பொன்னனார் மணிக்கொங்கையிற் பூசுவ புலர்த்தும் தன் மையை யுடையது. செந்தமிழ் மணக்கும் பொதியமலை உச்சி யிற் கங்கையும் வெண்மதியும் செறிந்திருப்பதாலும், பக்கத்தே பவளமும் பச்சையும் ஒளிபரப்புதலாலும், தாங்கும் மானு லும் அரிகரிபுலிச் சருப்பங்கள் பொருந்துதலினாலும் பொதிய மலை சிவபெருமானைப்போல் விளங்கும். ஐம்படைவில்லொடு விளங்குதலாலும், தேவர் பாங்கெல்லாஞ் சிறப்பொடு விளங் குதலினாலும், காவல்செய்து உயிர் காத்திடுங் கருணையாலும் பொதியமால்வரை பூவை வண்ணனைப்போன்றது.

வேதவேதியர்கள் சூழ்ந்திருத்தலினாலும், நீதி மாதவர் நித்தலுந் தொழுதிடலாலும் பாதலத்தொடு ஆருயிர் எல்லாம் படைத்திடலாலும் பொதியமலை போதில் வாழ்பவன்போல் விளங்கிற்று. தாம்பிரவரைப் பொதியம் திருவிளையகன் வளர் இல் முன் செறி இருள்மூடும். இரவிலாது பொன்னகர் முதல் ஏழு உலகிடத்தும் பரிதிகோடி வந்து உதித்தது போன்று ஒளி படரும். அரம்பைமாதர் சுனையில் மூழ்கி எல்லியும் நண்பகலும் இணங்கினரொடுவிளையாடி அல்லில் ஏகிப் பொன் னூடு அணைகுவரென்றால் அம்மலைவளம் யாரே சொல்லுவார். இத்தகைய சிறப்புடைய மலை வளங்களை எல்லாங் கண்டு இது சிவபெருமான் வாழும் சுந்தரக்கயிலாயமே என்று தன்னைச் சூழ்ந்துள்ள முனிவர்களுக்கெல்லாங் கூறினார். அம்மலை உச்சி யில் ஏறி அங்கு தேவதச்சனால் முடிக்கப்பெற்ற பன்னசாலை

யின் சிறப்பெல்லாங் கண்டு பொன்னூட்டு மாளிகை என்று கூறி அம்மனையில் தன் மனையொடும் மாதரொடும் இனிது புகுந்து சிந்தையன் பொடு சிவார்ச்சனைசெய்து சிவபெருமானைக்கண்டு களித்துத் தன் தேவியை நோக்கிக் குண்டிகை மேவிய தாம்பிர பன்னியைத் தென்றிசைப் புவியிடை விடுத்தபின் உவந்தே யாம் இருக்குமிட மென்று சொல்லிச் சிவபெருமானை யுளத்திடை நினைத்து மலையுச்சியிலிருந்து கமண்டலத்தைக் கவிழ்த்தார். அந் நீர் சைய மேவி அக் காவிரி தன்னோடுஞ் சார்ந்தேவையம் உய்யமாபிரவாகமாய் மருவிச் செய்யஆரமுதாமெனச் சிறந்தது. அந்த கமண்டல நீர் பின்னும் ஓர்வையை ஆறாகி சித்திரா நதியு மாகிச் சிறந்து ஓடின. அந்நதியும் தூயவெண்கரம்பல பரப்பி நே ய ஆரமுதென நிலத்திடைப்பரந்தது. குறுமுனிவர்க்குப் பின் னே சூதம் ஆலொடு சந்து அகில் முதலிய சுருட்டி, நித்திலம் மதகரி மருப்பொடு சிதறிப், பாதலத்தினும் பாந்துயர் தாம்பிர பன்னி மகிழ்வோடும் வந்தாள். இதனைக்கண்ட தேவரும் முனி வரும் கும்பமுனியே சிவனெனத்தேறித் தாம்பிரபன்னியைத் தோத்திரஞ் செய்தனர். பகீரதன்பின் சென்ற கங்கைபோலத் தட்சிண கயிலாயமாகிய பொதியமலையிலிருந்து வரும் தட் சண கங்கையாகிய தாம்பிரபன்னி அகத்தியர்க்குப் பின்னே இருகரங்களாலும் மணிகளைக்கொழித்துக்கொண்டே சென் றாள்.

மகரமீனொடு திமிங்கலம், திருக்கைமீன், வாளை, வரால், இறால், மற்றுள மீன்களும், வளையும் நனிபொருந்தியிருந்தன. எகினம் வெண்குருகு குரண்டம் நீர்ப்பரவை நிகரிலாத மற்றுள பதங்கமும் எங்கும் நிறைந்தன.

பதுமராகம், கோமேதகம், முத்து, பவளம் நீலம், வைசி ரம், மரகதம், புட்பராகம், வயிடூரியம் முதலியமணிகள் எங்கும் விழைவுறப்பொருந்திக் கிடந்தன.

புன்னை, சண்பகம், பாதிரி, கோங்கு, பொற்கொன்றை, தென்னை, மா, கமுகு, பனை, தேக்கு, அசோகு, பலாசம், மாதளை,

தாழை, புரசு, அரசு, சுரபுன்னை, புன்கு, காட்டாத்தி, மஞ்சாடி, பொன்வாகை, பன்னீர், பாரிசாதம், கருங்காலி, நாரத்தை, காரகில், வெண்ணுவல், களா, வன்னி, வில்வம், கதலி, சுன்னல், வேங்கை, காஞ்சி, செவ்வந்தி, குரா, செச்சை, மல்லிகை, முல்லை, மருக்கொழுந்து, முதலிய மரங்கள் நிறைந்த சோலைகள் இருமருங்கும் ஓங்கி வளர்ந்து விளங்கும். தேவர்கள் முனிவர்கள் கலந்து இரண்டு கரையும் சிவபூசை செய்யச் சென்று வேணுவன நாதரைத் தரிசித்துக்கொண்டே சென்றார். பொருநை வடக்குமுகமாக வரக்கண்டு சிந்துபூந்துறை வழியாகச் செல்லவில்லையே என்று விநாயகக்கடவுள் தடுத்து அன்பொடு விடுத்தலும் அவ்வாறே சென்றாள். கீழ்த்திசையே போன முனிவர்தனக்குப்பின் வராமல் வடக்கேயிருந்து சிந்துபூந்துறை வழியே செல்கின்றதைக் கண்டு திரும்பிவந்து சிவபெருமான் இமயத்திற் கூறியபடி சிவதீர்த்தத்திற் பொருந்தினளென்று கூறினார். தேவர் முனிவர்களெல்லாந் திருநெல்வேலியே சிறந்த தென்காசி என்றனர். சிந்து பூந்துறை மணிகன்னிகையாகும் என்றனர். இப்பதியே உலகில் எப்பதியிலுஞ் சிறந்தது என்றனர். இந்நதியிலே மூழ்கினோர் பவத்தைத் தொலைக்க வல்லது என்றனர். பின் முனிவர் இனி நாம் தாம்பிரபன்னியின் பின்னே தான் செல்லவேண்டுமென்று செல்ல அவளும் தன் அறிவால் அறிந்து சிவதலங்கள் வழியாகச்சென்று சுப்பிரமணியக் கடவுள் வசிக்குந் திருச்செந்தூரைச் சார்ந்தாள். சிவபெருமான்முன் தமயன் என்றுகூறிய முறையால் பொன்னடிவணங்கிப் பின் கடலிற் கலந்தாள். கடலரசனும் முன்புவந்த தாம்பிரபன்னியைத் தழுவிக்கொண்டு அகத்தியமுனிவரின்பாதத்தையும் வணங்கினன். அவனுக்கு முனிவர் ஆசிகள்கூறிப் பின்விமானமேறி முனிவர்கள்சூழ வேணுவனம் வந்துசேர்ந்தார்.

இதுவே அகத்தியர் வந்தசரித்திரமென்று சூத முனிவர் நைமிசாரணியவாசிகளுக்குக் கூறினார். பின்னரும் முனிவர்கள் சூதமகாமுனிவரைத் துதித்து திருத்துவமிகுந்த பொருநையின் இருகரையிலுமுள்ள சிவஸ்தலங்களையும் அதன்மகிமை

களையுங் கூறவேண்டுமென்று தொழுது கேட்கச் சூதமுனிவர் சொல்லலுற்றார்.

## உக-வது, தென்மலைத் தாம்பிர பன்னித் தீர்த்தச் சருக்கம்.

விண்ணவர் போற்றும் பெம்மான் விமலையோர் பாகன் வாழுந்
திண்ணைய வளங்க ளோங்குந் தென்மலைத் தாம்ர பன்னி
நண்ணருந் தீர்த்த மாடி நதிமுடி யானைப் போற்றும்
எண்ணம துடையார் யாருமியைபத முறுவர் தாமே.

சிவபெருமானின் மலரடி இறைஞ்சும் முனிவர்களே! வியாசர் தாம்பிர பன்னியின் பெருமைகளைச் சுகர்க்குச் சொன்னதைச் சொல்கின்றேன் கேளுங்களென்று சொல்லுகின்றார். ஆதிதேவி அம்பிகையின் கரத்து அவதரித்துத் தூய கயிலைப் பூங்காவில் சீதளாமுதமாகவே திரைக்கரம் பரப்பி நீதியோடந்தப்புரம் வாழுந்தன்மையையுடைய தாம்பிரபன்னி, சிவபெருமானின் அருளினால் அகத்தியரோடுவந்து பொதியமலையிற் பொருந்தி அங்கிருந்து பிரவாகமாகப் பரந்தோடிச் செந்தில் நாயகன் வாழுங் குணகடல் போய்ச் சார்ந்தாள். இந்நதி உற்பவித்த இடத்திலிருந்து சங்கமமாகும் இடம் வரையுள்ள இடங்களில் எங்கே முழுகினாலும்பாவம்போம்,முத்தியுண்டாம். தென்மலையில் சீதர தீர்த்தம் என்று ஒன்றுண்டு அதில் விஷ்ணு திருமகளுடன் மூழ்கிச் சிவபெருமானைப் பூசித்தார். அச்சிவபெருமானுக்குச் சீதரேசுரர் என்றுபெயர். இந்தத் தீர்த்தத்தில் முழுகிச் சிவபெருமானை வணங்கித்தரிசிப்போர் என்றுஞ்சிவனுலகைப் பெற்றிருப்பர். அகத்தியர் மேவுந்தமிழ் மலையத்தில் அவ்வகத்தியர் நித்தமும் பூசித்துச் சேவைசெய்ய அமைத்த பரையோடு விளங்கும் பெருமானுக்கு அகத்தீச்சுரர் என்றுபெயர். அவ்விடத்தே அகத்திய தீர்த்தமென்று ஒருதீர்த்தமுமுண்டு. அரிமுன்னாளில் ஓர் வாமனமாதங்காலம் வரும் அத்தீர்த்தத்தில் வாமனமாய் மூழ்கி ஈசுரரை அமைத்துப் பூசித்தான். அச் சிவ

பெருமானுக்கு வாமனேசுரர் என்றுபெயர். அதற்கு வாமன தீர்த்தமென்று பெயர். இத்தீர்த்தமேயன்றிச் சக்கர தீர்த்தம், பாவன தீர்த்தம் என்றுவேறே இரண்டுதீர்த்தங்களுமுண்டு.

இன்னும் அத்தென்மலையில் விக்கினேசுரர் மூழ்கும். விக்கினேசுர தீர்த்தமும்உண்டு. கேசவவீசர் என்றோரீசர் உண்டு. அதற்குச் சமீபத்தில் சிவ கூடபருநீபதமும் அங்குளது அதில் பல முனிவர்கள் சூழ்ந்திருப்பார்கள். நாரணர் நரசிங்க உருவத்தோடு மூழ்கிய தீர்த்தமும் பூசித்த பெருமானும் உண்டு, அத்தீர்த்தத்திற்கு நரசிங்கத் தீர்த்தம் என்று பெயர். அம்மூர்த்திக்கு நரசிங்கேச்சுரர் என்று பெயர். பன்னகராட்டனந்தனும் தீர்த்தத்தில் முழுகிச் சிவபெருமானைத் தாபித்துப் பேறு பெற்றான், அத்தீர்த்தத்திற்கு அநந்த தீர்த்தமென்றும் பெருமானுக்கு அனந்தீச்சுரர் என்றும் பெயர். வாணனும் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதில் முழுகிச் சிவபெருமானைத் தாபித்து வணங்கிப்பேறுபெற்றான். அத்தீர்த்தத்திற்கு வாணதீர்த்தமென்றும் அப்பெருமானுக்கு வாணலிங்கேசுரரென்றும் பெயராம். இதல்லாமலும் பாஞ்சாலம் சுதரிசனம்எனவும் அத்தலத்தில் இரண்டுதீர்த்தங்களுண்டு, நாராயணன் வராகமாக உருக்கொண்டுவந்து ஓர் தீர்த்தம் ஏற்படுத்தி அதில் முழுகிச் சிவபெருமானைத் தாபித்து வணங்கினான். அத்தீர்த்தத்திற்கு வராக தீர்த்தமென்றும் அச்சிவபெருமானுக்கு வராகவீசர் என்றும் பெயராம். தாம்பிரபன்னியால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தமும் மூர்த்தியுமுண்டு. அத்தீர்த்தத்திற்கு தாம்பிரபன்னித் தீர்த்தமென்றும், அவ்வீசருக்குத் தாம்பிரப்பன்னீசர் என்றும் பெயராம். இன்னும் முனி தீர்த்தம், கன்னியாதீர்த்தம, வருணதீர்த்தம், பாவநாசத் தீர்த்தம், துற்காதீர்த்தம் என்னும் பஞ்ச தீர்த்தங்களுண்டு. இந்த விதமாகத் தீர்த்தங்கள் பதினெட்டும் ஆலயங்கள் ஒன்பதும் உண்டு. இத்தீர்த்தங்களில் மூழ்கிச் சிவபெருமானைவணங்குவோர்கள் பாவமெல்லாம் நீங்கப்பெற்று மும்மையின்பத்தையும் பெற்று முடிவில் முடிவிலா முத்தியின்பம பெற்று வாழ்வார்.



## உஉ-வது, பாவநாசச் சருக்கம்.

பாரிடை யுயிர்க ளெல்லாம் பவமொழிந் தின்ப நண்ணக்
காரிடை கலந்த கண்டர் கயிலையி லமரர் போற்றச்
சேரிட நினைந்து போற்றிச் சிவனருள் பொருநை பெற்ற
தேரிடு பாவ நாசத் திருப்பதி பரவு வோமே.

வாழை பலா மா முதலிய முக்கனி தருந் தருக்களும், தென்னை கமுகு முதலிய மரங்களும், சண்பகம் வகுளம் முதலிய மலர் தருந் தருக்களும்நெருங்கிய சோலைகளையுடையதும், செந்தேன் பாய்ந்து செந்நெல் விளையும் கழனிகளையும் கன்னற்படப்பையும் டையது பாவநாசம் என்னுஞ் சிறப்புடையதலம். எம்பெருமான் ஆலயமும் அதனைச் சூழ வேள்விச்சாலைகள் பலவும் விளங்கும். மாலயன் காணுந்தா ரிவுடன் விரும்பி மேவியிருக்கப் பெற்றுள்ள சிறப்பையுடையது பாவநாசமென்று பண்ணவர் ஏத்துந் தலம். பொதிய மால்வரையின் சாரலில் வடபாலில் ஓங்கும் இக் கதிதருதலத்தில் முதிய முக்கூடல் வாழும் முக்களாவுடைய நாதன் மேவுவர். இந்தப் பாவநாசர் ஆலயமுன்பாக வடக்கு முகமாக ஓடும் பொருநை நீரில் மூழ்கிப் பத்தியால் வழிபட்டேத்தும் பண்பினரின் பாவங்களை இத்தலம் போக்கும். உலகத்தில் தோன்றும் பல உயிர்களும் பாசவலையிற் சிக்கி ஆணவ மலத்துக்குள்ளாகி இருவினையின் மாள்கி யலைதலை, தாம்பிரபன்னி நோக்கி உயிர்களின் பாவங்கள் நீங்கி முத்தி பெறுதலைக் குறித்து ஈசனைப்பொன்மலரெடுத்து அருச்சித்து விதிமுறைப்படி தூபதீபங்கள் நைவேத்தியங்கள் வழங்கிப் போற்றினள். அப்பூசைக்கு உவந்து காணும் அன்பால் கணங்கள்சூழ இடபாரூடராய்ப் பார்வதி தேவியாரோடும் தேவர்கள் போற்றக் காட்சி கொடுத்தருளினர்.

சிவபெருமானின் திருக்கோலத்தைப் பொருநைமாதுங் கண்டு பேரன்போடு வாய்குளறி மேனி விதிர்ப்புடன் புளகங் கொள்ள உவகை வெள்ளம் வழிந்து தோன்றத்துண்ட வெண்பிறையினனைத் தொழுது தோத்திரங்கள் பல மொழிந்தாள்,

அண்ணலே! நீதான் அளித்த உயிர்கள் எல்லாம் பாவத்தால் நரகிற் சேரலாமா? அவைகள் நரகஞ் சேராதிருத்தலை எண்ணி இப் பூசை செய்தேன், இரங்கி அப்பாவங்கள் போக்கிப் புண்ணியம் எவர்க்கும் நல்கிப் பொன்னடி அருள்வாய் என்றாள். இந்தவிதமாக வணங்குந் தாம்பிரபன்னியை நோக்கிச் சிவபெருமான் உனது இரக்கம் நன்று, உயிர்களுக்கெல்லாம் பாவங்களை நீக்கி இன்பம் நல்கினோம், எம்மை உன்னி என்றும் இன்பம் கனிதருபூசைசெய் என்று சொல்லிப் போயினார். இதனைக் கேட்டுப் பொருநைமாதும் புகழ்ந்து வாழ்த்தித் தனிமுதல் பாவநாசர்தாளிணை நினைந்து போற்றி, இனி எனக்கு இதன்மேற் பேறு உண்டோ? என்று பூசை நலம்பெறச் செய்து வந்தாள். பொருநைமான் சிவபெருமான்றனக்கு நல்கிய வரத்தால் உயிர்களின் பாவங்களை எல்லாங் கருணையோடு போக்கி நிற்கும். ஆகையினால் பாவநாசமென்னும் பெயரோடு கூடிய முக்கூடல் வருபுனலதனின் மூழ்கி வணங்குவோர் கயிலையில் இனிது வாழ்வர். முக்கூடற்றீர்த்தத்தில் முழுகி சன்னிதி நீராடினால் வணிகன் செய்த பாவத்தைத் தீர்த்த நந்தணி குழையாரைச் சத்தியோடும் தரிசித்து பேரின்பமுத்தியெய்துவர். அத்தலத்தில் சுயம்புலிங்கம் ஆதியுமனாதியாகும் விண்ணவர் முனிவர் வேதா முதலியோர் விரும்பி ஏத்தி நித்தமும் பூசை செய்வர் நெறியொடுங் கனிந்துபோற்றிக் கத்தனை நினைத்தோருங் கதிசேர்வர். புனிதநீராடிப் புண்ணியதலத்தில் ஜெபம் தபம் வேள்வி முதலியவற்றைச் செய்வோர்கள் அனந்தகோடி பலன்களைப் பெற்றுப் பாவநாசர் சரண கமலம் மருவிவாழ்வார். இதுவரை பாவநாசத்தின் பெருமையைச் சொன்னோம் இனிக் கத்தனார் கருணைநாதர் திருமூலர் கதையை சொல்வோம்.



## உ௩-வது, திருமூலநாதச் சருக்கம்.

நகத்தினை வில்லாக் கொண்ட நாதரி னடியே போற்றும்
அகத்தியர் வேண்டிப் பூசை யணிபெற வியற்ற வன்பால்
மகத்துவ வரங்க ளீந்த மகிழ்திரு மூல நாதர்
அகத்திடை யிருக்க நாளு மழிவிலை முத்திக் கம்மா.

கார்மேகங்கள் வந்து தங்கப்பெற்ற சோலைகளிலெல்லாம் கனியினின்றும் இழிகின்ற தேனை அருந்தி மந்தி பொருநையூடு குதிக்க வாளைகள் மரங்களிலும் சூல்மந்தி மணிப்புரிசையிலும் முறையே தாவப்பெற்ற வளப்பத்தையுடையது திருமூலநகரம். அந்நகரத்தில் நான்மறை முழங்கும் ஓதையும் வேள்விகளின் ஓதையும் கலந்து ஓங்கும். கானம் மதுகரங்கள் பாடக் களி மயில் நடிக்கும். சோலைகளிலெல்லாம் தேன்மழை பொழியும். இந்த நகரத்தில் கன்னியோர் பாகன் முக்கட் கங்காளன் அரம்பைமாதர்களும், தேவர்களும், முனிவர்களும், போகர்களும், சித்தர்களும், யோகர்களும் மருவிவந்து தரிசித்துப் பூசித்துப் போற்ற வீற்றிருப்பர். ஒருகாலத்தில் அகத்தியர் திருமூலலிங்கநாதரைச் சாயரட்சையிற் சேவித்து இரவெல்லாம் நித்திரைசெய்யாது அடுத்தநாள்விடியும்போது பொருநையில் மூழ்கி நதியிடைத்திருமூலலிங்கரைத் தரிசித்தார். உடனே அகத்தியர் மெய் புளகங்கொண்டு இதில் ஏதோ விசேடமிருக்கிறதென்று தீர்மானித்து அந்நற்றலத்திற் சென்று தேவர்க்கவியைநல்கும் வேள்வியொன்றைச் செய்து சிவபெருமானை ஏத்தித் துதித்து இந்தநற்சாலர் தீர்த்தத்தில் இன்பமாய் வந்து மூழ்கிச் சிந்தையில் நினைந்து நினைந்து கசிந்து வந்து தரிசிப்பொர் பாவங்களை எல்லாம்போக்கி முத்தியருளவேண்டும் என்று வேண்டினர். அதற்குச் சிவபெருமான் அவ்வரமருளிப் போந்தனர். அவ்வரங்களைப் பெற்று கும்பமுனியும் பொதியம் போயினர். ஆகையால் இத்தலத்திற் தீர்த்தமாடி இறைவனை வணங்கினோர் வெவ்வினை அகன்று இன்ப வீடெய்துவர் என்று கூறி சூதமகாமுனிவர் காசிபேசுரர் கதையைச் சொல்லுகின்றார்.

## உசு-வது, காசிபேசுரச் சருக்கம்.



காசிபர் பேறு பெற்ற காசிபே சுரர்தாள் போற்றி
ஆசிறச் சிவசன் மாவுக் கருள்தமிழ் முனிதாள் போற்றி
தேசினற் சிவசன் மன்பொன் திருப்பிடாச் சாந்தன் வீய
வீசரு ளெரிச்சாட் பெம்மான் விரைமலர்ச் சரணம் போற்றி.

காசிபேசுரத்தில் தடாகத்தில் வண்டுகள் மொய்க்கப்பெற்ற தாமரை மலரின் தோற்றம் சந்திரனுனது தன் களங்கம் மாற இத்தலத்தில் நீரில் நோற்பதுபோலத் தோன்றும். கன்னலும் கமுகும் மாவும் கதலியும் பலவுஞ் சூழ்ந்து பொன்னகர்போல விளங்கும். சங்குகள் சூலுளைந்து தாமரையில் முத்தை யீனும், அன்னங்கள் அம்முத்தினை முட்டையென்றெண்ணி அடைகாக்கும். மங்கையர் யாழிேைசை, முரசம் ஆர்க்கும் ஓசை, வேதம் ஓதும் ஓசை ஆகிய இவைகள் எல்லாம் ஒன்றாய்க்கூடி எழிலியோடு இகலியார்க்கும். இந்தக் காசிபேசுரம் காசிபர் பேறு பெற்ற தலம். இந்தவிதமான வளங்கள்மிக்க இந்தத் தலத்தில் காசிப முனிவர் வெண்மணல்குவித்து முக்கண்ணித்தனை அமைத்து பூசைநியமமாகச் செய்ய எண்ணி, அவ்வாறே வகுத்து அழகிய லிங்கத்தைச் சுருதியின் முறையே காசிபதீர்த்தத்தில் மூழ்கி நறுங்கனி செந்தேன் எண்ணெய் கந்த நெய் தயிர் பால் முதலிய வற்றைக் கொண்டு வேதவிதிப்படி பூசைசெய்து இறைவர் இணையடிபோற்றி வாசமாக அங்கேயே வசித்துப் பெறுதற்கு அரிய பெரும்பேறுகள் பெற்றார். காசிபர் அங்குவந்து பூசைசெய்ததால் அந்நகரம் காசிபேசுரநகரென்றும், அங்குள்ள தீர்த்தத்திற்குக் காசிபேசுரத் தீர்த்தமென்றும், அங்குள்ள மூர்த்திக்கு காசிபேசுரமூர்த்தி என்றும் பேராம், இந்தச் சிறப்பையுடைய தலத்தில் தீபதீர்த்தமென்று ஒரு தீர்த்தமும் அதற்குச் சமீபத்தில் எரிச்சாளுடைய மூர்த்தியும் விளங்குவர். இதன் வரலாற்றைச் சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சூதமுனிவர் சொல்லுகின்றார். சிவமறையோரின் மிக்க சிவசன்மா என்னும் வேதியன் தாம்பரபன்னித்தீர்த்தமாடி அகத்தியரைத்

தரிசிக்க விரும்பி தூய்யவெண்ணீறு பூசித் தூவளுமுந்நூலும் பூண்டு கையில் ஒரு தண்டுங்கொண்டு மிக்க திரவியத்தையும் எடுத்துக்கொண்டு மெய்த்தளர்விேனுடும் மிகுந்த மூப்பினே டுந் தென் மலையை நோக்கிக் காஞ்சியைப் போற்றித் திருவாரூர், திருக்காளத்தி, சிதம்பரம், சீகாழி, பழமலை, சிராப்பள்ளி, நாவலூர், கடலூர், மதுரை, குற்றுலம் முதலிய சிவாலயங்களையும் நெறியோடு போற்றி சிவபிரானை வணங்கிக்கொண்டு நெல்லையில் வந்து அமலனைப் பணிந்து போற்றித் தாம்பரபன்னி யிருங்கரை மருங்கு சார்ந்தான். அங்குறை காசிபேசராலய மதனை நண்ணிப் போற்றித் திங்கள் வேணியனைச்சூழ்ந்து சிவசன்மா திரும்பும் போதில் சாந்த வேதியன் என்னும் ஒருவனைக் கண்டு ஒருவரோடொருவர் நட்பாடி அளவளாவிச் சாந்முனிவனின் மனையில் அமுது செய்து தான் கொண்டுவந்த பொருளை வேதியன் கையிற்கொடுத்து, நான் தமிழ்மலை யிடத்துச்சென்று அகத்தியரைத் தரிசித்துத்திரும்பி வரும்வரை இத்திரவியத்தைக் காத்துவைத்திருந்து நான் திரும்பிவரும்பொழுது கொடு என்று சொல்லிக் கூறி விடைபெற்றுச் சென்றான். பொருநையின்கரையூடே உணவைநீத்து நெறியோடுசென்று,சித்தன் கோயில் சூழ்ந்து அரனைப் போற்றிமுக்கூடலாடிப்பாவநாசத்தைப்பணிந்து போற்றித்தென் மலை யதனில் ஏறித் தீர்த்தங்களாடிச் சிவபெருமான் உள்ள தலங்களிலெல்லாம் இடங்களிலெல்லாம் போய்ப் போற்றிப் பன் மலைப்புடைகடோறும் பண்ணவர்கள் தவஞ்செய்யுங் கன்மலை பலவுங் கண்டான். ஆனல் அங்கெல்லாங் கடல் முனியைக் காண வில்லை. பின்னும் அம்முனிவரைக் காணவேண்டிப் பலபேராறுகளையும் பலவெஞ்சுரங்களையும் பல முட்கானங்களையும் கடந்து மலையின் ஏற்றங்களைக்கொடிகளைப்பிடித்து அங்கேறியும் தேடிப் பார்த்துங் கும்பமுனிவரை எங்குங்காணமுடியவில்லை. விருத்தாப்பியத்தினுலும் உணவில்லாமையினுலும் மயக்குற்று வீழ்ந்து சிறிதுதெளிந்தபின் எழுந்து தேடிப்போவான் இவ்விதமாகத்தேடியும் காணுமையால் இனிச்சிறிதும் உயிர்தாங்கியிரேன் தேடிக் காண்பது அல்லது உயிரை விடுவதென்று உறுதி செய்துகொண்டு தேடிப் போய்க்கொண்டிருந்தான். காலறத் தேய்ந்தாலுங்

காண்பேன், மேலறத்தேய்ந்தாலுங் காண்பேன், என்று நடந்து கொண்டும், காலெல்லாம் தேய்ந்த பின்னர் புரண்டுகொண்டும், கையினால் தவழ்ந்தும், கால்கள் தேயவும், மேனிகன்றி சதை கழிந்து வெள்ளெலும்பு தோன்றவும். அவ்வெலும்புகள் தேயவும் வருவதைக் கும்பமுனிவர் கண்டார் தம் பொருட்டாக உயிரையும் வெறுத்துச் சிரமத்தை எல்லாஞ் சிறிதும் பொருள் செய்யாமல் வருவதைக் கருதி அருள் செய்ய விரும்பி விருத்த வேதிய உருவோடு அவனுக்கு முன்றோன்றி இவ்வளவு வருத்தப்பட்டு எங்கே வந்தாய்? எங்கே போகின்றாய்? என்று கேட்டார். அதற்குச் சிவசன்மா தெற்கே தாம்பிரபன்னியில் மூழ்கிச்சிவாலயங்களனைத்தையுந் தரிசித்துக்கொண்டு வந்தேன். இனி அகத்தியரையுந் தரிசித்து அவரையும் வணங்கச் செல்கின்றேன் என்றனன். அது கேட்டு விருத்த உருவோடு வந்த அகத்தியர் புன்னகை செய்து "என்ன ஏழைமை மதியால் வந்தாய்? கும்பனைக்காண முடியுமோ? முடியாது உன் நகருக்குத் திரும்பிப் போவாயாக" என்றார். அதற்குச் சிவசன்மா கோபத்தோடு "கும்பமுனிவரைக் காணேனாயின் உயிர் விடுவதன்றி இனித்திரும்பிப் போவதில்லை" என மறுமொழிகூற மனமகிழ்ந்து, சிவவேதிய சிரோன்மணியே! நாமே அகத்தியன் என்று கூறிப்புதுவேடம் நீங்கிப்பழம் உருவோடு விளங்க, சிவசன்மா கண்டு கண்ணும் மனமுங் குளிர்ந்து உடல் புளகங்கொண்டு, பூசித்துக் கழலைப்பணிந்து போற்றித் துதித்தான். கோடி சூரியர்கள்போல் விளங்கும் அகத்திய முனிவனைப் பலரும் துதிகள் சொல்லி ஏத்தித் துதிக்கவே கும்பமுனிவரும் மிக மகிழ்ந்து கருணைகூர்ந்து நம்மை நீ கண்டதாலே சிவபெருமானின் அருள் உனக்கு உண்டாகும் என்றுகூறி முனி தீர்த்தத்திடத்திற் சார்ந்தான். சிவசன் மாவை நோக்கி இது நம் பெயரால் பொருந்திய தீர்த்தம் இதில் நீ மூழ்கி ஏகெனச்சொல்லி கையிற்றீபம் ஒன்றளித்து அமிழ்த்திவிட்டார். அவ்வாறே அகத்தியன் மூழ்குவித்த தீர்த்தத்தில் மூழ்கிப் பொருநையோடேகி வந்து சாலா தீர்த்தத்திற்குச் சமீபத்தில் வந்தான். தேவர்களெல்லாம் மகிழ்வோடு இயங்களார்த்து மலர்மழை பொழிந்தனர். சிவசன்மா தன் பாவங்களும் மூப்புங்கழியப் பதினாறுவயது காளையா

னி மிக்க அழகிய உருவோடு தோன்றி முன்னே தீர்த்தத்தில் முழுகுவித்த அகத்தியர் எதிரே தோன்ற அவர் பாதங்களில் விழுந்து போற்றித்தொழுது நின்று பலவாறு துதிகள் புகன்று பேரானந்த வீட்டைனக்கருள வேண்டுமென்று பணிந்து வேண்டினன்.

கும்பமுனிவரும் "சீர்பெறுகதி எய்துவை" எனவரமளித்து மறைந்தருளினர். சிவசன்மாவும் திசைநோக்கித் தொழுது போற்றிக் காசிபேசுரர் கோயிலில் கடிது சென்று நேசமாய்ப் பணிந்து போற்றி மலரினலருச்சித்து ஈதிப் பெருமானிடத்தில் விடை பெற்றேகி முன்னே கொடுத்து வைத்த வேதியனிடத்திற் பொன்னை வாங்கச் சாந்த வேதனின் நன்மனைக்குப் போயினன். அங்கு சாந்தவேதியனைக் கண்டு போய்வந்த சங்கதிகளை எல்லாம் மகிழ்ச்சியோடு கூறினன். முன்கொடுத்த பொருளைத் தாவெனக் கேட்டான். அதற்குச் சாந்தன் முன் என்னிடத்தில் பொருள் தந்தோன் விருத்தவேதியன், நீ வாலிபனக இருக்கிறய் உன்னிடத்தில் நான் பொன் வாங்கவில்லை ஆதலினல் தருதற்கு முடியாது போவென மொழிந்தான். பொய் பேசலாமா ! நானே அப்பொழுது தந்தேன் என்வடிவம் நீங்கின காரணங்களை எல்லாம் இப்பொழுது சொல்லினேனே நீயும் அறிந்தனையே, இல்லை என்று சொல்லாமற் பொருளை ஈவாயாக என்றனன். நீ என்ன பல சொன்னலும் பொருள் உன்னிடம் யான் வாங்கவில்லை இது சத்தியம், நீ விரும்புவாயானல் காசிபேசுரர் சன்னிதியில் சத்தியஞ் செய்வேன் என்றான். அதற்குச் சிவசன்மா நீ சொன்னது செய்ய வல்லையேல் அது செய்வாயாக என்று கேட்டபொழுது இன்று போய்நாளை வா என்று கூறி வரதனர் கோயிலில் வந்து காசிபேசர் மலரடி வணங்கிப் போற்றிச் சிவசன்மாவுக்கு உண்மை சொல்லும் வரையிலும் சிந்துவி லிருக்கவேண்டு மென்று பொன் மணிக் கும்பத்தில் புந்தி மந்தரத்தினலே தாபித்து புளிமேல் வைத்தான். அப்பொழுது காசிபேசுரர் சிவசன்மாவின் கனவிற் றோன்றி "என்னைச் சாந்தன் புளிமேல் வைத்தான் ஆகையால் அப்புளியின் அடியில் சத்தியஞ்செய்யச்சொல்" என உடனே விழித்தெழுந்து

காசிபேசரின் இரக்கத்தையும் இயல்பையும் நோக்கித் தொழுது போற்றிச் சூரியன் உதித்த உடன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு சிவசன்மா சிவனை உன்னிஅன்று பொன் வாங்கிக் கொண்ட சாந்தனிடத்திற் சென்று நேற்று நீ சொன்னபடி சத்தியஞ்செய்ய வேண்டுமென்று கேட்கச் சாந்தனுஞ் சம்மதித்துப் பொருளை யாடிக் கன்னி பாகர் காசிபேசுரர் ஆலயத்தில் சன்னிதி முன்பு சொல்ல விரைந்தேகும்போது, சிவசன்மா, நீ காசிபேசர் சன்னிதிமுன்பாகச் சொல்ல வேண்டாம் இப்புளியின் முன்னே புங்கமறை யோய்! உண்மை புகலுக என்றனன். சிவசன்மா அவ்வாறு புகலக் கேட்டுச் சிவமறைச் சாந்த வேதன் காசிபேசுரரை அங்கு தாபித்ததை அறிந்தும் அஞ்சாமல் பவவினையால் சத்தியஞ் செய்வேனென்று சென்றான். புளியின் முன் ஐந்தடிஎடுத்து வைத்து இன்னொரு அடி எடுத்து வைக்கப் போவதற்குள் காசிபேசர் உந்திய கோபத்தீயால் உடனே ஒரு கணத்திற்குள் சாம்பரானான். அப்பொழுது தேவர்கள் ஆர்த்தனர். அங்கிருந்த தபோதனர்களெல்லாம் ஆர்வுற்று அற்புதங்கள் எய்தி அரனடி போற்றி நின்றனர், புளியொடு சாந்தனும் எரிந்த அந்த இடத்தில் நேர்பெற ஒருலிங்கம் உற்பத்தியானது. சிவசன்மா முதலியவர்கள் கண்டு நாயகன் கீர்த்தியை அன்போடு பாடினர். அங்கெழுந்த லிங்கத்திற்கு எரிச்சாளுடையார் என்று திருநாமமிட்டார்கள். சிவசன்மா அச்சிவபெருமானை, முன்பு சாந்தன் பாலீந்த பொன்னை நீர் வாங்கித்தாரும் என்று போற்றித் துதித்துக்கேட்டான். அதற்குச் சிவபெருமான் மகிழ்வோடும் எரிபட்டிறந்த சாந்தனின்சுற்றத்தாரை அழைத்துநோக்கித் தூயசிவசன்மாவைத்த பொருளைத்தந்திடுமென அவர்களும் அஞ்சி அவன் பொன்னைக்கொணர்ந்து கொடுத்தனர். சிவசன்மாவும் விரும்பி அப்பொன்னை வாங்கிக் காசி பேசுரர் கோயிற்றிரு மதிள்களுங் கோபுரங்களும் அமைத்து, எரிச்சாளுடைய நயினார் திருக்கோயில் செம்பொன்மணிமண்டபம் முதலியவற்றைச் சிறப்பாய்ச்செய்து கொடிபெறுங்கம்பம் இடபம் பலி பீடம் முதலியவற்றையும் கருத்தாய்ச்செய்து கோயிலைவலம்வந்து பணிந்தான்.

நீண்ட வீதிகளும்மணிமாளிகைகளும் பொற்றோரணங்களுங்காவணங்களும் வாவி பொழில் நந்தனவனங்களும்திருக்குளங்களும் புடைசூழ்புரிசைகளும் அறச்சாலைகளும் வேள்விச்சாலைகளும் இடத்தெல்லாம் அமைத்து அதற்கு நவபுரமென்றும் பெயரிட்டான். அந்த நவபுரத்திலேயே சிவசன்மா இன்புடனே வசித்து எரிச்சாளுடையர் காசிபத்தர் மலர்ச் சேவடிகளைப் பணிந்து பலகாலம் இனிது வாழ்ந்து அவர் பதத்தைச் சார்ந்தான்.

முன்னம் எரிந்த மறைச்சாந்தனுக்கும் ஈசன், தன் முன்னெரிந்தமையால் அமரருலகம் பெறவளித்தார். இந்த நவபுரத்தே இரண்டு இலிங்கங்களுண்டு அவைகள் வந்தவகையும் அடியவர்களுக்கு அருளுந் திறனும் அற்புதமாம். அச்சிவலிங்கங்களை அருச்சித்துக்கனியுமுளத்தோடு தரிசிப்போர் பந்தவினை சேர்பவந்தொலைந்து பரமனடித் தாமரை பெறுவர். முதிய மலையத்துத் தமிழ் முனிவன் முன்ன மீந்தகரத்தீபம் விதியின் வாங்கிச் சிவசன்மா விரும்பி வந்து இங்கு எழுந்திடலால் புதிய தீபதீர்த்த மென்பர். பொருநையில்மூழ்கில் அதிக சிவஞானமும் பெறுவர், அமலன் அடியும் பெறுவர். என்று சூதமுனிவர், வியாசர் சுகருக்குச் சொல்லியவற்றை நைமிசாரணிய வாசிகளுக்குக் கூறித் திருக்கோட்டிநாதன் கதையை நவில்வேனென்று முனிவரர்களுக்குச் சொல்கின்றார்.

## உரு-வது, திருக்கோட்டீச்சுரச் சருக்கம்.

இகத்துநற் பரத்து மின்ப மினிதருள் தமிழ்நின் றோங்க
நகத்தினை வில்லாக் கொண்ட நாதனு ரருளாற் றென்பால்
அகத்திய நாமந் தாங்கி யடைதரு முனிவன் போற்றும்
மகத்துவத் திருக்கோட் டீசர் மலரடி மருவி வாழ்வாம்.

நிலவளநீர்வள முதலிய பலவளங்களாலுஞ் சிறந்தோங்கும் திருக்கோட்டீச்சுரமென்னுந் திவ்விய தலத்தில் மலையத்தமிழ் முனிவர் சர்ப்பாபரணராகிய கோடீசவிமலரடியில் அருச்சித்து

கதிபெறுதற்பொருட்டு மணலால் லிங்கம்பிடித்திடலும் 'அது திருவருட்செயலால் சரிந்துபோயிற்று. இவர் பலதரம் முயன்றும் பயனில்லாதுபோயிற்று; கும்பமுனிவரும் சலிப்பெய்தி ஞானத்தாலுணர்ந்து இது சிவபெருமானின் திருவிளையாட்டென்று "நகமீனே! இங்குடனக்கு இஃதென் கோட்டி" எனச்சொல்லி மேனியையும் சென்னியையும் இருகரத்தில் அன்பாய்ப்பிடித்துத் தழுவிக்கொண்டு நிமிர்ந்தெழுந்தார். உடனே சிவபெருமான் முனிவர் அகமகிழ அழியாவடிவாய் அமர்ந்திருந்தார். முனிவரின் கரத்தழும்புகொண்ட வடிவானனை நோக்கி மாதவர்கள் ஆர்த்தார்கள் அமரர் மலர்தூர்த்தார்கள். அகத்தியமுனிவரும் எதிர்நின்று மகிழ்வுடன் முறைப்படி பூசைகள்செய்து போற்றித் துதித்தார். அயன் மால் முதலியவர்களுக்கு அரியவர் அடியவர்களுக் கெளியர் என்பதை உலகத்தோர்க்குக் காட்ட முனிவரின் கரத்தழும்புகொண்டு விளங்கியிருந்தார். குறையார் மதிசூடும் இறையோனே! கோவே! குழகா! கோட்டீச்சுரத்தானே! எனப்பலவாறுங் கும்பமுனிவர் அப்பெருமானைத் துதித்து மெய்வரங்கள் பல நம்பன் அருளாற்பெற்று உகந்து முறையால் விடைபெற்றுப் பொதியமலைக்குப் போயினர். இவ்வுலகில் உள்ளவர்கள் எவரேயாயினும் நதியில் மூழ்கித் திருக்கோட்டிநாதர்தம்மைச் சேவிப்போர்கள் இருவினையுங் களைவர். கயிலைகாண்பர். கதியைப் பெறுவர் வடமுகமாகவோடும் பொருநையில்மூழ்கி திருக்கோட்டீசுரர் அடியினைப் பணிந்து போற்றி நித்தியஜெபம் தவம் மகம் ஒன்று செய்யில் பத்து நூறு ஆயிரம் கோடியெனப் பெருகியபலத்தினை நல்கும். விளங்குந்தீர்த்தமாகிய திருவலஞ்சுழியில்மூழ்கித் திருக்கோட்டீசுரர் பொன்னடி வணங்குவோர்கள் பூமியில் பல செல்வமும் நிறையப்பெற்று அகமகிழ்ந்தினிதாய் வாழ்ந்து கடைசியில் முத்திவீட்டடைந்து இனிதுவாழ்வர். தென்பாலில் சறுவதசாலை முக்கூடல் முதலாக வலஞ்சுழியீறாக உள்ள தீர்த்தங்களெல்லாம் பஞ்சக்குரோதத்தின் அளவாகும், பொருநையாற்றின் வடகரையில் ஐந்து தீர்த்தங்கள் உண்டு இவைகளில்மூழ்கி ஈசன் உறையுந் தலங்களைந்தையும் ஓர் நாளிற்காண்போர்கள் என்னுந் தவிர் பதத்தைச் சேருவார்கள். சோமவாரம், சங்கராந்தி,

மாமகம், ஆதிரை, அம்மாவாசி பௌர்ணமை முதலிய விசேட தினங்களில் ஐந்து தீர்த்தங்களாடி பொருநையாற்றின் பக்கத்தேயுள்ள சிவாலயங்கள் ஐந்தையும் ஒருநாள் உண்டி நீத்துத் தரிசிப்போர்கள் பந்தமாம் பிறவி நீங்கிப் பரகதி எய்துவார்கள். இத்தலத்தில் பஞ்சக்குரோசத்தின் எல்லைக்குள்ளே சித்திரப் பொருநையோடு சேர்ந்திடும் தென்பாலிலிருந்து வேணு ஆறு, நாகங் கோரையாறு, சித்தையாறு, சாவையாறு, மணிமுத்தாநதி, கல்லாறு, வாணதீர்த்தம், பாலாறு இந்நதிகள் வந்து ஒன்றுசேரும் இடம், முக்கூடல் இவ்விடத்தே பரிவொடு மூழ்குவோர்கள் பிணியற்றுப்பாவம் நீங்கிப் பேரின்பம் எய்துவார்கள். இதற்குக் குரோசநேரே பொருந்திய தென்பாலிருக்கும் கண்ணுவேசர் தீர்த்தம். இதில் கண்ணுவர் மூழ்கிக் கண்ணுதலடியைப்போற்றிச் சித்தமதுவந்து போதாயனர் தமைச் சிறந்து பெற்றார். இந்தத் தீர்தத்திற்குக் கீழ்பாலில் விசுவதீர்த்தம், பிரமதீர்த்தம், சர்வதீர்த்தம், தட்சணாதீர்த்தம், ஆகிய தீர்த்தங்களும் விளங்கும் இவற்றில் வந்து மூழ்குவோர்கள் முத்தியைப் பெறுவர். மேற்சொல்லிய தீர்த்தங்கள் ஐந்தும் திருவலஞ் சுழிக்கு மேற்கேயும் கபிலத்துக்குக் கிழக்கேயும் ஆகும். தென்பால் வைகி விளங்கும் இத்தீர்த்தங்களில் மூழ்குவோர்கள் இன்ப வீடடைவார்கள்.

பொருநையின் வடபால் தென்பால் பொருந்திய இக்குரோசமட்டும் உள்ள தீர்த்தங்களை முறையே சொன்னோம். இனி வியாசர் சுகருக்குக் கூறிய கயேந்திர மோட்சக்கதையைப் புகல்கின்றேனென்று சூதமகாமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்லுகின்றார்.



## உசு-வது, கயேந்திர மோக்ஷச் சருக்கம்.

இடங்கரின் வாயிற் சிக்கி யிடருறு மிபத்தை முன்னாள்
தொடங்கிய வாதி மூலத் தோன்றலே தோன்ற லென்ன
அடங்கரு மன்பாற் றோன்றி யாரருள் செய்த மாலாம்
படங்கொளும் பாந்தட் பள்ளிப் பரிகரி காத்தோன் வாழி.

வானுறவோங்கி வளர்ந்திருக்குந் தருக்களின் மலரைத் தேவமாதர்கள் கற்பக மலரென நினைத்துப் பறித்துப் புனையும் படியான சிறப்புடைய வளம் நிறைந்த கரிகாத்த புரி என்ற திவ்வியத் தலம் ஒன்று உண்டு. இத்தத்தலத்தில் மேகங்கள் தங்கும் உப்பரிகைகள் நிறைந்த வீதிகளிலெல்லாம் வதுவைகள் ஓங்கும். இதில் கண்ணன் களிப்பொடு கோயில் கொண்டிருப் பன். இத்தலத்தில் மணவை நகர் நிருபன் ஒரு குடைக்கீழ் உலகத்தைப் புரந்து வந்தான். இவனுடைய பிரதாபங்களை யுங் குணஞ்செயல்களையும் குறுமுனிவர் கேள்விப்பட்டுப் பார்க்கவந்தார் அப்பொழுது மன்னன் விதிவசத்தால் மதிபுறண்டு இராஜகருமத்தைக் கவனித்த மறைப்பினால் கும்பமுனிவரை எதிர்கொண்டழைத்து மரியாதை செய்யாது பராக்காயிருந்து விட்டான். அப்பொழுது குறுமுனிவர் கோபித்து நீ செவ்வி யன் என்று கேள்விப்பட்டுப் பார்க்க வந்தபொழுது எம்மைச் சற்றுஞ் சிந்தியாமல் இவ்வகையிலிருந்தமையால் யானை ஆகுக எனச்சபித்தார். வேந்தன் கேட்டு உளம் நடுங்கி, வினைவசத் தால் அறியாமையாற் செய்த தப்பிதத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று பணிந்து வேண்டி "தாங்கள் இட்டசாபத் தின்படி யானையே ஆயினும் நான் பக்திசெய்கின்ற கண்ணன் கழல்களைமறவாத ஒருவரம் அருள'வேண்டும்" என்று வேண்டி னன். முனிவரும் சிறிது இரங்கி "உனக்கு நீ விரும்பியபடி மாலின் பக்தி உண்டாகும் இச்சாபம் மாலை அருச்சிக்கும் மலர் கொய்வாவியில் இறங்குங் காலையில் முதலை பற்றும் அப் பொழுது மாலை வேண்டுவை அக்காலையில் விமோசனமாகி வை குந்தம் பெறுவை" என்று உரைத்தருளித்தம்மிடஞ் சென்றார்.

பிற்கு அரசனும் அகத்தியரிட்ட சாபப்படி யானையாகி யானைகளுக்கெல்லாம் அரசாயினன். பேரறிவால் மாலின் பக்தி விடாதவனாகித் தினந் தினம் ஆயிரம் மலர் பறித்து விஷ்ணுவின் தலங்களிலெல்லாஞ் சென்று பூசித்துவரும் நாளில் விமோசன காலங் கிட்டினமையாலும், பன்னிரண்டுவருடம் மழையில்லாமையாலும், வாவிகளில் நீரற்று மலர் கிடைக்காமற் போகவே கானமத வாரணமும் கரியவனை அருச்சிக்க மலர் தேடி நானிலமேல் எவ்விடத்துங் காணாமல் உயர் பொருநை நதியிற் சார்ந்து சமீபத்தே மடுவில் வாசம் ஒங்கும் பதும மலரைக் கண்டு பக்தியோடு அப்பூவைப் பறிக்க மடுவில் இறங்கினபொழுது முன்காலை ஒரு முதலைபற்றிக்கொண்டது. அதோடு நெடுநாள் போர்செய்து அயர்ந்து ஒரு பற்றுக்கோடுமின்றி ஆதிமூலமே! என்று அழைக்க, மால் கருடன்மேல் ஏறி ஓடிவந்து அஞ்சேலென அபயங் கொடுத்து முதலையை அறுத்துக் காத்து வைகுந்தபதவி கொடுத்தருளினார். அந்த மடுவிலிருந்த முதலையும், ஒரு கந்தருவன் ஜலத்திலிருந்து முழுகி விளையாட்டாக ஒரு முனிவர் தாளைப்பற்றி இழுத்தமையால் அச்சாபம் பெற்றான். சாபத்திற் கஞ்சிப்பணிந்துவேண்டினபொழுது கரத்தைக் கவ்வி மாலின் சக்கரத்தால் அறுப்புண்பாய், அப்பொழுது உன் சாபம் நீங்குமென அருளினார். அதனால் அம்முதலையும் மாலின் சக்கரத்தால் அறுபட்டு முன்னுருவடைந்து வானஞ்சேர்ந்தது. இப்படிப்பட்ட விசேஷமான மடுவில் நீராடி ஆனை காத்திடும் பெருமாளை நித்தமும் வந்து தரிசிப்போர் வைகுந்தத்தில் இனிது வாழ்வார்கள். அதற்குச் சமீபத்திலுள்ள சித்த தீர்த்தத்தில்மூழ்கிச் சித்தேசநகரில் ஓங்கும் சித்தேசனைப் பணிந்தால் நெற்றி விழியுடைய பிரான் உருவெய்திக் கயிலையில் நீண்ட காலம் வாழ்ந்திருப்பார்கள். அதற்குப் பக்கத்திலிருக்கும் மாண்டவ்விய தீர்த்தத்தில் ஆடி மாண்டவ்விய லிங்கத்தைக் கருதி எத்தினுைம் தமிழ் மாலை சொல்லித் துதித்தாலும் வினையைத் துடைத்தே அரியினதுஉலகில் நெடுநாள்வாழ்ந்து கையிலை சார்வார். பொருநை நதி வடபாலாக அந்தப் பெருந்தலத்திற் போகும். அத்தலத்தின் மேல்பால் பிரமதண்டமெனும் தீர்த்தம் ஒன்றுண்டு அதில் பிரமன் மூழ்கிப் பேறுபெற்றான். அதுமிக

வுர் தெய்வீகமுடையது என்று கூறிப்பின் முனிவர்களே திருப்புடைய மருதூர் சிறப்பைக் கூறுகின்றேன் என்று கூறுகின்றார்.



## உஎ-வது. திருப்புடை மருதூர்ச் சருக்கம்.



விருத்திரா சுரனைக் கொன்ற வியன்பழி பிரம கத்தி
அருத்தியா லகல வென்றே யருளொடு மமரர் கோக்கு
மருத்தினா டழகு மிக்க வளரொரு லிங்கமான
பெருத்தமா முலையாள் பாகன் பிறங்குதாள் போற்றி வாழ்வாம்.

எண்ணில்லாத விஞ்சையர்களும் முனிவர்களும் அந்தணர்களும் சிவபெருமானை விரும்பி வந்து பூசித்திட விளங்குவதும் பல வளங்களும் நிறைந்துள்ளதும் புலவர்கள் புகழும் திருப்புடை மருதூரே.

திருப்புடை மருதூரிலுள்ள சோலைகளில் மழை மேகந் தங்கும். கன்னலுஞ் செந்நெலும் ஓங்கி வளர்ந்திருக்கும். வேத வேதியர்களின் வேள்வி செய்யும் முழக்கம் எங்கும் நிறைந்து மழையென முழங்கும். இத்தகைய சிறப்புகள் பலகோடி மலிந்து தேவர்நாடெனவிளங்கும் இத்தலம். இதன்மகிமையைக் கேளுங்களென்று சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். இந்திரன் தேவேந்திர லோகத்திற் கொலுவீற்றிருக்கும்போழுது வியாழபகவான் வர, விதிவயத்தால் உள்ளன்போடு வணங்கவும் இல்லை நோக்கவுமில்லை. இதனைக் கண்ட வியாழன் திரும்பிப்போய் மறைந்தனர். வந்த குரு உடனே மறைந்ததைக் கண்ட இந்திரன் திடுக்கிட்டு உடனே தேடியுங் காணக் கிடைக்கவில்லை. இதற்கென்ன செய்வதென்று இந்திரன் தெளியாதவனாகி உடனே பிரமலோகஞ் சென்று பிரமனிடந் தெரிவித்துக் கொண்டான். அதற்குப் பிரமன் வியாழபகவானைக் காணக்கூடவில்லை என்றால் விச்சுவரூபனைக் குருவாகக் கொண்டு வாழ்க என மொழிந்தார். அவ்விதமாக அவ்விந்திரனுஞ் செய்ய, அவ்விச்

சுவரூபன் வஞ்சகமாக அவிசை எல்லாம் அசுரர்க்குக் கொடுக்கக் கண்ட இந்திரன் வெகுண்டு அவனைக் கொன்றனன். இதைத் தெரிந்த அவ்விச் சுவரூபனின் தந்தை மூன்று லோகத்தையும் அழிப்பேனென வெகுண்டு ஓர் வேள்வியைச்செய்தான். அந்த வேள்வித்தீயில் விருத்திராசுரனென்னும் ஒரு வலிய அவுணன் உதித்தான். உலகத்தையெல்லாம் ஒரு கணத்தில் அழித்துவிடுவேன் என எழுந்த அவ்விருத்திராசுரன் முனிவன் பாதத்தை வணங்கி புவனகோடிகளையும் அண்டங்களையும் பொடிபடுத்திடவோ? சப்த சமுத்திரங்களையும் ஒரு கணத்தில் உண்டிடவோ? அல்லது எவனை நான் கொல்லவேண்டும் சொல்லெனத் தொழுதுவேண்டினன். அதற்கு விச்சுவரூபனின் தாதையும் அவ்விருத்திராசுரனை நோக்கி நீ சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்து வரங்கள் பெற்றுக்கொண்டு தேவேந்திரனை வென்றுவருக எனக் கட்டளையிட்டனன். அவ்வசுரனும் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து அச்சிவபெருமான் விடைமிசைத் தோன்றி காட்சிகொடுத்தருளியபோது தான் படைகளால் கொல்லப்படாதிருக்கவேண்டும் என்னும் வரத்தைப் பெற்று தேவேந்திரன் உலகத்தேசென்று வானுலகமெல்லாம் அதிரும்படி ஆர்த்தான். இப்படிவந்தவன் யாரெனத் தேவர்கள் எதிர்த்துப் போர் பல செய்தார்கள். விருத்திரன் போர் செய்யவே பங்கப்பட்டு வானவர் மருண்டு பயந்தனர். இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் பயந்து ஓடி ஒளித்துக்கொள்ளவே விருத்திராசுரனே பொன்னுட்டை அரசுபுரியலாயினன். பண்டைத் தேவர்களின் பதங்களையெல்லாம் அசுரர்களுக்குக் கொடுத்து வான மாதர்களெல்லாம் தமக்குப் பெண்டிராக அரசு செய்துவந்தான். அஞ்சியோடிய இந்திரன் தேவர்களும் முனிவர்களும் சூழ நாராயணன்பாற் சென்று போற்றித்துதித்து என்னைக் காத்தருளவேண்டுமென்று அவன் பொற்கழல் பணிந்து வேண்டினன். கமலக்கண்ணனும் இரங்கி அபயமீந்து வந்த காரணம் என்னெனக் கேட்க இந்திரனும் விருத்திராசுரனால் வந்த இடையூறனைத்தையுங் கூற அதற்குப் பாற்கடற் பள்ளிகொண்ட பதுமநாபனும் "அவ்வசுரன் சிவபெருமானிடத்தில் ஆயுதங்களா லிறவாவரம் பெற்றிருக்கின்றான்,

அவனைக் கொல்லுதற்கு உபாயங் கேள், ததீசிமுனிவரின் முதுகென்பால் வச்சிரப்படை ஒன்று செய்து அவனை வெல்லுக உயர்பலமும் உனக்குத் தந்தனம்" என்று கூறியருளினர்.

இவ்வாறு கூறியருளிய மாலின் மலரடிகளை வணங்கி இந்திரனும் விடைகொண்டு தேவர்களும் முனிவர்களும் புடைசூழச் சென்று ததீசி முனிவரிடத்தில் வந்து அவர் பாதங்களில் வீழ்ந்து பணிந்து போற்றினன். ததீசி முனிவரும் தன்னை வணங்கிய இந்திரனுக்கு ஆசிகள் கூறி அவன் வரவைக் கருத்திலுணர்ந்து இங்கு நீ வந்தகாரணம் என்னவென்று கேட்டனன். அதற்கு இந்திரன் நான் விருத்திராசுரன்போரிற்கு உடைந்தேன் வருத்தத்தோடு இங்கு வந்தேன்.காத்தருள்க என்றனன். கருத்தால் உணர்ந்த ததீசிபரும் அதற்கு என்பால் உனக்கு வேண்டுவதென்னவென இந்திரன் உனது முதுகெலும்பைத் தந்தருளினல் அவ்வசுரனை அழிக்கக் கூடுமெனக் கூறினன். உடனே கொள்க எனத் தன் முதுகெலும்பை அளித்து அரன்பதமுற்றான். இதனைக்கண்ட தேவர்களும் முனிவரும் களித்தார்கள். பேரருள் உடையார் தம் உயிரைக் கொடுத்தேனும் பிறர் உயிரைக் காப்பரென்பது உண்மையல்லவா? எனப் புகழ்ந்து போற்றினர். ததீசிமுனிவரின் முதுகெலும்பைப் பெற்ற இந்திரன் மிக ஆநந்தங் கொண்டு தேவருலகத்திற்குவந்து விதிவிலக்கினும் அசுரனைக் கொல்வேனென்று கடுஞ்சினத்தோடு வந்து விருத்திரனைப் போருக்கழைத்தான்; தேவர்கள் தம் சங்கத்தை அண்டமெலாம் அதிர முழக்கினர் பல படைகளையும் ஆயுதங்களையும் ஏந்தி ஆர்த்தனர். இந்திரனின் செயல்வலி அறிந்து அத்திய அவுணனாகிய விருத்திராசுரன் அசுரப்படைகள் சூழ வந்து உகாந்தகால இடியென அதிரும்படி முனைந்து போர்செய்தான். அசுரசேனை தேவர்சேனையால் மாய்ந்தொழிந் தோடுவதுகண்டு விருத்திராசுரனும் கனன்று வந்தான். தேவர்கள் சேனை அஞ்சி நடுங்கின சில தெறிபட்டு ஓடின. விருத்திரன் விடும்படைகளால் வானவர் உடல் அற்று விழுதல் கண்டு இந்திரன் சினந்து தன் வெள்ளையானையின் மேல் ஏறிவந்து நேர்நின்று வஞ்சனைமிகுந்த கள்வனே! நின் வலித்திறனுஞ் செயலும்நன்று!என்றுகூறிப் பல்வெய்யபடைகளை

ஏவினன். விருத்திரனும் சுழல் சூறையிற் பட்டசருகெனச் சுற்றினன். பிறகு விருத்திராசுரன் தேரைவிட்டு இறங்கி எமன்போற் சீறி மல்யுத்தஞ்செய்தான். மாயவிதப்போர்கள்செய்தான். அவற்றுளொன்றாலும் இந்திரனை வெல்லமுடியாமல் பலமொடுங்கி அசந்து போயினன். அப்பொழுது இந்திரன் கொல் புலிபோலத்தாவி வச்சிரப்படையை ஏவினன். விருத்திராசுரனும் துணிக்கப்பட்டு விழுந்தனன். பிறகும் இடர் புரியும் பிரமகத்திவாள் கையில் ஏந்தி எங்குமாய்ப் படர்ந்து இந்திரனைப் பற்றியது. கையில் வாள் ஏந்தி மேகமென வந்து தோன்றும். உடலைவந்து கட்டிப்பிடிக்கும். கடிது அலறியே பின்னால் இழுக்கும். சோர்ந்து போகச்செய்யும். மண்ணில்விழச்செய்யும். சூறைபோல எதிர்த்துத் தோன்றும். இந்தவிதமான கோரங்களைச்செய்ய இந்திரனும் துயர்கொண்டு மாழ்கினன். சந்தோஷ ஆரவாரஞ்செய்தவானவர்கள் எல்லாந் துளங்கினர் அயர்ந்தனர் அழுதனர். இந்திரன் மதி மயங்கி உடல் கறுத்து எங்கணும் அசுரனே தோன்றுதலால் பயந்து வச்சிராயுதமுங்கையை விட்டு நழுவிவிழ மனந்திகைத்தான். இன்னவாறுகும் இயல்பினால் மலை, கானம், சோலை, சுரம் முதலியவெல்லாம் பித்தன் போற்றிரிந்தான். பிறகு பொருநை மாநதிக்கரையிடத்தே வந்தான். வரவும் பிரமகத்தி தோஷம் விட்டகன்றது. உடனே ஒளித்து மருதமரமாக ஒரு பக்கம் நின்று வளர்ந்து தவஞ்செய்தான். தேவர்களெல்லாம் கைலைக்குச் சென்று வலஞ்சுற்றி வந்து எம்பெருமான் வாழும் ஆலயத்துற்று சன்னிதிக்கு முன்பு வந்து நந்தி நாதனைப் பணிந்துபோய்ச் சோமசுந்தரனைக்கண்டு போற்றித்துதித்துப் பணிந்தெழுந்து நின்ற காலையில் சிவபெருமான் "நன்று! நீர் இன்று வந்தகாரணமென்ன? என்று கேட்கத் தேவர்கள், அத்தனே விமலா! விருத்திராசுரனைக்கொன்றதனால் இந்திரனை அப்பிரமகத்திதொடர்ந்தது. அருந்திறத்தினால் ஆயிரங் கண்ணனும் அஞ்சிப் பொருநைக்கரையில் மருதமென நின்றான். ஆகையால் நாங்கள் அரசனை இழந்தோம். ஏக நாயகனே! எங்களுக்காக இரங்கிப் பாகசாதனன் படுந் துயரை நீக்கியருள்க! எனப்பணிந்து வேண்டினர். அதற்குச் சிவ

பெருமான் அருள்கூர்ந்து அத்தேவர்களை நோக்கி இந்திரனை நம் உலகிடை வரும்படி அனுப்புவோம் நீங்கள் நம் உலகத்திற்குச் செல்லுங்களென்று அனுப்பிவிட்டுக் கணங்கள் சூழ வெள்விடைமீதேறிப் பொருநைக் கரையிடை வந்து, மருதமாக நின்ற இந்திரன் ஊடே அழகிய லிங்கமாகத் தோன்றினர்.

தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். முனிவர்கள் ஆர்த்தார்கள். தேவதுந்துபிகளார்த்தன இந்திரனாகிய மருதமரத்திற்கு ஊடே எழுந்த சுந்தரலிங்கத்தை இந்திரன் தினமும் பொருநை நீராடி இளநீர், பால், நெய், தேன், தயிர் இவற்றால் மஞ்சன மாட்டிப் பல நறுமலர்கொண்டு தினமும் அருச்சித்து வந்தான். இவ்விதமாக வேதவிதிப்படி பூசித்துவரும் நாளில், ஆயிரங் கோடி கோடி சூரிய ஒளிபோல் வெள்ளிய ரிஷபத்தின்மேல் சிவபெருமான் தோன்றினர். தேவேந்திரனுங் கண்கள் குளிரக்கண்டு புளகாங்கிதங்கொண்டு ஆடிப்பாடிப் போற்றித் துதித்து ஆனந்தக் கண்ணீர் வார நின்றான். சிவபெருமான் நின்று "துதிக்கு மகிழ்ந்தோம் உன் பிரமகத்தியைத்தீர்த்தோம். நீ முன் போலவே விண்சென்று அரசுசெய்க" என்று சொல்லி மேலும் இன்னும் உனக்கு வேண்டும் வரங்கள் கேட்பாயாக எனக்கூறினர்.

அப்பொழுது இந்திரன் தகவொடு பணிந்து போற்றிச் சங்கரா! அருளானந்தச் சுகம் நல்கும். இந்தச் சுரேந்திர மோட்சதீர்த்தம் மகிழ்ந்தாடினோர்க்கு உன் பொன்னடி ஈந்தருள வேண்டும். நாதனே! உனக்குப்பூசை நடத்துவோர் விழாச் செய்விப்போர் நின் அடியர்க்கு அன்புசெய்வோர். மருதுக்கு நீரெடுத்து வார்ப்போர் தங்கள் பாதகமெல்லாம் அகன்று மேலான கதியை அடையவேண்டும். என்று பணிந்து இரந்து வேண்டிக்கொள்ளச் சிவபெருமான் மனமகிழ்ந்து நீ கேட்டவரங்களனைத்தும் ஈந்தனம் என்று திருவாய் மலர்ந்தருளிப் புடார்ச்சுனத்தின் மகாலிங்கத்தூடு போந்தார். இந்திரன் நல்வரங்கள் பெற்றேன்! பேரருள் பெற்றேன்! பிரமகத்தி நீங்கப்பெற்றேன்! என்று மகிழ்ந்து துதித்துப் பொன்னடி அருச்சித்துப் பணிந்து

விடைபெற்றுச்சென்று விண்ணிடை இருந்து இனிது அரசு செய்து வந்தான். இந்திரன் மருதாக நிற்க அதனூடே சிவ பெருமான் இலிங்கமாகத்தோன்றி அருள் செய்தமையாலே அத்தலம் "திருப்புடைமருதூர்" எனப்பெயர் செப்பினார்கள். இத்தீர்த்தத்தில் மூழ்குவோர்கள் இருந்துயர் நீங்கி இறைவர் பதத்தைச்சார்வர். சுபேந்திர மோட்சத்தில் தைப்பூசத்தில் மூழ்கி மருதூர்வாழும் நம்பனைப் போற்றுவோர்கள் தீவினை அகன்று இன்பமிகுந்த மோட்சவீட்டைப்பெறுவர். சிவபெரு மான் கோயில் சூழ்ந்ததும் ஆறு நதிகள் கூடும் இடமுமாகிய முக்கூடலில் மூழ்குவோர்கள் மேலான கதியைப் பெறுவர்.

சந்திரனைச் சூடியுள்ள சிவபெருமான் வாழும் திருப்புடை மருதூரின் மேன்மை பிரமனாலுஞ் சொல்லுதற்கரிது தெரிந்த மட்டுஞ் சிறிது சொல்லினேன். அங்குள்ள தீர்த்தங்களை எல் லாஞ் சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார். பொருநைமா நதியின் தென்பாகத்தே பொருந்தியுள்ளது துற் காதீர்த்தம் துற்கைவரம் பெற்றது ஆகும். இத்தீர்த்தத்தில் ஆடி சத்தி பள்ளத்திற் காளியின் இருபதம் தரிசிப்போர்கள் இன்ப வீடெய்துவார்கள். இந்தத் தீர்த்தத்திற்குக் கீழ்பாலில் இருடி தீர்த்தமென்று ஒரு தீர்த்தமுண்டு இதில் நீராடி இருடீசுரர் தாளை நினைந்து போற்றும் புண்ணியர் பிறவி நீங்கிக் கயிலை சார்ந்து வாழ்வார். அந்தத் தலத்திற்குக் கீழ்பால் விஷ்ணு தீர்த்தமென்று ஒரு தீர்த்தமுண்டு, அதில் மூழ்கி அங்குள்ள கோவிலில் வீற்றிருக்கும் இராமனைத் தெரிசிப்போர்கள் வித்தகரா கிவைகுண்டம் பெற்று வாழ்வார். இந்த மூன்று தீர்த்தங்களைப் பற்றிக்கூறினோம். இனிமேல் சோமதீர்த்தச் சிறப்பைக் கூறு கின்றேன் கேளுங்களென நைமிசாரணிய வாசிகளுக்குச் சூத முனிவர் கூறுகின்றார்.



## உஅ-வது, சோமதீர்த்தச் சருக்கம்.

---

தக்கனு ரிட்ட சாபச் சயத்தினை மதிக்குப் போக்கும்
முக்கணூர் பாகப் பாவை முன்னருள் தாம்ர பன்னி
தெக்கண நதியின் றென்பால் திகழ்தரு சோம தீர்த்தப்
பக்கமே சாரி னெல்லாப் பவங்களு மழியுந் தாமே.

முன்னொரு காலத்தில் பிரமன் அத்திரி ரிஷியைப் பெற்றான். அவ்வத்திரி அநுசூயையை மணந்து புத்திரப் பேறடையும் பொருட்டு முத்தேவர்களையும் போற்றிப் பலதவஞ் செய்த பொழுது மூவருந்தோன்றி மதலையைப்பெறும் வரம்அருளினர். அவற்றுள் பிரமன் அருளாற் சோமனும், மாலினருளால் தத்தாத்திரனும், சிவபெருமானின் அருளாற் றுருவாசனுந் தோன்றினர். அவர்களில் சோமன் தண்கதிரைப் பரப்பி உலகமெல்லாம் இன்புறச் செய்தான். பிரமன் அவனை உடுக்களுக் கெல்லாம் அரசாக்கினன். சந்திரன் இன்னவாறு உலகுக்கெல்லாம் அமுத கிரணத்தை யூட்டி அன்புங்காட்டி வருநாளில் தக்கன் முப்பது பெண்களைப் பெற்று வளர்த்து வந்தான். அவர்களுக்குத் தக்க பருவம் வந்த பொழுது அவர்களில் இருபத்தேழு பெயரைச் சோமனுங் களிப்பொடு கல்யாணஞ் செய்து வாழும் நாட்களில் ரோகணி என்பவள்மேல் அதிக காதல் கொண்டு மற்றையரை விரும்பாது அவளிடத்தே பிரியாது வாழ்ந்து இன்பம் அனுபவித்து வந்தான். இதனை மற்றைய இருபத்தாறு பெண்களுந் துயரத்தோடு தன் தந்தையிடந் தெரிவிக்க அவனும் வெகுண்டு வந்து சிலவசை புகன்று இசைய ஒருத்திமேல் காதலால் மற்றைய என்மக்களை மறந்த புன்மையோய்! நீ சயரோகத்தால் இடருறுக எனச் சபித்து விட்டுப் போயினன். அதே விதமாகச் சந்திரனும் க்ஷய ரோகத்தால் வருந்தி பல இடங்களிலுஞ் சென்று உழன்றுந் தன்துயர் நீங்காமையால் பொருநைமா நதிக் கரைக்கு வந்தான். தென்கரையில் சென்று உயர்ந்த பொழிலில் சென்று அதன் வளங்களை எல்லாங் கண்டு வியந்து தூயமாதரும் முனிவரும் தவஞ் செய்தலையுங் கண்டு இது நல்ல

தலமென்று மனத்தே எண்ணி, மாமனாரால் இட்டசாபம் நீங்கும் பொருட்டு வேதவிதிப்படி பொருநை யாற்றில் இறங்கி, விண்டுவை மனத்திற் கொண்டு துதித்து நீராடித் தரையில் வசித்துப் பூசைகளை முறையே செய்து வந்தான். இவன் இறங்கியாடிய இடத்திற்குச் சோமதீர்த்த மெனவும் பெயரிட்டான். சந்திரன் பொருநையில் ஆடி மாயனைப் பூசித்துச் கூய ரோகம் நீங்கி விண்ணில் முன்போல் விளங்கினன். அந்த நாளிலிருந்து சோமதீர்த்தத்தில் ஆடி நற்பேறு பெற்றவர்களனந்தர். இந்தத் தீர்த்தத்தில் மார்க்கண்டன் நீராடிப் பின்னை கேள்வனைப் போற்றியே வரம் பல பெற்றான். சிவயோகியர்கள் முனிவர்கள் தேவர்கள் கந்தருவர்கள் முதலியோ ரெல்லாம் இத்தீர்த்தத்தில் ஆடிப் புகழ் வரம்பெற்றனர்; ஆகையாலிந்தச் சோமதீர்த்தத்தினில் ஆடி மாயனைப் போற்றி நினைப்பவர்கள் லட்சுமி கடாட்சத்தை நனிபெற்று ஈற்றில் வைகுண்ட பதவியை மேவி வாழ்வார்களென்று சூதமகாமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்லிப்பின் உரோமசேசுரத் தீர்த்தத்தின் பெருமையைக் கூறு கின்றேனென்று கூறுகின்றார்.

---

## உகூ-வது, உரோமசேசுரத்தீர்த்தச் சருக்கம்.

---

காதலா லுரோம சப்பேர் கலைமுனி கைலை சென்று
போதலா லொப்பொன் றில்லாப் பொன்னடி போற்றிப் பின்னர்
வீதலா றகற்ற வந்த விளங்குரோ மசப்பேர் வாய்ந்த
சீதநீர் வேணிப் பெம்மான் திருநகர் நினைதல் செய்வாம்.

எல்லா வளங்களாலும் நிறைந்த உரோமசேசுரம் விண்ணாட்டை வெறு விதாக்கும் மேன்மையுடையது. உரோமச முனிவர் கயிலைசென்று சிவபெருமானுக்கு விதிமுறைபூசனைகள் இயற்றிக் கயிலையில் வாழும் நித்திய பதவியைத் தந்தருளவேண்டுமென்று இறைஞ்சி வண்டினர். முனிவரின் தோத்திரங்களுக்கு மனமுவந்து சிவபெருமான் பிரசன்னராகி உன் கருத்தென்னவென்று கேட்க நிமலனே! அடியேற்கு நித்ய பதவி அளித்தருளவேண்டு

மென்று உரோமசமுனி வேண்டினார். அதற்கு இறைவர் நித்தியம் வேனக்கு வேண்டுமேல் நித்தி தரும் பொருநைநதியில் ஆடிப் பத்தியோடு எம்மை அருச்சித்தால் அது உனக்கு எய்தும் எனத் திருவாய் மலர்ந்தருளித் தன்னுருக்கரந்து சென்றார். உடனே உரோமச முனியும் வெள்ளி வெற்பை வலஞ்சூழ்ந்து வந்துபோற்றித்துதித்து அதனின்றும் நீங்கி அங்குள்ள தலங்களை எல்லாம் பணிந்துகொண்டு கேதாரம், அவிமுத்தம், வடகாஞ்சி, சிதம்பரம், ஆரூர் காவிரித்தலங்கள், மருதூர், சிராப்பள்ளி, மதுரை, குற்றாலம், நெல்வேலி முதலியவற்றைப் பணிந்து அவ்விடங்களில் ஆலயங்கொண்டருளும் பெருமானைத் துதித்துப் போற்றிப் பூசித்துப் பொருநையாற்றின் தென்பாலுள்ள சோம தீர்த்தத்தின் கீழ்பாலில் வடதருவின் நிழலிலே ஆரணமுமறியாத தந்தியுரிபோர்த்தோனை அன்பாகத் தாபித்து வேதவிதிப்படி பெருமானையும் பார்வதிதேவியாரையுந் தினமும் இனிது பூசித்துப் போற்றிசெய்தார். ஆனந்தம் பெருக ஆடிப் பாடித்துதித்தார். கோயிலுங் கோபுரமும் சமைத்தார். ஆலயங்களுக்குவேண்டுந் திருமதில்களும் மற்ற வளங்களும் பெருகச்செய்தார். சுற்று வீதிகளையும் உண்டாக்கி நலம்பெறு குடிகளை ஏற்றி நற்றிருவிழாக்களுஞ் செய்து வருநாட்களில், முனிவர்க்கு நித்தியத்தை அருளுமாறு அம்பாளோடு விடைமேற்றோன்றிக் காட்சிதந்து நீ வேண்டிய நித்தியந், தந்தோமென்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். அண்ணலார் மறைந்த பின்பு அருந்தவ முனிவர் ஆலயத்தைப் பிரதட்சணஞ்செய்து அம்மையையும் அப்பரையும் இனிதுபோற்றி நித்திய பதவியைச் சென்றடைந்து இனிதுற்றார். அங்கு அம்முனிவர் ஆடிய தீர்த்தத்திற்கு உரோமச தீர்த்தம் என்றும் அத்தலத்திற்கு உரோமச நகரமென்றும் பெயர் வந்தது. இத்தலத்து வந்து தீர்த்தமாடி இறைவனை யுள்ளன்போடு பூசிப்போர் உயர் பதம் பெறுவர். மால் அயன் முனிவர் சித்தர் விஞ்சையர் விண்ணோர்கள் மார்க்கண்டேயர், கார்த்தவீரியன், நந்தி, கும்பமுனிவர் முதலியோர்கள் இந்தத் தீர்த்தத்தில் வந்தாடி நற்பேறும் பெற்றிருக்கின்றார்கள். பூமியின் ஊடே போய்ப் பொருநையின் ஊடே ஏழுப்பாதலத்தூடே தோன்றும் பரனைச்சூழ்ந்து

பல்நாள் காதலோடு இரண்டு மச்சங்கள் களிப்போடுங் கருதிப் போற்றி வேதனைகள் நீங்கி இன்ப வீடு பெற்றன. இந்தவித மாகவே யாத்தரும் இத்தீர்த்தத்தில் மூழ்கினால் இன்ப வீட்டை இனிது நல்கும் என்று ரோமச தீர்த்தத்தின் மகிமையைக்கூறிப் பின்னும் முனிவர்களை நோக்கிச் சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். சமீபத்திலுள்ள மார்க்கண்ட தீர்த்தத்தின் தூய நீராடுவோர்கள் பன்னகவேணி எங்கோன் பதமலர் சேர்வார்கள். இனித் துருவாச தீர்த்தத்தின் மகிமையைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## ௩௰-வது, துருவாசேசுர தீர்த்தச் சருக்கம்

கூற்றினை யுதைத்த யாதர் கூறிடத் துருவா சர்தாஞ்
சாற்றருங் காளத் திப்போர் தலத்திடை வந்து போற்றி
தோற்றுயர் பொருநைத் தென்பால் நுவல்துரு வாச மென்னும்
போற்றிடுந் தலத்திற் சார்ந்த புகழ்புகன் றுய்வாம் மன்னே.

சோலைகளிலெல்லாம் மயில்கள் களியோடு ஆடவும் பூவைகள் சிறந்த விளரி பாடவும் பல வளங்களோடும் நிறைந்து விளங்குவது துருவாச நகரம் ஆகும். இந்நகரில் தவத்தோர் சாலைகளும் சைவ சமயத்தோர் சாலைகளும் நிறம்பி விளங்கும். கதிதரும் இத்துருவாச நகரம் பொருநைத் தென்பாற் காளத்தி நகரமெனப்படும். அந்நகரத்தில் இசைந்த கதையைச் சொல்வோம் கேளுங்கள் எனச்சொல்லுகின்றார்.

நான்மறை முற்றிய துருவாச முனிவர் முன்னொருநாள் கயிலைக்குச்சென்று நற்றவங்கள் செய்து கன்னியோர் பாகன் முன் சென்று ஆடிப்பாடிப் போற்றித் துதித்துக் கடவுளே! இங்கு மகிழ்ந்து உனக்குப் பூசை இசைவுறச் செய்யவேண்டும் அதற்கு நீ அருள் செய்யவேண்டும் என்ன அதற்குச் சிவபெருமான் "ஓ முனிவனே! வெள்ளிமலையை ஒத்தது காளத்தி, அதில் நாளும் நாம் இருப்போம். நீ அதிற்போய் நம்மை வந்தனை

செய்தால் வரந்தருவோம் என்று சுந்தரனருளத் துருவாசர் விடைகொண்டேகி விந்தைசேர் காளத்தி வேற்பை வந்து சார்ந் தார். சேர்ந்து பொன்முகரியில் மூழ்கிக் கோயிலிற்சென்று கண் ணப்பர் எச்சில் உண்ட கடவுளைப் போற்றித் துதித்து சேவடி பணிந்து வந்தார். இதேவிதமாக வேதவிதிப்படி தன்மாணவர் பதினாயிரம்பேருஞ் சூழவந்தனை பலவுஞ்செய்து சந்திர மவு லியானைத் தகவோடு பணியுங்காலை சிவபெருமான் உமாதேவி யோடு விடைமேற்றோன்றி முனிவரை நோக்கி "ஓ முனிவரே! இங்கே இந்த விதமாகப் பூசைசெய்வதுபோல பொருநைக்கரை யில் நம்மைப் பூசிப்பாயாக. பொருநைக்கரையில் இருந்து அந் நீராட விரும்பினோம். ஆதலால் மங்கை தன்னொடு எம்மை அந்தத்தீரத்தில் வைத்து உடல்குளிர அந்நீரால் ஆட்டிப் பூசை செய்க" என்று கூறவே, முனிவரும் விடைகொண்டு ஏகித்தென் பாலுள்ள பல தலங்களையும் முனிவர்கள் குழாஞ் சூழ வந்து தரி சித்து வணங்கிக்கொண்டு பொருநைக்கரையைச் சார்ந்தார். நதி யின் தூய்மையையுந் தெய்வீகத்தையுங் கண்டு நதியைத்துதித் து நீராடி திருநீரணிந்து தென்கரையில் அரனைத்தாபித்து காளத்தி நாதரெனவே நாமமுஞ் சூட்டித்துதித்தார். மனமகிழ்ந் து தென்கங்கை நீர் கடங்களில் வாரிப்புனன் முடித்த இறை யவன் பொற்புடை மேனி அனலவிப்புற ஆட்டினான். இண்டை யும் அணிந்தான். இந்தவிதமாகப் பலநாள் அங்கிருந்து சிந்தை அன்போடு பூசித்துத் துதித்துப்பொன்னடி பணிந்து வந்தார். பிறகு கரிசூழ்ந்தபதி என்னும் கரிசூழ்ந்தமங்கலத்தினைப்பணிந் து பொன்னம்பலவாணர் பொன்னடி தொழுதார். பொரு நைக்கரையில் எட்டுக்கோயில்கள் கயிலாயமென அமைத்தார்.

அமைத்த ஆலயங்கள் எட்டிலும் அருச்சனை புரிந்து நல் வரங்கள் பெற்றார். மீண்டுங் காளத்திநாதரின் குஞ்சிதத்தாளிணை இறைஞ்சி பொருநை மாநதியில் மூழ்கி முன்போற்பூசை விருப் பொடு செய்து பின்பு வேள்வியுஞ்செய்து கருணைக்காளத்தி நாதரருளால் மெய்ஞ்ஞானமும் பரகதிவாழ்வும் பெற்றார். அத் தலத்திற்குத்துருவாசேச்சரம் என்றும் தீர்த்தத்திற்குத் துரு வாசதீர்த்தம் என்றும் பேர் வந்தது. இதிற்சென்று தீர்த்த

மாட்டிப் பரனை வணங்குவோர் பரகதிபெற்று இன்புற்றிருப்பர். துருவாசர் அப்பொருளுரையைத் துதித்தமந்திரஞ் சிவபெருமான் மொழிந்தது. அம்மந்திரத்தை யுச்சரித்து மூழ்குவோர்க்கு மெய்ப் பதம் எய்தும். எண்ணியவெலாம் எளிதில் எய்தும், என்று முனிவர்களுக்குக்கூறினார் பின்னுங் காந்தருவதீர்த்தம், பச்சை யாறு, முக்கூடல், முதலிய தீர்த்தங்கள் அவ்விடத்தில் விளங் கும். பரிவொடு அவற்றில் மூழ்கிக் காந்தர்வேசரைப்பணிவோர் தம் இருவினை நீங்கி முக்கண் இறைதிருக்கயிலைமருவி வாழ்வர். என முனிவர்களின் மனங்களிக்கக்கூறி மந்திரேசுரத்தின் மேன் மையை வியாதர் கூறியபடி கூறுகின்றார்.



## ௩௧-வது, மந்திரேசுரச் சருக்கம.

பனிமலை மகளின் சாபம் படர்தர மகவாம் ரேணு
முனிவருக் கமைந்து கங்கை முறைவைர மலையாம் வேந்தன்
நனிமகிழ் மகளே யாகி நற்றவம் புரிந்து நாதர்
தனிமனை யான மந்ரே சுரநகர் தழுவி வாழ்வாம்.

தலத்தில் மிக்க பச்சையாறு தாம்பிரபன்னியாறு இரண்டும் ஒன்றாய்க்கூடும் இடத்திற்குத் தென்பாலில் பிலமதினூடு தோன் றும் பிரணவலிங்கம். அவ்விடத்தில் உலகுய்ய இருப்பதால் அத ற்கு ஓமனூரென்னும் பெயரைக்கொண்ட மந்திரேசுர மென் றானது. பல வளங்களும் நிறைந்து விளங்கும் இந்நகரத்திற்குத் தெற்கேயுள்ள கந்தர்ப்ப நகரத்தில் மாதவங்கள் செய்யுந்த போதனரிருப்பர். அவர்களுள் மிக்கோனாகிய அருந்தவப் பெருமையுடைய இரேணுவென்பவர் கங்கையை மகளாகப் பெற எண்ணி நற்றவஞ் செய்யுங் காலையில் விளங்கும் புனல் மடந்தை கைலை நாதரை விரும்பிஇமையப்பாவை இல்லாத சம யம் பார்த்து கயிலைக்கு வந்தாள். அமலனும் விரும்பினார். இவர் களின் ஆவற்குறிப்பை அம்பிகை யறிந்து வந்து துனியோடு அக்கங்கையைநோக்கிப் பூமியில் மானிடப்பெண்ணாகப்பிறப்பாய் போ எனச் சாபமிட்டாள். உடனே அம்பிகை சாபப்படியே

பூமியில் வந்து ரேணு முனிவர் தன் மனையாளோடு புல்லிச்
சயனித்திருக்கும் பாயலில் அழகு மிக்க பெண் குழந்தை வடி
வாய்க் கிடந்தாள். ரேணு முனிவரும் அவர் மனைவியும் விழித்
துச் சித்திரப் பொற்பாவைபோற் கிடக்கும், அக்குழந்தையை
அதி ஆநந்தத்தோடு முனிவர்கரத்தில் ஏந்திக் கங்கையே நமக்கு
மகளாக வேண்டும் என்று நாம் கருதி ஈசனை நோக்கித் தவஞ்
செய்தது, இன்று பயன் பட்டது என்று உச்சிமோந்து முத்தி
மிட்டு மனைவிகையிற்கொடுத்தான். அவளும் முலையிற்பால் சுரக்
கப்பரிவுடன் வாங்கி முலையூட்டி இனிது மகிழ்ந்தாள்.

அப்பெண்ணிற்கு ஆதிரை என்னும் நாமஞ்சூட்டி இனிது
வளர்த்துவருகையில் பிறைமதிபோல் வளர்ந்து எட்டு வயதுடை
யவளாயினள். களந்தையிலிருக்கும் வயிரவமலையாம் வேந்தன்
இரேணுவமுனிவரைக் கந்தர்ப்ப வெற்பில்வந்து கண்டு,இனிதங்
கிருக்கும் நாளில், ஆதிரையைக் கண்டு உளங்களித்து ரேணுமுனி
வரிடத்தில் வேண்டித் தனக்குத் தத்துப்புத்திரியாகப் பெற்று
அதி ஆநந்தத்தோடு தன் நகர் சென்று தன் மனைவிகையிற்கொ
டுத்து இப்பெண்ணை இனிது வளர்க்க எனச் சொல்லினன். அவ
ளும் அவ்வாறே வளர்த்துவருகையில் பூவையன்ன ஆதிரையும்
பன்னிய நறுமலர்கள் கொய்து சிவபெருமானை உள் நினைந்து வே
தவிதிப்படி சிறப்புறு பூசைசெய்துவந்தாள். தினமும் இத்த
கைய பூசை தவறாது செய்து வாசனைமிகுந்த பானலம் பூக்கள்
ஆயிரமெடுத்து ஓர் மாலையாக்கி அமலனுக்கு அணிந்துவந்தாள்.
இவ்வாறு செய்துவரும் நாட்களில் சிவபெருமான் பூசைக்கு
உவந்து அருள் செய்யத் தேவர்கள் சூழ அரம்பையர் கூடி முன்
ஆடிவர ஆயிரங்கோடி சூரியர்கள் பிரகாசிப்பதுபோல வெள்ளிய
ரிஷபத்தின்மேல் தோன்றி காட்சிகொடுத்தார். கண்ட ஆதிரை
யும் புளகங்கொண்டு ஆநந்தக் கண்ணீர்வார ஆடிப் பாடித் துதித்
துப் போற்றி ஆனந்தப் பரவசமாயினள். அதுகண்டு சிவபெரு
மான் கனிகொண்டு ஆதிரை மாதே! உனக்கு நம்பால் அன்பு
அதிகமாக இருக்கிறதென்று சொல்லி கட்டித் தழுவிக்கொண்டு
அவளோடும் மந்திரேசுரம் வந்து இன்புடைய சிகரக்கோயிலில்
வந்து இனிது வீற்றிருந்தார். அப்பொழுது வயிரவமலையாம்

வேந்தன், தன்மகளைக்காணாது தேடிப் பிறகு உணர்ந்து பரமற்கு இந்தப்படி செய்தல் முறையோ? என்றான். தன் பெண்ணைக் காணாது கன்னை அற்றவன்போற் கலங்கி நிற்பான், துடிதுடிப் பான், சூத்திரமற்ற பாவைபோல் துடிப்பொடுங்கி அயர்ந்து நிற் பான், சிவபெருமான் கல்யாணஞ்செய்து கைபிடித்திருப்பதைக் கண்டிலேனே, அப்படிச் செய்யாது அவர் சும்மா கொண்டுபோக நான் வாழுமாட்டேன், இப்பொழுதே இறந்துபடுவேனென்று தீவலஞ் சூழ்வதானான். அப்பொழுது அசரீரி யொங்கழல் புகுதவேண்டாம், பொருநை நதிக்குத் தெற்கேயுள்ள மந்திரே சுரத்திற் சென்று செங்கையாள் மகஞ் செய்வித்தால் சிவபெரு மான் வந்து மணஞ்செய்வார் என்று கூறிற்று. உடனே அரச னும் உமையொருபாகனின் செயல் இது எனத்தெளிந்து சோதி சக்கரநகரிற்குத் தென்கீழ்ப்பாலுள்ள மாதிருந்தருளும் மந்திரே சுர நகரத்திற்கு வந்தான். நகரத்தை வலஞ்செய்து தொழுது அசரீரிவாக்கைச் சிவபெருமான் வாக்காகவே கொண்டு மந்திரே சுரர் பொன்னடி வணங்கி வேள்வி ஒன்றமைத்துச் செய்தான். அப்பொழுது தூயஓமகுண்டத்தில் ஓங்கிப் பிரணவத்தோடு நாத முங் காந்தியும் பிறங்க விரிசடைப் பரமன் வெள்விடை மீதினிற் றோன்றி ஆதிரையொடு எதிரில்வரக் கண்டான். கண்ட கண் களில் ஆநந்த வெள்ளம் வழிய மெய் புளகங் கொள்ள வயிரவ மலையெனும் வேந்தன் சிவபெருமான்முன் நின்று பல தோத்தி ரங்கள் மொழிந்தான். அதற்குச் சிவபெருமான் மனமகிழ்ந்து என்னவரம் வேண்டுமென வினவ,வேந்தன் “அத்தனே! நீ ஆத்தி ரையைமணந்து கைப்பிடிப்பதைக்காண அருள்செய்யவேண்டும்” என்றான். அதற்குச் சிவபெருமான் அவ்வரம் தந்து, வானவர் தச்சனை நினைந்தார். நினைந்த அளவிலே மயனும் வந்து அடிப ணிந்து வணங்கித் துதிபல புகன்று நின்றான். பின் அவர் அரு ளால் மந்திரேசுரருக்கு ஒரு வதுவை மண்டபம் வகுத்தான். திரிகாலமுணர்ந்த அம்மயன் கண்ணுதலார் ஆலயம்,மதில், மண்ட பம், அடவி, கோலக்கா, வண்ணச்சாலைகள் சிகர கோபுரங்கள், நீள் கொடி, மகரதோரணம் முதலியவற்றை இனிதமைத்தான். மால் பிரமாதி தேவர்கள் தங்குவதற்குப் பல இடங்களுஞ் சாலை

ளும் இயற்றி கல்யாண மண்டபத்தையும் வளம்பெற முடிப்பித்தான். மந்திரேசுர நகரலங்காரமும் வகுத்தான். நாயகன் கண்டு கண்களிகூர்ந்தான். மால்பிரமர் இந்திரன்இருடிகள் அண்டர்கள் போற்றிட அரம்பையர்கள் ஆட மணஞ்செய்மண்டபத்து அரியணைமேல் வந்து மகிழ்ந்திருந்தார். மற்றவர்களும் தங்கள் தங்களுக்கமைக்கப்பட்ட ஆதனத்திலிருந்தார்கள். வயிரவவேந்தனும் ஆத்திரையைப் பற்றிஞேடலங்காரங்கள் பண்ணிப் பரனைச் சுற்றிவந்து அவர் சமீபத்தில் நிறுத்தினுன். சுருதிகள் முழங்கப் பல்லியம் ஆர்ப்ப தேவதுந்துபிகள்முழங்க அமலன் ஆத்திரையை மணம்புரிந்தான். வயிரவமலை என்னும் வேந்தன் புதுநீர்கொண்டு தாரைவார்த்து அமலனைப் போற்றி, விதியும் மாலும் அன்றடி முடிதேடிய விமலா! சுருதிநாயகனே! துதியுனக்கு யான் சொல்வது என்? என்றான். கங்கை சூடிய கடவுளே! கருணையங்கடலே! அருள் செய்க என்னலும் அரன் அருள் புரிந்தான். மாலயன் முதலியோர்களுந் துதித்து அருள் செய்யுமாறு மிக வேண்ட அவர்களுக்குஞ் சிவபெருமான் அருள்செய்தார். பிறகு அந்த ஆத்திரையை பாதியாக்கி ஒரு பாதியை அமலன் தன்சடையில் தரித்துக்கொண்டு மற்றொரு பாதியைத் தந்தையாகிய வயிரவமலை தன்னிலிருந்து பந்திவெண்டிரைப் பச்சையாறுய்வரப் பணித்தருளினுர். அன்றிலிருந்து நீண்ட வயிரவமலையில் ஆறுகிச் சென்று தாம்பிரபன்னியைச் சேரும். முக்கூடல் என்னும் தீர்த்தத்தில் ஆடி ஓமீசரைப் பணிந்தால் கங்கையில் ஆயிரந்தரந் தோய்ந்திடும் பலனும். இந்த நதியில் ஓமீசர் சன்னதியில் தீர்த்தமாடி வரதனைப் பணிந்தால் கங்கையில் இரண்டாயிரந்தரஞ் சிந்தை யன்பொடு தோய்ந்த பேறு உண்டாகும். பச்சையாறு ரேணுவர்பால் ஆதிரைநாளிற் பிறந்தமையாற் புவிபுகழும் அந்நதிக்கு "ஆத்திராநதி" எனப் பெயர் வந்தது. யாவராயினும் மந்திரேசுரரை ஒருதரம் தரிசித்தால் தேவராவார்கள். அன்பொடு தினந் தரிசிப்போர்கள் பாவம் நீங்கிக் குலத்தோடும் பரகதி படைவர். இந்த நகரத்தில் சுயம்புலிங்கம் அர்த்தநாரீசர் மந்திரேசுரர் அரனுர் இலங்குவர். முத்திதரும் மந்திரேசுர தீர்த்தம் மூழ்கிப் பத்தி செய்வோர் பானு

ருப்பெறுவர். தேவர்களும் மூழ்கிப் பேறுபெறும் இத்தீர்த்தத்தின் கீழ்பால் தேவதீர்த்தமும் அதற்குங் கீழ்பால் பொருநையாற்றில் தேவர்கள் போற்றும் உருத்திர தீர்த்தமும் என இரு தீர்த்தங்கள் உண்டு. இவற்றில் முழுகுவோர்கள் சிவபெருமானின் சாரூபம் பெறுவர் என்றால் இதன் பெருமைகளை யாரே பகர வல்லவர்கள். மங்களமிகுந்த இத்தீர்த்தமகிமைகளைச் சொன்னோம், இனித் திருவக்கினீச்சுர மேன்மையைச் சுகர்க்கு வியாதர் சொல்லியபடி சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சூதமுனிவர் கூறுவாராயினர்.

---

## கஉ-வது, திருவக்கினீ சுரச் சருக்கம்.

---

தக்கனார் வேள்விக் கண்ணே தனிவரு வீரன் கையால்
மிக்கநா விழந்து பின்னர் வெகுதுய ருற்றே யஞ்சும்
துக்கமா ரக்னி போற்றித் துகளறு வரங்கள்பெற்ற
அக்கினீச் சுரத்தை நாளு மமைப்பமெம் முளத்தி னன்றே.

சோலைகளிலெல்லாம் மயில் நடிக்கவும் பண்ணைகளில் செந்நெல் விளையவும் பொருந்தி யெங்கும் பொன்மேடைகளோடுகூடி திருவக்கினீச்சுர நகரம் விளங்கும். இந்நகரில் உப்பரிக்கைகளில் சிற்பிகள் செய்த ஓவியத்தைத் தெரிவையர்கள் ஒளித்தனரென்று அங்குவந்து அருகுநிற்பார்கள். துப்புவாய்ச்சியரின் மொழியின்மை கண்டு உள்ளஞ் சோர்வர். இந்த மாநகரத்திலெய்திய கதையைக் கேட்பவர் பரகதி சேர்வர் சாந்தமாமறை முனிவரே! கேளுங்கள் எனச் சூதமுனிவர் சொல்வாராயினர். தக்கன் சிவபெருமானை இகழ்ந்துசெய்யும் வேள்வியில் வீரபத்திரக்கடவுள் தோன்றி மகத்தை அழித்து அருகே உள்ள அக்கினியின் காத்தை அறுத்தார். அப்பொழுது அக்கினிதேவன், தேவர்கள் சூழ வந்து போற்றித் துதித்து வீரபத்திரக்கடவுளின் அருளால் பழயபடி தன் கரம் பெற்று கையன் வேள்விக்குச் சென்ற பாவத்தைக் கழிக்கத் தென்பாலுள்ள பொருநை ஆற்றங்கரை சார்ந்து சிந்துபூந்துறையின் குணபாலில் தோன்றிய அழகிய பொழிலைக்

கண்டு அதிசயித்து அங்கேயே தங்கிச் சிவபெருமானைக்குறித்து நெடுநாள் தவஞ்செய்தான். தினமும் பொருநையாடிச் சுத்தமாக இருந்து பூசைசெய்தல் கண்டு சிவபெருமான் முளரியில் சிவலிங்கமாக முளைத்தார். தேவர்கள் அலர்மழை பொழிந்தனர். அத்திருவிலிங்கத்திலிருந்து மான் மழுக் கரத்தராய் உமாதேவியாரோடு வெள்ளிய விடபாரூடராய்த் தோன்றினர். ஆயிரங்கோடி சூரியப்பிரகாசராய்த் தோன்றிய சிவபெருமானை அக்கினிதேவன் படிமிசை வீழ்ந்து பணிந்து போற்றித் துதித்தான். தக்கன் வேள்விக்குச் சென்ற பாவத்தை நீக்கவேண்டும் என்று பணிந்து இரந்து வேண்டினன். சென்னியிற் கரங்கள்கூப்பித் தன்னைத் தொழும்அக்கினியை நோக்கிஅஞ்சேல்!என்று அருள் செய்து உனக்குவேண்டும் வரங்களைக் கேள் என அருளிச்செய்தார். உடனே அக்கினிக் கடவுள், குழகனே! சிறுவிதி செய்த வேள்வியிற் கூடிய பழியை அகற்றி நின்கான் மலர் தந்தருளவேண்டும். இந்தத் தலத்தில் நான் பூசை செய்தமைபால் இத் தலம் அக்கினீச்சுரம் என்றும் இத்தீர்த்தம் அக்கினீச்சுர தீர்த்தம் என்றும் தங்கள் திருநாமம் அக்கினீச்சுரர் என்றும் பெயர் எய்த வேண்டுமென்றும் இவ்வரங்கள் தந்தருள வேண்டுமென்றும் இரந்து வேண்டினன். மேலும் இந்த அக்கினீசுர தீர்த்தத்தில் மூழ்கி அந்திவண்ணனே! உன்னைத் தரிசித்திடுவோர்கள் முற்பவம் நீங்கி உன்பதம் பேற வேண்டும் என்று இரந்து கேட்க அமலனும் "உனக்குத் தந்தோம்" என அருள் செய்து, இங்கு நீ ஓர் ஆலயம் வகுத்திடெனக்கூறி அருகு தோன்றிய லிங்கத்தினுள் மறைந்தார். அக்கினியும் அழகிதே! என அரனடி போற்றிப் பழுதிலா ஆலயம் மண்டபம் கோபுரமுதலிய வியற்றி மழுவலாளனை வணங்கி அவ்வாலயஞ் சூழ்ந்து தொழுது பச்சிமத் துவாரத்தின் எதிர் நின்று ..னை பரா! நீ பார்வதி தேவியோடு என்றும் நீங்காது இருக்கவேண்டுமெனக்கூறிப் போற்றிப் புகழ்ந்து விடைபெற்றுக்கொண்டு தன்பதஞ் சேர்ந்தான். மாலும், விநாயகனும், சுப்பிரமணியக் கடவுளும் களிப்பினோடு தானைசூழச் சூழ்ந்திருக்க அப்பதி தழைத்தோங்கும், சிவபெருமான் இனிது வாழும் அக்கினீசுரப்

பதியில் சிலமோடு சென்று அக்கினி தீர்த்தத்திலாடி ஆலயத்தரன் பதம் பணிந்து அரன்பதம் பெற்றோர் அனேகர் ஆவர். அதன் பெருமையாரே சொல்லக்கூடும் என்று அக்கினீசுரக் கதையைக்கூறி துற்கேசுரநகரச்சிறப்பைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுவராயினர்.

## ௩௩-வது துற்கேசுரச் சருக்கம்.

தோற்றுறும் பிறவி யென்னுந் தொடாறுத் தின்ப நல்கும்
மாற்றுயர் நகர மாகும் மகிழ்தருந் துற்கை பூசித்
தாற்றலும் வரமும் பெற்ற தழுவுதுற் கேசு ரத்தை
சாற்றிடு மவரே சாற்றுந் தனிவளம் பெறுவோ ரம்மா.

சூலியாமளே வாழுந் துற்கேசுரநகரத்தின் பண்ணையிலெலாங் கமலங்கள் விளங்கும். செழும் பொழில்களிலெல்லாம் நறுமலர் செறிந்து விளங்கும். எங்கும் வேதியர் சாலைகளும் ஓமகுண்டங்களும் விளங்கும்.

விண்ணவர்களும் மாதவர்களும் சிவயோகர்களும் பனிதர் தம்மோடும் வந்து நீராடியே மகிழ்வர். இத்துற்கைமா நகரில் மலையமீதுயர் மணங்களுஞ் செந்தமிழ் மணங்களுந் தாம்பிரபன்னியில் நீராடும் மங்கையர் கொங்கையின் கலவை மணங்களுங் கலந்து தென்றலோடுவந்து உலவும். இந்த நல்லவளம் பொருந்திய நகரில் வந்து தேவர்கள் துற்கை தீர்த்தத்தில் நீராடித்துற்கையைத் தொழுது நெல்வேலி நந்தணி குழைநம்பனை எந்நாளுந் தொழுவார்கள். இஃதன்றி மாதவர், வேதியர் மன்னவர்முதலோர் பற்றினோடு அந்தத்தீர்த்தத்திலாடித் துற்கை அம்மனைத் தரிசித்துத் தம் பாவங்களனைத்தையும் நீக்கி முடிவிலா முத்தியைப் பெற்றனர். ஆகையால் இந்தத் தீர்த்தத்தில் ஆடி சோதிநாயகி துற்கையின் அடியிணை தொழுவோர் நீதியோடு உயர் செல்வங்கள் இத்தலத்திற் பெற்று பின் கற்பாகதியாம் வீட்டையும் பெறுவர் என்றுகூறிச் சிந்து பூந்துறை மேன்மைகளைச் சொல்லுகின்றேனென்று கூறுகின்றார்.

## ௩௰௯-வது சிந்துபூந்துறைச் சருக்கம்.

தேவரும் முனிவர் தாமுந் திருப்பெற வந்து மூழ்கும்
மேவரு தலமாஞ் சிந்து பூந்துறை விரும்புங் காசி
தூவரு தலத்தின் மேலாத் தோற்றிடு மத்தி பூவா
நாவரு மறையோர்க் கான நல்வினை நருகு வோமே,

திருநெல்வேலியின கீழ்பால் ஓங்கும் பொருநை நதியின் சிந்துபூந்துறை மகிமையைச சுகருக்கு வியாசர் கூறிய வண்ணங் கூறுகின்றேன் கேளுங்கள் என நைமிசாரண்ய ரிஷிகள் மகிழக் கூறுகின்றார். உலகிலுள்ள வளங்களெல்லாம் ஓங்கியுள்ள திருநெல்வேலியின் ஊர்வளம் மிகவும் ஓங்கும். அவ்வூரில் மறையொலி யோங்கும். கார்மலி சோலை ஓங்கும். காவளஞ்சூழ்கழனி யோங்கும். சீர்வளமோங்கும். மேலாச் சிந்து பூந்துறை சிறந்தே யோங்கும். அலகிலாத செம்மணியும் முத்தும் மலையின் இருபக்கமுஞ் சிந்திநிலவொளிபோல நிறைந்திருபோதுங் காட்டும். பல கலைமறையோர் வேதம் பகர்வது கேட்டுப்பூவை விடியற்காலத்தில் புகலும்படியான சிந்துபூந்துறை சிறந்து விளங்கும்.சிந்துபூந்துறைப்பால்விண்ணவர் முதலியோர் நீராடும்ஓசையும் இருபக்கங்களிலும் யாகம் நடத்தும் ஓசையும் மாறாது விளங்கும். வானவர் மகளிரும் நாகமடந்தையரும் வையமாதர்களும் ஞான நற்றீர்தத்தில் ஆடி நறிய குழலை உலர்த்துந்தோறும். மேகமென அஞ்சி மயில்கள் ஆடும். வண்டுகள் இசைபாடும். சிறந்த வளமுடையது சிந்து பூந்துறை. ஆதியான்பினாகபாணி அமலன் நெல்வேலி நாதன் உமாதேவியோடு தேவா சூழவந்து நற்றினங்களிலெல்லாம் அடியார்களோடும் நிலவிய நீரில் ஆடும்பொழுது அலர் தூவிச்சிந்து பூந்துறை சிறப்புற்றது.

அகத்தியர் ஒருகாலத்தில் இதில் மூழ்கி ஜெகத்தைச்சமப்படுத்தி திருமூலலிங்கத்தைத் தவமோடும் பூசித்து மகத்துவமான சிவபெருமானின் மணக்கோலங்கண்டார். முன்னொரு காலத்தில் சிவபெருமானின் கயிலையிலிருந்து இங்கேவந்து மனத்திருதி யுடையவன் மூழ்கத்துன்னு பூதங்கள் மின்னொளிரும்ய நன்னதிகளெல்லாம் பொன்மலர் தூவிச்சிந்து பூந்துறையாயிற்

று. ஆதியிலே இச்சிவதீர்த்தத்திலே அம்பிகை மூழ்கி ஞானபாத தீர்த்தப்பேர் பெற்றது. அதனுள்ளே நாதனார் தேவியோடும் வைகுவர். ஆதலால் சிறப்பினுற் சிறந்த பூந்துறை மேன்மை மிக்கது. கங்கை யமுனை முதலிய நதிகளெல்லாம் கடல்களெல்லாம் உலகமெல்லாம் மூன்றரைக்கோடி தீர்த்தங்களெல்லாம் அலர்தூவி வணங்குந்தன்மையால் சிந்து பூந்துறை சிறப்பாற்றலுடைத்து ஓங்கும். நெல்வேலி நாதர் சன்னிதிக்கு நேராக வடமுகமாக ஓடும் பொருநையாற்றில் இத்திருமூர்த்தியினை நல்குஞ் சிந்துபூந்துறைத்தீர்த்தத்தில் பத்தியாய் மூழ்குவோர்கள் பரன் திருக்கயிலை சேர்வர்.

சிந்துபூந்துறைப்புனலில் நீராடி நெல்லை நாதர் கோயிலை வந்து ஒருதரம் தரிசித்தாலும் எண்ணிய கருமங்களெல்லாம் பெற்று இன்பவீடடைவர். நித்தமும் இம்மாதிரி வணங்குவோர்கள் எய்தும் பேற்றை இயம்புதல் எவர்க்குந் தன் எளிதாகும்.

பொருநைச்சிந்து பூந்துறைப் புனலில் மூழ்கி வேணுநாதரைப் பத்தியின் அருச்சித்து ஏத்திப் பணிபவர் பழம் வினைகள் நீங்கி நாக கங்கணர் உருவம் எய்திக் கயிலையில் வாழ்வர். சிந்து பூந்துறை என்று ஒருதரஞ் சொல்லியவர் நினைப்பவர் தரிசிப்பவர் அந்நீர் அருந்துவோர் அந்நீர்க் கரையிற்போபவர் மூவெழு செனமப் பந்தமாம் வினைகள் நீங்கிப்பரன் உருப் பெற்று வாழ்வர். சிந்து பூந்துறையில் மூழ்கி முன்வருவோர்களைக் கண்டோரும் உலகத்தில் அனுபவிக்கவேண்டிய இன்பங்களை எல்லாம் அனுபவித்து வலவினைத்தொடர்பு நீங்கி உயர் கதியைப் பெறுவார்கள். பொருநையாற்றின் இருகரையினுமுள்ள தீர்த்தங்களிலெல்லாம் பரிவொடு மூழ்கில் எந்தப் பேறு உண்டாகுமோ அந்தப்பேறெல்லாம் இந்நதியில் மூழ்குவோர்களுக்குக்கிட்டும். சிறந்த சிந்து பூந்துறையின் கரையில் இறந்தோர், இறந்த பேர்களுக்குக் கருமஞ் செய்தோர், பிறந்தோர், பிறந்தும் பெறு பெறுவதற்கு ஆசைப்பட்டோர்கள், அறஞ்செய்வோர்கள், அன்புடையோர் அரன் உருப்பெறுவர்.

சிந்து பூந்துறைக்கரையில் சாலைவைப்போர் மண்டபஞ் செய்வோர் நீண்டகற்படி முதலிய செய்வோர் கருதி நல்ல நாஞ்செய்வோர் அரனுறை கயிலையிற் களித்து வாழ்வர்.

ஆதிரை, சங்கிராந்தி, அமாவாசி, சோமவாரம், கிரகண காலம், பிரதோடம் முதலிய நாட்களில் பூந்துறைபடிந்து நெல்லை நாதரைத் தரிசிப்போர் நலம் பெறு முத்திசேர்வர். குமரி கங்கை தனுக்கோடி தேடித்திரிந்துழலும் எவரும் இச் சிந்து பூந்துறையில் வந்து ஒருநாள் நீராடி வேணு நாதரைத் தரிசித்தால் இன்பவீடெய்தலாம்.

சிந்து பூந்துறை மருங்குசேரும் மிருகம் பட்சி ஊர்வன மச்சம் முதலியவையே நலம் பெறுமுத்தி எய்தும் என்றால் அத்தீர்த்தத்தின் இயல்பையாரே இயம்பவல்லார். ஆகையால் உலகத்திலுள்ள எல்லாத்தீர்த்தங்களிலும் மிகச்சிறந்தது சிந்து பூந்துறையாகும்.

தேவர்கள் முனிவர்கள் சித்தர்கள் திசையுறைபுனிதர்கள் நாகர்கள் பூவலர்தூவிச்சிந்து பூந்துறை நீராடி ஆவலோடு நெல்லை மேவி அமலனைப்பணிந்து போற்றித் தாவுபொன்மானமேறித் தங்கள் பதங்களைச் சேர்வர். பாடலம் கம்பையாறு, பாதலத் தூடே வந்து நீடிய பொருனைச்சிந்து பூந்துறை நீரினோடு கூடு முக்கூடல் தன்னிற் குழகனை நினைந்து போற்றி நீராடுவோர் பேரானந்தக் கடலிடை யாடுவோரே. கங்கை முதலிய நதிக ளும் வந்து மூழ்கிப் புகழ்பெறு புனிதச்சிந்து பூந்துறை மூழ்கு வோர்க்கு பகையில்லை. பாவமில்லை. பண்டு செய்வினையுமில்லை. தகையில்லை வறுமையில்லை, தாவிடும்நோயில்லை பொருநையாற் றின் இருகரையுஞ் சூழ்ந்திருக்கும் ஆலயத்தின் பாங்கர் சூழ்ந் துள்ள தருக்களின் குளிர்காற்றுப்பட்டாலுஞ் சிவனடிசேர்வர்.

இந்தத்தீர்த்தத்தில்மூழ்கிநெல்வேலி அமலனைச்சேவைசெய் வோர் புத்திரர்களை மிகுதியாகப்பெற்று போகபோக்கியங்களைப் பெற்று மூத்தராய் இனிமைபெற்று முத்தியைச்சார்ந்துயர்வர்.

சிந்துபூந்துறைத்தீர்த்தக்கரையிலிருந்து செய்யப்படுஞ் செபதபங்கள் தானமுதலியன ஒன்று கோடியாகிஉயர்பலனளிக்கும். சிந்துபூந்துறையின் பெருமைபிரமனாலுஞ்சொல்லுதற்கரிது. அறிவுடையோருக்கும் புண்ணியம்உடையோருக்குமே அத்தீர்த்தங்காணவும் ஆடவுங்கிடைக்கும். அறிவிலார்க்கும் பாவிகளுக்குங் காணவும் ஆடவும் நினைக்கவுங் கிடைத்தல் அருமை! அருமை!. இச்சிந்துபூந்துறையில் நடந்த அதிசயமகத் துவங்கேளுங்கள். ஒரு பிராமணன் தன்தாதையின் அங்கத்தைக் காசியிற்சென்றிட வேண்டுமென்றுநினைத்து ஒருகலயத்திலிட்டு ஆடையிற்பொதிந்து மூடிஒருவன்பாற்கொடுத்துக் களந்தையினின்றும் வடக்குத் திக்கிற்குப்புறப்பட்டுசிந்துபூந்துறைக்கு வந்துதங்கினான். மறையவன் நீராடப்போனபொழுது அதைச்சுமந்துவந்த அந்தணன் அத்தப்பானையிலிருந்தது பண்ணிகாரமென்றுநினைந்து அவிழ்த்துப் பார்த்தான். தலங்களில்மிக்க சிந்துபூந்துறைத்தலத்தே வைத்தமகிமையால் அவ்வங்கமெல்லாஞ் செந்தாமரைமலராக இருந்தது கண்டு, பசிமிகுதியால் அதனைமுன்போல மூடிவைத்து நன்றாயிருக்கிறது. பூவைப்பணிகாரம் என்றுசொல்லினனே! இந்தப் பொய்யையான் அறியேனே என்று பசியோடுசோர்ந்திருக்கும் போழ்து நீராடப்போன மறைவலாளன்திரும்பி வந்து மூட்டை தான் வைத்த அடையாளப்படி இருக்கக்கண்டு அதனைத்தூக்கி வந்தகூலியாளோடு தூக்கிக்கொண்டுவரச்செய்து காசிமாநகரத்தைச்சார்ந்தான். மறைவலாளன் அங்கில்லாதசமயம் பார்த்து கங்கைக்கரையில்வைத்து முன்போல அவிழ்த்துப் பார்த்தான். அப்பொழுது மனிதர்எலும்புகளிருக்கக்கண்டு மறையவன் வந்தபின் "ஓ மறைவல்லோனே! முன்ஒருதலத்திற் பார்த்தேன் அலர்ந்ததாமரையாகக்கண்டேன். இன்று அவிழ்த்துப்பார்த்தேன். மனித எலும்பாக இருக்கக்கண்டேன். இதன் புதுமையை நவில்க" என்று கேட்டான். அதற்குப் பிராமணன். இது என்னுடைய தந்தையின் அங்கம். காசியிற் கங்கையாற்றிற் போடக்கொண்டு வந்தேன். அங்கம் என்று உண்மை சொன்னால் நீ தூக்கிக்கொண்டு வரமாட்டாய் என்று பொய்சொல்லினேன், என்னைமன்னித்துக்கொள் என்று சொல்லி, நீ

எந்தத்தலத்தில் அவிழ்த்துப்பார்த்தாய் சொல்லுகவென்று கேட்டனன். அதற்கு இத்தன்மை அறிந்திருப்பேனாகில் இவ்வளவு தூரம் வந்திருக்கமாட்டேன்; சிந்துபூந்துறையில் அவிழ்த்துப் பார்த்தேன், மறைவலாளனே! அங்கத்தை அங்கே கொண்டுபோவாயென்றான். மறைவலாளன் அதிசயமடைந்து அன்போடு அங்கத்தை எடுத்துக்கொண்டு திரும்பிச்சிந்துபூந்துறைக்கு வந்தனன்; அதை அவிழ்த்துப்பார்த்தபொழுது அலர்ந்தசெந்தாமரைபோல இருக்கக்கண்டார்கள். சிந்துபூந்துறையே காசிமுதலிய தலங்களிலெல்லாஞ் சிறந்தது என்று உறுதியாகக்கண்டார்கள்.

அலராகவிளங்கிய அங்கத்தைப் பொருநை ஆற்றில்விட்டனர். பின்வேணுநாதர் ஆலயத்திலிருந்து புதுமலர் செறிந்த பொற்றாமரைத் தடாகத்தில் நீராடி வடிவாள்பாதம் வணங்கிப் போற்றி மூலலிங்கத்தையும் வேணுவனேசரையும் அனவரததானநாயகரையுந் துதித்துப்போற்றி விடைகொண்டு களந்தைமாநகரத்தைச்சார்ந்தான்; காசியில் அங்கமாகிச் சிந்துபூந்துறையில் செந்தாமரையும் ஆனது இதன் பெருமைபிரமனுக்குஞ் சொல்லுதலரிது. சிந்துபூந்துறையின் பெருமை இப்படியதென்று கூறிச்சூதமாமுனிவர் சிந்துபூந்துறைக்கு வடபால் விளங்கும் இருவினைதொலைக்குஞ் சத்தவிருடிகள் தீர்த்தமேன்மையைக்கேளுங்களெனச் சுகர்க்குவேதவியாசர் கூறியபடியே நைமிசாரணியவாசிகள் அகமகிழ்ந்து கேட்கக் கூறுகின்றார்.

## ௩௫-வது சத்த விருடிகள் தீர்த்தச் சருக்கம்.

வேதமூமுனிவரென்னும் விசித்திர மெழுவர் போற்றி
ஏதமா மறையேன் அஞ்சா திசைத்திடு பொய்க்குமீசன்
பேதமா மென்றுஞ் செய்யாப் பிழைதல மென்றே மீனா
நாதனை வடுகற்கொண்டு நவிற்றிடுந் தீர்த்தம் வாழி.

மரீசி, அத்திரி, புலத்தியன், புலகன், அங்கிரா, கிருது, வசிட்டர் ஆகிய ஏழுமுனிவர்களும் முன் ஒருகாலத்தில் சிவ

பெருமான் தலப்பெருமையையும் பொருநை யாற்றின் பெருமை யையும நாடியே சென்னல் சூழ் பணைவனஞ் சிறப்புடையது என்று எண்ணி அங்குவந்து சிந்து பூந்துறைக்கு வந்துசேர்ந் தனர். வடதிசை மருங்கு சென்று அந்த நீர்க்கயத்தில் அன் பின் மூழ்கினர். சிந்தை அன்பொடு செப தபங்கள் செய்தனர். பிறகு நெல்லைக்குள் சென்று திருமூல நாதனார் சன்னதிக்கு வந்து தாழ்ந்து போற்றினர். பொன்மலர் தூற்றிப் பூசை செய்தனர். பல முறை தோத்திரங்கள் செய்து வாழ்த்தினர். விரும்பி வேயின்ற முத்தை அரும்பு கொண்டருச்சித்துக் காந்தி மதியம் மனையுங் கண்டு போற்றித் துதித்துப் பூசித்து அங்கு தங்கினா. இவ்வகையாக முனிவரர் வந்து மூழ்கலால் இந்தத் தீர்த்தமும் இருடி தீர்த்தமாம். இத்தீர்த்தத்தில் மூழ்கி நெல்வேலிஅண்ணலா பொன்னடி பணிகுவோர் புனிதராகுவர். இந்த விதமாக முனிவர்கள் நீராடிப் புனிதனைத் தொழுது கொண்டிருக்கும் பொழுது நடந்த அதிசயம் ஒன்று கேளுங் கள் என்று சூத மகாமுனிவர் நைமி சாரணிய வாசிகளுக்குக் கூறுகின்றார். நெல்லைமா நகரில் நல்லொழுக்க மில்லாதவனும் அற்ப அறிவுடையவனும் பொய் களவு கொலை முதலிய தீக்கு ணங்களை யுடையவனுமாகிய ஒரு பாதகனாகிய அந்தணன் ஒருவன் அவன் தன அடுத்த வீட்டிலுள்ள அந்தணனின் அரு மைப் புதல்வனின் ஆபரணங்களைப் பறித்து உயிரையுங் கொல்ல நினைத்து முனி தீர்த்தத்தில் வந்தான். கையிற் கனிகொ டுத்துக் கூட்டி வந்து அதன் அணிகளைப் பறித்துக் கொண்டு குழந்தையைக கொல்லும பொழுது அழ அக்குரல் கேட்டு முனிவர்களாயினோர் மொழிந்திடல் பாவமென விழிகள் மூடினர். உடனே அந்தணன் செகுத்த குழந்தையைக் கயத்திற்றள்ளி நீலகண்டர் வெய்வனத்தில் நண்ணிப் பிறகு தன் வீடு சேர்ந் தான. சிறுவனின் பெற்றோருந் தேடிக்காணாத வராகி அலக்க ணுற்று அழுது அரற்றினர் அவர்களோடு கூடிச், சிறுவனைக் கொன்றவனும் மிக்க, துயரொடு அழுது சோர்ந்து சிந்தை மயங் கினர் போலத் தேம்பினன். அப்பொழுது அந்தணர்கள் அவ னைப் பிடித்துக் கொணடு பிள்ளை உன்னோடு தானே வந்தான் நீ

தான் ஒப்புவிக்க வேண்டுமென்றனர். நீங்கள் சொல்வது பொய், என்னோடு வரவில்லை எனப் பதில் பொய்மொழி புகன்றான். இவ்வாறு அக்கயவன் சாதிக்கவே, நீ திங்கள்வேணியன் முன் உண்மை செப்பென்றனர். அதற்கு அவனும் சம்மதித்து அச்சமின்றிப் பொற்றாமரைத் தடத்தில் மூழ்கிச்சன்னிதி முன்பு நின்று உண்மை சாற்றினான். பிறகு முனிவர்கள் குழந்தையைக் கொன்றவன் சந்நிதி முன்பு பொய் சொல்லி இனிது வாழ்வதைக்கண்டு இங்கு இறைவனில்லை என்று சிந்து பூந்துறையை விட்டு விட்டு எழு பேரும் காசி சென்றனர். இதனைக் கண்ட சிவபெருமான் காரியை நோக்கி இவ்வேழு முனிவர்களும் மடமையால் ஏகுகின்றனர் அழையென அவரும் தம் பூதகணங்கள் சூழவேடுவர் போலச் சென்று வழி மறைத்துப் பொருள் கொடுத்தேகுங்கள் என அவர்கள் அஞ்சி நடுங்கிய காலத்தே "நீங்கள்யார்?எங்கிருந்து எங்கு போகின்றீர்கள்?சொல்லி விட்டுப் போங்களென" முனிவர்கள் அவர்களை நோக்கிப் பிள்ளையைக் கொன்ற பாதகன் சன்னிதி முன்பு நின்று பொய்ச்சத்தியஞ் செய்து பின்னும் அழிவின்றி இனிது வாழ்கின்றான். ஆதலினால் சிவபெருமான் இத்தலத்திலில்லை என்று காசிக்குப் போகின்றோம் என்றனர். அதற்கு வயிரவக்கடவுள் முனிவர்களே! நீங்கள் அறியாமையாற் புகன்றிது செய்கின்றீர். அப்பாதகன் பொற்றாமரைத் தடத்தில் மூழ்கிப் பிறகு சன்னிதியில் வந்து சத்தியஞ் செய்தமையால் அவன் பாவம் நீங்கிற்று. இத்தலம் காசியைக் காட்டிலும் பல்லாயிரம் மடங்கு விசேடமுஞ் சிறப்புந் தெய் வீகமும் உடையது என்று சொல்லி மறைந்தார். உடனே ஆச்சரியப்பட்டுத் திரும்பி வந்து சிந்து பூந்துறையில் மூழ்கினர்.

பொற்றாமரையில் ஆடி வடிவுடை நாயகி தன்செந்தளிரடியிணைதொழுது துதித்தனர். மூலலிங்கத்தையும் வேய்முத்தரையும் இறைஞ்சி ஏத்தினர். மற்றுள தேவரையும் முறை முறை பணிந்து போற்றினர். தங்கள் பாலுற்று அறிவு உணர்த்திய வயிரவக்கடவுளையும் போற்றி வணங்கினர். பிறகு அமலரிடம் விடைபெற்றேகி முன்போலச் சிந்து பூந்துறையில் இனிது

வாழ்ந்தனர். இந்தத்தீர்த்தத்திற்கு வடபாலில் பாசமோட்ச மாம் மெய்த்தீர்த்தமுண்டு. அந்தத்தீர்த்தத்தில் ஆடி வேணு நாதரைத்தரிசிப்போர் கயிலையில் வாழ்வர். சிந்து பூந்துறைக் குக் கீழ்பால் மன்னிய அத்தீர்த்தத்தில் மங்கை மன்னனூர் அங்கிலே பிராந்தர் தான்றோன்றி அப்பருந்துன்னி அங்காடலால் அது தூயதீர்த்தமாம். அத்தலத்து மேவிய தீர்த்தத்தில் சித் திரைப்பவுரணை முதலிய நற்றினங்களில் ஆடிப் பத்தியொடு அர னடி பணிந்து போற்றுவோர் முத்தராய் முடிவிலாமுத்தி எய்து வார். எழுமுனிவரின் சரித்திர முரைத்தோம் இனி பெருங் குட்டத்துறையின் பெருமையைச் சொல்லுகின்றேன் கேளுங்க ளெனச் சொல்லுகின்றார்.



## ௩௪-வது, குட்டத்துறைத்தீர்த்தச் சருக்கம்.

காசிமா நகர வேந்தன் கவலுறு குட்ட நீங்க
மாசிலா வீசன் றோன்றி மனதுற நினைத்த வேந்தே
பேசிடாப் பெருமை வாய்ந்த பிறங்குயர் பொருநைத் தென்பால்
நேசிவா வென்ற குட்ட நீர்த்துறைத் தீர்த்தம் வாழி.

குட்டத்துறை என்னும் தொன்னகரம் எல்லா வளங்களா லும் நிறைந்து பொன்னகர் எனவிளங்கும். இதில் நடந்த மகத்துவம் ஒன்று சொல்லுகின்றேன் கேளுங்கள். மலைபோன் ற புயங்களும் மன்மதனைப்போன்ற அழகும் உடைய அரசன் உலகத்தை எல்லாங் காசியிலிருந்து அரசாட்சிசெய்துகொண் டிருந்தான். அவ்வரசனுக்குப் பழவினையால் உடம்பெல்லாங் குட்டநோய் வர உலகெல்லாம் இகழுமே என்று மனம்வாடி அணிகளை நீக்கி மிக்க துயரோடுவருந்தி நோய்தீரக் கங்கை யாடி விசுவநாதரின் மலரடி நினைந்து நாள்தோறும் நல்தவம் புரிந்து அருச்சனைசெய்து வந்தான். அப்பொழுதும் அந்நோய் அக லாமையால் இன்றைக்கு இந்நோய் அகற்றுவிடில் இறப்பேன் என்று இருந்திட, விசுவேசன் இரங்கி எதிரிற்றோன்றி அரசனை நோக்கி "உன் நோய் அகலுமாறு தெற்கே பொதியமலையிலிருந்

து வரும் பொருநையில் விளங்குஞ் சிந்து பூந்துறை சென்று நீராடி மகிழ்ச்சியோடு நம்மை அங்குவணங்கி எம்மைத்தரிசிப் பாயாக.'' என்றருளி மறைந்தார். முத்தநாதன் கூறும் அமுத வாய் மொழிப்படியே கேட்டு உலகை ஆளும் அரசன் புனிதனை வணங்கிப்போய் அரண்மனைசென்று மிகத்திரவியங்களை எடுத் துக்கொண்டு மந்திரி முதலாயினோர் சூழ காசியிலிருந்து புறப் பட்டு வழியிலுள்ள தலங்களிலெல்லாஞ் சென்று தீர்த்தங்களாடி மூர்த்திகளைத்தரிசித்துப் பூசித்துக்கொண்டு சிந்து பூந்துறை வந்து அதில் நீராடிப்பிறகு பொற்றாமரைத் தடத்தில் நீராடி வடிவுடையாள் பொற்கமலம் போற்றித் திருமூலத்தானத்தைப் போற்றி நெல்லை நாதர் பொன்னடிக்கமலம் போற்றி அனவரத நாதர் அடியிணைக்கமலம் போற்றி வேய்வனநாதர் சன்னிதிக்கு வந்து அரனைப்போற்றித் தன் குட்டத்தைத்தீர்த்தருளவேண்டு மென்று இரந்து வேண்டினன். பின் தன் படைகள்சூழ அமைச்சர்கள்சூழ பொருநைமேவி சிந்து பூந்துறைக்குக்கீழ் பால் குட்டத்துறை சென்று மேருமலைபோல முன்செய்த கோயிலிற்றங்கி தினமுந் தீர்த்தமாடி நெல்லை நாதர் பாதமலாடி பணிந்து நிற்கும்போது உற்றவெண் குட்டம் ஒருவிரலளவு நீங் கக்கண்டு அதிசயமெய்தித் தன் குட்டம் முற்றும் நீங்க அதே விதமாகத் தினமும் நெல்வேலி நாதனைப்பணிந்து போற்றிக் குறை இரந்துவந்தான். வெண்குட்டமும் நித்தமும் ஒருவிரல ளவாகக்குறைந்துகொண்டேவந்து தேகமுற்றும் உள்ளகுட்டம் நீங்கிமுன்போலப்பொன்போல் விளங்கிற்று. பிறகு அமலனை வியந்து போற்றிப்பூசித்து விடைகொண்டு தன் காசிமாநகரம் போனான்.

ஆகையாலே அரசன்குட்டத்தை நீக்கிடும் மகிமையாலே அந்நகரத்திற்குக்குட்டத்துறை என்றபெயர்வந்தது. ஆதிலுள் ள தீர்த்தத்திற்குங் குட்டத்துறைஎன்றேபெயர். அத்தீர்த்தத்தில் மூழ்குவோர்கயிலை சார்ந்து வாழ்வர். என்று கூறிப்பின் சூதமு னிவர் சடாயுவின் தீர்த்தத்தின் பெருமைகூறுகின்றேன் கேளுங் களெனச்சொல்லுகின்றார்.



## ௩௭, வது சடாயுதீர்த்தம் அல்லது இராமேசநல்லூர்ச் சருக்கம்.

கெடாவலி யரக்கர் மாளக் கிளர்தரு மயோத்தி வந்த
தடாவருள் ராமன் மூழ்கிச் சடாயுவிற் கீமஞ் செய்து
விடாவுயர் கதியை யீந்த விமலனி னருளைப் பெற்ற
சடாயுநற் றீர்த்தந் தன்னைச் சார்ந்தவர் கயிலை சார்வார்.

சுகர் குட்டத்துறையின் பெருமைகளைக்கேட்டு ஆனந்தங் கொண்டு தாதையை நோக்கி வடதிக்கில் பொருநையூடு மேல் பால் ஓங்கும் இராமேச நல்லூரினுண்மை எல்லாந் தெரிய விரித் துரைத்தருளுக என்ன வியாதமுனிவர் சொல்லியருளினர். சூரிய சந்திரர்கள் பலகோடியரின் உதையம்போல இனமணி சூழ்ந்த எயிலையுடையது இராமேசநல்லூர். ஆதிநெடுமால் அயோத்தியில் தசரதபுத்திரராகிச் சீதையை மணந்து தாய்சொற் படி அரணியஞ்சென்ற காலத்து, இராவணன் வஞ்சனையாற் சீ தையைக் கவர்ந்து செல்ல ஜடாயுமறுத்துப் போர்செய்து இந்தத் தலத்தில் இறந்தான். இராமபிரானும் தன் மனைவியைத்தேடிக் கொண்டு அங்குவந்து ஜடாயுவைக்கண்டு மாய்ந்தமையால் சுடலைக்கோல முதலியவற்றை ஒழுங்குபடச்செய்து கனன்மாலை சாத்தி அருகினில் பிண்டோதகமும் அடைவாகச்செய்து ஜடா யுவை அருங்கதி பெறச்செய்து பொருநை நீராடிச் சிவபெரு மானை அங்கு பிரதிட்டைசெய்து வேதமுறை திறம்பாமல் விய ந்து பூசை மேன்மைபெறச்செய்து மனம் விரும்பி ஞானச் சோதி யிருபாத மலர்பணிந்து போற்றிப் பரம்பொருளே தென் புலத்தார்க்கு நலம் உண்டாக நீதிதருகதியருளவேண்டும். நீயும் நீங்காமல் இத்தலத்தில் இருக்கவேண்டும் என வேண்டி வரம் பெற்றார். அத்தலம்ராமேச நல்லூரெனவும் ஈச்சுரர் ராமநாத ரெனவும், அம்மன்மலைவளர்காதலி எனவும் பேர் மன்னி வாழ் வர். பொருநையாடி அவ்விலிங்கத்தைத் தரிசிப்போர் நற்கதி வீடு பெறுக என்றும் வரம்பெற்று விடைபெற்று, வானர சயினியங்க ளோடுஞ் சென்று இராவணாதியர்களை அழித்துச் சீதையோடு

மீண்டு சேதுவிற்சிவபூசனை செய்து அயோத்திவந்து அரசு மன்னி வாழ்ந்தான். ஸ்ரீ ராமர் மூழ்குந் தீர்த்தத்தில் எவரே னுஞ் சென்று மூழ்கி நலமாகச் சிராத்தங்களெல்லாஞ் செய்து இராமேசரை நயந்து போற்றி மலைவளர்காதலிபதம வணங்கி வாழ்த்தின் மரபிலுள்ள தென்புலத்தோர் மகிழ்ந்து வாழ்த்த உலகில் உயர் செல்வமெல்லாம் பொருந்தி மேலுறுகதியை எந்நாளும் உற்று மகிழ்ந்து வாழ்வர். உலகம் புகழும் இரா மேசநல்லூர் மருங்கு கதித்த வடபாலில் வரும் பொருநை நாப்பண் கற்பாறையில் ஈசன் கமலபாதம் பதித்து வைத்தார். அதைத் தரிசித்துப் பூசிப்பின் தூயகதிபெற்று வாழ்வர், என்று சூதமுனிவர் கூறிப்பின்னர் மங்களேசுர தீர்த்தப் பெருமை யைச் செல்வாராயினர்.

---

## ௩அ-வது, மங்களேசுரதீர்த்தச் சருக்கம்.

---

பாண்டவர் தம்முள் மிக்க பார்த்தனைக் கவ்வும் வன்மீன்
ஆண்டகை யமர ரான வரும்பெருந் தீர்த்த மாகும்
வேண்டுமங் களேசு ரப்பேர் வியப்புறு தீர்த்தந் தன்னை
ஈண்டுநா முரைக்கி லின்ப மெளிதுற வருமால் நன்றே.

பொன்மணிப் புரிசைகளும் பொன்மேடைகளும் ஓங்கியுள் ளதும் நல்லவளங்களையுடையதுமாகியமணவை மாநகரம் பாண் டி நாட்டரசர்களுக்கு ராஜதானியாக விளங்கும். இதில் மங்கள தீர்த்தமென்று ஒரு தீர்த்தமுண்டு. இம்மணவை மாநகரில் சிவ பெருமான், மங்களதீர்த்தமாடித் திருவடி தொழுதவர் பாவம் போக்கிப் புனிதநல்கித் திருக்கோயில் கொண்டிருக்கும் நாளில், முன் ஒரு காலத்தில் பஞ்சபாண்டவர்கள் துரோபதையைமணந் து இன்புற்றுவாழும் நாளில் நாரதர்வந்து துரோபதையை ஒவ் வொருவரும் ஒவ்வொரு வருஷம் மருவி வாழுங்கள். ஏகாந்தத் திருப்பதை உம்முள் ஒருவர்கண்டால் கண்டஅவர் விற்படைதுறந் து மிக்கவிரதவேடத்தோடும் ஒருவருஷந் தீர்த்தயாத்திரை செல் லவேண்டுமென்று •பீமன் அருச்சுனன் முதலியோர்சம்மதிக்கும் படிக் கூறிச்சென்றார். இதனைப் பாண்டவ வீரரும் வேதமந்திரமா

கவே பாவித்து நடந்து வந்தனர், இவ்வாறு இருக்கும்பொழுது அன்னைபோல் உலகங் காக்கும் அருச்சுனன் முன்பு, ஒரு பிராமணன் ஓடிவந்து நான் உன் தஞ்சம் கள்வர்கள் என் பசுவைத் திருடிச் செல்கின்றார்கள் என்று முறையிட்டான். அது கேட்ட அருச்சுனன் சீறி அச்சோரரைத் தடுத்துப் பசுவை மீட்டுத் தருகின்றேனென்று கூறி வில்லுங்கணையும் எடுக்கவேண்டி இல்லிற் செல்லும்பொழுது தருமனுந் துரோபதையும் மெல்லணையிலிருக்கக் கண்டு பின்னும் படைகளெடுத்துச் சென்று சோரரின் வலியைத் தொலைத்து மாய்த்து அந்தணனுக்கும் பசுவை மீட்டுக் கொடுத்து நாரதர் சொலலியபடி தப்பாமல் தீர்த்தயாத்திரை செய்யத் தொடங்கினன். கங்கை காவேரி முதலிய தீர்த்தங்கள் ஆடி பொருநையாற்றை நோக்கி வந்தான். அந்நதியில் நீராடி மணவையிற்சென்று சிவபெருமானைப் பூசித்துப் போற்றி மிக்க வரங்களைப் பெற்றான். சிவபெருமானின் திருவருள் வரத்தினால், உலகங் காக்கும் பாண்டியன் பெற்ற மகளை மணந்தினிது அங்கு வெகுநாள் வசித்து, அங்குள்ள மங்கள தீர்த்தத்தில் நீராடிப் பரமனைப் பணிந்துபோற்றி அத்தலத்தில் அரசரோடு அளவளாவி இருக்கும் போழ்து ஒருநாள் முனிவர் சாபத்தால் முதலையாகிப் பொருநையாற்றில் இருக்கும் ஒரு கந்தருவன் அருச்சுனன் நீராட நதியில் இறங்கும்போது காலைக் கவ்வினன். அப்பொழுது அருச்சுனன் காலாலுதைத்துத் தள்ள முனிவர் அருளிய வண்ணம் பாபம் நீங்கிக் காந்தருவனாக விளங்கினன். அருச்சுனனை வாழ்த்தி தன் செய்தியெல்லாஞ் சொல்லி விடைகொண்டு திரும்பிவந்து பொருநையூடு மங்கள தீர்த்தத்தில் பங்குனித்திங்களிற் றீர்த்தமாடி முக்கண்ணரைப்பணிந்து போற்றி அவரருளால் முன்னை வினைநீங்கிக் கயிலை சேர்ந்து இனிது வாழ்ந்தான். அருச்சுனனும் இந்த மங்கள தீர்த்தமாடிச் சமீபத்தில் ஓர் புதிய லிங்கம் அமைத்து அருச்சனை செய்து முடிவிலாப் பெரும் வரங்கள் பெற்று தன்னகர் சார்ந்தான். இவ்வுலகினுள்ளோர்கள் இந்தத் தீர்த்தத்திலாடிக் கடவுளை இறைஞ்சுவோர்கள் வல்வினைகள்நீங்கிச் செல்வஞானமுற்று நல்லின்ப மெய்க்கதிசேர்வர்! இந்தத் தீர்த்தத்திற்கு மேல்பாகத்தில்

செய்பவைறத்துறையின் எய்தித் தைப் பூசத்தில் அப்புனலாடி இறைவரைத் தரிசிப்போர் சிவபெருமானின் கயிலை சார்ந்துவாழ் வர், என்று மங்கல தீர்த்தத்தின் இயல்பைக்கூறிப் பிதிர் தீர்த் தத்தின் சிறப்புக்கூறுகிறேன் கேளுங்களென்று கூறினார்.

## ௬௧-வது, பிதிர் தீர்த்தச் சருக்கம்.

மால்பதந் தருமுக் கூடல் மகிழ்பிதிர் தீர்த்த மாகும்
நீல்களக் கண்டர் கைலை நிலைதரத் தருதீர்த் தங்கள்
மேல்வளர் கோதண் டத்தால் விளங்கரா மன்செய் தீர்த்தம்
பால்மிகு வியாக்ர தீர்த்தம் பரிவுடன் நினைத்தோர் வாழ்ந்தார்.

தாமரைகள் எல்லாந் தெரிவையர் வதனத்தையும், பூகங் கள் பெண்களின் கழுத்தையும், கோங்கரும்புகள் மின்னார் கொங்கைகளையும், இளங்கொடிகள் இடையையுங் காட்டும்படி யான சோலைகள் சூழ்ந்த எல்லா வளமும் நிறைந்த அழகர் கோ யில் என்னுந் திருப்பதியில் முனிவர் யோகர் விஞ்சையர் தேவர் விருப்பொடுவந்து தன்தாள்வணங்கிவாழ்த்தக் கண்ணன்கோயில் கொண்டருளுவன். குற்றால மலையில் மேவுஞ் சித்திராநதி பொரு நையாற்றில் வந்துடன் கூடலாலே வளருமுக் கூடலுமாகும். இந்த முக்கூடலில் ஆடி, இந்தப் பிதிர் தீர்த்தத்தில் மூழ்கி அப் பதியில் வாழும் முகுந்தனைப் பணிவோர்வைகுந்தம் பெற்று இனிது வாழ்வர். கோதண்டராமர் அமைத்த கோயிலும் இலிங் கமும் விளங்கும். அதன் பாங்கேராமர் கோதண்டத்தாலமைத்த தீர்த்தம் ஒன்றுண்டு. கயத்தாறு வந்து கூடும் முக்கூடலும் உண் டு. இவற்றில் மூழ்குவோர் நெறிதரு முத்தி சேர்வர். அன் பொடு பிதிர்த் தீர்த்தத்திலாடிப் பிண்டோதகங்கள் செபதபங் கள் இயற்றிடில் ஒன்று கோடியாகப் பெருகி முன்பு செய்பவங் கள் நீக்கி மூவேழுமரபினுள்ள தென்புலத்தோரும் உய்யச் சிவ னடிக் கமலஞ் சார்வர். இத் தீர்த்தத்திற்குத் தெற்கேயுள்ள தெக்கண தீர்த்தத்தில் நீராடிக் கோயில் கொண்டிருக்கும் ருத்தி ரேசரைச் சிந்தையில் நினைந்து போற்றித் தரிசிப்போர் துதிசெய் வோர் தம் தீவினை நீங்கி முத்தியை யடைவர். இத்தலத்திற்கு

யடுத்த தென்பாலில் வியாக்கிரம தீர்த்தம் என்று ஒன்றுண்டு. இதில் வியாக்கிரமபாத முனிவன் மூழ்கிக் கயிலைநாதன் அடி மலர் பணிந்துபோற்றி முத்தி பெற்றுய்ந்தான். அதுபோலவே இதில் மூழ்குவோர் முத்திசேர்வர்.

வியாசதீர்த்தம் என்றொருதீர்த்தம் சமீபத்திலிருக்கிறது. இதில் வியாசர்மூழ்கிப் பெருமானடியைப்போற்றி வரங்கள் பெற்றுத் தொழுது போந்தார். இதில்நீராடிச்சேவிப்போர் முத்திசேர்வர். இத்தலத்தில் பிதிர்தீர்த்தம் முதலாகவுள்ளதீர்த்தங்களின் மகிமையைச் சொன்னோம். இனிச்சிவைகுந்தச்சிறப்புச் சொல்லுகின்றோம் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௩௰-வது, ஸ்ரீ வைகுந்தச் சருக்கம்.

மங்கையோர் பாகம் வைத்த மலைவிலி நாதர் செய்ய
சங்கையார் கரத்தி லேந்துந் தனித்துள வணியுங் கோமான்
பங்கையா சனனே முன்னும் பற்பல தேவர் போற்றத்
தங்கையார் சீவைகுந்தத் தனிவளம் புகன்று வாழ்வாம்.

பொருனை நதிசூழப்பொற்றதும், பூங்கமுகின் குலைப்பொடிபடுற்றதும், சூரியனின் இரதத்திற்பூட்டிய குதிரைகள் சோலைகளில் நுழைந்து பசியகிறம்பெற்று ஒங்கும்படியான தன்மைவாய்ந்ததும் எல்லாவளங்களும் நிறைந்ததுமான நகரஞ் ஸ்ரீவைகுந்தமென்னுநகரம். இந்நகரத்தில் முசுக்கள் முதிர்கனியின்கள் அருந்தி முனிவர்களோடு விளையாடும். மதுகரங்கள் புதுமலரின்நறவையுண்டு பெடையோடும் இசைபாடும். சங்கினமும் பங்கயமுங் கன்னலுஞ் செந்நெலும் முத்தீனும். பங்கயங்களைக்கடைசியர்கள் கண்ணெனக்களைவார்கள். பூகதச்சோலையில் குயில்கூவம்பியிலாலும். இப்படிப்பட்ட வளமுடைய நகரில் வந்து பொருனைக் யாடிக்கயிலாய நாயகனைவந்து மலரடிபணிந்தோர்துயரம் நீங்கிச் சிவனடியைப்பெறுவர். விண்டொழுங் திருக்கோயிலில் சிவைகுந்தப்பெருமானைத்தொழுவோர் வைகுந்தப்பதவிபெற்று இனிது வாழ்வர். தேவர் முனிவர் முதலியோர்கள் விரும்பி அதனின் மும்போற்றிச் சிறந்தகதியைச் சேர்ந்தனர்.

இந்நகரில்வந்து வைகுந்தத்தீர்த்தத்தில் ஆடி மாயவனைக்கள்ளப்பிரானை அடிதொழுவோர்கள் முன்னிநெறியினராகி முத்தியைப்பெறுவர், என்றுசூதர்கூறிக்காந்தீசரப்பெருமையைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

---

## சகூ-வது, காந்தீசரச் சருக்கம்.

---

திருவூருங் கமல பாதந் தினந்தினம் பணிந்து போற்றுங்
கருவூரிற் சித்தர் மேலாங் கதியினைப் பெறுக வென்றே
வருவூறில் விடைமே லாகி வளரொளி மயமாய் நின்ற
மருவூறிற் காந்தி சர்தாள் மனத்திடை வைப்பாம் மன்னோ.

மருவியசோலைதோறும் மடந்தையர் ஊசலாடவுங் குருமணிமேடைகள்தோறுங் குலவியமயில்கள் ஆடவும் பெற்றதுந் தாமரையாகிய வதனமும், சைவலமாகியகுழலுங் கொண்டுநீர்த்தடங்களெல்லாந் தோகையர்க்கிணைசொல்லும்படித்தோற்றும்வளப்பமுடையது காந்தீசரமென்னுமாநகரம். சிலமாதவர்கள்சாலையும் விஞ்சையர்கள்சாலையும் வேதியர்களின்சாலையும் வேள்விச்சாலையும் யோகசாலையும் வீதிகள்தோறும் ஓங்கும். இப்பெருந்தவளமுடைய பெரியநகரத்தில் தேவர் முனிவர் கந்திருவர்நாகர் முதலியோர்வந்து அருத்தியொடுவாழ்வர். இத்தலத்தில் யோகர்களில்மிக்க கருவூர்ச்சித்தர் நாளும்பதிகளெல்லாந்திரிந்து பரகதிபெறஎண்ணிமதியினுணர்ந்து பார்த்து மகிழ்வோடும் இத்தலத்திற்குவந்தார். இந்நகர்க்குவந்து தண்பொருநையாடி வலங்கொண்டு முக்கட்கடவுளைக்கண்டுபோற்றி இனிதுவாழ்த்தி இருகண்ணீர்சொரியநின்று சிந்தையுட்களிந்து நாடிச் சிவயோகஞ்செய்யஎண்ணிச் சன்னிதியிலன்புடன்ஒருபக்கத்தில்தகவோடுஇருந்துயோகநூல்முறைப்படி சிவபெருமானைப்பரையொடும்நெஞ்சுள்இருத்தியோகம் நெடுநாள்புரியுங்காலையில்.கருணைநாதன்சமீபத்திருந்தலிங்கத்திலிருந்து மான்மழுதரித்தகரத்துடன் பார்வதிசமேதராய் வெள்ளியவிடையின்மேல் கோடிசூரியப்பிரகாசம் உதித்ததுபோலத் தோன்றிக்கருவூர்ச் சித்தர் கண்களிக்க நின்றார்,

கண்டகருவூர்ச் சித்தர் சிரமீதுகரங்கள்கூப்பிப் பேருவகையோடுங் குழகனைப்பணிந்து போற்றித்தொழுது தோத்திரங்கள் சொல்லித்துதித்தார்.

இணையடிகள் இறைஞ்சிவந்தி நின்றிசைபாடியாடி,நினைந்துளம் உருகிப்போற்றி, இருவினை வயத்தில்வீழ்ந்து இன்பதுன்பத்தில் வீழாமலுங் கருவினில் உதியாமலும், வரம்பெற்று பின்மெய்ச் சோதியாய் விளங்கலால் நின் பெயராலேயே இந்நகரம் விளங்குக எனவும் இன்னும் பலவாம் வேண்டும் வரங்களனைத்தும் பெற்று பிறங்கொளி உருவோடு காந்தீசுரர் பொன்னடி மருவி வாழ்ந்தார். இத்தகைய சிறப்பினாலே தலமுந் தீர்த்தமும் மூர்த்தியுங் காந்தீசுரம் எனப்பெயர் பெற்றது. இத்தலத்தில் வந்து பொருனை நீராடி காந்தீசுரர் பொற்பாதம் பணிவோர் முத்தியெய்துவர், என்று சூதமகாமுனிவர் கூறி ஓ முனிவர்களே! இதற்குத் தெற்குப் பக்கத்தில் மாயவன் வாழுங் குருகூரின் பெருமை சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## சஉ-வது, ஆழ்வார் திருநகரியாகிய திருக்குருகூர்ச் சருக்கம்.

விண்ணவர் களிப்பி னோங்க விழையமு தருளும் மாயோன்
பண்ணவர் துதிக்க வாழும் பகர்திருக் குருகூர் மேய
நண்ணருந் தீர்த்த மாடி நாரணன் பாதம் போற்றில்
எண்ணரும் வைகுந் தம்மே யின்புறு காத்தி லாமே.

சோதிமணிக் கோபுரங்களும் சூழ்ந்த மணிமண்டபங்களும் நீதிவளர் அறச்சாலைகளும் நெருங்கு மணிநிதிச் சாலைகளும், வீதி தோறும் மணிமேடைகளும்,அதன்மீது ஓங்குபொற்கொடிகளும் உடையதாகியபலவளங்களும் நிறைந்துவிளங்குவது திருக்குருகூர். பூஞ்சோலைகளை எல்லாஞ் சூழ்ந்து மின்னின் இடை அரம்பையர்களும் விண்ணோர்களும் மிக நெருங்கிப் பொருனை நீராடுவர். திருக்குருகூர் பொன்னகரம்போல விளங்கும். இத்துணைச் சிறப்புவாய்ந்ததலத்தில் திருமகளோடு நாரணர்கோயில் கொண்டு வாழ்வர். கோயிலிற் சிலதரனுர் மேவித் தன்னடி

பணியுந் தேவர்கள் முனிவர்கள் சித்தர்கள் முதலியவர்களுக்கு அவரவர் வேண்டும் நல்வரங்களருளி இனிதுவீற்றிருப்பர்.

பொருநை நதியின் தென்கரையில் பொருந்திய சக்கர தீர்த்தத்தில் மூழ்கி இந்த மாயவனைத் தொழுதேத்தி அருச்சனை புரிவோர்கள் இருவினைத் தொடர்பு நீங்கி வைகுந்தம் பெற்று வாழ்வர். சங்கதீர்த்தமாடி ஆழ்வாராதியர்களையும் நாராயணனையும் பொன்மலரெடுத்து மலரடியினருச்சிப்போர் திருவைகுந்தத்தைப் பெற்று இனிதுவாழ்வர். அத்திரி, பிருகு, அகத்தியர், மார்க்கண்டர் முதலிய முனிவர்கள் இத்தலத்தில் வந்து இத்தீர்த்தங்களில் இனிதின் ஆடி மாயனடிபணிந்து வாழ்ந்தார். இத்தீர்த்தத்திற்குக் கீழ்பால் பஞ்சக்ஷேத்ரம் என்று ஒரு தீர்த்தமுண்டு அந்தநற்றீர்த்தத்தாடி அகமகிழ்ந்து ஆதிநாதன் சுந்தரக்கமல பாதந் தொழுது தோத்திரங்கள் செய்வோர் பாவம் நீங்கி வைகுந்தத்தில் வாழ்வர், என்று கூறிப்பின் பொருநைக்குத் தென்பாலுள்ள நவலிங்கபுரத்தின் மேன்மையைச்சொல்லுகின்றே னென்றுசொல்லுகின்றார்.

## ௩௩-வது, நவலிங்கபுரச் சருக்கம்

புண்ணியர் போற்று மொண்பான் பொற்புறு தீர்த்த மண்பால்
நண்ணிய பூசை செய்யும் நன்னவ லிங்கந் தன்னை
கண்ணிய தீர்த்த மாடிக் கருதருச் சனைகள் செய்வோர்
எண்ணிய பேறு பெற்றே யின்புட னிருப்ப ரம்மா.

திருக்குருகூருக்கு நேர்கிழக்கே நிலமெல்லாம் புகழும்படி ஓங்கியுள்ள வளமைசால் நவலிங்கபுரமென்றோர் நகரமுண்டு. இந்நகரினுள்ளே விஞ்சையரின் வீணை ஓசையும் விப்பிரர் வேத வோசையும் முனிவர்தம் வேள்விகோஷையும் வஞ்சியர் நடிக்கும் ஓசையுமே நனிமிகுந்திருக்கும். இந்நகரத்தில் வாழுஞ் சிவபெருமானைத் தேவர் கந்திருவர் யோகர்முனிவர் முதலியோர்வந்து பொருநையாடித் தொழுது இனிது வாழ்வர். இதனை அதிசயமுடைய தலமென்று எண்ணி நவதீர்த்தங்களும் பொருநையில் மூழ்கித் தென்கரைவந்து புதிதாகவுயர்ந்துள்ள நவலிங்கத்தைப்பூசனைபுரிந்து

போற்றி விதிமுறை பணிந்து விரும்பி அத்தீர்த்தங்கள் அவ்விடத்தில் வசிக்கும். பொருநைக்குத்தென்பாலிலுள்ள இவ்வொன்பது தீர்த்தங்களில் மூழ்கி ஒன்பது லிங்கத்தையும் பூசிப்போர் கயிலையில் இனிது வாழ்வர். மார்கழி மாதத்தில் காலையில் மூழ்கி நவலிங்கத்தைத் தரிசிப்போர் சிவபெருமான் திருவடி நிழலைச் சார்ந்து இனிது வாழ்வர். நவ தீர்த்தத்தின் இயல்பைச் சொன்னோம், பொருநை யாற்றிற்குப் பக்கத்தில் இரண்டு பக்கத்திலும் இருக்கும் அழகிய சோலை சூழ்ந்த திருப்பதிகள் ஒன்பதாகும். அந்நகரங்களில் என்றும் ஆதிமாலிருப்பர். இப்பதிகளில் உண்டி நீத்துமாயன் மலரடி தொழுவோர் வைகுண்டமேவியங்கிருப்பர். ஏகாதசியில் விரதமாக இருந்து பின்னாளில் துவாதசியில் பொருநையில் நீராடி ஒன்பது திருப்பதியுஞ் சென்று திருமாலடி தரிசிப்போர் பிறவிக்கடற் கரை யேறிக் கண்ணனின் வைகுண்டங் கண்டு இனிதிருப்பர். இந்த ஒன்பது பதிகளின் மேன்மையைச் சொன்னேன், இனி பொருநைத்தண் கரைமீது பரிவோடு பரம் பொருள் இனிது வீற்றிருக்கும் கானலர் சோலைசூழும் பிரமேசரக் கதை மகத்துவங் களிவோடுஞ் சொல்வோம் என்று சூதமுனிவர் கூறுகின்றார்.

---

## சுச-வது, பிரமேசுரச் சருக்கம்.

திசைமுகன் கயிலை சென்று சிவபெரு மானை வேண்டி
வசையுறு தக்கன் வேள்வி வாய்ந்திடச் சென்ற தோடம்
பசையற வோட வென்றே பண்ணவன் பகர்ந்த வண்ணம்
நசையொடு போற்றுந் தூய நற்பிர மேசம் வாழி.

ஒப்பற்ற வளங்களை யுடையதும் பொருநை நதிக்குத் தென்பாலிலுள்ளதும் மரபில் மிக்க வேதியர் வாழ்வதுமாகிய சிறப்புடையது பிரசமார் சோலை சூழும் பிரமேச நகரமாகும். பனைகளிலெல்லாம் நிறைய நெல்விளையும். நீண்ட நகரில் நீதி விளையும். அந்நகரத்தே செய்யும் வேள்விப்புகை அந்தரத்தே மேகமெனச் செல்லக் கண்டு களிமயில் ஆடும். இந்தத்தலத்தில் பிரமன் தான் தக்கனின் வேள்விக்குப் போயிருந்த பாவம்

நீங்கச் சிவபெருமானை யுன்னி அருந்தவம் பலவுஞ்செய்தும் ஓம வேள்விகள் செய்தும் உறுதுயர் நீங்காமைகண்டு சிவபெருமான் வாழுங் கயிலை வந்து சிவபெருமானின் ஆலயத்தை வலம் வந்து நந்திநாயகனைப்போற்றி நல்விடைகொண்டேகி அம்மையாரோடு இனிது வைகுஞ் சிவபெருமானைக் கண்குளிரக்கண்டு போற்றி இணையடி பணிந்து நித்தனே! கருணையானே! நின்னை நிந்தை சொன்னதக்கன் வேள்விக்குப் புத்தியில்லாது சென்ற என் பாவத்தைப்போக்கியருளவேண்டும் என்று கூறிப் பின்னும் என்பாவந்தீர உன்னை நினைந்து பூசிக்க விரும்பினேன். உனக்கு அன்பாகிய ஒரு தலத்தைச் சொல்லி யருளவேண்டும் என்று வேண்டினன். அப்போது ஆலமுண்டு அமரரைக்காத் தருள் செய்த அப்பன், அஞ்சல்! என்றருளி பொருநைநதிக்குச் சென்று தென்கரையில் மகாலிங்கமமைத்து என்னையுன்னிப் புவிபுகழப் பூசைசெய்க என்றுரைக்கப் பிரமனும் களிப்புக் கொண்டு கருத்துடன் வணங்கி விடைகொண்டேகி வழியிலுள்ள சிவதலங்களை எல்லாம் போற்றிக்கொண்டே தாருகாவனத்தில் வந்து பின் சிந்து பூந்துறை நீராடித் திருமூலலிங்கநாதன் சுந்தரமலர்த்தாள் போற்றி வேய்முத்தரைப்போற்றி காந்திமதியம்மனைப்போற்றி விடை கொண்டேகிப் பொருநைத்தீரம் போய் வளங்கள்கண்டு களித்துச் சிவபெருமானைப் பூசிப்பதற்கு ஏற்ற இடம் இதுவே என்று ஆலயஞ் சமைத்து அரனையுள்ளத் துள்ளி மகாலிங்கஞ் சமைத்துப் பொருநை நீராடி விதிமுறை பூசைசெய்து பணிந்து போற்றித் தோத்திரங்கள் பலவுஞ் செய்தான். ஆதியில் அரியும் யானும் அகந்தையாய்ப் பொருள் நீயன்று என்றபொழுது ஒரு துரும்பைநாட்டிக் கோடிலாப்பல புவனம் அண்டகோடிகளை அதில் உண்டாக்கி நீதியிற்றுடைத்துக்காட்டும் நித்தனே! என்று போற்றி! பாதகம் அனைத்தும் நீக்கும் பரையிருபாதம் போற்றி மாதவர் சூழ நின்று வரம்பல கேட்கலுற்றான். இந்த நற்றலம் பிரமேசர மெனப்பகரவேண்டும். கன்னியோர் பாகா நீயுங் கருணையோடிருக்கவேண்டும். பொருநை தன்னில் நான் இனிது ஆடும் தீர்த்தம் மன்னிய பிரம தீர்த்தம் என்று பெயர் வழங்கவேண்டும். இதில் மூழ்குந் தேவர் முனிவர் முதலியோர் நின்பொன்னடி போற்றிச் சேவித்

தால் இருவினைநீக்கி இன்பவீடருளவேண்டும் என அந்தநல்வரங் களெல்லாம் இறைவன் அருளாற்பெற்று சுந்தரமலர்த்தாள் போற்றிச்சுருதிநாயகனை வாழ்த்தி விடைகொண்டேகி மந்தர மறையோர் சூழ மனேபதி நகரஞ்சார்ந்தான். கனிவோடு யாவரே னும் பிரமதீர்த்தம் ஆடிப்போற்றி பிரமேசர்தாளிணை தரிசிப் போர் இனியபேரின்பமெய்தி இருங்கதி யெய்துவர். இத்தலத் திற் கடுத்த கீழ்பால் சோமேசுர முதுநகர்க்கு மேற்கே பொரு நைநதிக்குத் தெற்கேசுத்த நற்கரையில் வைகுந் தீர்த்தங்கள் அக்கினி தீர்த்தம், லட்சுமிதீர்த்தம், வேததீர்த்தம், அலரிதீர்த தம், வாயுதீர்த்தம், வன்னிதீர்த்தம், நரசிங்கதீர்த்தம் என்றும் பத்துத் தீர்த்தங்கள் உண்டு. இவற்றில் மூழ்கி அத்தீர்த்தங்களி லுள்ள தேவர்களை மனதில் எண்ணிக் கன்னிபாகனைச் சேவிப் போர் நற்கதி சேர்வர். இந்தவிதமான மகத்துவமுடைய பிர மேசத்தினியல்பினைச் சென்னேம், வியாதர் சுகருக்குச் சிறப்பு டைய தலமென்று கூறிய சோமேசநகரின் மேன்மையைக் கூறுகின்றேம் பத்தியோடு கேளுங்களெனச் சூதர் நைமிசார ணிய வாசிகளுக்குச் சொல்லுகின்றார்.

---

## சுடு-வது, சோமேசுரச் சருக்கம்.

---

சயத்தினை விதுதான் நீங்கித் தனியொளி யொடுமே லோங்க
நயத்தினைப் புரியுஞ் சோமே சுரநகர் நயந்து வாழுங்
கயத்தினை யுரித்த பெம்மான் கான்மலர் நினைந்து போற்றில்
பயத்தினை யெல்லாம் நீங்கிப் பரகதி யுற்று வாழ்வார்.

பல்வகை வளத்தாலுங் குறைவில்லாத சோமேசுர நகரம் என்று ஒரு நகரம் பொருநை நதியின் தென்கரையில் எல்லாச் சிறப்போடும் விளங்கும். இத்தலத்தில் நிகழ்ந்த கதையொன்று சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சூதர் கூறுகின்றார். சந்தி ரன் தன் குருபத்தினியை விரும்பிப்புணர அதனையுணர்ந்த குரு கோபித்துச் சயரோகத்தால் வருந்துவாயென்று சபித்தான். அச்சாபத்தின்படி இந்திரன் மெய்யில் அந்நோய் வந்து வருத்த

மிக வாடிக் கலங்கி வருந்தினன். அப்பொழுது இந்நோயை
நீக்கியருள் செய்ய வல்லவன் சிவபெருமானெனச் சந்திரன்
நினைத்துக் கயிலையை நண்ணி வலஞ்செய்து நந்தியைத்தொழுது
விடைபெற்றுள்ளே சென்று கவுரியோர் பாகத்தே விளங்கச்
சிங்காசனத்திருக்குந் தனிமுதல்வனைக் கண்டு அடி தாழ்ந்து
எழுந்துநின்று கைகூப்பிப் பேரன்பினகங் குழைந்து அமலனைப்
புகழ்ந்து போற்றினன். துணையடி பரவினன் குருசாபத்தால்
நோயினிலுழந்து வருந்துகின்றேன். அதனை நீக்கியருளவேண்
டும். வித்தகனே! யுன்னைப் பூசை செய்திட மனத்தில் நினைத்தேன்
பத்திசெய் நற்றலமது பணியெனப் பணிந்தான், அண்ணல்
அம்மொழி கேட்டலும், அவனை நோக்கிப் புண்ணியம் நிறைந்த
பொருநையந் தீர்த்தத்திற் போய் நீ நம்மை மனதில் எண்ணி
அருச்சித்து இந்நோய் நீங்கி விண்ணில் முன்போல விளங்குக
என்றருளிச்செய்தார். விதுவும் வரன்முறை வணங்கி விடைகொ
ண்டு கயிலையை வலஞ்செய்து மீண்டு சிவதலங்களிலெல்லாஞ்
சென்று தீர்த்தமாடி மூர்த்தி தரிசனை செய்துகொண்டு பொரு
நைநதியில் மூழ்கிச்சிந்துபூந்துறையாடிப் பொற்றாமரையிற் படிந்
து நெல்வேலி நாதரையும் மூலலிங்கநாதரையும் காந்திமதியம்
மையும் வணங்கி பொருநைநதியின் பாங்கருள்ள சிவத்தலங்
களை யெல்லாம் முறையே சென்று வணங்கிப் பொருநை நதி
யின் தென்பாலிற் கமழும் நறுஞ் சோலை மருவும் அத்தலத்தில்
எய்தி அதன் வளங்களைக் கண்டு அருகுசென்று அத்தீர்த்தத்
தில் அகமகிழ்ந்தாடி சோமேசனை வணங்கி வாழ்த்தி நல் அபி
டேகஞ் செய்து நைவேதனங்கள் செய்து படைத்துத் தூபதீப
ங்காட்டிப் பூசைசெய்து சோமேசநாதரைப் போற்றிப் பசைவு
ரிபையும் நெஞ்சியோடுபோற்றி ஆலயத்தைப் பன்முறை பிரதட்ச
ணஞ்செய்து தேசிகன் எதிர்சென்று நற்றுதிகள் பல சொல்லி
அருச்சித்து வழிபட்டுவரும் நாளில் என்னையாளுடைய நாயகன்
எதிருறத்தோன்றி நோயினைத் தீர்த்தருளி, நின்மனத்திலுள்ள
வரங்களைக்கேளென, சயப்பிணி நீங்கிய சந்திரன் சந்தோஷங்
கொண்டு போற்றிக் கைகூப்பித்தொழுது இத்தலத்திற்கும் இதி
லுள்ள தீர்த்தத்திற்கும் கோயில் கொண்டிருக்கும் நினக்கும்
சோமேசுரம் என்னும் நாமம் வழங்கவேண்டும். இதில் அகலாது

பெருமானே நீ! வசித்திருத்தல்வேண்டும் வந்து வணங்குவோர்க்கு நற்கதியருளல்வேண்டும் என்று பணிந்துவேண்டச் சிவபெருமானுஞ் சந்திரன் கேட்ட வரங்களை ஈந்து சோதிலிங்கத்துள் மறைந்தருளினர்· சந்திரனும் மகிழ்ந்து கேட்ட வரங்களெல்லாம் பெற்று விடைகொண்டு தன்னிடஞ் சார்ந்தான். இத்தகைய சிறப்பு வாய்ந்த சோம தீர்த்தத்தில் மூழ்கிச் சோமேசரை மலரடி வணங்கிப் பன்னுநாமம் பகருவோர் பழவினை நீங்கிக் கயிலையை நண்ணி வாழ்வர். சோமேசுரத்தலமகிமையைச் சொன்னோம். இனி சுப்பிரமணியக்கடவுள் வாசஞ் செய்யும் திருச்செந்தூர் மகிமையைச் சொல்கின்றேன் கேளுங்களெனச் சூதமுனிவர் சொல்லுகின்றார்

## ௪௯-வது, திருச்செந்தூர்ச் சருக்கம்.

விண்ணவர் வாழும் வண்ணம் மிகுகுலச் சூரை மாய்த்து
நண்ணரும் யானை வள்ளி நயந்திடச் செந்தில் வாழும்
கண்ணிய மயிலூர் தேவைக் கலையமா முனிக்கு ஞானம்
எண்ணுற வூட்டுங் கோவை இருதயத் திருத்தி யுய்வாம்.

திருக்குமரக்கடவுள் வாழும் திருச்செந்தூர் கடல் அலைகள் முத்துகளை வீதிகளிற் சிந்தும்படியான வளப்பமுடையதும் பொன்மணி மாளிகைகள்தோறும் வளைதவழப் பெற்றதுந் தேவமாதர்களும் நாககன்னிகைகளுஞ் சூழ்ந்து நெருங்கித் தங்கணவரோடு வந்து துதிக்கப்பெற்றதும் கமலமலர் வாவிகள் சூழப்பெற்றதுமான வளங்களையுடையது. அந்நகரத்தே பவழக் கொடிகள் படர்ந்து கோலக்கமுகின் மீதேறி பழுக்காய் குலையில் இசைந்து இரும்பூதென இனி தோங்கும். சந்தனச் சோலைகளின் பாங்கு சூழும் பசுங்கிளிகள் கலைகள் பயிலும். கந்தன் உறையுந் திருச்செந்தூரில் கோபுரங்களும் ஆலயங்களும் சூழ்ந்திருக்கும். வீரப்படைகளுடையவனுந் திறல் உடையவனுங் கொடுமை யுடையவனுங் கோபத்தை யுடையவனு மானசூரன் ஒருவன், புவியனைத்துந் துயர் செய்காலை அவன் உரத்தில் கோர நெடுவை வேல்விடுத்துக் கொன்றங்கு அசுரர் குலந்தடிந்து விருப்பத்துடன் மகிழ்ந்து உறையும்பதி

அப்பதியாகும். இத்தகைய சிறப்புடைய முத்தமிழ் பொருந்து ஞ் செந்தூரில் வாழும் அறுமுகக் கடவுளைத் தேவர்களும் முனிவர்களுங் கின்னரர்களுஞ் சித்தர்களும் இயக்கரர்களுந் தினமும் வந்து தரிசித்துப் போற்றிசெய்வர். வருணன் பொருனை மாதைப் பொருந்த வெண்ணிச் சுப்பிரமணியக் கடவுளையுங் கும்பமுனிவரையுங் குறித்துப் பல்நெடுநாள் தவம் பண்ணினன். அத்தவத்திற்கு உவந்து கும்பமுனி, குகனார் திருவருளினால் வருணனுக்குப் பொருனைமாதை முழுவதிரமணஞ் செய்வித்து அவங்கள் தொலைக்குஞ் சங்கமுகமாடித் திருச்செந்தூரணைந்து குமரக்கடவுள் எழுந்தருளியிருக்குங் கோயிலை வலம்வந்து தொழுது சன்னிதி சென்று விதிமுறை பூசித்துப் போற்றி ஞானநிலை உணர்த்தவேண்டினார். அதற்கு உவந்து குமரக்கடவுள் கும்பமுனிவர் முன்றோன்றி செய்யதிருவடியை முனிவன் சென்னிமிசை வைத்து அருள்புரிந்து மையல் வினையை நீக்கி யுள்மகிள் மெய்ஞ்ஞானம் உரைசெய்வான் "மெய்மைமுனியே! வேதஆகம புராணமெல்லாம் உரைப்பது, பதி, பசு, பாசத்தின் விசித்திரமே. அம்மூன்றில் பதி மூலமாக நிற்கும், அப்பதிபரமாய் முந்து சிவமாய் நித்தியமாய் முடிவிலாத பூரணமாய்ப் பந்தமனுகா நின்மலமாய் உயிருக்கு உயிராய்ச் சிந்தைதெளியு மானந்தத் தெளிவாய் ஒன்றாய் நின்று இலகும். சித்தோடு அசித்தை மருவி உய்த்துத் திரமாய் நடத்தும் பொருளாகச் சத்தியைந்தீன்றருளும்வடிவாய்த்தனுவேமுதலான நால்வகையையும் புரிந்து உயிர்கள் முத்திபெறும்பொருட்டு ஐந்தொழிலையும் முறையே நடத்தும். சித்தர்க்கு மாயை முதலான விகற்ப விகாரங்கள் அடையா.

பசுவோ பலவாய் வியாபியாய்ப் படருஞ் சகலமலத்தினவாய் நசிப்பிலதாகிக் கூறும் வினையால் நரக சொர்க்கங்களை அநுபவிக்கும். மலபாகம் உறிற் பூரணமாய் நிறையருளால் நிலவும். அசுத்த மலமதனை நீங்கி உணர்வாய்ச் சிவத்தடையும். வரும் ஆருயிரின் திறம் மூன்றும். அவர்களாவார் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரெனப்படுவர். ஆணவம் மாயை கன்மம் அடைவாகும்.

இவைகள் விரியும் இருள் ஆணவ கன்மம் மிகுந்து மாயை உடனே தொடரும். மால் பிரமர் முதலாக எல்லாம் மும்மலப்

பசுக்களாம். இவர்கள் வருமெய்ப்பிறவித்துயர் நீங்கார் வாய்க்கும் இவர்கள் குரவன் திருவருளால் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவத்தைப் பெறுவர். இனி மூன்றாவதாகிய பாசத்தின் விதங்கள் ஐந்தாகும், அவையாவன:— ஆணவமாயை,வாசிதமாயை,ருத்ரோதாயியதோமாயை, வினைமாயை, மாமாயை எனப்படும். பேசுவகையில் உயிர்கள் பந்தப்பிணியால் உழலும், பிரியாதெம்மீசன் கருணைக்கடவுள் அருளிதுவென்றிசையா, நாளெல்லாம் ஆரும் அறிவு மறைந்திடும், ஆணவந்தான் செம்பிற் களிம்புபோலச் சேரும் வகையால் உணர்போகஞ்சேர நசிப்பித்து உயிரனைவக்குஞ் சாரும் மலபாகங்கள். வரத்தான் செய்வது உத்ரோதாயியதாம், வாரமிறையும் மதோமயை மலமாமென்பது உபசாரம். வினைமாயை தநுமுதலாய் மன்னியிருங்கலாதிகளால் உற்றவகை சிற்றறிவு அளித்து உடனே மயக்கும் நசியாதாம். பற்றும் வினையால் எடுக்கும் உடல்பரிந்த ஏதுப் பிறப்பிறப்பின் சுற்றுவித போகமுமாகித் துய்ப்பதன்றித் தீராவாம்.

அத்தனின் அருளால் நரகாதி யைந்தும் விரியும். மாமாயை சித்தம் நினைக்கும். அதோமாயை தினமுங் கன்மங்களைச் செலுத்தும். சுத்தமுனியே! உணர்பவர் யார் சூழும் மலம் மாயாது கன்மம் தந்தம் உயிருக்கு அநாதியே சாரும். அவையே சடமாகும். இந்த வகை யாபாச விருள் எய்தி உயிர்கள் தனக்கு உடலாய்வந்து நிறை தத்துவங்களையும் மலங்கள்தனையும் அதில் அழுத்தி முந்து தன்னையும் உணர்த்தி அருள் முதல்வன் றன்னையும் உணராது பந்தமிறங்கொள் படிகம்போலப் பாசவிகாரம் மிகப்பெருகும். இச்சை ஞானங் கிரியை என்னும் மூன்றும் என்றும் உயிர்க்கு உளதாகும். துன்றிய ஐவகைப் பாசத்தால் தூய்மை விளங்கா, முத்தியினில் ஒன்றி மலமகன்று ஒருவன் அருளால் ஞானாதிகளால் நலங்கள் சிறந்து பூரணமாம். தோன்றும் உயிர் கேவல சகல சுத்தம் எனவே சுழலவத்தை மூன்றுகொண்டுழலும். கேவலாவத்தை என்பது கருவிமுற்றுங் கழன்று இருள்வழியில் ஆன்று பொருளை அறியாமல் அப்பால் சகலஞ்சிருட்டி தொடுத்து ஏன்றமுறை சங்காரமதிற் பிறந்தும் இறந்தும் உழல்வாதம். தொகுத்தமலபாகம் வரவேசூழும் வினை

கள் இரண்டும் ஒப்பின்மகத்துவம் உறும். சகலமுந்தான் சத்தி னிபாதம் வயங்க அரன் சற்குருவாகிச் சகத்தில் அருளக் கேவல முந்த விராதிருக்கும் அகத்தின் மலம் நீங்குவது சுத்தமாகும்.

நிறையும் மோகஇருள்மலங்கள் நீங்கி நிலையுமுத்தியினுணர் வாய்உறையும். ஏகம் அகன்று எங்கும் உற்றகதிர்போல் விளங் கும், உயிர்இறைமைசேரும். அரியாதிகத்தின் எல்லேவரும் பரம் மேல் அறிவுதரும் தற்பரங்கடந்தவருளிற் சிவமாயின்பமுறும். அயல்தத்துவங்கள் ஆறும் அலமந்து அகன்றே அருள்சே ரும். உயிர்கள் சிவத்தின் வேறுகாவொன்றதாகா மெய்த்தவனே! பயில் அத்து விதப்பேறுன பரமானந்தப்போற்றினதாய் உயர் பேரின்பச்சேவடிக்கீழ் உற்றுவாழும் எனவுரைத்தான். இந்த விதமாக அருள்புரிய முனிவர் எழுந்து குகன் பொன்னடித் தாமரைப் போதைப் புகழ்ந்து சிரத்தின் மிசைச் சேர்த்தி மன் னும் இதைய மலர் மீதுவைத்து மகிழ்வினோடு போற்றிப் பணிந்து செங்கைகள் கூப்பிமெய்ஞ்ஞானம் பெற்றுத்துயநலவி டைகொண்டேகித் தன்மலேயவெற்பைச்சேர்ந்தான். முருகக்கட வுளேயே ஆசிரியராகக் கொண்டமுனிவரின் பெருமையை உணர் பவர்யாவர்? உலகத்துள்ள மாந்தர்களிற் செந்தூர் சென்று கந்த னைஉருகிய காதலோடும் பணிபவர் உம்பர்ஆவர். வைகாசிமாதத் தில் விசாகநட்சத்திரத்திலுங் கார்த்திகைமாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்திலும், பொருநைகூடும் வாரிதியிற் சென்று சங்க முகத்தில் நீராடிச், சுப்பிரமணியக் கடவுளின் அடியைப் போற்றி னல் வினைகளெல்லாந் தீர்ந்திடும். குமரக்கடவுளின் ஆலயமுன் பாக பரிவதன் ஆரம்பத்தில் பருவங்கள் தோறும் மூழ்கில் இரு வினைமுழுதுந்தீரும். இனிது அலைவாய் மருவியே மூழ்கிலின்பவ ளமெலாம் வழங்கும். கார்த்திகை மாதம் மேவு கார்த்திகை நாளில் அங்ஙன் பூத்தபூரணையில் வந்து பொருதிரைக்கடலில் மூழ்கிச் செந்தூர் முருகர் தம் பொற்பாதம் வணங்கியே வலஞ் செய்து அன்பாய் ஏத்துவோர் ஞானம்பெற்றே இன்பவீ டெய்துவார்கள். இத்தன்மையுடையது திருச்செந்தூரென்னும் தலம், என்று கூறிச் சங்கமத்துறையின் மேன்மை கூறுகின் றேன் கேளுங்களெனச் சூதமகாமுனிவர் சொல்லுகின்றார்.

## சஎ-வது, சங்கமத்துறைச் சருக்கம்.

சீர்திகழ் பொருநை யாறு தெளிகட லோடு கூடும்
ஏர்திகழ் சங்க மத்தி லினிதுற வாடிச் செந்தில்
நார்திகழ் கந்தன் பாத நயந்துயர் பூசை செய்வோர்
பேர்திகழ் பதத்தைப் பெற்று பிறங்கவே வாழ்வர் மன்னே.

சிறப்புப்பொருந்திய பொருநை மாநதி மகிழ்சிறந்தே அழகிய கீழ்க் கடலிடை வந்து கூடும். நீருலாவிய அத் தலங்களிலெல்லாம் சித்திலம்விளையும். சாரும் அத்தலம் புனிதமுடையது. சங்கமத்துறை யென்னும் பெயருடையது. விரியும் ஆழ்கடல் மேல் உள தீர்த்தத்தில் மேலானது. இத்திவ்விய தீர்த்தத்தில் நீராடிப் பரிவினிற்றிருச் செந்தூர் முருகர் பதமலர் பணிவோர் கருது செல்வங்கள் பெற்று மெய்க்கதியினைப்பெறுவர். கங்கை தன்னினும் மேன்மைதரும் பொருநை மங்கை யின்பமாய் வருணனை மகிழ்வுடன் கூடி இன்புறுஞ் சங்கமத்துறையில் மூழ்குவோர் பவவினை தணந்து திங்கள் சூடிய சிவபெருமானின் பதமலர்சேர்வர். நீடும் ஐவகைப்பருவங்களில் சங்கிரமங்களில் இரு கதிரின் கிரணங்களில் மாமகத்தில் மற்றைத் தினங்களில் சென்று பெட்புடன் ஆடுவோர் இருவினைதீர்ந்து அரன் உலகு அடைவர். தேவர் முனிவர் முதலியோர் புண்ணிய தினங்களிற் பொருந்திய ஆவலோடுநீராடிச்செந்திற்கடவுள் அடியிணை பரவி அடைதற்கு அரியபதம் பெற்றார் அவர்களையாரே கணக்கிடவல்லார்?. சங்கமத் துறையின் மேன்மையைச் சொன்னேன் தாம்பிரபன்னியின் கதையையுங் கூறுகின்றேன் கேளுங்களெனச் சூதமுனிவர் கூறுகின்றார்.

## ௪௮-வது, தாம்பிரபன்னிச் சருக்கம்.

உம்பரர் தமக்கு மேலோ னுவந்துதன் னிடத்திற் கொண்ட
அம்பிகை கரத்திற் றோன்றி யகத்தியர் கரத்தி லேந்துஞ்
செம்பிடை வதிந்து தென்பால் திகழ்மலை யிருந்து பூவிற்
பம்பிய வளத்தி னோடிப் பயன்றரும் பொருநை வாழி.

மலையமால்வரை முதற்கொண்டு சமுத்திரம்வரையில் உள்ள தலங்கள் தீர்த்தங்கள் மூர்த்திகள் முதலியவற்றின் பெருமைகளை யெல்லாந் தெரிந்தமட்டிற் கூறினோம், இனித் தாம்பிரபன்னியின் பெருமையையுங் கூறுவோம் கேளுங்களென, நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்கள் அகமகழ்ந்து முகமன்கூறி விரும்பிக் கேட்கலுற்றார்கள். ஸ்ரீ உமையாரின் திருக்கரத்தில் உதித்துக் கைலைமலையின் சிங்காரப்பூங்காவில் உலாவிய கங்கையினுஞ் சிறந்த பொருநை என்னும் மாது சிவபெருமானின் திருவருள் நோக்கப்படிக்கும்ப முனிவரின் கமண்டலத்தில் உற்று அவரால் தாங்கப்பெற்று வந்து யொதியமாமலையினின்றும் விடப்பெற்று பூமியின் மிக்க பாண்டிநாடெல்லாம் பரந்து சாரும் ஆருயிர்களும் அறங்களுந்தழைக்க அவனியில் வந்தாள். இரு புறங்களிலும் பக்கங்களிலும் பண்ணவர்சாலைகளுஞ் சிவபெருமான் கோயில்களும் விநாயகக்கடவுளின் ஆலயங்களுஞ் சுப்பிரமணியக்கடவுள் துற்கை முதலியவர்களின் தளிகளும் பொருந்தும். பலவுயிர்த்தொகைகளும் மகிழ நீராட்டி பூத்தநேயத் தாரமுதமும் புனிதமாயூட்டி நோய்த்துயரில்லாதளித்து வருதலால் நுவலுதற்கு அரிய பெருமையுடையது. திருந்து தாம்பிரமலையிற் பிறந்து எழுந்து நிரந்து சூழ்ந்து பைங்கூழொடு நிறை பலம் பொருந்தும் மரங்களுந்தழைத்திட வருதால் அனை மருவுஞ் சுந்தநீர் செறி பொருநையின் பெருமையையார் சொல்வார். வேதியர்கள் மெய்மறை வேள்வியே நடத்துவர். வேந்தர்கள் நீதியே நடத்துவர். வணிகர் வையம் போற்ற நல்வளங்களையுதவுவர். *பொய்யில் சூத்திரர் தழைத்திடுவர். இத்தன்மைவாய்ந்த தாம்பிரபன்னியைஎங்கிருந்தாகிலும்நினைப்பவர் கங்கைமுதலிய தீர்த்தங்கள் ஆடியவர்கள் எய்தும் பயனை எய்துவர்.

கடவுளர் முனிவர் கருதியதானமுந் தீர்த்தமும் நெல்லைத் தலமும் பொருநைத் தீர்த்தமுமாகும். அண்டலிங்கெய்தி மூழ்குவோர் ஆணவமலங்கள் அகன்றிட ஆனந்த முத்தியை உறுவர். நதிகள் இரண்டு மூன்று நான்கு ஐந்து அதின் மிகுந்தே அதிகமாகவும் வந்துடன் கூடும். அத்துறைகளின் பலாபலன் ஒன்றுக்கொன்று அதிகமாய் முறையின் உதவும். அத்துறை ஆடுவோர் அரன் உலகுறைவார். பொருநை உத்தரவாகினி மூழ்கில் புண்ணியங்கள் மருவித்தீவினை போக்கியே முத்தியைப் பெறுவர். தருமநீடிய சச்சிமவாகினி தன்னை இருநிலத்தவர் காண்பதற்கு எளியது அன்றாம். மூன்றரைக்கோடி தீர்த்தத்திற்கும் அதிகம் ஆகும். ஞானநெறிதழைத்தோங்குந தெய்வநதி தண்பொருநைநதியேயாகும்.

நதியின் இருபுறமும் அடிதொறுந் தீர்த்த முளதாகும். இதில் வருணனுந் தவங்கள் செய்து இந்நதி பொருந்துஞ் செல்வவளம் வரத்தாற் பெற்றான். பொருநையை நினைந்து எப்புனலாடினும் பலன்கள் எய்தும். திரிலோகத்துள்ள தீர்த்தங்களெல்லாம் இந்த நதியை விரும்பிப் போற்றும். தம்மைச் சுத்திசெய்திடும் பொருட்டு யாருங்காலத்து மூழ்குவர். குடங்கையில் ஒரு உளுந்தமிழ்ந்தும் அத்துணை இப்பொருநைநீர் கொண்டாற்றங்கள் வினைசெந்தீப்பட்ட பெருங்காடென அழிவுறும். அந்நீரினால் விளையும் நெல்லாதிய பொருளை உண்போர்கள் சிவலோகம் மருவி வாழ்வர். கோதாவிரி மாயையினிடத்திற்றோன்றியது. வடகங்கை கலைமான் கலையாம். காவேரி திருமகளிற்றோற்றியது. ஆனால் நன்மைதிகழ் பொதியமலையிலிருந்து வரும் பொருநை உமாதேவியாரின் கரத்திலிருந்து வந்ததாம் என்றால் இதன் பெருமை எவரே சொல்லுந்திறம் உடையவராவர். பொருநைநதியுங் காவேரியும் ஞானமருளுந்தென் கங்கையாம். துங்கபத்திரையும் கிருட்டிணவேணியுங் கோதாவரியும் நடுநிலையதான கங்கை. பகீரதியும் யமுனையும் உத்தரங்கங்கையாகும். திவ்விய பொன்னும் நித்திலமுந் திகழ்மணியும் மீன்றதிருப் பொருநை நல்லாள் எவ்வளமுந்தருஞ் சகல தீர்த்தமயிலென்னவும் பேர் இசைப்பர் மேலோர். நெடும்பிறவிக்கடல் கடக்

தேறுதற்குப்படியுறு சோபானம் ஆகும். அவ்விய மகற்றி நீராடுவோர்க்கு இகபரம் அளிக்கும்.

முன் பிறப்புக்களில் செய்த புண்ணியங்களை உடையவர்களே பொருநைத் தீர்த்தத்தில் இப்பொழுதுஞ் சராசரங்களாகப் பிறக்க எய்துவர். நன்னெறி யோர்க்கே அந்நதியிற் றானபானங்கள் எய்தும். அந்நதியைக் காண்போரும் எளிதாக அரனுலகங் காண்பர். இந்நதியின் இருபாலும் மேவி இறந்தோர், அங்கத்தை அதன் கூடேபோடப் பெற்றவர்கள் வினை நீங்கிக் கயிலை சேர்வர். இந்நதியிற் படிந்தோர்க் கெல்லாம் பிறவியில்லை தரிசிப்போர்க்கு நற்றவங்கள் எய்தும். மிக்க நன்மை யுண்டாகும். பரிசிப்போர்க்கு ஞானம் உண்டாகும். சிந்தித்து தினந்தினமும் ஆடின் பரகதி உண்டாகும் என்று வேதங்கள் கூறுகின்றன. இந்நதியில் ஆடாமல் செய்ய வேண்டிய தவகள் செய்தாலும் ஆவது ஒன்றுமில்லை. இந்நதியை நேரிற் பெற்றும் இதில் ஆடாமல் வேறொரு தீர்த்தத்தில் ஆடப்போவோர் கரியதொரு காகம் நிகராவர் என்று கற்றோர்கள் உரை செய்வார்கள். நித்தமும் இந்நதியில் மூழ்குவோர்கள் பிறவாத முத்தி யினைப் பெறுவர். இருகரை யிடத்தும் விண்ணோர் சித்தர் வித்தக மாதவர் யோகர் மேவிச்சூழ்ந்து விரும்பித் தாபித்த தீர்த்தங்களையும் நீதிச் சிவலிங்கங்களையும் ஆலயங்களையுஞ் சிறப்பாகப் பொருந்தியுள்ள தாம்பிரபன்னித்தாயையும் போற்றிப் புகழ்ந்து பரிபாலனஞ்செய்யும்பொருவில்வேந்தர்கள்பொருந்துந்துயரவினைகளின் நீங்கி இன்பம் எய்திப்பின்ஞகன்றன் அடிக்கமலம் பெறுவர். அம்மாவாசை சங்கிராந்தி உத்தராயணந் தட்சணாயன புண்ணிய காலங்களில் கிரண நாட்களில் பிறந்த நாட்களில் பொருநை யாடித் தானஞ் செய்வோர் வினை நீங்கிப் பெருவாழ்வு எய்துவர்,சுகானந்த வீட்டில் இன்பந் துலங்கவாழ்வர். பொருநைத் தீரத்தில் பசு, நல்நிலம், பொன். முதலியவற்றை அந்தணருக்குத் தானஞ் செய்தால் தீய கொடுங்கலி அணுகுறாது. என்றும் இடர் செய்யும் பிராரத்வமான மாலை வினை நீங்கி இன்பம் எய்திவரதனின் உயர்திருக்கயிலை மருவிவாழ்வார். காட்டிலிருந்து செந்தீயின் மத்தியிலிருந்தும் நெடுநாள் தவஞ் செய்து பெறும் பயனும் அறு பதினாயி

ரம் வருடம் கங்கையாடிப் பெறும் பயனையும் ஒருநாள் உமை யவள் கரத்து உதித்த பொருநையில் ஆடியவர் பெறுவர். செப தபம் ஓமம் சிறந்த யோகஞ் சிவார்ச்சனை பிதிர்கன்மங் தானம் வேள்வி முதலியவற்றை பொருநை நதிதீரத்தில் மேன்மைபெறச் செய்வோர் ஒன்றுக்குக் கோடி கோடியாகப் பயன்பெறுவர். இத்தகைய பொருநைத்தெய்வத்தின் பெருமையை எவரே உரைக்க வல்லவர், உலகிலுள்ள சரமசரங்களுக் கெல்லாம் ஒரு தாயேயாகும்.

கலந்துறும் உயிர்களுக் கெல்லாங் கன்ம மாகிய வினைகளைத் தீர்த்து முத்தி சேரும் படிச் செய்யும் அன்பினாலே பொருநை மிக்க புனித முடைய தாகும். அப்பொருநைக்குப் 'பாவநாசனி' என்றும் பெயராம்.வருணராசன் முன்னொரு காலத்தில் உலகத் திலுள்ள தீர்த்தங்களில் மிக்கது எதுவென விசாரித்து இது எனத்தெரிந்து இந்நதிக்கரையில் நீதறு வேள்விகள் செய்து சிவனருள் பெற்று வாழ்ந்தான். உலகத்திலுள்ள நதிகள் எல் லாம் ஒவ்வொன்றும் ஒவ்வோர் யுகத்தில் பலன்தரும், இந்நதி போ எல்லாயுகத்திலும் இந்தக்கலி யுகத்திலும் நீராடினோர் களுக்கு இன்பவீடு நல்கும். ரத்தினம் விளைவதாகிய பொருநை யில் தாம்பிரமும் முத்தும் இக்கலியுகத்தும் விளையும். நீரால் நிறையுஞ் செல்வம் எவர்க்கும் உண்டாகும். குறுமுனிவரால் கொண்டு வரப்பட்ட பொருநை யாற்றின் மேன்மை சர்வ வேதங் களாலுஞ் சர்வசாத்திரங் களாலுங் குற்ற மற்ற புராணங் களா லும் ஆகமங்களாலுங் கூடச்சொல்லுதற்கு அரியதாகும். இந்த விதமான பொருநை யாற்றின் மேன்மையைக் கேட்டவர் புகழ்ந் தோர் கண்டோர் பத்தியாற் பானஞ் செய்தோர் பரிவோடு தானஞ் செய்தோர் சித்தராகுவர். இன்னேரை நீதியாற் போற்று வோர்கள் அத்தன் வாழ்கயிலை வெற்பில் அடைந்து இனிது உகந்து வாழ்வர். இந்த நதியினைப் புகழ்ந்த பேர்க்குப் பங்க மில்லை, சத்துருபயமில்லை, எங்குள்ள பொருளும் எய்தும்,எவரும் தன் வசத்தர் ஆவர். இந்நதியின் பெருமை தங்கிய கதையைப் படிப்பவர்தாமுங் குலத்தோடும் கோத்திரத்தோடும் இனிது வாழ் வர், பின் ஈறிலா முத்தி எய்தி இன்புற்று வாழ்வர். மலடிகள்

கேட்டால் நல்ல பாலனைப் பெறுவர். கன்னியர் கேட்கின் நல்ல நாயகனைப்பெறுவர். நோயுடையோர் கேட்கின் நோய் நீங்கிச் சுகமுறுவர்.

பாவிகள் கேட்கின் பாவம் நீங்கிப் பயன் பெறுவார்கள். இந்நதியின் பெருமையை நான் கூறி மெய்ஞ்ஞானம் பெற்றேன். என்னைப்போல் பாக்கியம் பெற்றவர்கள் எவர்? வியதனார் தன் மகன் சுகனை நோக்கி நீ நன்றுசேர் புதல்வன் ஆனபடியால் பொருநையின் மேன்மையோங்கிய கதையைத் தெரிந்தவாறு உரைத்தேனென்றார். பொருநையின் பெருமையை முற்றுங்கேட்ட சுகருந் தந்தையை எழுந்து போற்றித் தீதற்ற பொருநைத் தீரத் தீர்த்தங்கள் சிவாலயங்கள் முதலியவற்றைச்சேவை செய்ய நினைத்துத் தந்தையோடுசென்று மலைய மலையில் உற்பத்தி இடத்திலிருந்து சங்கமத்துறைவரை சென்று சேவித்துத் தம்மிடஞ் சார்ந்தார். இத்தகைய கதையினைக் கேட்போர் படிப்போர் எழுதுவோர் இம்மைப் பயனையும் மறுமைப்பயனையும் பெற்று இனிது ஈசன் பொன்னடிக் கீழ்வாழ்வர். பரகதி உதவும் தாம்பிரபன்னியில் மூழ்கித் திறமுறு மிக்கதையைக் கேட்டுத் திருநெல்வேலியினில் வந்து வரைவனநாதன் செய்ய மலரடி வணங்குவோர்கள் இருவினை தொலைந்து முத்தியை அடைவர். இது சத்தியம் ! சத்தியம் !! சிராத்த நாட்களில் அரனடி அகத்துள் வைத்துப் பொருநை நன்னீராடி இன்ப மெய்க் கதையைக் கேட்போர் படிப்போர் இவர்களின் முன்னோராகிய தென்புலத்தோர்கள் எல்லாம் சிவனடிக் கமலஞ் சேர்வர் என்று சூதர் கூறியருளினார். இதைக் கேட்ட நைமிசாரணிய வாசிகள் பொருநைக்கு வந்து,மலை முதல் கடல்சேர் காறும் சந்ததந் தீர்த்தங்கள் ஆடித்தலங்களுந் தொழுது போந்தார். சூதமுனிவரும் அவர்களோடுசென்றுது நீர்ப் பொருநையாடிச் சிவாலயம் விரும்பிப் போற்றிச் சோதியான் அமலன் பொன்னடி நினைந்து போந்தான். இந்த விதமாக எவர்களேனுஞ் செய்யின் பாவமகன்று பரகதி நண்ணுவர். இந்த வாறாக அகத்தியர் பொருநையாற்றை அமுத நதியாக்கி இகத்தினில் இன்பமாகும் மணக்கோலம் இனிது காணத் திருநெல்வேலி அணிநகருக்கு வந்தார்,

## சகூ-வது அகத்தியர் லோபாமுத்திரைக்குத் தலமகிமை யுரைத்த சருக்கம்.

கடல்விட முண்ட கைலைக் கடவுளை மறவாக் கும்பன்
கடல்விட மமுத மன்ன கண்ணிணை லோபா முத்ரை
உடல்புள குண்ணச் சொற்ற வுயர்தல மாகு நெல்லை
அடல்தரு மகிமை கேட்போ ரரன்பத மடைவர் மெய்யே.

நைமிசாரணியமுனிவர்கள் சூதமுனிவரைப் போற்றி அகத்தியர் லோபா முத்திரைக்கு வேணுதலப் பெருமையைச் சொன்ன கதையைச் சொல்லியருளவேண்டுமென்று பணிந்து கேட்கச் சூதமுனிவர் சொல்கின்றார். தமிழ் முனிவர் கோதை லோபா முத்திரைக்கு உரைத்தகதையையுரைப்பதற்கு எளிதன்று,என்றாலும்அவன் அருளாலறிந்த அளவிற் சொல்கின்றேன்கேளுங்கள், மாதவர் முனிவர் சிவயோகர் வித்தியாதரர் விஞ்சையர் தேவர்கள் எப்பொழுதும் அத்தலத்திற்கு விரும்பி வந்து அமலனடியைப் போற்றி விரவியெங்கும் வீற்றிருப்பர். சகல தீர்த்தங்களும் நற்றருமங்களும் அங்கு அழகுற அமைந்திருக்கும். தவம் ஓங்கும். பரையுஞ் சிவமும் பரிவினொடு வீற்றிருப்பர். அத்தலத்தில் மறையோர் சாலைகளும் அடியவர்கள் சாலையும்மணிமேடைகளும்மணிமாடங்களுங் கோபுரங்களுஞ் சோலைகளும் கோடி கோடியாக அமைந்திருக்கின்றன. புத்தமுதம் பொருந்திய பொருநையாடி அத்தனைப் பணியும் அறிவு உடையோர்க்கு ஏற்றது. முத்தி தரும் எல்லாத் தலங்களுக்கும் முற்பட உள்ளது. நித்தியமாய்ப் பரப்பிரமம் பரையோடு நீங்காமல் உறையப்பெற்றது. இவ்வகையான சிறப்புடைய இந்தத்தலத்தில் இருப்போமென்று அகத்தியர் விரும்பி லோபா முத்திரையோடு வந்து விசுவகருமாவை நினைத்து வருவித்துத் தனக்கு ஓர் ஆச்சிரமம் இயற்றித் தரச் சொல்ல, அவனும் வளப்பமுடையதாக முனிவர் விரும்பி வசிக்கத் தக்கதாக ஆசிரமம் ஒன்று நிருமித்துக் கொடுத்தான். முனிவருங் கண்டு மகிழ்ந்து இனிது அதில் மனையோடு வசித்துக் கொண்டு அரனை அன்போடு பூசித்துவந்தார். இவ்வாறு பூசித்து வரும் நாளில் லோபாமுத்திரை முனிவரை நோக்கிப்

பொதியமலையைவிட்டு நீங்கி இங்கு விருப்பத்தோடு வந்திருக்க நினைத்திடு தன்மையையுந் தேவர்களெல்லாஞ் சிறப்பொடு இங்கிருக்குந்தன்மையையும் பூமியிலுள்ளதலங்களை எல்லாம் விடச்சிவபெருமான் இத்தலத்தில் நீங்காது என்றும் விரும்பியுறையுந் தன்மையையுங் கூறவேண்டுமென்று கேட்க முனிவர் சொல்லுகின்றார்.

வேணுவனத்தின்பெருமையை வேதங்களுக்குங் கூறுதற்கு அரியதாகும். திருவினும் மிக்க திருவே! சொல்கின்றேன் கேள், ஆதியாம் பிரமந்தானே அகமகிழ்ந் திருப்பதாலும் சோதியாகிய இரண்டு லிங்கந் தோன்றியிருப்பதாலும் வேதங்களே மூங்கிலாகச் சூழ்ந்திருப்பதினுலும் சேவுடைய அமலரான திருமூலத்தானநாதர்க்கு ஆவிடையாளுங் கூடவே ஆதியிற் றோன்றலாலும் மூவரும் இன்பமாக முறைபுரிந் திருக்கையாலும் வடிவாள் அறஞ்செய்து அன்னங் கொடுப்பதாலும் அந்தணரின் வேள்வி விளங்கலாலும் என்றும் நித்யமாய் விளங்கலாலும் பதிகளுக்கெல்லாம்முற்பட்டதாக இருப்பதாலும் பேரூழிதோறும் இறைவன் இங்கு இருப்பதாலும் இத்திருநெல்வேலி சிறப்புடையது. இத்தலத்தின் பெருமையை மகாவேதன் முன்னம் சனகாதியர்க்கு உரைத்தான். அந்தக் கதையைக் கேட்டபடி லோபாமுத்திரையே உனக்குச் சொல்கின்றேன் என்று மகிழ்வோடு கூறுகின்றார்.

மால் பிரமாதிய தேவர்கள் இத்தலத்தில் வந்து பூசித்து அரனைப்போற்றிப் பெறுதற்கு அரிய பெரும்பேறு பெற்றனர். சிவபெருமான் விரும்பி உலகெலாம் படைத்து சத்தியோடு இத்தலத்திலிருந்து வாழ்வர். காசியே முதலிய தலங்கள்போல சத்திரித்தமும் விரும்பி, விந்து நாதம் அத்தசத்தங்களாகிப் பாசமதகற்றி என்றும் பரத்தினிற் பொருந்திவாழும். இப்பதியின் மேன்மை சோதியே அறிவதல்லால் மற்றையரால் சொல்வதற்கெளியதன்று. இத்தலத்தில் எய்தி ஒரு தினம் வைகுவோரும், தீதுறுவினைகள் நீங்கிச் சிவனடிக் கமலஞ்சேர்வார். பத்துநாள் வாசஞ்செய்யில் பரிதிபோல் விமானமேறி அத்தனுக்கு அன்பராகி அடியிணை தொழுதுவாழ்வர். சீவனுள்ள அளவும் வாழ்

வோர் பெருமை சொல்லவும் எளிதோ? இத்தலத்தில் வேள்வி செய்வோர்கள் தங்கள் குலத்தோடு மன்னிய செல்வமெல்லாம் வளம்பெறப் பெற்றுவாழ்ந்து குலத்தோடுங் கயிலைநாதன் கழலடைந்தின்புறுவர். மற்ற தலங்களில் மந்திரம் பலவருடங்களிற் கூறிப்பெற்றிடும் பயனை எல்லாம் இத்தலத்தில் ஒருதரங் கூறிய அளவிற்பெறுவர். பாவஞ்செய்துள்ள ஆடவரானாலும் மங்கையரானாலும் இப்பதியில் சேரின் பாவம் நீங்கிக் கயிலையில் இன்பமுடன் வாழ்வர். அந்தணப் பிரமச்சாரியர் அருமறை முறையினால் இப்பதியில் ஓதினால் மறைப்பொருளனைத்தும் தானே விரைந்து வந்திடும். நன்மனைவியை வேட்டுநற்புதல்வரைப் பெற்று இன்புற்று வாழ்வர். இத்தலத்தில் வந்து பொருனையில் மூழ்கிக்காயத்திரியைச் செபிப்போரும் அடியார்க்கு அக்கம் பூதிமெய்புனைவிப்போரும் இருவினை நீங்கி இன்புற்று வாழ்வர். அந்தணருக்குத் தானங் கொடுப்போரும் அமுதுசெய்விப்போரும் கோதற்ற வேதியரை அவர்கள் குடும்பத்தோடு தாபிக்கும்படிச் செய்விப்போரும் எக்கியம் வளர்ப்பதற்கு அந்தணர்கேட்டபொன்னைக் கொடுப்போரும், உலக இன்பமெல்லாம் பெற்று முடிவில் பல்லாயிரங்கோடி காலம் கயிலை மருவி வாழ்வார். அந்தணற்கு நல்நிலந் தானஞ் செய்தோர் அப்பூமியில் விளைந்த ஒரு நெல்லிற்கு ஒருகோடி காலமாகக் கயிலையை மருவி இன்புற்று வாழ்வர். திருமூலலிங்கமுன்னர் தெக்கணாமூர்த்திமுன்னர் நடராயர் முன்னர்வேண்ட வளர்ந்தலிங்கத்தின்முன்னர்ப்பரிவினின்று பஞ்சாக்கரஞ் செபித்திடுவோர் இருவினைப்பாசம் நீங்கி இன்பவீடெய்துவர். இந்தத்தலத்தில் எமக்குச் சிவபெருமான் திருமணக்கோலங் காட்டுவோமென்றருளிய வண்ணம் அக்கோலங் காட்டுவரென்று எதிர் நோக்கி இருக்கின்றேன்.

தலம்மூர்த்தி தீர்த்தம் மூன்றும் விசேடமுடையதும் இதில் வருவோர்க்கு முத்தி வழங்குவதும் இத்தலமேயாகும். இங்குள்ள மனிதரெல்லாந் தேவராகும். தாபரங்களெல்லாம் தருவெல்லாம் வேதமாகும்.

பட்சி மிருகங்களெல்லாம் புராணம் கலைகள் ஆகும். பெண்களெல்லாம் அறமடந்தையரேயாவர். ஏழைகளுக்கு அன்ன

மிட்டோர் குபேரசம்பத்தைப் பெற்றுப் பின் கயிலை மருவிவாழ்வர். வெற்றிலைபாக்குக்கொடுத்தோர் பந்தமாம் வினைகள் நீங்கிப் பரகதியினைச்சார்வர். இவ்வாறு செய்து முத்தியைப் பெற்றோர். விண்மீனினும் ஆற்றுமணலினும் அனேகர். அதற்கொரு கதை சொல்கின்றேன் கேட்பாயாக. ஏழையாகிய விருத்த பிராமணன் ஒருவன் மிகக்கஷ்டப்பட்டு யாவரும் நகைக்கும்படியான கூனியமேனியோடு பஞ்சாங்கமுந் தண்டுங் கையிற்கொண்டு மானம் நீங்கிப் பீற்றற்கூறையோடு பலவிடங்களிலும் இரந்து காட்டுவழியாகச் சென்று வெயிலாலும் பசியாலும் வாடிவதங்கி நிழல்தேடிவேயின் சூழலிடத்து வந்தான். ஒரு மூங்கிலின் நிழலிலிருந்து தன் இளைப்பை மாற்றிக்கொண்டு சிறிது உற்சாகம் உண்டாகவே இது விசேடமுடைய தலம் என்று எண்ணிப்பொற்றாமரையில் பூம்புனல் பருகி எங்கும் போகமுடியாதவனாகி அங்கேயே சிறிது தங்கி இருந்தான் அவ்விடத்திற்கு ஒரு விலை மாதோடு ஒருவணிகன் வந்தான். கனவிலும் ஒருவற்கு ஈயா' மிக்கலோ பகுணமுடையவன் மாதர் மயக்கிற் சிக்கித்திரிவோன். சிறிதும் இரக்கமில்லாதவன் கொடூரம் மிகவுடையோன். கிட்டை செய்தபோதனரேனும் நிந்தையேநினைந்து செல்வோன், அஞ்சாமல் நித்தம் பாதகம்புரிவோன், மிக்க சீற்றத்தோன், தேவர் ஆலயந்தொழவுஞ் செல்லாதோன், இன்னும் பலதீக்குணங்களும் பாதகங்களும் பழியும் மிகுந்தோன் முன்செய் தவத்தால் நெல்வேலி வந்து சேர்ந்தான். அவன் தன் காதற்கிழத்தியோடு இன்பத்தோடு இருக்கும்பொழுது அவ்விருத்த எளிய அந்தணனும் வாழ்த்தி அவ்வணிகனுக்குப் பஞ்சாங்கம் ஓதி நான் தாகத்தால் இளைப்பும் தவிப்பும் உற்றேன் தாம்பூலதானம் அருளொடு தந்தருளுக என்று இரந்து வேண்டினன். புன்மையாளன் அக்கணத்து அளித்திடாமல் அசதியாய் அகலநின்றனன். அப்பொழுது கணிகைமாது மறையோன் சோகம் நீங்க அடைகாய் நல்கென்று உரைத்திட வேசி மங்கை சொல்மறுத்திடாமல் வருத்தத்தோடு பாதி வெற்றிலையும் பாக்குங் கொடுத்தான். மறையோன் வாங்கிஉண்டு வருத்தந் தீர்ந்தனன். அவர்களும் பொற்றாமரையருகிக் கோயிலினுட்

சென்று வேய்முத்தரை வணங்கிச் சென்றனர். இவ்விருவரும் தம்பாவம் நீங்கி நெடுநாள் தம்பதியில் வாழ்ந்து பின்மாய்ந்தனர். தாம்பூலம் நல்கென்ற கணிகை பொன்னூட்டிலின்பமுற்று அபிராணியானாள்.

தீதுறுவணிகன்றன்னை வெய்ய எமதூதர் சினத்தோடு சூழ்ந்து சோகமே துணிந்து செய்தார். பூதிசேர் கணங்கள் கூற்றைப்பொருது அந்தவணிகன்றன்னை கோதிலாக்குழகன் முன் கொண்டுபோய் விட்டனர். அவ்வணிகனைச் சிவபெருமான் நோக்கி நீ நாம் விரும்பிவாழூந் தலத்தில் அந்தணற்கு அடைகாய் யீந்த தன்மையால் தீவினை நீங்கி நின்றாய் நீ தேவர்களுக்கெல்லாம் அரசனாகுக என்றவுடனே வணிகனும் இந்திரனாகி அரசுசெய்து இன்புற்றிருந்தான்.

பொன்விளை நிலம் அன்னம் வத்திரம் முதலியவற்றைச் சிவனடியவர்க்கு இத்தலத்திலிருந்து அளித்தோர் பாவம் நீங்கப்பெற்று பேரானந்தக் கடலிடைப்படிவர் இது முக்காலுஞ் சத்தியமே. குருச்சேத்திரம் பிரயாகை காசி முதலிய தலங்களும் இப்பதிக்குப் பதினறில் ஒருபங்கு சரிவராதென்றால் இதன் பெருமையாவர் கூறவல்லவர். இத்தலத்தை நினைத்து எத்தலத்தில் உயிர்விடினும் உம்பாராவர். சிராத்தங்களை இப்பதியிற்செய்யில் பிதிர்க்கள் அமலன் உருவுபெற்றுச் சிவபெருமானடி நிழலடைந்து வாழ்வர். மைந்தரும் பூமியில் சுகபோகம் பெற்றுவாழ்வர்.

திருநெல்வேலியில் சிவன் விட்டோரைக் காலனுங் கருதிப் போற்றித்தொழுவன். தேவர்கள் எதிர்கொண்டு வந்து விமானத்தேற்றிக் கையிலைக்குக்கொண்டுபோவர். இத்தலத்திலிறக்கும் எவ்வுயிர்க்கும் அரன் ஐங்தெழுத்தை ஓதுவன் சொன்னவுடனே அவர்களும் கயிலை சார்வர். நற்புத்திரரை விரும்பினோர் திருவிழாப் பத்து நாளும் நாயகனும் நாயகியுமாகப்போய் சூழ்ந்து போற்றில் நற்புத்திரரைப்பெற்று இன்புற்றுவாழ்வர் சிந்துபூந்துறையில் ஒருநாள் ஆடில் பதினாயிரங் கிரிச்சா பலனுண்டாகும் பொற்றாமரையில் ஆடினோர்க்கு நூறாயிரம் கிரிச்சா பலனுண்

டாகும். உயர்கதி பெற்றோர் வடகயிலைக்குச் செல்லவேண்டாம். இத்தலத்தில் இருந்தாலேபோதும். இது அறிந்தே மயலறு தவத்தோர் நியமமாய்எந்நாளும் இங்கிருப்பர். இதுவேமுத்திதலமாகும். இத்தலத்தின் மகிமையைப்பற்றி நான் சொல்லியது ஒரு சிறிதும் பொய்யல்ல. ஓ பெண்ணே! லோபா முத்திரை சந்தேகப்படாதே,சிவன்மேல் ஆணை இது சத்தியம் என்று அகத்தியர் கூறி மேலுஞ் சொல்லுகின்றார். உபமன்னிய முனிவருக்கு ரோமச முனிவர் மழுவேந்தி ஒப்புவித்தார். இதனைக் கேட்டு லோபா முத்திரை அதிமகிழ்ச்சிகொண்டு சிவபெருமானை விதிமுறை பூசை செய்தாள். அகத்தியர் லோபா முத்திரையை நோக்கி இன்று சிவபெருமான் மணக்கோலங்காட்டுவதாகத் திருவாய் மலர்தருளியிருக்கின்றார்,காண்போம் வாவெனக் கூறிக் கூட்டிக்கொண்டு ஆலயத்தை நோக்கிச் சென்றார். அப்பொழுது தக்கன் பிருகு, பரத்துவாசர், அத்திரி, புலத்தியர், காசிபர், முதலிய பன்னிருவரும் அகத்தியனைப் புகழ்ந்து கூடச்சென்றார்கள். எல்லோரும் சிந்துபூந் துறையில் நீராடிச் செபதபங்கள் செய்துகொண்டு கோயிலுக்குள்வந்து மூலலிங்கத்தையும் வேணுநாதரையும் வடிவுடை நாயகியையும் பணிந்து சபாநாயகரையும் போற்றி அங்கிருந்தனர். பிறகு முனிவரரைத் தமதிருக்கைகளுக்கேகச்செய்து அகத்தியர் மணக்கோலங் காணுதல் விரும்பி லோபா முத்திரையோடு பெருமானுக்கு வேதமுறைப்படி. அபிடேகம் நைவேத்தியம் தூபதீபம் முதலிய வற்றைச்செய்து போற்றிப் பணிந்தார். இவ்விதமாக முப்பொழுதும் பூசித்துப் போற்றி, லோபா முத்திரையோடு அங்கு தவஞ்செய்து கொண்டிருந்தார். உமாதேவியாரோடும் மணக்கோலங் காட்டுவேனென்று சிவபெருமான் இமையமலையிற் கூறியருளியது எப்பொழுது வாய்க்குமோ!என்று இருந்தார். இமைய மலையில் பங்குனி யுத்தரத்தில் புரிந்த மணக்கோலத்தை 'அந்தப் பரிவினோடு இங்குவேய் வனத்தில் வந்து சித்திரை மாதப் பிறப்பில் எளியேன் காண மங்கையோடு வந்தருளவேண்டுமென இனிது போற்றி மலையமுனிவரிருந்தார், என்று சூதமுனிவர் கூறிக் காகமுனிக்கு இறைவன் மணக்கோலங் காட்டிய திருவருளின் பெருமையைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

## ௫0-வது, அகத்தியருக்கு மணக்கோலங்காட்டின சருக்கம்.

காதலாற் கௌரி செய்த கருதருந் தவத்திற் கையன்
மீதுலா மன்பு கொண்டு விளங்குமா விமையம் வந்து
தீதெலாந் தேவர் நீங்கத் திருமணங் கொண்ட கோலம்
போதலார் கும்பன் காணப் பொற்பரு ளிறைதாள் போற்றி.

அகத்திய முனிவர் திருநெல்வேலிக்கு இறைவன் அருளியபடி வந்தபின் சிவபெருமான் தேவர்கள்முனிவர்கள் சூழச்சிங்கஞ் சுமந்த ஆசனத்தில் வீற்றிருந்தார். அப்பொழுது இமைய அரசனும் வாழ்த்திப்பொன்னடிக்கு அருச்சனை புரிந்து வணங்கினான். இமைய மீன்ற தேவியும் முன் ஐயை கைப்பிரம்போடே வரவும், சசி அடைப்பாகு ஏந்தவும், கங்கை வெண் கவரி வீசவும், காளிகள் கவிகை தாங்கவும், அரம்பையர்கள் ஆடவும் இலட்சுமி, கைலாகு தரவும் வாணி பாடவும் வந்து ஆதியந்தமில்லா அமலனைச் சிந்தை ஆதரவோடு வணங்கிப்போற்றித் துதித்தார். எந்தையும் என் அன்னையை ஆசனத்திருத்தி நீ, என்றார். தேவியும் பங்கய மாதர் சூழ்ந்து பல்லாண்டு கூறவுஞ் சங்கினம் முழங்கவும் தாபதர்கள் ஆசி கூறவும், தேவர்கள் கைகூப்பி நின்று போற்றவுஞ் சிங்காதனத்தே வந்து வீற்றிருந்தருளினாள். முல்லை வெண்முறுவற் பிராட்டியை அல்லமர் கண்டனார்க்கு அருளவேண்டி மேனை அந்த மலையரசன் கையில் புனலுஞ் சாந்தும் மலர்களும் உதவினாள். அதனை அம்மலையரசனும் எங்கோன் மலரடி பணிந்துநின்று தேவி செங்கையில் கரகநீருதவிப்பண்பார் பூங்கழல் விளக்கிச் சாந்தும் புதுமலரும் புனைந்து பூசைக்குரிய கடன்கள் யாவுஞ் செய்து அருச்சனைபுரிந்து ஆயிழை முளரிக்கையைச் சிவபெருமான் கைமேல்வைத்து விருப்பொடும் அளித்தேன் என்று மாமறைகள் ஓதித் தாரை வார்த்துக் கொடுத்தான்.

எந்தப்பொருளும் ஈறுகுங்காலத்தும் ஈறிலாத அந்தான் உலகம் ஈன்ற சுந்தரவதனத்தாயை மலையரசன் உதவ வதுவை

செய்தனனென்றால் அவர்கள் தன்மையை எவரே சிந்தையிற் றெரிந்து செப்பவல்லவர். அப்பொழுது தேவர்கள் தேவதுந் துபிகள் முழங்கிப் பொன்மலர் தூவி ஆர்த்தனர். ஆடினர், கானம் பாடினர், துதித்தனர். முனிவர்களும் மகிழ்ந்து போற் றித்துதித்தனர். திருமகளுங் கலைமகளும் இந்திராணியும் மற்று முள்ள தேவமாதர்களும் மங்களம் பாடினார்கள்.

மிதிலை பம்பை தண்ணுமை முதலியவாத்தியங்கள் எல்லாம் பூதர்கள் முழக்கி ஆர்த்தார்கள். அப்பொழுது இமையவேந் தன் நல்ல பசும்பாலும், முப்பழம் முதலிய கனிகளும், நெய் தேன்முதலிய பொருள்களும் பொற்றட்டிலில் ஏந்திவந்து மெய்ப் பொருளாகிய இறைவன் முன்வைத்து இவற்றை நுகரவேண்டு மென்றுபணிந்து செல்லி வேண்ட நன்றென மகிழ்ந்து நாத ரும் கரத்தாற்றொட்டு ஏற்றனர். அய்த்தனவாகத் தொட்ட நல்லுணவை மன்னன் நேயமோடு அவ்விடம் விட்டு மாற்றிப்பூ, கந்தம், தீர்த்தம் இவற்றொடும் ஒரு சாருப்ப வேதன விம லனை நோக்கிப் பூமியிலுள்ளோர் விண்ணிலுள்ளோர் மணஞ்செய் யும்பொழுது எவ்வாறு கிரியைகள் செய்கின்றார்களோ அவ் விதமே விமல நீ நடத்தவேண்டும். ஆகையால் அதற்கு அருள் செய்க என்றனன். அதற்கு ஐயன் நகைசெய்து அவ்விதமே செய்கென அருளிச்செய்யப் பிரமனும் சுக்கிரன், வியாழன், தே வர்கள் முதலியர் சூழ இருந்து அக்கினி வளர்த்து உரியசடங்கு களை எல்லாம் முறையே செய்தான். பின்னர் மால்பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் முறையே வணங்கினர். வணங்கிய தேவர்களுக்கெல்லாம் முறையே அருள்புரிந்தனர். இமையவேந்தன் அவர்களுக்கெல்லாம் உபசாரஞ்செய்து அறு சுவையுண்டியுதவிக்கந்தம் சந்தனம் பூ முதலிய வழங்கி மற்றும் விரும்புறு பொருள்களளித்து மகிழ்வித்தான்.

எல்லோரும் பேரானந்தக்கடலிடைப் படிந்திருந்தனர். அப் பொழுது இரதிதேவி இறைவன் முன்வந்து போற்றித்துதித் து எனது துயர் தீர்த்தருள் என்று இரந்து வேண்டினள். அதற் கு அரன் அவளை நோக்கி அஞ்சேல் என்று கூறி மாரன் வர மீந்தனர். உடனே மால்முதலினோர் மருட்சி எய்தவும்

இப்படி மகிழவும் கோலமார் மேனியோடு மன்மதனும் முன்னேருன்றிப்புகழ்ந்து போற்றித் துதித்து நின்று என்பிழை பொறுத்தருளவேண்டுமென்று இரந்து கேட்டனன். சிவபெருமான் "நாம் முனியிலன்றே நீ இது விளம்பவேண்டும்" என்று கூறி "ஆவிசோர்ந்து அயர்ந்து உன் உள்ளம் அஞ்சலை வேளே!" என்றுன். நெற்றிக்கண்ணுல் நீருன நின்மேனி இரதிக்குமட்டும் உருவமாகவும் மற்றவர்களுக்கு அருவமாகவும் இருந்து நீ முன்போல் அரசாள்க என்று கூறி வேண்டும் வரங்களையுந் தந்தருளினுர். மதனனும் விடைபெற்றுத் தென்றற்றேர் ஏறித் தன்னுலகடைந்தான். இறைவரும் இறைவியும் மணக்கோலத்தோடு தேவர் முனிவர்போற்ற மகிழ்ந்தங்கினிதிருந்தார். பின், கும்பமுனிவர்க்கு முன் கூறிய மொழியை நினைத்துக் கன்றினுக்கு இரங்கிவரும் ஆன்போலத் திருநெல்வேலிப்பதியைநோக்கிவிடைமேலேறி உமாதேவியாரோடு கணங்கள் சூழ மணக்கோலந்திகழ வந்தருளினர். இஃதிவ்வாறிருக்க, நெல்லையாலயத்தில் தவஞ்செய்த கும்பமுனிவர் ஐயோ! பதிகளிலெல்லாம் மேலான நெல்வேலியில் மணக்கோலங் காட்டுகின்றேன் என்றதனுலன்றே? இங்குவந்தேன்! கல்யாணம் ஆகி ஏழுநாளாகியும் இன்னும் வந்திலரே! இவர் வராததற்குக்காரணம் என்னவோ? எனக்குக் கொடுத்தவாக்குத்தப்பார் நெஞ்சே! நீ வருந்தேல் எனத்தனக்குள்ளே சொல்லி மிகவருந்தி ஒருவாறு தேறி நான் சொல்லும் வார்த்தைகளெல்லாம் அப்பரமன் செவியிற் புகுந்திலதோ? அப்பெருமானின் மணக்கோலம் இங்குயான் பெறுதற்கு என்ன தவஞ்செய்யவேண்டுமோ? அவர் வருவேனென்ற சொல்லை நம்பிவருவரென்று றுதியாயிருந்தேன். இன்னும் வரவில்லையே என்று ஏங்கிச் சிவமுனிமெய்ச்சமாதியிலிருந்தார். அந்தச் சமையத்தில் சிவபெருமானும் தேவிருவரும் ஒப்பில்லாவெள்ளி வெற்புடையோன வந்தான்! நீறணிகடவுள் வந்தான்! நெல்லை வாழ் நிமலன் வந்தான்! மாலையற்கரியான் வந்தான்!

பணைவனப்பதியான் வந்தான்! சீலநான்மறைகள் தேடுஞ் சிவன் வந்தான்! வந்தான! என்று அங்கு ஓலமிட்டு ஆர்க்கவும் உம்பர்துந்துமியு மார்க்கவும் வந்து தோன்றினர். சமாதியிலிருந்

த தமிழ்முனிகண்டு தன் மனைவிக்குங்கூறிச்சங்கங்கள் முழங்கவும், குடமுழவம், தடாரி, பேரிகை, முரசம் முதலிய வாத்தியங்கள் முழங்கவும், வீணைநாதம் விளங்கவும், கானம் பெரிது தோன்றவும், கின்னரர், கருடர், சித்தர், கந்தர்வர்கள், விண்ணோர், பன்னகர், முனிவர், வித்யாதரர், யோகர், வேதர் தாம் புருவோர், வீணைநாரதர், தூயபோகர் ஆகிய இவர்களெல்லாம் நெருங்கிப்புகழ்ந்து வரவும், மேனகையுருப்பசி, திலோத்தமை சசி, அரம்பை முதலிய மாதர்களும் மற்றும்வரை மாதர்களும் பக்கத்தே சூழ்ந்துவரவும், பாடியும் ஆடியும் புகழ்ந்தும் போற்றியுந் தொடர்ந்து வரவும், விடைக்கொடி ஆகாயமெல்லாம் பரவவும், பொற்பீலிகள் நிறைநிறை பிறங்கவும் பொன்னிற ஆலவட்டங்கள் அசையவும், வெண்குடைகள் குலவவும், பாவாடைகள் குழுமவும், விரிமறைப்பொருளுணர்ந்தமாதவர்கள் செங்கையாற் கவரிகள் வீசவும், பூதர்கள் மணிக்குடை பிடிக்கவும், பெருகிய யோகிகள் மணிப்பந்தங்கள் பிடிக்கவும், அந்தரத்திருந்து தேவர்கள் பூமாரி பொழியவும், பண்ணினார் இயம்பலமுழக்குவனவும் அண்ணலார் புகழ்பாடுவனவும் நண்ணி எங்கணும் ஆவலங் கொட்டுவனவும் ஆகிய பூதங்கள் எண்ணில் கோடி எங்கும் இசையவும், அமலன் சன்னிதியில் மருங்கில் முறைமுறைவரத் தேவர் தம் சேனையை உயர்முனிவோரைச் சிறந்த நந்திதேவர் கைப்பிரம்புகொண்டு ஓச்சி முன் செல்லவும் உமாதேவியார் மகிழ்ச்சிகூர்ந்து இன்னருள் கூரவும் உளமகிழ்வால் அடியிணை மலரும் மெய்த்தொண்டரின் வளருநெஞ்சாகிய கமலங்கள் மலர அளவில் கோடி சூரியர்களின் உதையம்போல் ஒளி உலகெலாம் விளங்கவும், கங்கை, பொன்னிதழி, கூவிளம் இளமதியம் விளங்குஞ் செஞ்சடையும் அருள்பொழியுந் திருமுகமும், பேரொளிசெய்யும் முக்கண்ணுஞ் சூரிய கோடிகள்போல் ஒளிவிளங்குங் குண்டலமணிந்த காதும் பழமறைமொழிந்த செவ்வாயும் வெண்ணகையும் மாலும் பிரமனும் பயப்படும்படி எழுந்த விடத்தை அடக்கியருளிய கண்டமும். நான்கு அழகிய புயங்களும் மான், மழு, வரதமோடபயந் தரும் அழகிய நான்கு திருக்கரங்களும், முன்னூல் விளங்கும் மார்பமும் சர்ப்பகங்கணமும்

யானைத்தோலின் போர்வையும் அரையிற்கட்டிய அழகிய புலித்தோலும் அடியார்க்கு அகமலர்ந்து பரத்தினை அறியும் மெய்ஞ்ஞானந் தருங் குஞ்சிதத்தாளும் நிகரிலக்க மாமணி திருநீற்றணி மெய்யும் *கொன்றை முளரிமுதலிய நறுமலரின் மாலைகளும் செங்கழு நீரணிபரப்பும் அழகுறச்செறிந்த பீதாம்பரச்செறிவும் முத்தலங்கல் வயிரவாசிகை முதுபவளக்கொத்துமாலையும் முறைமுறை மார்பிடை குலவவும் திருமணக்கோலங்காட்டிச் சென்னல் சூழ்திரு நெல்வேலி மாநகரிடை விளங்கும் பொன்னிறுலயத்தில் நின்றருளும் புனிதனைப் புனிதக்கன்னிபாகனைக் குறுமுனிவர் கண்குளிரக்கண்டு மெய்புளகங்கொண்டு இருவிழிகளிலும் ஆநந்தக்கண்ணீர் வாரக்கோலம் வேறாகி நின்று பண்தருமறைகள் பாடிப்பார்த்தகண்பறியாளுகி அண்டரும் வியக்கத் தொண்டனாக முன் அடியில் வீழ்ந்தார்.

அடுத்தடுத்து அடியில் வீழும் அருந்தவமுனிவரைச்சிவபெருமான் அன்போடு இருகரத்தால் எடுத்துப் புல்லி உச்சி மோந்து கருணை நோக்களித்தான்.

அப்பொழுது தேவர்கள் பூமாரி பொழிந்தனர் முனிவர்கள் ஆர்த்தனர். லோபாமுத்திரையும் பொருநைமாதும் முறைமுறை அடிபணிந்து போற்றித்தொழுது நின்றனர். பிரமனை ஒத்த முனிவர்கள் பன்னிருவரும் அடிமிசை விழுந்து எழுந்து சென்னிமிசையே கரங்கள் குவித்துத் துதித்து நின்றனர். அப்பொழுது கும்பமுனிவர் பின்னும் பின்னும் எழுந்து அடிமிசை வீழ்ந்து வீழ்ந்து எழுந்து பேரன்பிேனுடும் ஐயனே! அரனே! போற்றி! அமலனே! பிரனே! போற்றி! செய்யனே! சிவனே போற்றி! திகம்பரதேவே!போற்றி!தேவர்க்க முதமீந்து ஆலமுண்டருளுங் கண்டா!போற்றி! பணைவனப்பதியாய்ப்போற்றி! மாரனை எரித்தாய்போற்றி மூவர் புத்திரனைப், பொடித்தாய்! போற்றி! பழமறைப்பொருளே!போற்றி! மாலின் கண்மலர் விரும்பிய பொற்கழலோய்!போற்றி! அட்டவுருவோடு திருமூலத்தானத்து விளங்கும் அப்பா!போற்றி! வேணுநாயகனே! போற்றி! என்று பலவாறு தோத்திரங்கள் செய்துபோற்றி நின்றார். அகமகிழ்ந்து சிவபெருமான் நின்று அன்புறு துதிகேட்டு மகிழ்ந்தோம் வேண்

டும் வரங்களைக்கேளெனக் குறுமுனி இறைவனே! இப்போது என்பால் மன்னிவந்தருளும் இம்மணக்கோலம் வருஷந்தோறும் முன்னி நான் காண நல்கிமுடிவில்லாத இத்திருநெல்வேலி தன்னில் எந்தநாளும் பாகத்தையலோடிருக்கவேண்டும். இந்த நெல்வேலியில் இருப்பவர்களுக்குந் தேவரீரைச் சிந்தையில் எண்ணுவோர்களுக்குந் திருமணம் தரிசிப்போர்களுக்கும் பந்தமாகிய வினைகளை நீக்கிப் பூமியிற் செல்வம் நல்கிச் சுந்தரக்கதி சேர்விடுஞ்சேர ஆதியே! நீ அருளவேண்டும், என்று பணிந்திரந்து வேண்ட அரியயற்கரிய நாதர் அவ்வரங்கள் தந்தோம் என்று அருள்செய்து லோபாமுத்திரை பொருநைமாது முனிவர்கள் முதலியவர்களுக்கு வேண்டும் வரங்களையுந் தந்து மண மறைகள் ஆர்ப்ப பல பூதர்கள் ஆர்ப்ப வானவர் ஆர்ப்பமாதவர் ஆசிகூறத்திருவளர் சிகரக்கோயில் திருமூலத்தானருக்கு அருகு தென்மேற்காய்ச் சிங்காசனத்திடை வீற்றிருந்தருளினர். இவ்வாறு இருந்த கருணை நாயகனையும் இமவானுதவும் உமையையும் வலம்புரிந்து வணங்கிக் குறுமுனிவர் கைகூப்பிநின்று உமாதேவியை நோக்கிப் புவனம் ஈரேழும் தரும் தாயே! நீ தான் என்பொருட்டால் தாருவனத்தில் சம்புவோடும் அருள்தாவழுமே! வரப்பெற்றேன், அழியாவரமும் பெற்றேன் எனப் பல புகன்று துதித்தார். சிவபெருமான் முனிவரை நோக்கி ஓ அன்புடைய முனியே! நம் உரைப்படி இங்குவந்து பூமியைச் சமப்படுத்தினை உன்னை ஒப்பார் எவர்? மகிழ்ந்து நம்மைத்தினமும் பூசை புரிவாயாக. நாம் இந்தவரை வனத் தேவடிவாளோடு என்றும் இருப்போம் விரும்பி நம்மை வந்து தரிசிப்போர் அன்னை வயற்றில் வரார். மேதவர்களெல்லாஞ் சிந்தைமகிழ்ந்து இங்கு உறைவர். வேறொரு தலத்தில் அன்போடு நூறுவருடம் புரிதவங்கள் இத்தலத்தில் ஒரு போதியற்றில் பயன் சித்திக்கும். மிககபாதகரும் திருநெல்வேலியில் வந்து எம்முன்புபணியில் அவர்கள் முத்தியைப்பெறுவர். இது சத்தியம் என்றனர். அப்பொழுது அரிபிரமர் அரகராவென்று ஆர்த்து மகிழ்ந்து துன்னி அரனைப்பணிந்தார்கள் உமையாள் பாகன் மணக்கோலம் தன்னைவிரும்புங் குறுமுனிவன்றன்னையே

புகழ்ந்தார். வேணுவனத்தின் பெருமையையும் துதித்தார்கள். மால் இத்தலத்தில் திருமகள் வளர்க என்றார். பிரம்மா இத்தலத்தில் வேதங்களுங் கலைமகளும் வளர்க என்றார். சதமகன் இங்கே மழைவளர்க வேள்விகள் ஓங்குக என்றான். அக்கினி தீயால் யாவருக்கும் வாதையில்லையாகுக என்றான். யமன் என் தூதர்கள் இங்குவாராராக, பிணியும் அவமிருத்துவும் இல்லையாகுக இத்தலத்தில் விரும்பிச்செய்யும் தவம் ஒன்று நூறாகப் பெருகுக என மொழிந்தான். பூதபிசாசம் நிருதர் பயங்கள் இன்றாகுக என நிருதி மொழிந்தான். வருணன் தண்ணீரால் பயமில்லாதாகுக என மொழிந்தான். வாயு சூலை வாதம் குன்மம் முதலிய நோய்களில்லாதாகுக என மொழிந்தான். குபேரன் சிந்தாமணியும் இருநிதியுங் குலவுக என உரைத்தான். பத்திரையால் எல்லாவளமும் பொருந்த என்று சிந்தையுவந்து அங்கு ஈசானதேவன் கூறினன். மற்றுமுள்ள தேவர்களும் முனிவர்களும் முறைமுறையே வரங்களெவையும் புகன்றனர். ஆகையால் இவ்வேணுவனம் எத்தலத்திற்கும் மேலானதாகும். பிறகு சிவபெருமான் மால்பிரம்மா முதலியவர்களை நோக்கி இத்தலத்தின்பெருமை வேதங்களாலும் விளம்புதற்கரிது. இந்நகரமே நாம் பரையோடு விரும்பி நீங்காது மகிழ்ந்து இருக்கும் நகரம். மண்ணில்நம்மைத்தரிசிப்போர்மகிழ்ந்து பேரின்பவாழ்வுபெறுவர் என்றும் இத்தலத்தில் குறுமுனி மகிழ மணக்கோலத்தினுடன் உறைவோம் இத்தலத்து நம்மைத்தரிசித்தோர் மிக்ககொடியவராயிருந்தாலும் அவர்முத்தியைப்பெறுவர். புகழும் அடியார்கள் எமதுருவம் பெற்று இனிதுவாழ்வர். என்று கூறியருளிக்குறுமுனிவனை நோக்கி நீயும் இத்தலத்தில் என்றும் இருந்து நம்மைப் பூசைசெய்வாயாக. இத்தலத்தில் நம்பதிகளெல்லாம் வந்து சூழ்ந்திருக்கும். இத்தலத்தின் பெயர் களனைத்தும் செல்லுகின்றேன் கேள் பிரமவுருத்திரபுரம், திருநெல்வேலி, வேணுவனம், தருமசேத்திரம், சர்வதீர்த்தபுரம், தட்சணகயிலை, காமக்கோட்டம், தென்காஞ்சி, தேவதாருவனம், அறங்கள்வளர்த்தபுரம், அனவரததானபுரம், மெய்ச்சத்திதலம், உகாந்தப்பிரளைய உற்பத்திச்சேத்திரம், பரப்பிரம்மசபை

தாருகாவனம், என்ற இவைகள் இத்தலத்தின் பெயராகும். இப்பெயர்களில் ஒருபேரை உலகிலுள்ளோர் ஒருதரம் நினைந்திடினும் மன்னும்பிறவிக்கடலினின்றும் நீங்கிமெய்ஞ்ஞான நிலையுணர்ந்து தன்னையறிந்தோர் பெறும்படியான முத்தியைப்பெறுவர். இது முக்காலுஞ் சத்தியம். இதுவேமேலானதலம், இதிலிருப்போர் இருந்தோர்வேண்டும் வரங்கொடுப்பதே நமக்குவேலை என்று அமலன் கூறியருளிக்குறுமுனிவர் என்றும்மகிழ்ந்துதொழுமணக்கோலம் புதிதாய்விளங்க நெல்வேலிப்புனிதன் இனிது வீற்றிருந்தான். ஆகையால் நாம் வேணுவனத்து அடைந்து கதியைப்பெறலன்றோ ஓதுகடனும் என்று சூதர் உரைத்துப் பின்னுஞ் சொல்லுகின்றார், இந்தப்பிரமவிருத்தபுரத்து இயல்பும் கதைகள் அநேகமுண்டு அவைகளையும்நீர் அன்பாய்க்கேட்கின்உரைசெய்கின்றோம் என நைமிசாரணியவாசிகளும் சூதமுனிவரைப்புகழ்ந்து பரனடியைத்தொழுது சொல்லுகின்றார். சைவநெறிகளைச்சொல்லும் கருணைத்தூயோனே ஆதிஉமாதேவி கயிலையிலிருந்து அறஞ்செய்ய வேணுவனத்திலிருந்து நாதன்சரணை நினைத்துக் கம்பாநதியில் இருந்து தவம்புரிந்த கதையினைப்புகலவேண்டுமெனக்காதலாதரம் பெருக்கக்கூறுகின்றார்.

---

## ருகவது, கயிலாசவிலாசச் சருக்கம்.

---

நண்பொடு மிறைவர் கண்ணை நற்கரங் கொண்டு பொத்தும்
எண்ணரு மாட்டிலுற்ற வின்பழி துடைக்க வேண்டி
மண்மிசை யுயர்ந்த வேணு வனத்திடை வந்து தேவி
பண்புடன் செய்த பூசை பகர்ந்தவ ளருளைச் சார்வாம்.

ஆதியாய் அநாதியாய் அனைத்தும் ஆகிநின்றருள் அமலன் வாழுந்திருக்கயிலையின் சிறப்பை எவரேமுற்றும் மொழியவல்லவர். இந்தக் கைலையங்கிரியானது விண்ணவர்கள் விரும்பிப் போற்றுங் கற்பகப் பூமாலைகளை மிகுதியாகச்சூழப் பெறுதலால் மேருமலையைவிடச்சிறந்து தோன்றும். தேவர்களும் முனிவர்களும் பொன்மலரிட்டுப் போற்றி நின்று இறைஞ்சிவாழ்வது. புனிமலையின் பாங்குள்ளது. விஞ்சையர்கின்னரர் வீணைஓசை

யும். பஞ்சாட்சரவொலியும் மறைமுழக்கமும் அஞ்சலிசெய்பவர் ஆர்ப்பும் ஆடலும், வஞ்சியர்பாடலும் பக்கங்களிலெல்லாம் பொருந்தியிருக்கும். அடைந்தாரைச்சாரூப்பியந்தந்திடுஞ் சிவபெருமான்போல் அடைந்தவற்றையும் அடைந்தவரையும் உள்ளூற வெண்மையாக்குந்தன்மையது. அம்மலையில் தேவேந்திரன் தன் தேவர்களோடு வெள்ளையானையை அவ்விடத்தே மதித்தறியமுடியாமல் தேடுவன், பிரமனும் அங்கு மாதரோடு விளையாடும் தன்கலைமகளைக்கண்டு கொள்ளமுடியாதபடித் தேடுவன் என்றால் அதன்வெள்ளிய சோதிவிளம் பறபாற்றோ? அவ்வரையிடத்தேயுள்ள யானைமுதலிய மிருகங்களெல்லாம் ஒருகாரணமுமின்றி மற்றமிருகங்களின் கன்றைத்தன் கன்றெனவே மடியிலுள்ள பாலையூட்டும். சனகர்முதலிய நால்வருக்குங் கல்லாலின் நிழலிலிருந்துமெய்ஞ்ஞானம் உபதேசித்ததும் இக்கயிலையிலிருந்தல்லவா? வந்தடிபணியும் மால்பிரமர் மகிழநல்லருள் புரியுஞ் சிவபெருமான்வாழுங் கயிலைதிருப்பாற்கடலும் புத்தமுதமும் ஒன்றாய்த்திரண்ட தனையதோற்றத்தது. நந்திநாதன் அனுதினமுங் காக்கும் நலம் பெற்றது.

இந்த விதமாகச் சிறப்போடு விளங்குங் கயிலையின் மத்தியில் மகாமேரு புக்கது போற்கோபுரங்கள் பல கோடி பொலிந்தோங்கும். அதன் பக்கங்களி லெல்லாஞ் சுடர் மணிகள் அழுத்திய பல மண்டபங்களும் நவமணி குயிற்றிய தூபிகளும் ஆயிரங்கோடி சூரியர் உதித்தது போன்ற பசும் பொன்னில் மரகதம் முதலிய மணிகள் பதித்துச் செய்த திருமதில்களோடு விளங்குங் கோயிலுஞ் சிறந்து தோன்றும். அக்கோயிலி னுள்ளே உள்ள நறுங்கனியும் மலருந் தருந்தண்பொழிலுக்குள்ளே வச்சிரத்தூண்நாட்டிமரகதப் பலகை யிட்டு நவமணி பதித்துச் செய்த விளங்கு மண்டபத்தில் சந்திரகாந்தவேதிகையில் அரியணைமேல் இளங்குமரர்களாகிய விநாயகக் கடவுளும் சுப்பிரமணியக் கடவுளும்விளங்கஉமாதேவியாரோடும் நீலகண்டமும் கரத்துமான்மழுவும்முடியில் தூய்யகங்கையும் பிறையும் இடையே புலியதளும் மெய்யில்சர்ப்பாபரணமும்விளங்கஈசர்வீற்றிருப்பர். திருவோலக்கங்காணவருந் தேவர் முனிவர் கந்தருவர் கிம்புருடர் முதலியவர்

கலை நந்திவேத்திரப் படையால் முடியிற்றாக்கிப் பந்தியாக நிறுத்துவர். தும்புரு நாரதர் வீணைவாசிப்பர். பாணுகம்பன் தன் ஆயிரம் வாயாலுஞ் சங்கொலி செய்வன். வாணன் குடவ முழவந் தொனி செய்வன். பூதகணங்கள் பல வாத்தியங்களிசைக்கும். குரும்பை முலைக்கரும்பனைய குதலைத்தீம்மொழி அரம்பையர் நடனஞ் செய்வர். இவ்வாறு வீற்றிருந்து அடியார்களுக்கு அருள் செய்யுஞ் சிவபெருமான் ஓர் நாள் பொழிலில் பூக்கொய்து கொண்டிருந்த உமாதேவியாரின் கண்ணைப் பொத்தி விளையாட்டுச் செய்ய, தேவியும் முதல்வன் என்று உளத்தில் தெளிந்து அறிந்தும் அறியாதவள் போல் ஆதியோ? விசையை தானோ குறுந்தொடித் தோழியார் கொலோ? என, சிவபெருமான் நகை செய்து செங்கரங்களை நீக்கத் தேவியுந் திரும்பிப் பார்த்து நாணித் தலைகவிழ்ந்து மெள்ள நகை செய்து மகிழ்வு கொண்டாள். சிவபெருமான் பொழிலிற் சென்று விளையாடும்போது சமயம் பார்த்து பதுமக்கரத்தால் பொத்தினள். அப்பொழுதே அண்ட கோடி எல்லாம் இருண்டது. அநேக கோடியான பேரூழி சென்றது. இது கண்டு தேவியுந் தக்க தன்றென்று கரங்களை நீக்கி மலர்ப்பதம் பணிந்து நின்றாள். முன்போல் இருள் நீங்கி ஒளி பெற்ற உடன் மால் பிரமன் முதலிய தேவர்களெல்லாம் அஞ்சி வந்து முன்னின்று போற்றித் துதித்து அபயம் வேண்ட அவர்களுக் கெல்லால் அஞ்சல் என்று மலர்க்கரம் பணித்து நீங்களெல்லாந் துன்புற இவ்விதமாகத் தோன்றிய குற்றம் உமை பாலது என்றார். அப்பொழுது பரை அஞ்சி நடுங்கித் தேவே உனதுளம் மகிழச் செய்ய வேண்டி இது செய்தேன், இது குற்ற மாகுமானல் இதைத்தவிர்க்க அடியாள் என்ன செய்ய வேண்டு மென்று வேண்ட, அரனும் பூவுலகிற் சென்று பணிவிடை செய் என்றருளினர். அப்பொழுது கவுரியும் அரனைப்போற்றித் துதித்துத் தூய பணிவிடை எது? பூவுலகில் எத்தலத் திருந்து செய்வது? இதனைக் கருணையோடு அருளிச் செய்ய வேண்டும் எனக் குன்றவில்லியும் எமக்கு எல்லாப் பணியினுஞ் சிறந்ததும் விருப்புடையதும் பூசை யர்ச்சனையே என்று கூறிப் பூசை விதிகளை எல்லாங் கூறி அப்பூசை செய்வ

தற்கு ஏற்றதலம் கூறுகின்றேன் கேள் நாம் பூமில் வாழுந் தலங்கள் கோடிக்கு மேலும் உண்டு, அவற்றுள் ஆதியானதும் நமக்கு அதி அன்புடையதுமாயுள்ள பதிப் பெருமையைக் கூறுகின்றேன் கேள். மால்பிரமரும் அறியாத காலாதி கற்பதமுங் கட்டழிந்த பிரளயத்தும் மேலான புரம். பிரமவிருத்தபுரம். தேவர்கள் முனிவர்கள் பலருந் திருக்கயிலை திருநெல்வேலியைப் பணிவர். மாவிரதம் பூண்டு மலர்மகளுந் திருமாலும் பூவாலருச்சித்துப் பூசை செய்யப் படுவது இப்பதியாகும். தேவர்கள் எல்லாம் என்னை அருச்சிக்கும் இடம். பிரமதேவனுங் கலை மகளும் பொற்றாமரை படிந்து வணங்கியுயர் வரம்பெற்றுயர்ந்த இடம். முன்னம் ஒரு பிரளயத்தில் அண்டகோடிகளும் சராசரங்களும் வகுத்துள்ள மற்றவைகள் எல்லாம் மடிந்தொழிய கன்னுதன் மானே! வடிவுடை நாயகி! நாமிருவோரும் அந்தத்தலத்தி லிருந்து பின்னுமவற்றை முன்போல உண்டாக்கினோம். அதனை நீ அறியாயோ? வேதங்களெல்லாம் மூங்கிலாகவும் அதனுள் நாம் முத்தாகவும் விளங்குவது அப்பதியில்தான். அத்தலம்போல அருச்சிப் போர்க்கு ஆனதலம் வெறொன்றுமில்லை நீ அங்கு சென்று நம்மைப் பூசித்து அர்ச்சிப்பாயாக, என்று அருள் செய்ய உமாதேவி அவ்வேணுவனம் எவ்விடத்திலிருக்கின்றது? அதில் நான் எவ்விடத்திலிருந்து சிவபூசை செய்வது? எப்பொழுது தேவரீர் எனக்குக் குறைவறக் காட்சி கொடுத்தருள்வது? இவற்றை எல்லாம் உரைத்தருள வேண்டுமென்று உலகெலாமீன்ற அன்னை கேட்க, அமலன் அன்பொடு கூறுகின்றான்.

பணிமொழி அமுதே! உன்னைப் பசுமலையிடத்தே வைத்துத் துணையாக இடபதேவனை நிறுத்துவோம், நாம்முன் கங்காளரூபமெடுத்தும் மோகினியாய் மாயன்ரூபமெடுத்தும் தேவதாருவனத்து முனிவர்களையும் அவர்கள் பத்தினியர்களையும் மோகப்படுத்தி மூற்பவங்கள் தீர்த்துத் துன்னுமெய்ப்பூமியுள்ளோருஞ் சூழுந் திருமூலலிங்கந்தன்னையும் அவர்கள் கண்டு தரிசிப்பத் தயவுசெய்து வன்னியினிடத்துவந்து மகிழ்ந்துபதேசஞ் செய்தோம் அந்த நற்றலத்தில் நீ போய் அருச்சிப்பாயாக, உனக்குமுன்பு வந்து நாம்

கருணைசெய்வோம், மகாலிங்கத்தூடு நாளும் நந்தலில்லாது நா மும் ஆகாயரூபமாயிருப்போம்,இந்நூறும் ஒளியதாய்ப்பாதாலத் து நீ யிருப்பாய், எல்லாம் நீதான் அறிந்தும் எம்மைக் கேட்கும் ஓகையும் அறிந்தோம், எம்மை யுள்ளத்து அறியும் மேலோர் சேகுறுமுனிவர் தேவர் யாவருந் திருநெல்வேலியே கயிலாயம் என்று ஏத்த நாம் வாக்காற் சொன்னோம். நமக்குப் பூமியில் பல தலங்களுண்டேனும் ஒரு தலத்திற்கும் இதற்கு ஏற்பட்டுள்ள வளங்களில்லை. கதிபெற யாருந் தன்பால்வரக் கடப்படுமோ வென்று முதியவிக் கயிலைதானே மூலவனமானதாம், ஆகை யால் அங்கே நீ சென்று பக்தசனங்களைக் காக்கவேண்டி உத் தம அறங்கள் செய்வாய், உயிர்க்கெலாம் நீயே தாயாம் வித்த கத்தாதை நாமாம் என்றனன் எவர்க்கும் மேலோன்.

அவ்வாறு நெல்லையின் மேன்மைகூறிய சிவபெருமானின் திருவடிபணிந்து போற்றிக் கௌரி முகமலர்ந்தினிது சொல்கின் றாள். "திருந்து மெய்ச் சிவமாம் உன்னைத் தெளிந்து நான்காண உள்ளம் வருந்தினேன், வந்து தோன்றி மணஞ்செய்து மகிழ்ச்சி செய்தாய், பொருந்திய இக்களிப்பு நீங்கி புனித நாயகனே! உன் னைப் பிரிந்து நானிருக்கமாட்டேன். ஆகையால் என்பால் உன் னருள்காட்டி நெல்வேலியில் வந்து என்னை ஆண்டருளவேண் டும்" என்று தேவி வேண்டினள். இறைவனும் உனக்கு வேண் டும் வரங்களைக்கேள் தருகின்றேன் என்றருளிச் செய்தனர். கணவனுக்கு எவ்வண்ணம் பணிவிடை செய்யவேண்டுமோ அப்படி அடியேன் உன்னை அருச்சிக்குமிடத்து எய்தி மெய்வண் ணங்காட்ட வேண்டும், முன் மீனமாதம் முடித்த கல்யாணம் போல துலாமாதத்தில் விடைமேல் வந்து நெல்வெலியில் வது வைசெய்திடவேண்டும். மீனமாதம் உத்திரத்தில் மௌலிசூடிச் செங்கோலேந்தி சிங்காசனத்திருந்து தருமனவரததானராய்த் தலம்புரக்கவேண்டும். இக்கயிலையில் இலகும் சபையும், புட்கர ணியும், கங்கையும், வாவியும், நதியும், முக்கடலும், சராசரங் களும் சகல நல்வளங்களெல்லாமும் முக்கண் நாயகனே! கூட வரவும் நீ மொழிவாய் என்றாள். அவ்வண்ணமே சிவபிரான் நந்திநாயகனை நோக்கிக் கூட அனுப்பென மொழிய நந்தியும்

அவற்றை அழைத்து அன்பால் அன்னைபால் ஆக்க, என்தாயும் சுந்தரக்கயிலைவாசன் துணையடி வணங்கி நின்றாள். சிவபெருமான் அம்பிகை வதனம் நோக்கி இங்கு கயிலையில் இருந்த நன்னதிகள்தன்னில் தாம்பிரபன்னியை முன் அகத்தியரோடு அனுப்புவித்திருக்கிறோம், இன்னுங் காஞ்சி நன்னகரில் கலந்துறுவளங்கள் சூழ்வதாஞ் சிவகணங்கள் யோகர் அருள்பெறு தேவர் முனிவர் எல்லோரும் அந்தவேணுவனத்தில் உறக்கடவதென்று சொல்லிப் பெருமான் சொல்லுகின்றார்.

"ஞானமாதி எல்லாம் நற்குணங்களெல்லாம் இருவர்க்கும் மதிக்கில் ஒன்றாம். இவ்வுலகமெல்லாம் துணைவி! நீ பயந்ததாகும். ஒருவரும் அறியா நம்மை உலகெல்லாம் அறியவைத்தாய். இருவரும் பேதமில்லை. எமது கண்மறைக்கு மிந்தப் பருவரலுனக்கேது இல்லை. பாரெலாம் உய்யவேண்டித் திருவளர் திருநெல்வேலி சிறந்திட அறஞ்செய்" என்றான். இவ்வாறு இறைவன் கூற, இருகரங் குவித்துப் போற்றி முறைமுறை பணிந்து வாழ்த்தித் தேவனை விடைகொண்டேகி விம்மலும் விருப்புந் தோன்ற விளங்குநல் விடைமீதேறி அம்மலை மடவார்சூழ அமைவனம் நோக்கினின்றாள். நந்திமுன் அனுப்பிய கணங்களுந் தேவர்களும் தேவமாதர்களுஞ் சூழ ஆதபர்கள் கோடிசூழப் பன்மலர் மாலைகள் சூழப் பல்வகைச் சின்னங்கள் சூழ நாதாந்தத்தின் மேல் விளங்கும் ஏழு திவ்விய விமானத்தின்மீது யேறியருளும்படி நந்திவேண்டக் கருணை கூர்ந்து மனோவேகமுடைய அவ்விமான மீது ஏறி வீற்றிருந்தருளினாள்.

ஆயிரஞ் சந்திரர் கூடிப் பிரகாசித்தது போல விமானத்தில் விளங்குந் தேவியைத் தேவர்கள் முதலியோர் போற்றி வாழ்த்தி வணங்கினர். அரம்பை மாதர் ஆடிப்பாடி உடன்வரத் தோழியர் பலருஞ் சூழ்ந்து தூயநல்வரிசைசெய்ய மங்கலை சுமங்கலை என்னும் இரண்டு மாதருஞ் சாமரை வீச சுமாலி மாலினி என்னும் இருமாதர்களும் முத்துக்குடைதாங்க, சிரேட்டை அங்கிசை என்னும் இருவரும் ஆலவட்டமேந்தக் குசையும் அபிராமியும் வட்ட விசிறிகள் வீச, அணிந்திதை சசிலை மணமலர் தூற்றிப்போத, சுகேசி பொற்பாதுகையிருகையிற்

ளுங்க, காளியே முதலாயுள்ளோர் கத்தூரி மஞ்சள் வாசப்பொளி தங்கள், களபம் பச்சைப்பரிமளங்கொண்டு கூடவர, மன்மத னின் மகுடம்போன்ற காளாஞ்சி சுனவளை சுமந்துவர, பத்திர தீபதூபம் பத்திரகாளி ஏந்த, யோகர்கள் பந்தங்கள்பிடிக்க, உருத் திரகணிகையர் கவிகைதாங்க தேவமாதர் கோடிகொடியாடை யெடுத்துக் கூடவர, முகில்களெல்லாம் வேணுவனம்வரை பந்த ராகவர, அன்னங்கள் கிளிகளை அரம்பையர் ஏந்திவர, நிலைக் கண்ணாடியைச் சிலர் ஏந்திவர, தேவகன்னியர்கள் பஞ்சவன் னப்பாவாடை போட, சிறப்புற வேணுவனம் நோக்கி என் அம்மை வருகின்றாள். அம்மை செல்லும்போது உலகெல்லாம் ஆடிப்பாடி ஆர்க்கும் ஒலி கடல்போலப் பெருகிக்கைலையைக்கிட் டிற்று. தென்றிசைநோக்கி அம்மை சென்றனள் ஆகையாற் கைலையுஞ் சென்றது என்று சிவபெருமான் கூறி அம்மை பிரிவிற்கு மிகத்துயருற்றுச் சபைக்குச் செல்வர், பின் வெளியே வந்து அம்மை சென்ற திசையை நோக்குவர், இவ்விதம் பல தரம் புரிவர், சிவபெருமான் செயலிது. மூவராலும் இருந்து முடியுமோ? நிலை நித்தாகும் இவரேயலால் சத்திநீங்கித் தரிப் பவர் இல்லை.

அன்னைபிரிந்து செல்லவும் அமலன் நந்தியை நோக்கி எண் ணில் கோடிபுவனங்களுக்குந் தந்தைநாமாகும்! தாய் அவள் ஆகும். இதனைச் சிந்தையால் தெளிபவர் எவரே! சித்திரவாள் விழிச்சோதி வாண்முகச்சோலையும் காதல்கூருங் கருத்தையும் கொண்டொரு பேதைபோகும் பெருமையைப் பாரென்பர். வாணியும் எந்தலோகமும் புகழும் உமையவள் சுத்தப்பரை தீர்க்க சுமங்கிலியாகும். இன்பமாக நம் இணையடி ஏத்தி அன் பின் நல்லறஞ்செய்ய அங்கு ஏகினள், ஆகையால் தென்புலத் தில் தலங்களும் மனிதர்களும் சராசரங்களும் சிறந்தன. புவ னையை விண்ணவர்க்குந் தெரியாவிமலையை மண்ணிடத்தில் மகிழ் வினில் காணும் எவரும் கயிலையையும் காண்பர்.

பொன்னிமிசைப் பூங்கொடியேபோய் இருந்து அன்னதானம் முதலிய அறங்களின் மன்னவே செய்யும் வேணுவனப்பதி முன் னம் எத்தவத்தை முயன்று செய்ததோ? தேவர்களும் முனி

வர்களும் நம் தோகையைத் துதித்து ஏகவும் அவர் எண்ணிய வரங்களை எய்தவும் ஆகும். வேணுவனமே மிகச்சிறப்புடையது அப்பதியிற் புண்ணியம் ஏதுவும் நீங்காது அந்தணர்கள் முனிவர்கள் எம்மைத் துதித்திடுவர். நந்தவனங்களாலுந் திவ்விய மலர்கள் நறுஞ்சோலைகள் தாமரைவாவிகள் தடாகங்கள் கந்த நிறைந்த கற்பகவனங்கள் கலந்தோங்கும். அந்த நகரில் தான் தாம்பிரபன்னி அழகுசெய்யும். இத்தலத்தில் எவருந்தாஞ் செய்யுஞ் செபதபங்களுக்கும் புண்ணியங்களுக்கும் ஒன்றுக்குப் பலகோடியாகப் பயன்பெற்று உய்குவர் என்று கூறி நந்தியோடும் சபையை நீங்கி அந்தப்புரமுற்றார். அன்னை, செல்லும் வழியிலுள்ள சிவதலங்களை எல்லாம் மனதால் தரிசித்துமானத பூசை செய்துகொண்டே சென்றாள். இமையவேந்தன் நாரதரால் கேள்விப்பட்டுத் தன் கூட்டத்தோடு கூடித் தென்மலை நோக்கிச் செல்லும் விமலைமுன்வந்து கண்டான், மகிழ்கொண்டு பூசித்து அநேக தோத்திரங்கள் செய்து இன்று ஒரு தினத்து எங்குடினுக்கெழுந்தருளி எம்மை எல்லாம் உய்வித்துச் செல்லவேண்டுமென்று வேண்ட, அதற்கிணங்கி என்னையாளுடைய தாயும் பரனை நினைந்து போற்றி இமையமுற்றாள். வந்து முன் தவங்கள் செய்த கன்னிகாமாடம் முதலியவற்றைக்கண்டு அந்தமலையிலுள்ள ஆலயமனைத்தும் பார்த்தாள், முன்மணஞ் செய் கோலமண்டபம் முழுதும் பார்த்தாள். சிந்தையுட்களித்து, இன்னும் ஆம் ஒரு மணமென்று மனத்துள் நினைந்து களித்தாள்.

மேனைமுதலிய ரின்பூசையையும் இனிது கொண்டு நல்விடைபெற்று அழகிய விமானமீதேறி வழியிலுள்ள தலங்களை எல்லாந் தரிசித்துக்கொண்டே மனத்தாற்பூசை செய்து தென்றிசை நோக்கிவரும் வழியில் முன்னோர் பிரளயத்தில் பூசித்து முலைத்தழும்பும் வளைத் தழும்புங்கொண்ட கத்தனிருந்து வாழுங் காஞ்சிமாநகரைக்கண்டாள். விமானம் விட்டிறங்கியேகி ஏகாம்பரநாதர் சரணம்போற்றிப்பொன்மலர் கொண்டு அருச்சனைபுரிந்தாள். அப்பொழுது அமலன் இலிங்கத்தூடு தோன்றினார். அகிலநாயகிகண்டு மெய்ப்புளகங்கொண்டு காதலும் அன்புங்

தோன்ற ஆனந்தக்கண்ணீர்பெருக துண்டவெண்பிறையினனைத் தொழுது தோத்திரங்கள் சொல்லினள். போற்றித்துதித்து மன்றினிலாடுவோய் என்மனோரதநிறைவேற்றென்ன, சிவபெருமான் நின்துதிக்குமகிழ்ந்தோம் வேண்டும்வரங்கள் கேளென்ன, அண்டமெலாங்கருவுயிர்த்து ஈன்றஅன்னை "இக்காஞ்சிபுரத்து மேவும்லிங்கமும் தீர்த்தங்கள்யாவும் மால்முனிவர் தேவர் சைவநன்னெறியோர் யோகர் கம்பையாறு பம்பையாறு மிக்கபன்னியர் உருத்ரகன்னியர் விரும்பும் மேலோர் காஞ்சிவனம்கா முதலியவுந் திருக்கள்யாவுங் காஞ்சிமருங்குளானும் விருப்புடன்வரவும்வேண்டும், காஞ்சிபோல் விளங்கும் நெல்வேலிதன்னை தென்காஞ்சியென்று செப்பும் வரமும் வேண்டும், உத்தரகயிலைபோல உகந்து நீ கற்பந்தோறும் சித்திமுத்திகளைநல்கித் தெக்கணகயிலாயத்துநித்தமும் இருக்கவேண்டும். நிறைந்த இவ்வளங்களெல்லாம் அத்தலத்து அடையவேண்டும், அமலனே! அருள்வாய்," என்றாள். அவ்வண்ணமே அருளுடன்வேண்டியவரங்களை யெல்லாம் நல்கி இலிங்கத்தூடு மறைந்தருளினர். அன்னையும் விடைபெற்று விடையில் ஏறிச்சென்றுவிமானத்தில் ஏறித் தேவர்கள் இந்திரன் பிரமன் மால் முதலாயதேவர்கள் போற்றத்திருநெல்வேலியை நோக்கிவந்தாள். வரும்வழியிலெல்லாம் உள்ள சிவதலங்களை எல்லாந் தரிசித்துப்பூசித்துக்கொண்டு திருநெல்வேலிவந்துசிந்துபூந்துறையில் வந்து சேர்ந்தாள்.

பலவாத்தியங்கள் வொலிக்கமாதவர் முனிவர் அந்தணர் சூழ்ந்துபோற்றினர். அன்னையடைந்தது மல்லாமல் வடகயிலைவாழும் மானபலவளங்கள், வடகாஞ்சிதன்னில் மிடைதருநல்வளங்கள் பம்பைகம்பையாறு மேவும்நல்வளங்களெல்லாம் பொருந்தும்,யாருங்கடவுண்முனிவரர் பலரும் இன்பம் எய்திக்காதலுறுநல்நிமித்தங்கண்டவாற்றைக் குறுமுனிவர் கேட்டு ஞானவிழிகொண்டு பார்த்தார். ஆதிபராசத்தி சிவனருளால் எய்தி அந்த வடகயிலையினின்றும் அமரர் சூழ வேதநெறிமுறை சிவார்ச்சனைகள்செய்ய வேணுவனத்தில் வருமேன்மையாலே போதமுறு மெய்ஞ்ஞானம் பெறலாம். இந்தப்புண்ணியதலத்து இருந்தவர் மெய்ப்பொருளைக்காண்பர். சீதநிறைபூரணகும்பங்கள் ஏந்தித்

திரிபுரை முக்கண்ணிமுனஞ் செல்வோமென்றே ரோமேசர் வசிட்டர், பராசர், விசுவாமித்திரர், கற்கர், மாத்திரியர் முதலிய முனிவர்கள் சூழ உமாதேவியின் முன் வந்தான். ஆடுவர், பாடுவர், போற்றுவர், துதிப்பர், கரங்கூப்புவர், ஆனந்தக்கண்ணீர் சோரநிற்பர். அங்குளோர் கொண்ட ஆநந்தக்கூத்தினையாரே கூறவல்லார். முனிவர்கள் மறைமுறை பூசித்துப் போற்றிசெய்து அருச்சித்தனர் தொழுதனரதுகண்டே அவரவர் வேண்டும் வரங்களை யீந்து, தன்னைத்தொழுது பூசிக்குங் கும்பமுனிக்கும் வேண்டும் வரங்கள்கேளென மொழிந்தாள். அவ்வாறு அமலநாயகி கூற மனமகிழ்ந்து குறுமுனி வேணுவனத்தே தைப்பூசத்தில் வந்து சேர்ந்தமையால் மலமுழுதுங் கழிபெறச் சிவதீர்த்தத்திலே மூழ்கி பணிபததீர்த்தம் பரிவுடன் அருள்க, இச்சிவ தீர்த்தம் ஞானதீர்த்தப் பேயர் பெறவுங், கங்கை முதலிய தீர்த்தங்களில் மேலாய் விளங்கவும், இந்நாளில் எத்தீர்த்தங் களுஞ் சலங் குலவிப்பொருந்திடவும், தழைத்திடவும், இந்தத் தீர்த்தத்தில் மூழ்கி யுன்னைவந்து தரிசிப்போர் எவர்களானு லும் ஆனந்த முத்தியை நீ அருளவும் வரந்தரவேண்டும் என்று வேண்டினர். அம்பிகையும் அகமகிழ்ந்து அவ்வரங்கள் கொடுத்தாள். சிவபெருமானை மனத்துள் எண்ணிச் சிவ தீர்த்தத்திற் பிராட்டி தீர்த்த மாடித்தீர்த்தங் கொடுக்கும் அப்பொழுது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். அகத்திய முனிவர் முதலியோர்கள் அத்தீர்த்தத்தில் மூழ்கிநிலைபெறு ஞானம் பெற்றனர்.

அந்த மெய்த் தீர்த்தச் சிந்து பூந்துறைப் புனலினூடு கம்பையாறு சென்று கூடிடத்து நின்று கவுரியாடப் பாதத் தீர்த்தப் பேராகி உலகத்துள்ள தீர்த்தங்களிலெல்லாம் மேன்மை உள்ளதாகும்.

சிவ தீர்த்தம், ஞானதீர்த்தம், பாததீர்த்தம், சிந்து பூந்துறை என்னும் நாமங்க ளோடும் விளங்கும். இத்தலத்தின் பெருமை சிவபெருமானும் பார்வதி தேவியுங் குமாரர்கள் நால்வரும் அறிவரே யல்லாமல் வேறுயாவரே யறியவல்லார். தேவி சிந்து பூந்துறைபாடி அமர்ந்திருந்த பொழுது உலோபா முத்தி

ரையும் அன்பாய் முனிமாதர் சூழ வந்து கண்டு அடிமலர் பணிந்து அன்பாய்ப்பூசைசெய்து நின்று, அம்மையருளிய வண்ணம் தாயே! காமதேனு தந்த நால்வகை அன்னம் நின்பரிசனங்களுக்கான, தேவி! நீ அருந்துமாறு தத்தியோதனங் கொணர்ந்தேன் ஏற்றருளவேண்டுமென்று வரங்கேட்க, தேவி லோபாமுத்திரையின் முகநோக்கி இதுமுதல்வர்கு ஆகும் எனக்குசித்தம் அருந்தும் பசியுமில்லை இதனுலும் உங்கள் இதையத்திலிருப்பதாலும் பத்தர்கள் புசித்தாலெங்கள் பசிதீரும் ஆகையாலுர் முனிவர்கள் முதலோர் அருந்தில் நாங்கள் புசித்ததேபோலாம். சிறந்த தைப்பூசந்தன்னில் சிந்துபூந்துறையில் நீராடி இடபலக்கினத்தில் நல்ல அறங்கள் செய்ய நல்தவவிரதம் பூண்டேன் என்று கூறிப் பின்னுஞ் சொல்லுகின்ருள். தைப்பூசத்தில் சிந்துபூந்துறை நீராடி அன்னம் வழங்குவோர்க்கு அதிலோர் அன்னந் தந்திடுபலனே மற்றைத் தலத்தில் ஈரைந்துகோடி அந்தணர் அருந்த அன்னமளித்திடு பலனுகும். இத்தலத்து மகிமை சொன்னேம், இனிய வுன்பால் அன்னபூரணியைக் காமதேனுவை அனுப்புவித்தோம் மின்னியல் மருங்குற்பொன்னே! நீகேட்கும் இந்தத் துன்னுநல் விருந்து யார்க்குங் கொடுபோவென்று கூறியருளினுள். லோபாமுத்திரையும் மகிழ்ந்து விடைபெற்று பரிசனம் வானேர் முனிவர் சூழ்ந்த பன்னியர்களுக்கு நாகர் சித்தா சுற்றுநற் றேழிமார்கள் சூழ்ந்திடு கணங்கள் மற்று முற்றவர்க்கும் அன்னம் உதவியே மகிழ்ச்சி கூர்ந்தாள்.

லோபாமுத்திரை நல்ல பொற்பணிகள் ஆடை நறுமலர் சாந்தம் சாத்தி காமதேனு பல்வளமுதல் அன்னபூரணி பணிகள் கேட்ப விரைவில் விருந்தீந்து உவப்பொடும் இருந்த பொழுது, ஒப்புயர்வற்ற அழகினைப்பொருந்திய வடிவாள் திருமகள் வாணி தன்னுல் அணிசில திருத்திக்கொண்டு தோழியர் பலருஞ் சூழ வரைவனத்திடை வந்து சேர்ந்தாள். முனிவரர் ஆசிகூற முறைமுறை தோழிமார்கள் மிகு வரிசைசெய்ய நற்கணம் இயங்களார்ப்ப தனிமுதல் விரும்பிச் சென்ன தமிழ் வேணுவனத்தில் வந்து கோயிலுக்குள் வந்தாள். கைலைமீது சிறந்துள்ள வளங்களுந் தீர்த்தங்களுஞ் சோலைகளும் வாவிகளும் வடகாஞ்சியி

னுள்ள வளங்களுந் தீர்த்தங்களுஞ் எய்தி வந்திருப்ப விண்ணோர் முனிவரர் இவர்களெல்லாம் மெய்மைசேர் திருநெல்வேலி மேவி யிற்றிருந்தாள், என்று கூறிப்பின்னும் முனிவர்களை நோக்கி ஓ முனிவர்களே! கேளுங்கள் அன்னை அறம்வளர்த்தமை கூறுகின் றேனென்று கூறுவாராயினர்.

---

## ௫௨-வது, அறம்வளர்த்தசருக்கம்.

நாயகன் வாழுங் கைலை நற்பொரு ளுடனே வந்து
தூயநெல் வேலி தங்கித் தோற்றருங் குகையுட் புக்கு
மேயநல் யோகு செய்து விண்ணவர் வேண்ட மேதி
ஆயநன் முகனைக் கொன்றே யருளுமென் தாய்தாள் போற்றி.

ஆதிபராபரை அமைவனத்தில் எழுந்தருளி மூலத்தானரை யுஞ் சோதிவரைமுத்தரையுந் தொழுது மலரடி வணங்கி வலம் புரிந்து வந்து தனது ஆலயத்தில் வளங்கள் மிகப்பார்த்து தோழியர்கள் சூழ நிறை ஆசிகள் பலபல கூறிச் சிந்தை மகிழ்ந்து சிறந்த அரியாசனத்து இருந்தாள். விரிந்த புவனகோடி யெல் லாந்தருந்தாயும் விசுவகன்மாவை நினைக்க அவனும் வந்து சரண மென அடியின்மிசை தாழ்ந்திறைஞ்சிப் பணிகேட்ப அரியதிந் தத்தல மிதனை அலங்கரிப்பாயாக என உரைத்தாள். உரைத்த திருவாய்மொழி கேட்டு உய்ந்தனன் நான்! என உவந்து சிரத் தின்மிசை கரங்கூப்பிச் செய்ய விடைகொண்டேகி கருத்துட னே ஆலயங்களும் மாடங்களும் நிருமித்தான், ஆதிலிங்கம், மூல லிங்கம்,நடராஜர்,திருக்கங்காளர்,சந்தரசேகரர்,அனவரததான நாயகர் ஆகிய இவர்களுக்கெல்லாம் நவமணி அழுத்திய கோ யில்களும் விமானங்களும் புதுக்கிக் கட்டினன்.

அடியார்க்கு அருள் செய்யும் அனவரததானநாயகர்கோயி லும் நிறைதரு சந்திரசேகரர் திருக்கோயிலும் நிரைமணிமண் டபமும் நிரைந்த மணித்திருமதிலுங் கோபுரங்களுந் தூபிகளுந் துலக்கினன் வாயில்களி லெல்லாம் துவாரபாலர் கோயில், நந்தி பலிபீடம் பொற்கொடிமரமும் மந்திரஞ் சூழ்திருமதிலும் வாய்த் தமணிக்கோபுரமும் மணிவாயில்களும் மணிமண்டபங்களுந் தூ

மிகளும் பொற்புறவே புதுக்கினன். விநாயகர், குமரக்கடவுள், தட்சணாமூர்த்தி, அர்த்தநாரீசுரர், இலங்கு பிச்சாடனமூர்த்தி, சலந்தரதகனர், நீலகண்டர், அரிபாகர், புலர், சரபர், இடபாரூடர், ஏகபாதர், ஆகிய இம்மூர்த்திகள் மருவு கோயில்களும் மணித்தூவிகளும் மிகப்புதுக்கித்தண்டீசுரர், காளி, துர்க்கை, வயிரவர், மெய்யன்பர் அறுபத்து மூவர் சத்தமாதர், சந்திர சூரியர்கள், மிக்க நவக்கிரகங்கள் தேவர்கள் இந்திரன் அட்டபாலர்கள் முதலிய தேவர்களுக்கும் வகைவகையாய் மந்தரங்கள் புதுக்கிமணிமண்டபங்கள் அலங்கரித்தான்.

இத்தேவர்களின் வாகனசாலைகள், கோயிலின் மதில் கூடிய ஏழு பிரகாரங்கள், அம்பலங்கள், திருவீதிகள், மேடைகள், மணிமாளிகைகள், தூவிகள், தோரணங்கள், பளிங்குநிறை மணி மண்டபங்கள், பண்ணவர்சாலைகள், குளங்கள், மலர்வாவிகள், கூபங்கள், தடாகங்கள், சத்திரங்கள், அறச்சாலைகள் சதுர் மறை அந்தணர் சாலை, முடியரசரின் பண்டக சாலைகள், மடங்கள், வணிகர்உறை அணிதிருமாளிகைகள், சாலைகள், சூத்திரர் சித்த மகிழ்ந் திருக்குஞ் சித்திரச்சாலைகள், சோலைகள், நந்தவனங்கள், வாழும் மனைக்கு உபகரணங்கள் வாசநீர் மணிக்குடங்கள், மலைவனங்கள், முதலியன வெல்லாம் அழகுபெற அமைத்துப் பொன்னகரினும் விளங்கச் செய்து கவுரிபாதத்தில் வந்து வீழ்ந்து வணங்கி நகர் அலங்கரித்து விட்டேன் வந்து கண்டருள வேண்டு மென்று வேண்டினன். அம்மையும் வந்து களித்துக் கயிலையே எனக் களிகொண்டனள்.

தேவதச்சனை நோக்கி உன்வேலைக்கு அதிமகிழ் கொண்டோம், வேண்டும் வரங்கள் கேளென மயனும் அம்பிகையைத் துதித்து வணங்கிக் காரணியே! பூரணியே! கயிலையில் வாழ்வோர் அடையும் நற்கதியை இந்த வரைவனத்தில் வாழ் எவ்வுயிரும் பெற வேண்டும். அந்தியத்தில் எவ்வுயிர்க்குந் தாரகப் பிரமத்தைச் சிந்தை மகிழ்ந்து உபதேசஞ்செய்ய வேண்டும். நீ தவம் புரியும் இந்தத் தவ வனத்தில் சிவதவங்கள் புரிவோரும் அதிசயப்பேறு நித்தியமும் மகிழ்ந்து பெற வேண்டும்.

இத்திருநெல்வேலி சிறந்த சித்திதல மென்று பேர்பெற வேண்டும். இந்தப் பெருவரங்களெல்லாம் அன்புடனே தாயே நீயருள வேண்டு மென்று கேட்க அன்னையும் அவ்வண்ணமே ஈந்தோ மெனத் திருவாய் மலர்ந்தருளினள்.

இத்தகைய வரங்கள் பெற்றுக் கம்பியனும் விடைபெற்றே கினன். தேவியும் அம்மனுக்குப் பூசை செய்ய நினைத்து மாதவர்களும் பாங்கிகளும் புடை சூழ விண்வர் பூமழை பொழிய காதலோடும் கோயிலை விட்டு வெளியேவந்து காஞ்சி நிழலில் அமர்ந்துறையுந் திருமூல லிங்கரை வலம் வந்து அடிக் கமலமிசைப் பணிந்து கண்குளிரக்கண்டு பூசை செயத் தொடங் கினள்.

மஞ்சன முதலிய ஆட்டி சந்தனம் முதலிய கந்தங்கள் கூட்டி மலர் மாலைகளும் பொற் பணிகளும் பூட்டித்தூபதீபங்கள் காட்டி நைவேதனஞ் செய்து ஆகமவிதி முறை பூசைகளனைத்தும் புரிந்து போற்றிக் கயிலையில் மொழிந்த வண்ணம் எண்ணான் கறமுஞ்செய்ய வேண்டும். அத்தனே! அதற்கு அருள் புரிக என வேண்டினள். இத்தரையி னுள்ள உயிர் களெல்லாம் உய்ந் திட முத்திபெறும் பேறுதவும் முப்பத்திரண்டு அறங்களுஞ் செய்ய நித்தன் உவந்து இருநாழி நெல்லருளால் அளித்தருள அதனைப் பெற்று வடிவுடைய நாயகி நெல்வேலிக் காமகோட் டத்திருந்து திடனுற வெண்ணான் கறமுஞ் செய்தருளுந் திற முற்றாள். ஆதுலர்கள் உறைசாலை, அறத்திற்குச் சோறிடுஞ் சாலை, பிணிக்கு மருந்து தருஞ்சாலைகள், காதல் பெறுவிக்குஞ் சாலை, முதலியவற்றை இயற்றவேண்டும் உதவிகளெல்லாஞ் செய் தல், மருந்து கண்ணுடி அளித்தல் ஓதுவோர்களுக்கு உணவளித் தல், பிள்ளைகளை வளர்த்தல், பாதை செய்தல், மடங்கட்டல், தண் ணீர்ப்பந்தல்வைத்தும், பிள்ளைகளுக்குப் பால் கொடுத்தல், அறச மயிகளுக்கு உணவளித்தல், ஆவுறிஞ் சுதரியமைத்தல், அட்டிமண் பார்களின் இம்க்கண் நீக்கல், அறப்பிணஞ்சுடுதல், பிச்சையிடல், சிறைப்பட்டோர்க்கு உணவளித்தல், திருக்குளங்கள் வெட்டல், மலர்ச்சோலைகள் வைத்தல், காமச்சத்திரங்கட்டல், மகளிர்க்குக் காதோலை முதலியன அளித்தல் விலைகொடுத்துக் கொலை விடுத்

தல், தலைக்கு எண்ணெய் தருதல் ஏறு விடுத்திடல், பசுவுக்கு உணவளித்தல், சிறுவர்களுக்கும் விருத்தர்களுக்கும் தின்பண்டந் தருதல் பிறர் அறங்காத்திடுதல் நாவிதர்களை வண்ணார்களை ஏற்படுத்துதல், விலங்கு முதலியவைகளுக்கு உணவளித்தல். வயித்தியர்களை ஏற்படுத்துதல் முதலிய இந்த அறங்களும் இதுபோன்ற அறங்களும் மற்றுமுள்ள புண்ணியங்களுங் காந்திமதித் தாயார் சந்திவனச் சேத்திரத்திலிருந்து வளர்த்தாள். கவுதமர் முதலிய முனிவர்களெல்லாங் கண்டு துதித்தனர். முனிவர்கள் அம்மையை நோக்கித் தேவியே! தேவரீர் செய்யுந் தவத்தைக்கண்டு அவத்தைகள் நீங்கிச் சிவஞானம் பெற்றோம். சோதித்திருமூலலிங்கப்பெருமையை நீ சொல்லவேண்டுமென்று வேண்ட என தன்னைகூறுகின்றாள். இச்சிவலிங்கம் அன்றுமுதல் பேரூழிக்காலத்துந் துன்றி நிறைசோதியாய் என்றும் இருப்பது. நமது ஆலயத்தில் வளர் மூலவிக்கிரகம் தருமதேவதை மிகுந்த தவம்புரியக் கண்டே நான் உருவமது காண்பித்த உருவம் இதுவேயாகும். அக்கால முதற்கொண்டு காந்திமதி எனப்பெயராம். ஆதிக்காலந்தொட்டு என்றும் நித்தியமாய்ச் சோதிவடிவாய் இருக்குந் தூயதிருமூலலிங்கத்தையும் எமதுருவாகிய காந்திமதியையுங் கண்டோர் எமமை எதிரேதரிசித்த பலன் அடைவர் இந்தவகையான இரண்டு தானத்தையுந் தரிசிப்போர் பவ்வவினைக்கடல் கடந்து பரகதியைச் சேர்வார்கள். ஓ முனிவர்களே! நீங்களும் இத்திவ்விய தலத்திலிருந்து பூசைசெய்து என்றுஞ் சேவைசெய்திருங்கள் என்று கூறியருளி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் திருமூலக்குழகர்க்கு அடுத்த தென்மேல் பால் பாடலங் கம்பைநதியின் சார்பில் சிறந்ததிருக்குகையில் சென்று பொருந்தி யோகநிலை செய்ய மனத்திற சிந்தித்து முனிவர்கள் வாழ்த்தத் தோழியர் சூழ விடைமீதேறி கம்பை நதிக்கரைக்கு வந்து ரிஷபத்தை விட்டிறங்கிச் சிம்மாசனத்திருந்து தேவர்களையும் முனிவர்களையும் தவப்புரிய விடைகொடுத்தனுப்பிவிட்டு குகைவாயிலில் காளி, கணங்கள், காரி இவர்கள் முறையே காக்க அருள்புரிந்துகம்பைநதியில் நீராடிச் சிவபெருமானைச் சிந்தித்துத்

திருநீறணிந்து பஞ்சாக்கரத்தை நெஞ்சிற் பதித்து குகைக்குட் சென்று ஒருவரும் அறியாத அரிய யோகநிலையிலிருந்தாள். அன்றுமுதல் விரகு அறியாஆண்டு ஒன்றுடைய சிவமறையோன் சிறுமதலை பூசைபுரிய பூசைகொண்டருளித் தூய நிலைமையில் இருதிங்கள் ஒன்றிய ஐம்புலனை அடக்கி இருதிங்கள் இனிது வீற்றிருந்தாள், என்று சூதமுனிவர் கூறி ஓ! முனிவர்களே! வடிவாள் மோனநிலைமை கூறினோம் முன் தேவி மகிடாசுரனைக் கொன்ற விதத்தைக்கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

பூர்வத்தில் ஓர் பிரளயகாலம் போனபின் அசுரர்களோடு தேவர்கள் போர்புரிந்து அவர்களைக் குலத்தோடுங் கொன்றனர். இதுகண்ட திதி என்பவள் தன் மகளாகிய தானவீச்சுவரியை நோக்கித் தேவர்களைக் கொல்லுதற்கு நீ குருச்சேத்திரத்திற்சென்று வானவரைவெல்ல ஒப்பற்ற ஒரு பிள்ளையைப்பெறத் தவஞ்செய் எனக்கூற, அவளும் அன்னைசொற்படி சென்றுவேண்டிய உருவெடுத்துத் தவஞ்செய்து கடைசியாக மேதியின் உருவாய்த்தவஞ்செய்யப் பிரமன் மகிழ்வோடும் எதிர்ந்துஎன்ன வரங்கள் வேண்டுமெனக் கேட்க, அவளும் அப்பிரமன் மலரடியில் விழ்ந்து போற்றித்தேவரை எல்லாம் வெல்லக்கூடிய ஒரு மகனைத்தருவாய் என்றாள். அதற்குப் பிரமன் தோகையே! நீ மேதியன்ன ரூபமாய்த்தவஞ்செய்தனை ஆகையால் அம்மேதியின் முகத்தோடு கூடிய மிக்க பலமுள்ள ஒரு தனயனை அருள் செய்தோம் என்று அருளிச்சென்றான். பின் தானவீசுவரி திரும்பிவந்து தாயடிவணங்கி நிகழ்ந்தவைகளை எல்லாம் மொழிந்தாள். பிறகு கருக்கொண்டிருந்து மேதியின் முகத்தோடு கூடிய ஒரு வலிய புத்திரனை ஈன்றாள். அவனுக்கு மகிடாசுரன் என்னும் நாமகரணஞ்சூட்டிப் பலகலைகளையுங் கற்பித்துப்படைப் பயிற்சிகளிலுந் தேற்றுவித்தாள். இவன் வலியறிந்து அஞ்சி ஒளிந்திருந்த அவுணர்களெல்லாம் வந்து அவனைச் சூழ்ந்தனர். மகிடாசுரனும் வந்தடைந்தவர்களோடு கூடித்திக்கு விஜயஞ்செய்து தேவர்கள் ஏவல்செய்ய தேவமாதர்களெல்லாம் பணிசெய்ய அரசு வீற்றிருந்தான். மால்பிரமனும் அஞ்சக்கொடுங்கோன்

மைசெய்த அசுரனின் வலிமையை என்னென்று சொல்லுவது அஞ்சனகிரியை ஒத்தவன் மயனால் இயற்றப்பட்ட மயிடமாபுரத்தில் வாழ்வோன். ஆலகாலவிஷத்தை ஒத்தவன். எமனையும் அக்கினியையுங் கனன்று கோபிக்கும் வல்லவன். சூரியனின் தேரில் பவனிபோவோன். இந்திரன் வெள்ளை யானையின்மீதும் மேகத்தின்மீதும் ஏறிச்செல்லுவோன்.

ஆதிசேடனை வாலுந் தலையும் ஒன்றாகச் சுருட்டிக் கவண்போல் எறிய வல்லவன். அக்கினியின் வாகனத்தை வாங்கித் தன் பிள்ளைகளுக்கு விளையாடக்கொடுப்போன். சந்திரனை விமானத்தோடும் பிடித்துப் அமுதத்தைப் பிழிந்து உண்போன். இவன் மகிடவுருவம் கொண்டமையால் எமனும் தன் எருமை வாகனத்தைவிட்டு ஒழித்தான். இந்திரன் முதலிய தேவர் வாழ்வுகளைவாங்கி அசுரர்க்கு அளித்தான். இவன் ஆக்கினைக்கு அஞ்சி சூரியனும் ஒளி மழுங்கிப் பனிமதிபோல் திரிவன். மாலும் பிரமனுஞ் சமயம் பார்த்து அவன் கடைவாயில் காப்பர், அக்கினி மடைத்தொழில் புரிவன், கூற்றுவன் சுரிகை ஏந்துவன், வருணன்சிவிறிநீர்வீசுவன், வாயு சாந்தாற்றிவீசுவன், சூரியன் நாளிகைசொல்லுவன், குபேரன் திறைக்கனகம் ஈயுவன், சுரபி சிந்தாமணி ஏவல்கேட்கும், மற்றைத் தேவர்கள் மற்றைய ஏவல் கேட்பர். சிவபெருமான்பாற் பெற்றவரத்தால் எவராலும் வெல்லமுடியா வரமுடைமையால் சிங்கம்போல்வோன். வேதியர்கள் புரிவேள்வி விளங்குகலை மெய்ஞ்ஞானம் வேதம் யாவும் நீதிகெட அறம்நீங்க மறந்தலை எடுத்து நிலைபெற்று ஓங்கச் சூது பொய் வஞ்சனை சூழ்ந்து வளர்ந்திட ஏழுலகங்களையுந் தீதுற வெங்கலி களிப்ப அசுரன் அரசுசெய்யும் நாளில் இந்திரன் தேவரோடும் போய் முறையிட அதனை அவன் மாலுக்குரைக்க உடனே மால் சிவபெருமான் வாழுந் திருநெல்வேலிக்குச் சென்றால் இத்துயர் நீங்குமென்று பிரமன் இந்திரன் முதலிய தேவர்களை எல்லாம் அழைத்துக் கொண்டுவந்து குகையிலிருந்து கவுரி தவம் புரிதல்கண்டு அவள் சன்னிதானத்திற் சென்று அடிதொழுது இறைஞ்சி நாங்கள் எல்லோரும் மகிடன் கொடுமைக்கு அஞ்சி இங்கு வந்தோம் காத்தருளவேண்டுமென்று வேண்ட

அன்னையும் அருள் கூர்ந்து அம்மகிடன் உயிரை வாங்கிடுவம் அஞ்சல் என அருளிச்செய்து விடைகொடுத் தனுப்பிவிட்டு கோயிலினுள் சென்று மூலலிங்கத் தடிபணிந்து போற்றித் துதித்துத் தேவருக் கிடுக்கண்செய்யும் மகிடனைக் கொல்ல அருள் செய்யவேண்டுமென்று வேண்ட அரன் மூலலிங்கத்திடைத் தோன்றி இறைவி! உனது அருள் நன்றெனக்கூறி வியந்து மால் அயன் முதலிய தேவர்கள் உய்ய அம்மகிடாசுரனைக் கொல்லுக, என்று அருள்செய்து மின்னினிடையாளுக்குவிடை தந்து லிங்கத்துள் மறைந்தருளினார்.

அண்டங்களெல்லாம் ஈன்றருளும் அன்னையுந் தபோவனத் தைமேவி குகையிலிருந்துகொண்டு காளராத்திரியை நோக்கி "நீ மகிடாசுரனிடஞ் சென்று அவனைநோக்கி அமரர்நாடுவிடுதியோ? அல்லது கிளையோடும் அழிகின்றனையோ ? என்று கேட்டு அவன் கருத்துணர்ந்து வா" என அனுப்ப,உடனே அவளுந் தொழுது விடைகொண்டு சென்று அசுரன் முன்சென்று தேவி மொழிந் தவற்றை மொழிய அதனைக் கேளாது இம்மாதுபோலும் ஒரு மாதை நாம் இத்திரிலோகங்களிலுங் கண்டிலமே! நாம் முன் செய்த தவத்தால் நம் முன் வந்தாளென்று நினைத்துக் காதல் கொண்டு அயலிலுள்ளரை விடுத்துக் கோதையை நீர் கொணர்மி னென்னச் சுலவுமணி வேத்திரக்கஞ்சர் தொடர்ந்து பற்றுதலுங் கோதை அவர்களினின்றும் நீங்கி அவுணனை நோக்கி அரசநீதி தப்பித் தூதுவந்த என்னைக் கவர்ந்திட இவ்வலி செய்தாய், இது என்ன நீதியென நகைத்து பெண்கள்மேல் உனக்கு ஆசையுண் டானல் உலகு ஈன்ற தாய்பால் நீங்காக் கன்னியர்கள் பலருளர் போய்க்கவர்வாயேற் போதி, உயிர்கழிய என்றனள். அவ்வவு ணன் கேட்டுத் தீயென வெகுண்டு இவ்வணங்கைக் கவருக என அதிசிக்கஞ்சுகிபரையும் படைஞரையும் வீரரையும் ஏவ, அவர்க ளும் வெகுண்டு ஆர்ப்பரித்துவந்து சூழ்ந்தனர். அவர்களைக் கண் சிவந்து அன்னையின் தூதிநோக்க சாம்பராய் முடிந்தனர். பிற கும் அந்த அவுணன் விடுத்த சுரேந்திரதபனன் பிறைவாய் அம் பன் அகப்பகைஞன் மிருகாக்கன் தேவகம்பன் முதலியரையுங் கோடானுகோடி படைஞரையும் ஏவ அவர்களையுந் தன்னுயிர்ப்

பினல் நீறாக்கித் தொலைத்தாள். இதுகண்ட அவுணன் நெய் பெய்த நெருப்பெனச் சீறிப் பொங்கி எழுந்து வலிமிகுந்தானை வெள்ளம் ஆயிரம், காவலர் நூற்றறுபதுகோடி, தேர்ச்சேனை யானைச்சேனை குதிரைச்சேனை முதலிய சேனைகள் கோடானு கோடியாக சந்திரகாந்தத்திலெழும் ஜலப்பிரளயம்போலச் சேனையோடு அவுணன் போர்க்குவந்தான். இதுகண்டு காளராத்திரி விரைந்துவந்து தேவிபால் உற்றனவெல்லாம் உரைத்தாள். தேவியிற்றிருக்கக்கண்ட அவுணன் தம் வீரரைநோக்கி இவ்வழகிய மாதுபோல் ஒருத்தியை யாம் இதுவரை கண்டதில்லை எவரேனுஞ் சூழ்ச்சிசெய்து இவளைக்கொண்டு வருவீராகில் கொண்டுவந்தோர்க்குப் பொன்னுலகவரசாட்சி தருவேனென, மந்திரியர் உன்கீழிருப்பவர்களுக்கு அரியதும் ஒன்றுண்டோ? எனக் கூறி பெரும்படையோடும் மண்ணும் விண்ணும் அதிரச்சென்றனர். படைசெலலால் தூசிகிளம்பிக்கடலுந் தூர்ந்துபோமாறு வருதலை உமாதேவிகண்டு தன்னிலிருந்து பலபலசத்திகளை உண்டாக்கி அவுணன்மேல்விடுத்தாள்.

முதல்விவிடுத்தசத்திகள் சென்று கண்ணிமைப்பொழுதில் அவுணன் சேனைவெள்ளத்தைச் சிதைத்தது. அட்டவயிரவர்கள் கணங்கள் மாமுண்டி காளி சாமுண்டி கொற்றவை அணங்கு தாக்கணங்கு சூளி வெம்படைக் கோடியர் சென்று அவுணன் படையைச்சிதைத்தனர். தன்சேனையெல்லாம் அழிந்தமைகண்ட அவுணன் சீறி ஆயிரம் யானைசூழ்ந்ததேரில் ஏறினன். இசும்பன், பதினொருகோடியானைபலமுடைய அனந்தகன், கரன், நீலன், குருதிமுண்டன், அரிசகன், மதுகயிடன், கொலைமுண்டன், மாலிகன், சண்டன், புகைக்கண்ணன், தீக்கண்ணன் என்னும் பன்னிருவரும் பதினாயிரம் புரவிபூண்டதேர்களின் மீது ஏறிச்சூழ்ந்துவரப்போருக் கெழுந்தான். பற்பல அடல்வலிப் படையுஞ் சூழ்ந்துவந்தனர். அப்பொழுது பங்கயன் முதலிய விண்ணோர் பயந்தனர். அருளுடையன்னை அவர்களை அஞ்சல் என்றருளித்தன் அருகில்நின்றவிந்தையைநோக்கி மயிடாசுரன்படையைத்தொலைத்தி அவன்றலையை அறுத்துக்கொண்டு விரைந்துவாவெனவிடைகொடுத்தாள். அவளும் விரைவுடனே சிம்மத்

தின்மேற்சென்றாள். மேவுதுந்துமியோர் சாமுண்டி சுந்தரியல்க ணங்களுஞ் செல்லக்காளியர்ஞாளி மேற்போயினர். படையா லும் மலையாலும் மரங்களாலும் போர்செய்த அவ்வவுணரை ஒரு கணத்தில் நீறுகண்டனர். மயிடன் வெங்கனல்போற் பொங்கி வாள்தானைக்காவலரோடும் வந்தடர்த்துக் கன்னிபடையெல்லாம் மிகவும் வருந்திடநலிவுசெய்தனன். இந்திரை, சூலி, மறையவள், வராகி, ஆலகந்தரி முதலிய எழுகன்னியரும் மறைந்தனர். துந் துமிமுதலிய நால்வரும் உடைந்தனர். சூலவெங்காரியர் இடைந் தனர், விந்தையும் இடைந்து மனந்தளர்ந்து பரையையும் நினைந் தாள்.

விந்தை அன்னையை நினைக்கும்போது, வானில் அறுபத்து நாலுகோடி புனிதயோகினிகள் வந்தனர். மழைபோலஇடியொ டும் பலபடைகளைச்சொரிந்தனர். அப்படையைத்தொலைத்து மயி டன்கொதித்து எழுந்து ஆர்த்தான். எரிவிழி நிசும்பன் பலப டைசூழவொரு பொற்றேரொடும் எதிர்ந்து வில்வளைத்து வாளி கள்பலகோடிவழங்கலுஞ் சூர்மகள்கண்டு விரைவில் அங்கு ஏகி சாரதிதலையைவெட்டி வில்லையும் பறித்தாள். தானைப்புணரியைப் போக்கினள் பொங்கினின்றார்த்தாள். இசும்பன்கனன்று வேறு வில் வாங்கி வாளிகள் பலவற்றை அவ்வாணுதல்மேல் விடுத்தான்.

தேவரும் வியக்கஅவளும் வாளிகளால் அசுரன் விடுங்கணை களை அடக்கிச் சிலையறுத்து உடலைவெறுத்து அவன்ஏகஒறுத்து உயிர்குடித்தாள். சங்கரன், பீதன், உருத்திரன், சோமன், சண் டன், கோதண்டன், காபாலன், சித்ரவங்கதன் என்றுமாவயிரவர் எண்மருஞ்சென்று வெஞ்சூலப்படையினால் வாளால் அடன்மிகு கதையினால் அவுணன்படைய எல்லாந் தொலைத்து வாகைசூடி னர். முண்டனைச்சூலிதுணித்தனள் கோலமுகத்தினள் சண்ட னைக் கொன்றனள். ஆலமுதுண்டாள் மதுவினையாருயிருண் டாள். கொண்டலையனையமெய்க்கொடி நீலன் குலைந்திட ஆரு யிர்கொன்றாள். திண்டிறற்படையாள் நோக்கணங் கெதிர்ந்த தீக்கண்ணன் உயிர் செகுத்தாள். அரிசகன், காந்தன் அணி கரன், கயிடவன், புகைக்கண்ணன், நாகன் முதலியவர்கள் உயி ரெல்லாங்கூற்றின் நாடு அடையச்செய்தாள். தன்படையும்

தானைகாவலரும், வலிமைமிக்கவரும் அழியவே வீரமிக்கசினத்து அவுணன்வெகுண்டு ஆர்த்துக்கன்னிமுன்னேகி பலகோடிவெங்கணைகள்விடுத்தான். அதனைத்தன்கணையால் அகற்றிச்சூலிகைசங்கினைத்தொனித்தாள். அச்சங்கநாதத்தின் ஒலியாலே அவுணன் படைகளெல்லாம் அழிந்தன. அவுணன் ஒருவனேதப்பிநின்றான். பண்டகன் சரமகற்ற வேல், எழு, கப்பணம், கழு, மழு, தண்டு, வாள், முசுண்டி, தோமரம், பாணங்கள் முதலியன பலகோடி ஏவலும் நீலி எண்புயத்தோகை வில்லுமிழ்பகழியால் தேவரும் வியப்பெய்த அவன்விடுத்த படையனைத்தையும் உடனே மாற்றினாள்.

விட்டவெம்படைகள் பலவும் மாற்றலும் வெகுண்டு வெந்திறல் அவுணர்கோன் தேவர்களையெல்லாந் திக்குப்பாலகரையெல்லாம் அட்டு நிணமுடையருந்தனவாகிய அண்ணலஞ் சுடர் வேலினைவிடலும் வானவர் துணுக்குற்று ஏங்கி ஓடினர். தேவர்களை எல்லாம் அஞ்சல் என்று கைஅமர்த்திவேலினை வாளால் அழித்து ஆர்த்தாள். அவுணன் வேலழியவுஞ் சக்கரப்படை விடுத்தான். அம்மை அதனையுங் கதையால் அழித்தாள். பின் முத்தலை கழு ஏவினன். அது ஆலகாலமும் உளநடுங்கிட வந்தது. அதனை வெவ்வாளியால் மாற்றினாள். பின்னர் படைகளால் போர்செய்யாது மாயப்போர் தொடங்கிப் பல்லாயிரந்தலை பல்லாயிரங் கரங்கொண்ட பல்லாயிரம் உருவோடு போர்செய்தான். மங்கை அதனையும் மாற்றினாள். பிறகும் அவன்வந்து வெய்ய கதை ஒன்றை ஏவினன். அதனைச்சூலத்தால் அழித்து நேமியால் அவன் தலையை அறுத்து வீழ்த்தினள். தேகம் நேமியால் அறுப்புண்டு சின்னபின்னங்களாக விழவும், முன் செய்ததவத்தால் அவன் சாகாமல் மதவேழம்போல் போருக்கு வந்து கதை கொண்டு எதிர்த்தான். பகவதி கொடிகொடக்கரிப்பனைப் புழைக்கரம் நீக்கினாள்.

வெங்கயத்து உருநீங்கலும் பரிவேடமா யெதிர் தோன்றியே அங்கையால் அயிற்படையினைப் புடைவீசி ஆர்த்து அடல் கூறினான். மங்கை வெஞ்சினவாளிவிட்டு அதைமாற்றி அவன் சென்னியை வாளினால் நீக்கினாள். இமையோர்கள் துள்ளி

ஆர்த்தனர். பிறகு நெருப்பாகவும், நீராகவும், இருளாகவும், மாயவன் உருவாகவும் பிரம்மன் உருவாகவும் இந்தவிதமாகப் பல உருவங்களோடு இறவாதவனாக யுத்தஞ்செய்தான். ஓய்விலாதுசெய்யும் மாயையால் விந்தையுஞ் சலித்தனள். இவ்விதமாக நினைக்கும்பொழுது அந்தரத்திலிருந்து ஒரு மொழி எழுந்தது, அதாவது, மாயையின் வடிவுநீங்கிப்பின் மயிடமான அப்பொழுது அவன் தலையை வெட்டித்தள்ளி அத்தலையை மிதித்திட்டால்தொலைந்திடுமென்பதே உரைசெவிபுகஉளந்தேறினள். பலமாய வுருவெடுத்துப் போர்செய்து பின் மகிடன் மாய வுருவு நீங்கி எதிர் பொருதலும் வாளினால் அவன் ஆவியைத் தொலைத்து அவன் தலையைச் சிதைத்துத்தாளினால் மிதித்தனள். மூவுலகும் ஈன்ற கன்னிகால்வைத்தால் மாயைஅகல்வதற்கு ஐயம் உண்டோ? அத்திருவடியை நெஞ்சில் நினைக்கின் மும்மலமும் நீங்கும். துன்னு வெம்பிறவி தீரும். தூயநற்கதி யுண்டாகும். தேவர்கள் பூமாரி பொழிந்து ஆர்த்தனர். மேதிமாமுகத்தோன் கண்டத்தில் ஓர் சோதிலிங்கம் காதலோடு இருக்கக்கண்டு கன்னி அங்கு எடுத்து வந்து ஆதிநாயகி பால் ஈந்தாள் கௌரியும் அங்கையால் வாங்கினாள், அது கையைவிட்டு நீங்காதிருக்க அதன் காரணஞ் சொல்வாய் என்னக் கோதமன் தெரியச் சொல்லுகின்றான். அகத்தியர் ஆதிமுனிவர் ஐம்பதின்மர் நற்றவஞ்செய்யும் வரமுனி இடத்துச் சென்றார்கள். அந்தமுனிவர் அவமதிப்பாய் இருக்க நோக்கி முனிவர்கள் உள்ளம் வேகுண்டு எம்வரவுநோக்காதிருந்தனை,அதனால் நீ கருவில் பிறக்கக்கடவை என்று உளையச்சொல்லினர். அந்த அவர் மொழிந்த சாபத்தால் அஞ்சி அடியில் தாழ்ந்து இங்கு நான் அறியாது அறிவிலேன் செய்த பிழையைப் பொறுப்பீரென்ன, அவர்கள் அருள்கூர்ந்து நீ எருமை முகத்தினோடு அவுணனாகி யுலகினைப் புரக்குநாளில் உமையவள் தன்னால் மாய்ந்தே உய்குவை என்று சொல்லினர். அவ்வாறே வெய்ய அவுணனாகி அரசுசெய்யுநாளில் காட்டில் வேட்டையாடும்போது தன் பசியால் தீயயழுனெனத்திரியும் அவுணன் ஒரு நல்முனியைச்செங்கையிலுள்ள லிங்கத்தினோடும் விழுங்கினன். அப்பொழுது திவ்வியலிங்கம் அவன் கழுத்தில்

தங்கியிருந்தது ஆகையினால் அன்னோன் பெய்யும் அச்சிவன் றன் ரூபமாகையால் வினையுண்டாகும்.

இங்கு நவதீர்த்தத்தில் ஆடினால் அவ்வினை அகலும் எனக் கூறத் திவ்வியபரையும் அநதக்கன்னியைச் சிறந்து நோக்கி தீர்த்தம் இங்கு எய திடச்செய் நீ என்றாள். வைவசி நிலத்திலூன் றி விந்தைமன் வாங்கும்போதில் பெருகு நன்னவதீர்த்தங் கள் பிறவுளதீர்த்தம் யாவும் மருவி அங்கெழுந்தது. கூவதடாக மாய் வைகியது. அதில்பாவம் ஒழிந்திடப்போந்து ஓர் மாதம் கருதி மூழ்கவும் இலிங்கம் கையைவிட்டு அகன்றது. அச்சிவ பெருமானுக்குப் பாவந்தீர்த்த சுந்தரரென்றும் அச்சுனைகளுக் கு அதேபெயரும் உண்டாயிற்று. இத்தீர்த்தமாடிப் பூசைசெய் து சிவபெருமானைத் தொழுதுகொண்டு தேவியிருந்தாள். விந் தை அம்பிகை பொற்பாதம் பணிந்து நல்விடை கொண்டேகி அந்தரத்தவர்கள் தூயமலர்மழைபொழிந்துபோற்றச் சுந்தரமூல லிங்கநாதர்க்குத் தூயகீழ் பால்வந்து பொற்கோயில் மேவி மகா துற்கை மகிழ்வாய் நின்றாள். உலகமெல்லாம் வாதைசெய்து வருத்திய மயிடனைக் குழுவோடுந் தொலைத்து மால்பிரமர் விண் ணோர் மண்ணோர்களுக்கெல்லாம் ஆதிநாயகிவடிவாள் சந்தோ டம் அடைவித்தாள். சலந்தரனும் முன்னாளில் இங்குவந்து சிவனடிபணிந்து போற்றி தேவியையும்போற்றி பலன்தருவரங் கள் பெற்றுத் தன்பதியிற் போந்தான். என்றுசூதமுனிவர் கூறி வடிவாள் செய்தவங்கண்டு காட்சிநல்கக்கையிலையங் கடவுள்வந்தக தையைக் கேளுங்களென்றுமேல் கூறுவாராயினார்.

## ருங.வது, காட்சிகொடுத்த சருக்கம்.

இறையவ னிணைக்கண் பொத்து மெவ்வம தகல நெல்லை
நறைபொழி சோலை சூழ்ந்த நற்குகை யதனுட் புக்கு
நிறைதரு யோகஞ் செய்ய நின்மலக் காட்சி தந்து
குறையறு வரங்கள்தந்த குழகனார் மலர்த்தாள் போற்றி.

உலகெலாம் உயர்ந்திடத்தருமம் ஓங்கிடநெல்லையில் தன்மொழிப் படி. சென்றஉமாதேவியை நினைத்து நந்தியை நோக்கிப்பரைதவம்

புரிபீணை வனப்பதிக்கு நாம்போவோம், விரைவுடன் கணநாதரை விண்ணவர்தம்மை, அரியயன்றன்னை அழைமென்றருளி வெள் விடையையும் பொருவில் ஒப்பனைபுரியெனப்புகன்ருன். நந்தியும் அவ்வணமே அழைக்க அவர்களும் வந்தனர். விடையையும் கொணர்ந்து பெருமானிடஞ் சென்று கணங்கள் வந்தனஎன்று கூறினர். அமலன் இனிதுவந்து நந்திகைபற்றியே தான் உறை யுளைநீங்கிக்கோபுரவாயிலில் வந்துவிடைமீதேறினர். முனிவர்கள் ஆசிகூறினர். பொன் முடிபுரிசடைமவுலிமீது ஓங்க, வளைய ணிந்தகாதில் மகுரகுண்டலம் விளங்க, நெற்றிக்கண்தோன்றப் புன்முறுவல்ஓங்கச்சந்திர சூரியர்களாகிய இருவிழிவிளங்கப்புண் ணியக்கடவுள் போந்தான். இரண்டுமக்களுந் தந்தையைவ ணங்கிப்போற்றி தம்வாகனமேறி முன்னே போயினர். ஏனைய தேவர்களும் உடன்கூடச்சூழ்ந்து போயினர். சிலர்ஆடினர், சிலர் பாடினர், சிலர்கவிகைகளுங் குடைகளும் ஏந்தினர். சிலர்சாம ரையிரட்டினர், சிலர்வாத்தியங்கள் வாசித்தனர். திருமகள்,வாணி முதலியதேவமாதர்கள் உமாதேவியின் வதுவைக்கோலங்காணப் பாடல்பாடிவரதனைப்புகழ்ந்து போந்தார், நாரதாதிமுனிவர்க ளும் பரிவொடு சூழ்ந்துவந்தனர், இந்தவிதமாக அமலநாதனுஞ் சிவதலங்களும் நதிகளுந் தீர்த்தங்களும் மலைகளுங்கண்டுகொண் டே ஆமைவனத்தே வந்துசேர்ந்தார். இதற்கு இடையேநிகழ்ந் தகதை ஒன்றுண்டு, அதாவது கேளுங்கள் முனிவர்களே காவேரி அமலனைக்காணவேண்டி திருவிடைமருதூரில் நூறுவருடந்தவம் புரிந்தாள்.

கவுரியின்கல்யாணத்தைக் கொள்ள ஏகநாதன் செல்வதை நாரதர் சொல்லக்கேட்டகாவேரி, அன்புடன் எதிர்கொண்டு வந் தாள், விடைமேல்வரும் ஏகநாதனை முக்கண்மூர்த்தியை விழிகள் களிப்புறக்கண்டாள், இருகரஞ்சென்னிமேற்குவித்துப்போற்றிப் பூமிமேல் தண்டனுக வீழ்ந்து வணங்கி இருகண்ணீர் பெருகத் தோத்திரங்கள் பலசொல்லி ஆதிநாயகனேபோற்றி! அரிக்குநாய கனேபோற்றி! வேதநாயகனேபோற்றி! விதிக்குநாயகனேபோற் றி!எனப்பலவாறு போற்றித்துதிக்கஆரணமுடிவின்பொருளாகிய அமலன் இத் தோத்திரங்கள்கேட்டு பங்கயவதனம் நோக்கிக்

காவிரிமாதே! உனக்கு வேண்டும் வரங்களைக்கேட்பாயாக" வெனக் காவிரியின்னும் வணங்கி வாய்புதைத்துச்சொல்லுகின்றாள்.

பலநதிகள் தேவரீரிடத்துந் தேவியிடத்துந் தோன்றின படியினால் நீ! தீர்த்தங்களுக்கு நாயகனாகின்றனை. என்னலம் பெருகு திருவிடைமருதூர்தனிலிருந்து தைப்பூசமகிழ்தீர்த்தங்கொடுத்தருளி முன்னி அதில்மூழ்குவோர் முத்திபெறும் வரமுதவி உன்னுடையதிருவடித்தீர்த்தமும் உதவிடவேண்டும். அத்தீர்த்தத்திலேயே ஆகாசகங்கைமுதலிய எத்தீர்த்தங்களும் இனிதாய் இசைந்து உறையவேண்டும். சித்தமகிழ்வுடனே எத்தேவர்களும் முனிவர்களும் இத்தினத்தில் சேவிடவேண்டும். தைப்பூசத்தில் திருவிடைமருதூர்த் தீர்த்தத்தில் வந்துபடிவோரின் முன்னேவிடைமீதேறி இசைந்து வருடந்தோறுங் கவுரியோடு காட்சிகொடுத்திடவேண்டும். எனக்கு வேண்டும் வரங்கள் இது, தந்தருள் தனிமதிச்சடையாய்! என்ன, சிவபெருமான்காவிரியைநோக்கி ஓ காவேரியே! கேட்டி இடபலக்கினத்தில் மருதூரில் முற்பாதியுஞ் சிந்துபூந்துறையில் பிற்பாதியும் அருளொடுதைப்பூசத்தில் ஆடினோர்க்கருள் புரிவோம். மற்றும் நீநினைந்தவரங்களுந் தந்தனம் என்றுகூறித்திருவிடைமருதூரில் வந்துதைப்பூசத்து இடபலக்கினத்தில் முற்கூறில் தீர்த்தங்கொடுத்து வீற்றிருந்தருளினார். இத்தீர்த்தத்தில் ஆடினோர்பவவினைதொலைந்து தூயசெல்வம் மிகத்துய்த்தே நன்றுதருமெய்ஞ் ஞானம் நலமிகவே பெற்றருளிச் சென்று பரகதியடைவர் என்று திருவாய்மலர்ந்தருளினார். இந்தவிதமாகச் சிவபெருமான் வேணுவனம் நோக்கிப்புறப்பட்டதும் வழியில் திருவிடைமருதூரிற்றங்கியிருப்பதையும் நாரதரர் கூற, யோகத்திலிருந்த கவுரி கேட்டு மனமகிழ்ந்து நாரதரைப்புகழ்ந்து முனிக்கு இனியவரங்கள் கொடுத்தருளிக்குகைக்குள்ளிருந்து தூயப்ரஞ் சோதியுருவொன்றியபாவனைபுரிந்தே உயிர்வாயுவினையொருவி நன்றாகச் சிவனடியிணையை மனத்திற்பதித்தருளி ஆதிப் பராபரனிடத்திலேயே அறிவொடு மனத்தை நிறுத்திப் போதமின்றி பரவசமாய்ப் புளகிதமும் பொருந்தி மெய்யில் சோதி வடிவாய்க் கனல்கள் சொரிந்தவொளி தோன்றிடவே நீதி வடிவாள் யோகநிலை யிருந்து நெறி நின்றாள். அப்பொழுது

சூரியன் வந்துதித்தது போலவும் பிரளய காலத்துக் கனற் சுவாலை எழுந்தது போலவும் பத்துத்திக்கும் ஒளிவிட்டு மிஞ்சியே எழுந்த வொளி பரந்து புவிநிரந்து பொங்கியே கடலெலாம் மலையெலாம் புவி எலாம் விரவி நின்று புடை பரந்து மேலெழுந்த மேன்மையால் பிரமலோக முதல் மருண்டு பேதாபேதமாகவே, குகையின் வாயில் காத்தோரும் தபோவனத்தைக் காத்தோராகிய இகல்மிகுந்த சுத்த வீரர் எண்ணில் கோடி பூதரும் மிகவு மஞ்சியோடினார்கள். விண்ணினோரும் அஞ்சினார்கள். அரியும், அஞ்சும் அயனும், மத்தியார்ச்சுனத்தில் வந்து பரன் பொதுவுக்கு முன் தொழுது பரவிநின்று திரிபுரங்கள் எரியவென்ற சிறு நகைப் பிரகாசனே! வரை வனத்தில் உமை பொருந்தி மருவும் யோக நிலையினால் எழுந்த ஒளிச் சுவாலை மீறி எங்குமேவ விண்ணுளோரமுந்த யாங்களஞ்சி உன் அபய மென் றடைந்தனம். வெண்ணிலா வணிந்த குழகனே! உமை தவங்கள் சென்று காண வேண்டும் என்று மால் பிரமர்கள் இயம்ப இறைவனும் இரங்கி "நீங்கள் அஞ்ச வேண்டாம் அறங்களைச் செய்து நம்மை நாடி மெய்த்தவந்துன்றும் ஞானமோன மோடு தோன்றி நின்ற தோகைபால் சென்று காட்சி நல்கி மாது செய்யும் யோகம் மாற்றுவோம்" என்றனர். மாயனாதியோர் மன மகிழ்ந்தனர் உடனே பூதச் சேனைகளும் வான நாடருஞ் சூழப் பொன்னி சூழ் மத்தியார்ச்சுனம் பொருந்தும் புங்கவன், முன்னி வேய்வனத்தில் எய்த மோக முற்று எழுந்தார். நந்தி நாயகன் கணங்கள் முதலியோர் விரைவோடு நடப்ப தேவர்களும் அரி அயன் முதலியோரும் உடனே நடக்க அந்தரப் பெரும் பரிசனந் தொழுது முன் நடக்க புந்தி அன்போடு புனிதனும் விடையின்மேற் போந்தான். தனித் தலம் பலவும் பார்த்துக் கொண்டே மத்தியில் வந்து தொழும் தொண்டரின் தீவினைப் பவங்களை எல்லாந் துடைத்துக் கொண்டே பரை யோகு செய்யும் விண்சூழ் வன நாடியே விமலனும் வந்தார். சிந்து பூந்துறை வந்து சூழ் முனிவரருந் தேவர்களுந் தூயமால் அயன் கணங்கள் கூட மூழ்கிச் சிந்து பூந்துறையிற் றீர்த்தங்கொடுத்து அம்பிகை தவஞ் செய்யுஞ் சாலையிற் புகுந்தார்,

அப்பொழுது அவ்விடத்தே அகத்தியர் கவுதமர் முதலி
யோர்கள் அரகரா! வென்று ஆர்த்தனர். சிந்தை அன்போடு
கணங்களுந் தேவரும் போற்ற நந்திநாயகனை முன் செல்ல எம்
நாயகன் சென்றான். கோயில் வளங்களையும் நாயகி புதுக்கியதன்
மையையுந் தேவி செய்யுந் தவச் சிறப்பையும் என்றும் வாழும்
மூலலிங்கத்தையும் இதழிமன்றல் சூழ் மகாலிங்கத்தையும் மகிழ்
வொடு பார்த்தார். அன்பொடு பூங்கொடி கோயிலிற் போய்
பொற்றாமரையையும் ஆலய வளங்களையும் பார்த்து வனிதை
யோகு செய்யுங்குகையின் திருவாயிலிற்கு வந்தார். பின் உள்ளே
புகுந்தார். மங்கை செய்யும் யோகத்தை மகிழ்ந்து கண்டார். அங்
கையால் மெய்யெலாந் தடவி அசைத்திட அசையாது எங்குமே
நிறை சோதியாய் இருப்பது கண்டார். முன்பு நின்று உமையா
ரின் நிறை உருவத்தை முழுதும் அன்பினால் நோக்கி மெய் அழ
கினை நோக்கி உன்பெருமையை அறிபவர்யார்? ஆதியோ புகழ்
பின்பு கேட்டனம். பசுங்குயிலே! அனப்பெடையே! எனப்புகழ்ந்
து நீ செய்மாதவத்திற்கு வந்தனம், உன்யோகம் நன்று! வேண்
டும் வரங்கேட்கில் உதவுவோம் என்றனர். இந்தவிதமாக இறை
வர்கூறி முன் நிற்கவும் பரை சிவயோகத்திலேயே இருந்தாள்.
இதுகண்டு சிவபெருமான், யோக நிலையைத் தீர்க்க உள்ளத்தில்
நினைத்துப் பாடலம் கம்பை என்னும் முன்வந்த இருநதியையும்
நினைந்தார். அக்கணத்தில் அவள் ஒரு கமலைபோல் அழகாய்
நக்கனடி தாழ்ந்து முன்னின்று புண்ணியப்பொருளே! நினைத்
தருளிய காரணம் என்னவோ? அதனைப் பணித்தருளவேண்டு
மெனத் தாழ்ந்து கேட்க, நிமலன் ஓ பனித்ததண்டலைப்பாடலங்
கம்பையே! பரைதான் மனத்தில் உற்றிடும் யோகத்தை மாற்று
தற்காக உன்னை நினைத்தேன். உமையவள் செங்கையில் உற்ப
வித்து சயிலமாமலையில் மன்னிப் பாதலவாகினியாகி வேய்வனத்
தில் வந்து சிந்து பூந்துறையில் பொருந்துவாயாக. அம்முக்கூட
லில் வந்து படிந்தவர்களின் பழவினைபோக்கி உலகத்தில் பாக்கி
யங்களோடு முதலி, பரமனும் அளத்தற்கரிய பரகதியை
நாம் கொடுப்போம். இந்த வேய்வனத்தில் எவ்விடத்தும்
இனிது பொருந்தி பரைதவம்புரிகுகையினைச் சூழ்ந்து ஆகாசகங்

கையோல்லவர்க்கும் நீ அமுதாய்ப்புந்தி அன்போடுஞ் சஞ்சரிப்பாயாக. உன்னுடையசலம் அதி சீதளமாகும் முற்றும் உன் பனி மிகு குளிர்த்திவலையால் உமையாள் பற்றிய யோகத்தை மாற்றிடுக, எனக்கூற அரனடிபணிந்து கண்ணுதல் சொற்படி பாடலங் கம்பை என்னுந் தோகை, மாயனும் மற்றைத்தேவர்களுந் துதிசெய்யக்கடுகிச்சென்று குளிர்ந்த நீர்த்துளியால் தாய் பராபரை அம்பிகை சரீரத்தை நனைத்தாள்.

அன்னைமேற் குளிர்ச்சிபடலும் மதியும் உள்ளமும் வர தன்பாலிருந்து பின்வந்து பதிமுன்னிற்பதைக் கண்களாற் பரிவோடும் பார்த்தாள். மின்னுசெஞ்சடை மௌலியும் விளங்குந் திருமுகமும் மன்னும் முக்கண்ணும் நீலகண்டமும் மார்பும் நான்கு கரமும் எட்டுப் புயங்களும் கவினமுன்னம் மால்விடைக் காட்சியை முதல்வன் கொடுத்தருளினன். அப்பொழுது விண்ணவர் பூமழை பொழிந்தனர். துந்துமி எங்கணும் ஆர்த்தனர். பூதங்கள் இயம்பல துவைத்து ஆர்த்தன. மாயன் நான்முகன் முதலிய தேவர்கள் வணங்கியே துதித்தனர். மாதவர் வேதியர் மண்ணுளோர் எல்லாம் பரையொடு பரமனை ஏத்தித் துதித்தனர். காருலாவிய கண்டனைக் கௌரியுங் கண்டு எழுந்து கரந்தலை மிசைக் குவித்து, அண்டர் நாயகனே! சரணம்! என்று அடிமிசை வீழ்ந்து பணிந்து வலஞ்செய்து கொண்ட காதலாலும் அன்பாலும் நெக்கு நெக்குருகவே குழைந்தாள். கருணைநாயகி கண்களில் ஆநந்தக்கண் நீர்வாரக் கிட்டே போவள், அடியிற் பணிவாள், சிந்தை உருகி அடிக்கடி தொழுது உலகுஈன்றவள் சுருதிநாயகன் எதிர் நின்று பேரருள் உடையபிரானே! சரணம்! பிரமவிருத்தபுரத்தாய்! சரணம்! எனப் பல தோத்திரங்கள் மொழிந்தாள். அதுகேட்டுப் பரமன் இனிதுஉவந்தருளித்தழுவிமடியில்வைத்து மாதை அடிக்கடி நோக்கிப் பேரன்புமிகுந்து உளத்து அடங்காக் காதலோடும் பூமியும் அதனிலுள்ள உயிர்களும் உய்யும்படி உமாதேவிக்குத் தூயவன் உரைசெய்கின்றான். உமையே! நீ சிந்தை மகிழ்ந்து சிறக்கச்செய்தவத்தால் நாம் மழவிடை மேல்வரக்கண்டாய், நீ விரும்பும் வரங்களை எல்லாங் கேட்பாயாக என்றருளினார். அதற்கு இறைவிகளித்துத் துதித்து முன் என்னை இமையத்

தில் மணஞ்செய்ததுபோல இந்தத்தலத்தும் என்னை மணஞ் செய்யவேண்டும். மணக்கோலம் பெற மகிழ்ந்து பற்றுடன் செய்து அறங்கள் பரிபாலனஞ்செய்திடும் அதனால் தற்பரனே! அனவரததான நாயகராகி இப்புவியனைத்தையும் புரந்திடவும் வேண்டும். இத்தலத்தில் எந்நாளும்இருந்து அடியேன் இன்பமாய்ச் சித்திதரு திருவிழாக் திங்கள்தொறும் நடத்திப் பத்தியொடு பணிவிடைகள் சிவபூசைகள் முதலிய நித்தியமுஞ் செய்யவேண்டும், நீரும் அருள்செய்யவேண்டும், இப்பதியில் என்றும் இருந்து தரிசிப்போர்க்கு மலர்ப்பதம் நல்கிடவேண்டும்,

பாடலங்கம்பைநதியும் பாதலவாகினியாகிய இத்தலத்தில் என்றும் நல்லமுதெனத் தோன்றி ஊடுகருமாரி பொற்றாமரையினுடனே பொருந்திச் சிந்துபூந்துறையிடைக் கூடிடவேண்டும். அத்தலத்தில் சிவதீர்த்தமாகிய முக்கூடல் பத்தியுடன் மூழ்குவோர் பரகதியைப் பெறவேண்டும். இந்த நெல்வேலியில் இருப்போர்கள் முத்தராய் அழியாத முத்தியினைப் பெறவேண்டும். நெல்வேலியில் கம்பாநதியிடை நீ வெள்விடை மீது தோன்றி அருட்காட்சி வருடந்தோறும் வந்து தரிசிப்போர் பந்தவினைப் பவ நீங்கிப் பரகதியை அடையும்படித் தரவேண்டும். பெருமானே நான்சொல்லுந்தோத்திரத்தைப்படிப்போர்கள் நன்னெறிமோட்ச வீடுபெறவேண்டும். தெட்சண கயிலை, தெட்சணகாசி, தெட்சண காஞ்சி ,தெட்சண சிதம்பரமெனவும் அழிவில்லாப் பெயர்களை இத்திருநெல்வேலி பெறவேண்டும். இவ்வரங்களை எல்லாம் ஈசனே!எனக்கு நீ உதவி அருளவேண்டுமென்று உமை கூற,இறைவன் மனமகிழ்ந்து மன்றல் கமழுங் குழலாய்! நீ கேட்டவரங்களை எல்லாம் அளித்தோம் என்று கூறவே தேவர்கள் பூமாரி பொழிந்து ஆர்த்தனர். முனிவர்கள் வாழ்த்திப் போற்றினர். கவுரி இந்தவரங்களைப் பெற்று மணிக்குகை நீங்கிப் பரனுடனே எழுந்தருளிப் பரிசனங்கள் புடை சூழவானவர் துந்துமியார்ப்ப மன்னவர்கள் தொழுதேத்தக் கானவிசை முழவதிரக் கம்பைநதியில் காட்சி கொடுத்து மேன்மைபெற அளித்து அருளி வீதி வலம் வந்து திருக்கோயில் புகுந்து சிங்காசனத்து இருந்தார், என்று சூதமாமுனிவர் உரை செய்தார். பின்னும் நைமிசாரணியவாசிகள்

தேவிக்களித்த திருவாக்கின்படி தேவியை மணந்த கதையையுங் கூறியருளவேண்டுமென்னச் சூதமாமுனிவர் சொல்கின்றார்.

## ருசுஉ-வது, திருக்கல்யாணச் சருக்கம்

பூவைபோல் நிறத்து மாலும் போதுறை தேவும் மற்றைக்
கோவையார் விண்ணோர் தாமுங் குழுவுட னுய்ய வேண்டிப்
பாவைமா வடிவாள் தன்னைப் பரிவுடன் மணஞ்செய் தேற்ற
தேவைமா மூலக் கோவைத் தினந்தினந் துதிப்பா மன்னோ.

தனிமலை மகளின் யோக நிலையை நீக்கிச் சிங்காசனத்தில் வீற்றிருக்கும்பொழுது மாயவன் வந்து தேவியையும் இறைவனையும் வணங்கிப் போற்றித் தோத்திரங்கள் செய்து இறைவர் தாளிணை வணங்கி நின்றான். இறைவன் மகிழ்ந்து வேண்டும் வரங்கள் கேளென, இமையத்தில் உமையை மணந்தருளியது போல இங்கும் உமையை மணந்தருளவேண்டும். மற்றத்தலங்களிலெல்லாம் மீனமாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் வதுவை செய்தாய் இவ்வழகிய பதியில் ஐப்பசி மாதத்தில் உத்தர நட்சத்திரத்தில் அன்பாய்ப் புதுமணம் புரியவேண்டும். இந்தநல்வரம் அருளவேண்டும். என்று வேண்டிக்கேட்க எம் பெருமானும் மகிழ்ச்சி கூர்ந்தே முன் கயிலாயத்தில் முதல்விபால் உரைத்ததை எண்ணி மாலே! நீ கேட்ட வரம் அளித்தேன் என்று கூறி, நீயும் இப்பதியிலிருந்து காவல் புரி எனத் திருவாய்மலர்ந்தருளினர். மாலும் அன்னதேசெய்வேனென்று விடை பெற்றுச் சென்றான். கௌரியும் பரனைநோக்கி நாதனே! கயிலையில் மொழிந்தவரத்தினை மறவாதென்னை இத்தலத்தில்வந்து நீ மணந்தருளவேண்டுமென்று வேண்டினள். அதற்கு ஓமென இசைந்தருளி, மாலினை நோக்கிப் பரையை மணஞ்செய்வோம் அதற்காவன செய்க என்றார். உடனே மாலும் நாயகனையும் நாயகியையும் பரவிப் போற்றித் திருக்கல்யாணத் திருவிழா துலா மாதத்தில் பரணி நாளில் என்றுகூறி முகூர்த்தம் நிட்சயித்தான். இமவானை நினைத்தான் அவனும் அக்கணத்தே சுற்றஞ் சூழ மேனையோடு முதல்வனையும் முதல்வியையும் பணிந்து நின்றான்.

மாலூரும் மூலலிங்கத்தைப் பூசித்துப் போற்றி தன் மனை திருமகளை நோக்கிப் பணைவனச் சிறப்புகளைத்துங் கூறி இந்தப் பதிவினைகளை நீக்கி நல் பதந்தருமென்று தேவர்கள் முனிவர் கள் எல்லாம் இங்குறைவர். இப்பதி பூலோக சிவலோகம் என்பர். சிந்துபூந்துறை ஆடித்தாம் பிரசபையில் எம்மானின் திருநடநங் கண்டோரின் திருமுகத்தைக் கண்டோரும் இன்பவீடெய்துவர். அவ்வளவு சிறப்பு வாய்ந்த இத்திருநெல்வேலியில் நாயகன்றனக் கு ஞானவடிவுடை நாயகியை மணஞ் செய்ய நேயத்தோடு வந்தனம் என்று கூறித் தூயமண்டபங்களாதி தொகுத்திட மனத்திலெண்ணி விசுவகர்மாவை நினைத்தான். அவனும் உட னேவந்து அடிபணிந்து போற்றி நினைத்தருளிய காரணம் என் னவென்று கேட்டனன். மால் ஓ விசுவகர்மாவே! அரன் கல் யாணத்திற்காக இத்திருநெல்வேலியை முன் இமயாசலத்தியற் றியது போல் இயற்றி அலங்கரிப்பாயாக என்றனன். அவ்வா றே செய்கின்றேனென்று மகிழ்ந்து போற்றி விடைகொண்டு நெல்வேலியின்வளங்களையும் ஆலயச்சிறப்பையுங்கண்டு மகிழ்ந்து போற்றிப் பரை திருக்கோயிலின் தென்பால் வதுவைமண்டபஞ் செய்யத்துணிந்து நீண்ட பொன் மணித்தூண்கள் பதினாயிரம் நிறுத்தி, ஊடே வச்சிர உத்திர நிரை இட்டு மரகதப் பலகைக ளால் நிறைத்தான். ஆடகத்தகடு எங்கணும் நிறைத்து, கொடுங்கை பொன் முகப்பு உப்பரிகைகள், சாலைகள், கூடங்கள், விதானங்கள், மேடைகள் முதலியன பொன்னொட்டினுஞ் சிறப் புறஇயற்றிப்பொன்னுடும்வெள்குறும்படி நன்றாக அலங்கரித்துக் கொடிகளுந் தோரணங்களும் நாட்டிச் சித்திரங்களும் பதுமைக ளும் நிறைத்து மணித்தூபிகளும் படிகத்தால் வேதிகைகளும் விதானங்களும் அமைத்து இபக்கொடிகளும் புனைந்தான். வாழை,கமுகு,தென்னை, பழக்குலை, சந்தனம், மான்மதம், குங்கு மம் முதலியவற்றாலும் மற்றப் பொருள்களாலும் நாட்டினை முற் றும் அலங்கரித்துத் தேவர்களுங் கண்டதிசயிக்கும்படிச் செய்து பொற்பாவைகளமைத்துஉயிருமளித்துச் சாமரையிரட்டவும் நட னஞ் செய்யவுஞ் செய்வித்தான்.நாடகசாலைகள்கணங்கள்தங்கும் இடங்கள்முதலியன சிறப்புறஇயற்றி ஆலயங்களையெல்லாம்அலங்

கரித்து வீதிகளிலெல்லாம் பொன்னுடனாவியயந்தல் கனிட்டுப் பூ இலை பழக்குலை முதலிய வற்றாலலங்கரித்தான். யாகசாலைகள் பாகசாலைகள் மந்திரசாலைகள் முதலியன நகரமெலாம் விளங்கவகுத்தான். அவன்வகுத்த அலங்காரங்களை உரைப்பதென்றால் பிரமனாலும் ஆகாது. இந்தவகையாகத் தேவருங்கண்டு திகைக்கும்படி அலங்கரித்து மாலடிபணிந்து தெரிவித்தனன். திருமாலும்மயனோடுகூடச்சென்று வனப்பெலாங் கண்டு உவந்து கம்மியனோடுஉமைபாற் சென்று தொழுது ஏத்திநகரலங்கரித்தமையும் வதுவைமண்டபமியற்றினவாறெலாங் கூறிவிடைபெற்றுச் சென்று, ஆதிநாயகனைக்கிட்டி அடியிணை தொழுதுநின்று விசுவகர்மா வதுவைமண்டபமியற்றி நகரினை அலங்கரித்தான் வதுவைசெய்யலாமெனக்கூற, இறைவன் இனிது உளமகிழ்ந்து அவ்வாறே மணஞ்செய்வோம் என்றுகூறியருளி மாலுக்கும் மயனுக்கும் விடைகொடுத்து அனுப்பிவிட்டு அவர்கள்சென்றபின் அருந்தவர் எழுவரை நினைந்தருளினார்; அவர்களும் உடனே வந்து தொழுது நின்று எமைநினைத்தருளிய பணிஎன்ன என்று கேட்டனர்.

நாம்வடிவாளைமணம்இப்பதியில்இயற்றநினைத்திருக்கின்றோம் மாயன் கருத்தறிந்து அழைத்துவாருமென, அவர்களும் ஸ்ரீ வைகுண்டஞ் சென்று மாலினைக்கண்டு வணங்கிவந்தகாரியங் கூற அவனும்மகிழ்ந்து கல்யாணம் இன்றுமுடிப்போம் என்று கூறி முனிவர்களுக்குத் திருநெல்வேலியின் சிறப்பும் மற்றும் அத்தலத்துறையும் பெருமானின் சிறப்பையுங்கூறி, வருகின்றோம் நீங்கள் முன்னேசெல்லுங்கள் என்று கூற, அவர்களும் மகிழ்ந்து விடைகொண்டுவந்து பெருமானை வணங்கித்தொழுது மாயன்இசைந்தனன் வடிவுடையாளைமணம்புரிந்தருள்க என்றனர். இறைவன்நன்றென விடைகொடுத்தனுப்பி விட்டு அவர்கள் சென்றபின் நந்தியை நோக்கி நம்கணங்கள் வானவர் முதலியோரை நம்கல்யாணத்திற்கு அழைஎன, நந்தியும் எல்லோரையும் மனதில் நினைந்தான். உடனே சிவகணங்களும் உருத்திரகணங்களும் பூதகணங்களும் மால்பிரமன் இந்திரன் முதலியவர்களும் மற்

றைத்தேவர்களும் தம் தம் கோடானு கோடி என்னுந் தம்கு மாஞ்சூழ வடிவுடையாளைத் தேவதேவன் மணஞ் செய்வது கா ணவிரும்பிவந்தனர். மலைகள் கால்கள் நதிகள் மற்றுமுள்ளச ரர சரங்களனைத்துந் திருக்கல்யாணங்காணவிரும்பி வந்தன. இத னை நந்தி, கயிலைநாதனுக்குரைக்க நன்றவர்களை யழை என நந்தி யும் அவர்களைச்சன்னிதிமுன் விட அவர்களும் ஐயனைக்கண்டு தொழுது அடிபணிந்து போற்றித்துதித்தனர்.

அவர்கள் பெயரை நந்திமுறையே கூறினன்.அரனும் அவர் களுக்குமுறையே வேண்டும் வரங்களை அருளினர். மாயன் பலப ணிகள் ஏந்திச்சுருதிபுகழும் நெல்வேலிவேய் சூழ்வனத்தனடி வணங்கி விமலன் முன்வைத்து இவையெல்லாம் நேயமாகப்பு னைந்தருளவேண்டுமெனத்தொழுது பணிந்தான். நன்றென நகைத்து நாதன் நற்கரந் தொட்டுப்பின், தான் அணிந்துள்ள அரவெலாம் ஆடகமணியணியாய் ஆகுமாறு நினைத்தனன். உட னே அவைகளும் அவ்வண்ணமாயின அண்டர்எல்லாம் வியந்துபு கழ்ந்தனர். சென்னியிலணிந்த அரவு கொன்றை மதிநதி எல்லாம் மறைந்து பதினாயிரங்கோடிச்சூரிய பிரகாசமுடைய ஒருசோதிமு டியாய்த்துலங்கிற்று இருகுழைகுண்டலந்துலங்க எழிலார்நுதல் சேர்விழிதுலங்கப் பலகோடிசந்திரஉதயமெனத்திருமுகம் விளங் கநிலவுபுனையுங்முரலும்திருநீறும் விளங்கக்கடல் விடமொளிருங் கண்டம்விளங்கத்தடமார்பில் முந்நூல் மணியாரங்களும் மலர்மா லைகளும் விளங்கநடம்புரியுந் திருவடிவிளங்க மணக்கோலக் காட்சிபெருமையுறவீற்றிருந்தார்.

நெடுமால்கண்டு இனிது வந்து கமலபாதம் பணிந்தேத்தி பண்டிருந்தமணக்கோலம் இதுவே எனப்புகழ்ந்து துதித்தார். மணம்புரியும் உத்திரநாளில் எழுந்தருளிக்கணங்களும் பரிசனங் களுந் துதித்துச்சூழ்ந்திருக்க ஐயன் அரியாசனத்து வீற்றிருந் தான். விநாயகரும் சுப்பிரமணியரும் இரு புறமிருந்தனர். முனிவர்கள் கணநாதர்கள் வானோர் மாயன் அயன் இவர்கள் சுற்றும் வேதிகைதோறும் துலக்கும் ஆசனத்திருந்தனர். முனிவர்களெல்லாம் மணிக்குடநீர் ஏந்தி வலஞ்செய்து மறைபல

இயம்பித்திருநெல்லைநாதன் அடிபணிந்து மலராலருச்சித்துக் கண்களிக்கத் தெரிசித்தனர்.

அமுதமொழியார் சிலர் அட்டமங்கலங்களேந்தினர், சிலர் சேவடிபணிந்து மங்கலப்பாடல் மொழிந்தனர். சிலர் திட்டிசுத்தினர். கணங்கள் வாத்தியம் பல முழக்கின. விஞ்சையர்கள் மதுரகானம் பாடினர். மாதர்கள் சூழத்திருமகள் வரதன் அடியில் ஆவின்பால் வார்த்து விளக்கிச் சிந்தைமகிழ்வோடருச்சித்துச்சிறப் பாய்ச் சேவை செய்துநின்றார்.

அப்பொழுது வேணுவனத்தில் இருந்தருளும் தாய்பராசத்திக்குப் பெண்கள் சூரியனுக்கு எதிர்நின்று தூய அணி அணிபவர்போல் மணக்கோலந்துலக்கினர். வயிரவிபிரம்பு கொண்டுமுன்னே செல்ல மேனகையரம்பைமுதலிய தேவமாதர்கள் கவரி இரட்டத் திலோத்தமை ஆலவட்டம் வீச இந்திராணி அடைப்பைதாங்க உருவசி கொற்றவெண்கவிகை தாங்க பொற்பாவாடை நதிமடவார் போட்டுவர மலைமடந்தை கல்யாணமண்டபத்திற்குள் வந்தாள். அரனை அரவிந்தக் கண்குளிரக் கண்டனள். பொன்னடிவணங்கிப்போற்றித் துதித்தனள். அரனும் மகிழ்ந்து தன்னருகு இருக்கவேன அருள்செய்தார். பல இயங்கள் முழங்கவும் பண்ணவர்கள் ஆசிகூறவும் வல்லியர்கள் பல்லாண்டுகூறவும் வேதங்கள் ஒருபக்கத்தில் முழங்கவும் யாழ் ஒரு பக்கம் வாசிக்கவும் பரைவடிவுடையாள் வேணுநாதரின் பக்கத்தில் அரியாசனத்தில் வீற்றிருந்தாள். வடிவுடையாளை வேணுவனநாதருக்கு அளிப்பதற்கு இது நல்ல முகூர்த்தமென்று திருமகள் திருமாலின்கரத்தில் மலரும் நீருஞ் சந்தனமும் தந்தனள். திருமால் மகிழ்ந்து வாங்கித்தான் கோலமெனத்தேடியுங்காணுத்திருவடிவிளக்கி அர்ச்சித்துப் பூசித்தான். பிறகு வடிவாள் பூங்கரத்தை எங்கோன் பூங்கரத்தின்மேல் வைத்து நல்நீலாரையில் அமரர்கள் துந்துமிமுழங்கத் துன்னும் அருமறைமுழங்கத்தூயநீர் உதவினன். பலவாத்தியங்கள் முழங்கின. ஆகமவேதங்களார்த்தன தேவர் முனிவர்கள் வரதனடிதொழுது ஆர்த்தனர். வாணி, திருமகள் முதலியோர் மங்களம்பாடினர். அரம்பையர்கள் நடனம் புரிந்தனர்.கந்தசந்தனம் எங்குந்தெளித்

தனர். பூமழைபொழிந்தனர். மால் இனிய செவ்விய நற்கனிகள் கன்னல் தீம்பால் நெய் தேன் முதலிய பொற்றட்டிற்கொண்டு வந்து சிவபெருமான் முன் கொணர்ந்து தொழுதுபோற்றி வைத்தான். திங்கள் வேணியனுஞ் செங்கையிற் றொட்டருளி நாம் உகந்தோமென்று கூறியருள, அவைகளைமாற்றி அலர்ந றுஞ்சந்தனந் தீர்த்தம் முதலிய வற்றை அளித்தனன் அப் பொழுது பிரமன் மண்ணுலகில் விண்ணுலகில் தேவர் நரர் பண் ணவர்கள் மணம்புரிய அடுத்தநெறி இதுவாகும், ஆகையால் எங் கோனே! காரணனே! கல்யாணச் சடங்கியற்ற நீ அருளல்வேண் டும் என்று மொழிந்தான். தூயவனும் நகை செய்து அவ்வி தமே செய்கவென அயன் மகிழ்வுடனிருந்து பன்னும் மறைவே தியர்கள் வெள்ளி வியாழன் இவர்கள் சூழ அக்கினிவளர்த்து அவிசொரிந்து மறைச் சடங்கு முறைமையே இயற்றி அமலனைப் பணிந்தான். விண்ணோரெல்லாம் பணிந்தனர். அவர்களுக்கு அரன் அம்மையோடிருந்து அருள்புரிந்தான். மால் வந்தவர்க ளுக்கெல்லாம் உணவு ஆடை மலர் சந்தனம் பொன் முதலி யன அளித்தான். அயன் முதலோர் பெற்று உண்டு உடுத்துப் புனைந்து போற்றி எம்வினை நீங்கியதென்று மகிழ்ந்து அம்மை யையும் அப்பனையுந் துதித்தனர். இஃது இவ்வாறிருக்க, மால் சிவபெருமானை நோக்கி மலைமகளோடு எழுந்தருளி ஐயனே! மணிவீதி வலஞ்செய்தருளவேண்டுமென்று வேண்டப்பெருமா னுங் கருணைசெய்து மகிழ்வுற்றான். உடனே நெடுமால் ஆவணங் களலங்கரித்தான். உமாதேவியார் சிவிகைமேலும் விமலன் வெள்ளையானையின்மேலும் ஏறிக்கொண்டு நந்திகணம் முதலி யவர்கள் முன்னேபோக பொன்மதிற்கோபுரவாயிலைவிட்டு வெளி யேவந்தனர். மால் பிரமாதிய தேவர்களுங் கணங்களும் முனிவர்களுஞ் சோமசுந்தரனையுந் திருமகள் பாரதி அரம்பை முதலிய தேவமாதர்கள் சுந்தரியையுஞ் சூழ்ந்துவந்தனர். முனி வர்களுந் தேவர்களும் அன்புடன் மகிழ்ந்து சூழ்ந்துவந்தனர். ஆரணங்கள் ஓதினர் சிலர். மணித்தூபமெடுத்தனர் சிலர். பூரண கும்பங்கள் தாங்கினர் சிலர். குண்டோதரனுங் கும்போதரனும் வெண்குடையெடுத்து விருப்புடன் முன்னடந்தனர். பூதக்க

னெல்லாம் இடபக்கொடி எடுத்தன. அந்தரத்திருந்ததேவர்கள் மண்புதைய மலர் தூவினர். துரங்காதேவன் திரிகண்டன் முதலியோர் கொடியாடை எடுத்துக்கொண்டு முன்னே போயினர். சிலகணங்கள் மீனக்கொடியோடு முன்னே போயின. பன்னிருசூரியர்களும் பன்னிரண்டு மேருவென்று சொல்லும்படியானபெருங் கொடிகளைத்தாங்கிக்கொண்டு நடந்தனர்.

கங்கைமுதலிய புனிதமடவார்கள் கவரிவீசினர், வாயுசெங்கரத்தினால் விசிறிவீசினான். சுந்தரர் அருகேகண்ணாடி ஏந்திவந்தார். நிதி ஆபரணப்பேழைதாங்கிவந்தான். இந்திரன் பொன்னாலவட்டம் எடுத்து எதிர்சென்றான். அக்கினியுங்கைத்தீபம் எடுத்தான். வருணன் வீதியிற் பன்னீர் தெளித்தான். தனதன் அடைப்பை ஏந்தினன். விநாயகன் குமரன் மால் பிரமன் முதலிய வேதர்களெல்லாந் தங்கள் தங்கள் வாகனத்தில் ஏறி முன்னே போயினர். சத்தமாதர்களும் உருத்திர கணிகையரும் பத்தியோடு மங்களம்பாடி முன்னே போயினர். வித்தியாதரர்கள் வீணை வாசித்தனர். முத்தமிழ்ப்பாவாணர்களும் அன்பர்களும் புகழ்ந்து பாடிக்கொண்டு கூடிக் குழுமிப் போயினர். இரண்டாயிரங் கொம்புகளையுடைய வெள்ளையானையின்மேல் சிவபெருமான் எழுந்தருளிக்கொண்டு சிவிகைமேல் தேவி எழுந்தருளிக்கொண்டு கூடவரக் குவலயஞ்செய்த புண்ணியம் என்னென்று கூறுவது, திருநெல்வேலியாலன்றோ புவிக்கெலாம் புகழ் பெருகியது.

எண்ணுதற்கரிய கோடானுகோடி அரம்பையா வாழ்த்தினர் ஆடினர் பாடினர். வேதங்களெல்லாம் பரியாக முன்னர் அலங்கரித்துச் சென்றன. தேவமாதர் பொற்பொரியையும் வெள்ளிப்பொரியையுந் தூவிச் சென்றார்கள். துந்துமி முதலிய வாத்தியங்களைப் பூதங்கள் முழக்கின. மன்மதனுங் கரும்புவில் வளைத்து சுரும்புநாண் ஏற்றி அரும்புவாளி தூவிக்கொண்டு விரும்பும் இருள்என்னும் பொருப்பில் ஏறிக்கொண்டு வந்தான். இத்தகை வைபவத்தோடு ஐயன் அன்னையோடு வீதிகளை உலஞ்செய்து வரும்பொழுது வீதிகளில் நெய்விளக்குகளும் விதானங்களுங் கும்பங்களும் பூம்பந்தல்களுஞ் சமைத்தனர். மலர்கள் எங்குந் தூவினர். கமுகு வாழை கன்னல் முதலியவற்றை

நிறைத்துத் தூபதீபங் காட்டினர். பொன்னினுல் ஆலாத்தி ஏந்தினர். சிலமாதர் பதித்த விழியும் நெஞ்சும் பறிக்கமுடியாமல் ஐயன்பால் வைத்த காதலால் மயங்கினர். இவர் இன்று இங்கு வர என்னதவஞ் செய்தோமோ என்பர் சிலர். இவர்தான் ரிஷி பத்தினிகளின் கற்பளித்தவர் என்பர். இவர்தான் கூடலில்வளை கவர்ந்தவர் என்பர். சிலர் செவந்த மேனி எல்லாந் தீ என்பர். புரத்தை எரித்த நகையன் என்பர் சிலர், சிலர் கலை சோர வளைசோர மனஞ்சோர நாண் சோர மாலைதா கலைதா வளைதா முத்தந்தாவென முலைகளிற்பசலை பொங்கத் துதித்து நின்றனர்.

மான் மழு தாங்கிய ஐயன் மேனியிற் பாதியாய் அமைய வடிவுடையாள் செய்த தவமே தவமென்பார் சிலமாதர். நின் நெற்றிவிழிக் காற்றுதவன் கோடிகோடி கணைகள் தொடுப்பதோ? நீயே தஞ்சம் என்பர் சிலர். சிலர் மடல் எடுத்து ஏறினர். ஆடுகின்ற மருங்குல் அயர்ந்திடத் தோடுகொண்ட சொருக்கும் அவிழ்ந்திடக் கோடுகொண்டெழு கொங்கைகுலுங்க ஒண்டொடிமார்தொடர்ந்து ஓடிவந்தனர். வடிவாளைக்கண்ட கண்களால் இறைவன் நம்மையுங் காணுமோ என்பர். இந்தவிதமாக ஏழு பருவப்பெண்களும் மனஞ் சூறைகொள்ள வீதிவளை வலம் வந்தார். தேவர்கள் முனிவர்கள் இயக்கர்கள் கந்தருவர்கள் எல்லோருங்கண்டு மகிழ்வுற்றனர். அன்னை நினைந்தோர்களுக்குந் தொழுதோர்களுக்கும் அருள்செய்து அமலன் அம்பாளோடுங் கோயில் சார்ந்தார். பாரிடங் கொள்ளாதபடிக் கூடிப் பல்லியங்கள் ஆர்த்தார்கள். அருந்தவமுனிவர்கள் ஆரணங்கள் மொழிந்தார்கள். அரம்பையருந் தேவமாதர்களும் பொற்றட்டேந்தி ஆலாத்தி சுத்தினர்கள். மாலும் பிரமாவும் மற்றைத் தேவர்களும் மலர்கொண்டு அருச்சித்துத்தொழுது போற்றித் துதித்து நின்றனர். அப்பொழுது கலைமான் முதலியோர் நல் இசைபாடத் திருமகள் சென்று ஆவின்பால் ஏந்திவந்து சிவபெருமான்பொன்னடிகளை விளக்கித் துதித்து நின்றுள். அருந்ததி, அக்கினிதேவி, அதிதி, திதி, அனுசூயை, ரோகணி, லோபாமுத்திரை, பூமாதேவி, அயிராணி, கார்த்திகை, மேருத்தேவி, நவநிதி, காமதேனு நவசத்திகள், வினதை, நவதுற்கை, சத்தமாதர்கள், நந்திதேவி

கற்புக்கரசி என்னுஞ் சுருதி அம்மை முதலிய இவர்களும் மற்றைத் தேவமாதர்களும் புடைசூழ்ந்து பொன்னாலாத்தி புனிதன் முன் எடுத்தனர். கற்பூரவாலாத்தியும், பொற்சின்னமும், தீபமும், கவரியையும் ஏந்திப் பணிமாறிப் பரமனையும் பரையையுஞ் சேவைசெய்து போற்றினர்.

மங்கயர் மங்களம்பாட வான் மகளிர் மகிழ்ந்தாடக் கணங்கள் இயங்களார்ப்ப நந்தி முன்னே செல்ல மால் பிரமர் சூழச் சங்கரன் தேவியோடும் பொற்கோயிற்கு வந்து வாரணத்தை விட்டிரங்கி நந்தி திருக்கரம்பற்றிக்கல்யாணமண்டபத்தில் சுந்தர மெய்வடிவாளோடுந்தூய சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினர். புனிதன் இன்பமோடிருக்கும்பொழுது மால் பூசனை இனிது செய்து பதம் பணிந்து துதித்து வேய் வனத்துறை விமலனே! விண்ணவர் கோவே! என்னைக் காத்தருளும் நாதனே! என்று போற்றிக் கரங்குவித்து நின்றான். என்னை ஆளுடை நாயகன் எதிர் நின்ற மாயனை நோக்கித் தோத்திரங்கள் கேட்டு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டும் வரங்கள் கேளென, மாலும் மகிழ்ந்து தேவே! நீ இந்த மணக்கோலத்தோடு செங்கோல் கரத்தேந்தி உலகம் புரந்தருளவேண்டும். இதற்கு அருள் செய்க எனத் துதிக்க, அவ்வாறே செய்வோமென அருள்செய்து "நீயும் நின் திருமகளோடுஞ் சமீபத்திலேயே இருப்பாயாக" எனக்கூறிப் பிரமன முதலியர்க்கும் வேண்டும் வரங்களை எல்லாம் மனங்களிக்கத் தந்தருளிச் சிற்பரையோடும் வீற்றிருந்தருளினர். கல்யாண சுந்தரரைக் கருதி அன்பராய்க் கடிமணக் கோலங்காண்போரும் மருகுசூழ் மணிமண்டபத்தைக் காண்போரும் மிகப் பாக்கியத்தைப் பெற்று நன் முத்தியும் பெறுவர். உலகத்தில் திருநெல்வேலியில் பணிவன நாதனையும் வடிவாளையுந் தரிசிப்போர் தொழுவோர் துதிப்போர் ஊனமுள்ள பவக்கடல் கடந்து முத்தி யெய்துவர், எனறு திருநெல்வேலியில் காந்திமதியை ஐயன் மணந்தகதையைச்சூதமகாமுனிவர் சொல்லினர். கேட்ட நைமிசாரணிய முனிவர்கள் மகிழ்ந்து முனிவரைத் துதித்துப் பரமன் வடிவாளோடும் உலகத்திற் செங்கோல்செலுத்தின தன்மையைக் கூறவேண்டுமெனச் சூதமுனிவரும் ஐயன் பதமலரை அன்புடன் நினைந்து கூறுகின்றார்.

## ௫௫-வது பட்டாபிஷேகச் சருக்கம்.

மால்கேட்ட வரங்கொடுத்து மகிழ்ந்தவுமை மணந்துபோய் மாலின்
பால்காட்டி மன்புடனே மனைபோய் செங்கோலேந்தி யுலகைப் பாலனம்
மேல்காட்ட வாண்டருளும் வேணுவன நாதருயர் விரும்புஞ் செய்ய
கால்கோட்ட மில்லாது நெஞ்சினிடை நிறுத்தி நனி களிப்பா மன்றே.

பால்போலும் மொழியுடைய வடிவாளுடன் பரமன் பூலோக கைலாயம் என்னுந் திருநெல்வேலி நகரிற் பொருந்தி நாளுஞ் சாலோகசாமீப சாரூப சாயுச்ய சரணராகிமேலோர்கள் போற்றச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும்பொழுது, மால் தேவர்களோடும் பணிந்து துதித்துப் போற்றிப் பூரணனே! நெல்வேலிநாயகனே! தேவரீர் எனக்கு அளித்தருளியவரங்களின்படித் தேவியை மணந் தருளியதுபோல உலகத்தையுஞ் செங்கோல் செலுத்தியாள வேண்டும். இதல்லாமல் முன்னொரு காலத்தில் தாம்பிர சபையில் நடம் புரியுநாளில் குறுமுனிவர் முதலானவர்கள் நின் அடி துதித்து வேண்ட நீ முன் அருளியுள்ள வரத்தினாலும் வடிவாளை மணஞ்செய்த மணக்கோலத்தோடும் நிலம் எல்லாம் புரக்கவேண்டும் எனக் கேட்டான்.

சிவபெருமான், அவ்வாறே ஆகுக என இசைந்தருள, மால் களிப்புடனே மாதவரோடுந் தேவரோடும் மீண்டு வந்து தன் சிம்மாசனத்திருந்துகொண்டு முடிசூட்ட மண்டபம் இயற்றவும் அணி நகரை அலங்கரிக்கவுந் தேவதச்சனை நினைத்தார். அவனும் உடனேவந்து அடிமிசை வணங்கித் துதித்து எனை நினைத்தப ணிவிடையைக் கூறியருளவேண்டுமென்றுவேண்ட, மாலும் ஓ விசுவகர்மா! சிவபெருமான் முடி சூடி உலகெலாம்புரக்க யாமது வேண்டுகோளுக்கிணங்கிச் சம்மதித்திருக்கின்றார். ஆகையால் உடனே முடிசூட்டுதற்கு அணிமணிமண்டபம் அமைத்து நகரினை அலங்கரிப்பாயாக என்றனர். என்ற உடனே இப்பணிவிடைநான் செய்வேனென விடைபெற்றுச்சென்று மின்னுங் கதிர்பரப்பும் மணித்தூண்கள் பலவற்றை அணியணியாய்விளங்கநாட்டிப்பன் மணியுத்திரங்கள் சூட்டிமரகதத்தால் மோட்டுவளைபலவும் பூட்டிப் பொன்தகட்டினை மீதணிந்து பொற்றாமிகள் புனைந்தான்

நான்குதிக்குகளிலும் வச்சிரப்பலகைகள் சூழ்வரநாட்டி எங்கும் தோரணங்கள் சூளிகை மாளிகை பலவுந்தொடரச்செய்து பல கொடியும் விளங்கவைத்தான். வேள்விச்சாலைகளும் வேதிகை யும் போதிகையும் அணியாய்ச்செய்தான். நவமணித்தூண்க ளிற் பசுங்கதலி கமுகு நறுங்கன்னல் சேர்த்தி மணிவிளக்கும் மணிப்பாலிகையும் திகழவாக்கி ஒளிமிக்க சித்திரப்படங்களை அணியணியாகச்செய்தே அலங்கரித்து இடபக்கொடிகளைக்கோ டிகோடியாக நாட்டினன்.

வேதிகையின் மணிக்குடங்கள் விளங்கும் அட்டமங்கலங் கள் விரைத்தார் மாலைகள் ஓமத்திரவியங்கள் பலவற்றையும் நிறைய நிறையவைத்தே அரனும் அன்னையும் இருப்பதற்கு அணிநீலமணிகள்சேர்ந்தகுளிர்தருநிலவுசெயுங்காந்தஞ்செறிந்த அணிச்சிங்காதனமுஞ் சிறப்பாய்ச்செய்தான். முடிசூட்டு மண் டபத்திற்கு இது போன்ற அலங்காரங்களைச் செய்து ஆலயங் களும் அலங்காரமாகச் செய்தான். அழகிய நகரின் வீதிகளி லெல்லாம் விளங்கும் அணிமாடங்கள் கோடி அழகிய மணிகள் விளங்கும் தெற்றிகள் கோடி மாளிகைகள் கோடி ஒப்புற்ற பொன்மேடைகள் கோடி நீர் நிறைந்த வாவிகள் கோடி வேள் விச்சாலைகளும் அன்ன சத்திரங்களும் கோடானு கோடியாக நிருமித்தனன்.

நீண்ட தோரணங்கள், நிதிமணிக் கொடிகள், சிற்றால வட் டங்கள் அவிர் மணிக்குறிஞ்சிசூழ்ந்த குளிர்சாலைகளும் எங்கும் கோடி கோடியாய்க் குலவுவ. வீதிகளெல்லாம் பந்தல், மணித் தூண்களிலெல்லாம் வாழைகன்னல், பொலன்மணிப்பழுக்காய் சேர்த்துச் சீதநீர்ச் சாந்து நானச்சேறு பொற்சாடி சேர்த்து பூமாலைகளையும் நாற்றித்தனிமணிக் குடங்களும் வைத்தான். பொன்மணி மாடவீதிப் பூவையர் மனைகள் தோறும் வாசற்படி யில் பொற்குடங்களும் அட்டமங் கலங்களும் தூபதீபங்களும் மின்னுஞ் செம்மணி விளக்குகளும் நறு மணமாலைகளுஞ் சாந்தும் ஆகிய எல்லாம் நெருங்க விளங்க வைத்தான். மாமணி வீதிகளி லெல்லாம் மண்டப நிரைகள் சேர்த்தான். காவண வீதிதோ றுங் கூடங்கள் சேர்த்தான். பூவணி வீதிதோறும் பூங்காவித்

தருக்கள் சேர்த்தான். ஆவண வீதிதோறும் அளவற்ற பல வளங்களைச் சேர்த்தான். வேதியரின் வீதிகளிலெல்லாம் வேள்விச்சாலைகளும் அரசர் வீதிகளி லெல்லாம் உப்பரிக்கைகளும் வணிகர் வீதிகளிலெல்லாம் மேடைகளும் மாடங்களும் செந்தமிழறிந்த வேளாளர் தெருவி லெல்லாஞ் சிகரச்சாலைகளும் அழகுபெற நாட்டிப் பொன்னுலகும் வெள்குறப் பொன்னுலகினும் பல்லாயிரங் கோடி மடங்கு அழகுடைய தாக ஆக்கினான். மால்முதலிய தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வசிப்பதற் கேற்ற ஆலயங்கள் அழகுறச் சமைத்தான். நால் வகைப் படைகளும் மனைவிகளும் தங்க நல் லிடங்களும் மனைகளும் அமைத்தான். வீதிகளிலும் மனையின் வாயில் களிலும் பதுமைகளை அமைத்து ஆயிளும் வயதுந் தந்து சாமரை முதலிய இரட்டவும் வீணை வாசிக்கவும் நடன மாடவும் பாடவும் சமைத்து வைத்தான். அவன் அமைத்த வளங்களை எல்லாம் எவரே எடுத்துரைக்க வல்லவர். இந்த விதமாக வளங்களெல்லாமாக்கித்தச்சனும் மாலினிடம்வந்து பணிதனை இனிது முடித்துவிட்டேன் வந்துபார்த்தருளுங்களெனமாலும் பார்த்து மிகமகிழ்ந்து வேண்டும் வரங்களீந்து அனுப்பிச்சதாசிவமூர்த்திசமுகஞ் சார்ந்து போற்றித்தொழுது நின்று நெல்லைநாதனே சுந்தரக் கிரீடஞ் சூட்டு மண்டபமும் பிரவுஞ்செய்தாயிற்று நகரையும் வளம்பெற அலங்கரித்தாயிற்று. பங்குனிமாதம் உத்திர நட்சத்திரமாகிய இந்நாள் காந்திமதியோடும் மண்டபத்திற் சார்ந்து சிங்காசனத்திருக்க வேண்டுமென்று இரந்து வேண்டினான். மங்கையோர் பாகனும் உலகெலாம் உய்யவேண்டி நன்றென மகிழ்ந்து மங்கையோடும் மண்டபஞ் சார்தற்குத் திருவுளம் பற்றினார். குறிப்பினால் நந்திக்கு உணர்த்தினார். உள்ளக் குறிப்பினை உணர்ந்த நந்திநாதனும் மற்றைய தேவர்களுஞ் சூழ்ந்தார்கள். பல்லியங்கள் முழக்கினார்கள். அரம்பை மாதர் ஆடினார்கள். கந்தருவர் யாழ் வசித்தனர்.

திருமகள் நாயகனாகிய மாலும் பிரமனும் மற்றைத்தேவர்களும் பக்கத்தே சூழ்ந்துவரப் பிரம்பு ஏந்திக்கொண்டு நந்திநாதன் முந்திப்போக என்னையாளுடைய நாயகன் இமையமான்

வடிவாளோடும் பொன்மணிச் சிவிகை ஏறிப் புவி எலாம் புகழ மணிமண்டபத்தை நோக்கிச் சென்றார். வேதியர்கள் எங்குஞ் சூழ்ந்து வேதங்கள் விளம்பிக்கொண்டு தொடர்ந்து சென்றனர். மெய் அடியார்களெல்லாம் பொன்னடி பணிந்து கொண்டே தொடர்ந்து போயினர். நாதங்களும் நடன சங்கீதங்களும் ஓங்கப் பேதையர் கவரிவீசப்பிஞ்ஞகன் மண்டபத்துள் சென்று அழகெலாம் அன்புடன் கண்டுகளித்துச் சிவிகை விட்டு இறங்கி நந்தி செங்கை தந்திடத் தாய் வடிவாளோடுஞ் சென்று இந்து நன்மணிசேர் சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். அப்பொழுது பற்பல வாத்தியங்களும் முழங்கின. மெல்லிய நல்லார்களெல்லாம் பொற்றட்டு ஏந்தினர். அரம்பை மாதர் நடனஞ் செய்தனர். நெடுமால் செவ்விய அபிடேகஞ் செய்ய நினைத்து இதற்கு வேண்டும் மஞ்சனப் பொருளை எல்லாம் கொண்டுவரச் செய்து தேவர்களும் முனிவர்களும் முறை முறை சூழ ஆகம விதிப்படி சர்வலோக நாயகற்கும் நாயகிக்கும் அபிடேகஞ் செய்து ஆடை ஆபரணம் மலர் மாலை சந்தனஞ் சாந்து முதலியன அணிவித்துக் கடலெனவாத்தியங்கள் முழங்க வேதங்களை முறையே ஓதித்தூபதீபப் பணிமாறிக்காதலோடு இனிது ஏத்திக் கடவுளர் துதி செய்தார்கள். இந்தக் காலத்திலேயே அரி யயன் முதலியோர்கள் யாவரும் மகிழ் கூர்ந்து ஆயிரங்கோடி சூரியர்கள் குழுமியது போல்விளங்கும் மணிக ளழுத்திய பொன்முடியொன்றை நவமணிச் சிவிகையில் வைத்து நெல்லை மாநகரை வலஞ் சூழ்ந்துவந்து பங்குனி யுத்தர நாளில் அமுத ஓரையில் அன்பாய் வேளாளன் தர மாலயன் முதலியோரும் முனிவர்களும்வாங்கித் தாய்வடிவாள் ஒருபாகங்கொண்ட பரமன் முடியிற் சூட்டினர். அந்தரத்திருந்தோரும் மற்றோரும் மலர்மழை பொழிந்தனர், சங்கு, பேரிகை, தாரை, முரசம், மத்தளம், தாளம், சல்லரி, படகத்தோடுதிமிலை, பொற்றாரியம் ஆகிய இவைகள் எல்லாம் மங்குல்போல் எங்கும் முழங்கிட ஆர்த்தன. வான துந்துமியும் ஆர்த்தன.

தேவர் முனிவர்களும் மற்றைய உலகினர்களும் நெருங்கிச் சூழ்ந்து புகழ்ந்தனர். வேதியர் வேதம்முழங்கினர். கந்தரு

வர்கள் இசைபாடினார்கள். அரம்பையரும் பூதகணங்களும் எங்கும் ஆடிப்பாடினர். அடியார்களனைவரும் ஆனந்தம் பொங்கி ஆடிப்பாடித்துதித்தனர். தேவமாதர்கள் சோபனம் பாடினார்கள். பூமியிற் சிறந்து விளங்கும் புண்ணியப்பதியாகிய திருநெல்வேலியில் வீற்றிருந்து செங்கோல்தாங்கி முடிபுனைந்து அண்டகோடிகளை எல்லாம்புரக்கும் ஆதிநாயகனையும் ஆதிநாயகியையும்மாலும்பிரமனும் இந்திரனும் மற்றைத்தேவர்களும் முறை முறை அர்ச்சித்துப்பூசித்துத்தொழுதுநின்று அரகராசிவனே! ஆரணப்பரியுடையவனே! வானவர்க்கரசே எனப்போற்றிகளிசைத்து ஆனந்தபரவசராக நின்றனர்.

ஐயனும் மால் பிரமாதியர்களுக்கு அவர் வேண்டும்வரங்களையெல்லாம் இன்புறக்காதலோடு அளித்தான். மால்,மங்கைபாகன் மலரடிபோற்றிச் சொல்லுகின்றான், ஓ பரமனே! பரைபாகனே! குருமணிப் பசும்பொன் முடிசூடிய கோலத்தை எவர்களுங்கண்டுளமகிழவிரவுதோரணவீதியை வலஞ்செய்யவேண்டும் என்றான். கன்னிபாகனுங் கருணைசெய்தனன். மனங்களித்து வேதியன் முதலுள தேவர்கள்சூழ முந்தி வந்தனர். நந்திநாதன் பூதர்களை நோக்கி வெள்ளியங்கிரியிலுள்ள இரண்டாயிரங் கொம்புகளையுடைய ஐராவணத்தையும் பொற்சிவிகையையும் அலங்கரித்துக் கொண்டுவருக என்னலும், அவர்களும் அதுசெய்தனர். உடனே நந்திநாதன் பெருமானிடத்தே இயம்புதலும், என்னையாளுடைய ஐயன் தந்திமேலும் என்னை ஆளுடைய அன்னை சிவிகையின்மீதும் ஏறியருளினர். தேவர்கள் மலர்மழை பொழிந்தனர். கின்னரர் வீணைவாசித்தனர். வேதியர்கள் வேதங்கள்முழக்கினர். அரம்பையர் ஆடிப் பாடினர். இயம்பல பூதர்கள் முழக்கினர். விஞ்சையர்கள் நாதகீதங்கள் நலம்பெற நவின்றனர். குண்டோதரன் குடைபிடித்தான், ஜெயையும் விஜையையும் சாமரை வீசிப் போந்தனர். வாமலோசனை விசிறிவீசிப் போந்தனள். விலோசைமாது கண்ணாடி எடுத்துப்போந்தாள். யோகரெல்லாம் பந்தங்கள் பிடித்துப் போந்தனர். புனிதர் தூபம் ஏந்திப்போந்தனர். பொன்னனையார் ஆலவட்டம் ஏந்திப்போந்தனர். கணபதி ஆகுவாகனத்திலேறித் தன் கணங்களோடு சென்றான். குமரன்

மயின்மிசையேறி நவவீரர்களும் ஏனையவீரர்களுஞ்சூழ அடைவுடன் மருவிவந்தான். இந்திரன் பிரமன் மால் முதலிய தேவர்கள் தத்தம் ஊர்திமேலேறிச் சென்றனர். வடிவுடையாளுடனே சிவபெருமான்கோயில் நீங்கி வெளிப்பட்டவுடனே வானோர் தேமலர்மாரி பொழிந்தனர், பாணுகம்பன் ஆயிரம்வாய்தோறும் சங்கினைத்து ஊதித்தகவோடு முன்னே போந்தான். மேக முழக்கம்போல வாணன் தன் ஆயிரஞ் செங்கைகளாலுங் குடமுழவு கொட்டிச் சிறப்புடன் கூடப்போயினன். நந்தி நாயகன் முன்னே சேன்று நம்பனுர் மருங்கு சென்று வந்துறுந் தேவர் தம்மை பிரம்பினுலோச்சி அழகிய அணிகளாக்கித் தோரணவீதி தோறும் வெந்திறற் பூதர்சூழ விமலனைப் புகழ்ந்து போந்தான், வெண்குடைகள் கோடி, இடபக் கொடிகள் கோடி, ஆலவட்டங் கோடி, தோரணங்கள் கோடி, பூரணகும்பம் முதலிய அட்டமங்கலங்கள் கோடானுகோடியாகச் சூழ்ந்துபோந்தன, தேர்கள் கோடி, யானைகள் கோடி, பரிகள் கோடி, சுந்தர அரசர் கோடி, வணிகர் கோடி, முந்துவேளாளர் கோடி முறைமுறை பணிந்து இனிதுபோந்தனர்.நாடகசாலை மாதர் நடனங்கள் புரிந்து போந்தனர்.மாடக வீணை ஏந்தி மதங்கர் வாசித்துப்போந்தனர். பாடகர் கோடி கோடி பரிந்து முன்பாடிப் போந்தார். ஆரும் அம்மானைகளாடி அரம்பையர் அநேகர் போந்தார். வன்னச் சாந்தாற்றிவீசி மாதர்கள் கோடி சென்றார். மின்னிடைமடவாரெல்லாம் விடைக்கொடி ஏந்திப்போயினர். அன்னமென் இடையார்கோடி ஆலாத்தி எடுத்துப்போர்ந்தார். அயிராணி மேனகை முதலியோர் புகழ்ந்து போயினர். ஆதியான் பவனிபோத அலங்கரிக்கப்பட்ட பொன்வீதியில் சோதி நன்மணிகள் பூண்ட தோரணம் அனந்தகோடி மேன்மைமிக்க நிலைத்தோரணங்கோடி விரிமணிப் பந்தர் கோடி, போதினாலலங்கரித்த பூம்பந்தரனந்தகோடி, மேடைகளிலெல்லாம் விளங்கும். பொன்மணிகளெல்லாம் செங்கதிர் நிலாப்போல் ஒளிர்வெயில் நிலவுகாலும். வீதிகள்தோறும் தேவர்கள் சிந்தும் மலர்கள் விளங்கித்தோன்றும் வாவுறு நிறுத்தகீத வாச்சிய முழங்கியார்க்கும். மூவகைபுலகத்துள்ளோர் மொய்த்திட நிறைந்து தோன்றும். ஆவணவீதிதோறும் அளவில் பலவளங்களாரும்.

மனைகள்தோறும் மாதர்கள் மணிவிளக்கு இனியவாசம்சீத பூரணகும்பம் தூபதீபங்கள் மாலைகள் சாந்தம் மங்கலம் பட்டாடை முதலியவற்றை வேதிகைதோறும் வைத்தார்கள். வாழை தென்னை கமுகு முதலியவற்றை மனை தோறும் நாட்டிக் குலையை வீக்குவாரும் ஆக விளங்கினர். முத்துமாலை முதலிய மணிமாலைகள் முதலியவற்றை விளங்கத் தொங்கவிட்டனர். இந்த விதமான வளங்களையெல்லாம் இறைவனும் இறைவியுங் கண்டு களிப்புடன் செல்கையில் கண்ட பருவப்பெண்களெல்லாம் நெருங்கித் தொடர்வது, மதனை முன் எரித்த கந்தரக்கருப்பரென்றே அந்த மதனின் சேனை என் ஐயனைத் தொடர்வதுபோலிருந்தது. வந்து கைகூப்பித் தொழுதுநின்று, நாணற்றார்சிலர், வளையற்றார் சிலர், கலையற்றார் சிலர், நிலையற்றார் சிலர், மதன்கணையாற் றுயர்பெரிதுற்றார். மாலைமேல் மாலைவைத்தார் சிலர். கொங்கையை நோக்கிக் குழகன் தோளினை நோக்கினார் சிலர். கூடப்பெறாமையால் வைதார் சிலர். அந்திவண்ணன் அழகினைக் காண இந்திரன்போலாயிரங் கண்ணில்லையே என்று ஏங்கினார் சிலர். மாலினால் மெய்மறந்தார் சிலர். தேவனே! நின்னரசியல் நன்றெம் மேகலை கவர்ந்தனை என்பார். இதுவோ அருளிற் புரத்தல்? எம்மை உருவிலி போர்செயக்கண்டு நீ இன்பருளாது ஏகுதல் நன்றன்றென்றனர். இந்தவிதமாக ஏழ் பருவப்பெண்களும் காமத்தால் துயறுற்றனர். இவ்விதமாக அமலன் அணிவீதி எல்லாம் வலஞ்செய்து கோபுரவாயிலை நண்ணினன்.

அப்பொழுது பூதர்கள் வாத்தியங்களை முழக்கினர். தேவர்கள்பாடிப் புகழ்ந்தார்கள். பாவையர்கள் மணித்தட்டேந்தினார்கள். மங்கள சோபனம் பாடினார்கள். இந்திராணி முதலியோர் ஆலத்தி சுத்தினர். அரம்பையர் ஆடினர். பின் இறைவர் வடிவாளோடும் ஆலயத்துட் புகுந்து அரியாசனத்து வீற்றிருந்தார். சிவபெருமான் அறுபதினாயிரந் தேவவருடம் முடிபுனைந்து திருநெல்வேலியில் சிம்மாதனத்திலிருந்து அரசியற்றினர். இவர் செங்கோல் செலுத்தும் நாட்களில் அறமே ஓங்கி மறமேதேய்ந்துமாதமும்மாரிபெய்யநிலங்கள் உழவுத்தொழிலின் றியேபலனைத்தர உயிர்களெல்லாம் துன்பமென்பதோ அறியாராய்இன்பமேத

பெற்றுப்பகை உற்பாதம் என்பன தவிர்ந்து இறப்பும் பிணியும் பகையும் அற்று வாழ்ந்திருந்தனர் செபங்களுந் தபங்களுஞ் சிவ பூசையுந் திருவிழாக்களும் மலிந்திருந்தன. புலியும் பசுவும் பொருந்தியுங் கருடனும் பாம்புங் களிப்புடன் கூடியும் வாழ்ந் தன.

தருமதேவதையாகிய ரிடபத்தின்மேல் விளங்குபவரும் அறம் வளர்த்தாயின்றலைவருமாகிய சிவபெருமானே முடிபுனைந்து செங்கோலோச்சினுல் இன்பமேயலாது உயிர்கள் துன்பமும் அடையுமோ? மரணமே எவரும் பெற்றிலரென்றால் இயம்புவ தென்னே? யமபுரங் காலியாகவே தனக்குத் தொழிலில்லாமை யால் எமனுங் கணக்கெழுதுஞ் சித்திரபுத்திரரை அழைத்துக் கொண்டு நாதனைக்கேட்போமெனக்கயிலைக்கு வந்தான். இதற்கு முன்னமேயே மாலும் பிரமனும் தம் உலகம் காலியாகவேகார ணம் என்ன கேட்போமென்று அகங்காரத்துடனே கயிலைக்கு வந்தனர். நந்தி நாதனைக்கண்டு தொழுது வந்தகாரணத்தைச் சொல்ல, நந்திநாதனும் நகைத்து, நீங்கள் இங்கு சொல்லிய சங் கதியை முன்சென்று சொல்லத்தகாது உங்களையும் அங்கே முன்னுறவிடப்படாது. முதல்வன் இக்கைலை தன்னில் இலிங்க ரூபியாய் அன்புடனே வைகுகின்றான். நிறைந்த கலைகளோடு திருபர்தம்வடிவுகொண்டு உலகமெல்லாங்காக்கத் திருநெல்வேலி யில் உறைகின்றார். உலகெலாம் முடிபுனைந்து காக்கின்றார். இவற் றை எல்லாந் தெரிந்த நீங்கள் மறந்து இங்குவந்தீர். அந்தவரை வனத்தேகும் என்றான். அந்தோ! நாம் வந்து அமலனைக் காணற்கேலாது போயிற்றே என்று கவலும்பொழுது இந்திரன் கயிலையிலுள்ள தீர்த்தங்களும் மற்றைத்தீர்த்தங்களும் ஆடிச் சிவபூசனைசெய்து கொண்டு சென்றுமைப்படி கண்டனுரை வ ணங்கி நாம் போவோமென்றான்.

அது கேட்ட மால்பிரமரும் குருமொழியெனக் கொண்டு கயிலையிலுள்ள தீர்த்தங்க ளெல்லாம் ஆடிச், சிவலிங்கத்தை கவுரி தன்னோடும் ஒரேமனதாய்ப் போற்றி பூமியில் வந்து வடக்கே கயிலையிலிருந்து கன்னியாகுமரிவரையுள்ள தீர்த்தங்களி லெல் லாம் ஆடித் தலங்களையும் மூர்த்திகளையுந் தரிசித்துப் போற்றிப்

பின் சிந்து பூந்துறையைச் சார்ந்து நீராடி ஏனைய தீர்த்தங்களி லெல்லாம் ஆடி தனிமுதற் கோமான் உறையும் நெல்லைமாநக ரைச்சார்ந்தனர். பொன் மதிலாலயத்தை வலஞ் செய்து வணங்கினர். அருகு கோபுர வாயிலில் ஆடுகேதனங்கள் தோர ணங்கள் மாளிகை மாடங்களோங்க இரு மருங்கு மெவ்வுலகி லுள்ளோ ரெல்லாம் நெருங்கக் கருணை நாயகனரசு வீற்றிருப் பது கண்டார். சபைவாயிலை எய்தி நந்திதேவனைக் கண்டு வணங்கிப் போற்றினர். அப்பொழுது அவர்களை நோக்கி நந்தி ஓமால் அரன் ஆதிதேவர்களே! இந்தத் தலத்தில் சரா சரமான எவையுஞ் சித்தம் அஞ்சுமோ? உமது உளந்திரிவது சிறப்போ? முத்தியைப் பெற அரசியற்றிய முறைகண்டு புத்தி போத மும் பொருமையிற் சேர்ந்தீர். இந்த நெல்வேலியில் அசத்தியம் புகல்வோர், நீதி இல்லாதவர், பொறாமை யுள்ளோர், சூது செய்பவர், கொடுமைகள் புரிவோர், தூர்த்தர், பாவியர், ஆகிய இவர்கள் ஒருவருமில்லை முன்னீர் இந்தச் செய்தியை மொழிய உத்தர கயிலையிற் சென்றதால் வரதன் உங்கள்மேல் கோப மோடிருந்தான். உலகத்தில் தீர்த்தங்களாடி ஆலயங்கள் தரி சித்தே தூயவரானீர். துக்கம் நீங்குமின் என்று சொல்லி மேலுஞ் சொல்லுகின்றன். மால் என்றும் பிரமனென்றும் தேவேந்திர னென்றும் சொல்லப் படுகின்ற நீங்களும் மற்றத் தேவர்களும் முன்னோர் கற்பத்தில் அமைவோடு செய்த அதிகா ரம் துன்பமாம். அற்ப சுகமெனநினைத்துத் தூய நற்றவம் பல புரிந்து சிவபெருமான் அருளினல் தேவதேவனும் விமலனைப் போற்றி இன்பமுத்திச் சிவானந்த வீட்டில் இனிது வீற்றிருந் தீர். அதனலே தான் இந்தக்கற்பத்தும் உங்கள் மனத்திருக் கும் ஆணவம் ஒழியச் செய்தோம். இன்னமும் நீவிர் தேவ தாருவேயாகியிருந்து தவம்புரிந்திட வேண்டும். நான் சொல்லிய இதைச் செய்திடுங்கள். என்று நந்தியடிகள் சொல்ல மால் பிரமாதியர் மன்னுதம் அதிகாரத்தினல் மீறிவரும் கோபத்தை மாற்றி தூயமனதில் சிவஞானம் நிறம்பியவராகி நந்தியைப் பணிந்து வாயிலினுள்ளே சென்று அரன் அரசக் கோலமும் மணக் கோலமும்திகழ கொலு வீற்றிருப்பதைக் கண்டு கான்

மலர் மிசை வீழ்ந்து எழுந்து செங்கைகள் கூப்பித் தொழுது துதித்தனர். அர்ச்சனைசெய்தார். விநாயகர்சுப்பிரமணியர்மருங்கே யிருக்க பரையோடும் வீற்றிருக்கும் பெம்மானைப் போற்றி நின்றனர். இவ்வாறு இவர்கள் போற்றுவதைக் கேட்ட சிவ பெருமான் மனமகிழ்ந்து நின்துதிக்கு உவந்தனம் வேண்டும் வரங்கள் கேட்பீர்களாகவென, கன்னியோர் பாகக் கடவுளே! யாங்கள் கற்பக தருவாநின்று இத்தலத்தில் தவமியற்றி முத்தி அடைய வேண்டும். இத்தலத்தில் எப்பிரளயத்தினும் நாங்கள் குறைவில்லாது நின்று சபையில் நீ நடித்திடும் நடனந் தரிசித்துத் திருமூலத் தானமுஞ் சேவித்துப் போற்றிச் சுந்தரக் கருணைவடிவாளையும் போற்றிச் சூழ்ந்து இனிது இருக்க வேண்டும். இத்தலத்தில் எவரேனும் வந்தவர்கள் மகிழ்ந்து குடியாய் உற்றவர்கள், பிறந்தோர்கள், இறந்தோர்கள் ஆகிய இவர்களும் நின்பதம் அடைந்திட வேண்டும். தேவே! நீயுங் கொற்றவளுக வடிவாளோடும் அரசியல் புரிந்து குவலயம் முழுதுங் காத்து என்றும் புகழ்பெற இருத்தல் வேண்டும். இந்த வரங்களை எல்லாம் எங்களுக்கு அருள வேண்டும் என்று கேட்டனர். ஈசன் இன்புடனே கேட்ட வரங்க ளெல்லாம் அளித்தோம் என்றனர். தேவர்கள் நனிமகிழ்ந்து வான்தருவாய் அத்தலத்திலிருந்து போற்றித் துதித்துக் கொண்டு அனுதினமும் இருப்பாராயினர். உலகெலாம் போற்றத் தருமந் தழைத்து ஓங்க உயிர் கட்கு இன்பம் பெருக என் அம்மையோடும் அறுபதினையிரந்தேவவருடம் ஆண்டு, இருபோதுங், கணத்துக்கு ஆயிரம் பொன் இரவலரில்லை என்றாலும் எவர்க்கும் நல்கி நரர் முதலிய உயிர்கள் பணிந்திட முத்திதரும் வரததான நாயகராய்த் தகவுடன் இனிது வீற்றிருந்தார்.

பிறையணிசடையான் அரசுபுரிந்தபின் வேல்இளங்குமரன் இறைவர் போற்ற முனிவர்கள் ஏவல்செய்திட நிலவுலகத்தை நெடுங்காலம் அரசுசெய்தான். இந்தவிதமாக எங்கோன்நெல்லைவாழ் இறைவன் இனிது அரசுசெய்தான்; என்று சூதமுனிவர் கூறநைமிசாரணிய வாசிகள் கேட்டு மகிழ்ந்து புகழ்ந்து அடிபணிந்து தொழுதனர். பிரகு முனிவர்கள் சூதமுனிவரை

நோக்கி ஒபுங்கவ! முனிவர்தம் திலதமே! மன்னவற்கு மால்தி ருவிழாநடத்திய கதையையும் எங்களுக்குப்புகலவேண்டும் என் று கேட்க முனிவர் சொல்லுகின்றார்.

## ருசுக வது, விட்டுணுதிருவிழா நடத்திய சருக்கம்.

பணிவனத் தமரும் நாதன் பதுமநற் கழல்கள் போற்றி
கணிவிழி வடிவாள் தேவி கருணையந் தாள்கள் போற்றி
துணைமுலைத் திருசேர் கண்ணன் துகளறக் களிப்பிற் செய்த
இணையிலதான தூய இயல்விழாப் போற்றி போற்றி.

சிவபெருமான் செங்கோலேந்திப் பாரெலாம் புரந்தபின்னர் மால் நம்பனுர்க்கு நல்விழா நடத்த எண்ணி வடிவுடைநாயகியைப் போற்றி அன்னையே நெல்லைவாழும் அம்மானுக்கு அணிவிழா வைமன்னும் இவ்வுலகமெல்லாம் மகிழ்வுற நடத்தவேண்டும். இதுவேதமியேன் கேட்கும் வரம் இனிது அருள்க, தேவி! என் ன, தன்னிகரில்லாத்தாயும் அவ்வரம் தந்தோம் என்றாள். மா லும் மகிழ்ந்து துதித்துத்தொழுது விடைபெற்றுச்சென்று கோ யிலைவலஞ் செய்து உட்சென்று நெல்லைப்புனிதன் சன்னிதியின் முன்னர் நாயகசபையில் தென்பால்நண்ணி ஆசனத்தில் வைகி அகத்தியர் முதலாயுள்ள அருந்தவர்களை நோக்கி அனவரததான நாயகருக்கு மிக்கபெரிய அணிகளோடும் விழாவணிநடத்த வேண்டும் வகுக்கப்பட்ட ஆகமத்திலுள்ள முறைகளைக்கூறுங்க ளென்றான். அவர்களும் நன்றெனமகிழ்ந்து சிவபெருமானை மனத்தில் நினைந்து வணங்கிப்போற்றி ஆகமவிதிகளை எல்லாம் அடைவுடன் மொழிந்தார். அவற்றைஎல்லாம் அறியக்கேட்டு தேவர்கள்,முனிவர்கள், புலவர்கள், அரசர்கள், சூழ,விழாவணிந டத்தினன். நித்தியஉற்சவங்கள் பட்சத்திருவிழாக்கள் மாதத் திருவிழாக்கள் வருஷத்தில் ஏற்படும் விசேடமாந்திருவிழாக்கள், சித்திரைத்திருவிழாக்கள் வசந்தந்திருவிழாக்கள் ஆடிப்பூரத்தி ருவிழாக்கள். ஆவணித்திருவிழாக்கள் கன்னிமாதத்திருவிழாக்கள் மகாநவமிப்பூசைஐப்பசித்திருக்கல்யாணம்கார்த்திகைத்திருவிழா க்கள் மார்கழிமாதத் திருவிழாக்கள் தைப்பூசத் திருவிழாக்கள்

பமாதம்மீனமாசத்தில் நடக்கவேண்டிய திருவிழாக்கள் ஆகிய எல்லாத்திருவிழாக்களையுஞ் சிவபெருமானுக்கும், காந்திமதியம்மனுக்கும், விநாயகருக்கும், குமரக்கடவுளுக்கும், வயிரக்கடவுளுக்கும், சுந்திரசூடர், கங்காளர், நந்தி, காளி, மாவீரர், தண்டீசர் முதலிய எல்லாத்தேவர்களுக்கும் முறைமுறை திருவிழா நடத்தினன்.

நெல்வேலிபபெருமானுக்கு நீலமேனிமாயன் செய்த திருவிழாச்சிறப்புசிறிது சொல்லுகிறேன் கேளுங்கள், ஆலயங்களிலும், நகரிலும், வீதிகளிலும், மாடங்களிலும், கூடங்களிலும் மனைகளிலும் சித்தமும் அலங்காரம் பலவுஞ்செய்து, நவமணித்தூண்கள் கோடி கோடியாக நாட்டி, தூண்களிலெல்லாங் கரும்பு வாழைகமுகுபுன்னை முதலியவற்றை பழக்குலையோடுகட்டி, பூமாலைகளையும் மணிமாலைகளையும் நிறைநிறையே தொங்கவிட்டு, பொன்னாலும் மணிகளாலும் பாவைகள் செய்து, வையிரச்சுவர்களிலெல்லாஞ் சித்திரங்கள் தீட்டி, யானைகளையுந் தேர்களையும் பரிகளையும் சப்பரங்களையும் அலங்கரித்து, வீதிகள் மனைகள்மடங்கள் கோபுரங்கள் செய்மேடைகள் குன்றுகள் செய்குன்றுகள் முதலிய இடங்களிலெல்லாம் தீபங்கள்வைத்து, பூதம் சிங்கம் யாளி பரி மயில் முதலியவற்றை வீதிகளில் இருபுறங்களிலும் விரவிமுன்னெடுப்பச்செய்தான்.

பட்டாலவட்டம் வெண்குடை, பவளக்குடை, வட்டவெண்குடை சந்திரவட்டஞ் சூரியவட்டம் முதலியன கோடி கோடியாய் நெருங்கச்செய்தான். கொடிகள் நாட்டித் திருவிழாப் பத்துநாளுஞ் சிறப்புறச்செய்தான். பேரிகை, முரசு மத்தளம் முதலியவாத்தியங்கள் முழங்கின. மாதர்கள் ஆடல்பாடல் அழகுற அமைந்தன. அந்தணர்கள் வேதங்கள் ஓதி எங்கும் நெருங்கினர். தூபதீபங்கள் எங்கும் கவின்செய்தன. பந்தங்களுந் தீவட்டிகளும் எண்ணற்ற கோடி விளங்கின. அரம்பை மாதர்களும் ஆயிழை மாதர்களும் ஆடவுங் குரும்பை மென்முலைக் கோதையர் பாடகர் குழுமிப்பரிந்து கீதங்கள் வீணைகள் பண்ணொடு பாடவுஞ்செய்து வீதிகள்தோறும் மனைகளிளெல்லாம்

மலர்ப்பந்தல்களும் அட்டமங்கலங்களும் பெருமணிக்குடங்களு ம்வைத்துநற்றாபதீபங்களால்அணிபெறச்செய்தார். வீதிகளெல் லாம் மக்கள் ஆனைப்போரையுந் தகரின் போரையுங் காடைப் போரையுஞ் சேவற்போரையும் மூட்டி அணிசெய்வித்தனர். மானிடர் தேவர் நாகர் மற்றுளதிசைகாப்போரும் மேனை முத லிய தேவமாதர்களுஞ் சப்த இருடியரும் மற்றும் உள்ள முனி வர்களும் தானைகளும் மற்றப் பூதருத்ரகணங்களுந் தகவினோ டுங் கோணகர் வீதியெல்லாம் கூடிக்கூட்டமாக நெருங்கி வந்த னர். இந்தவிதமான சிறப்போடும் உமாதேவியோடு சிவபெரு மான் வீதிகளை வலம்வந்து கோயில்வாயில் சேர்ந்தார். தனமா கிய மலையை ஏந்து மாதர்கள் சங்கீதம் பாடியாடவும், அடியார் கள் எங்கும் நெருங்கித் தொழுது போற்றவும், மணிமண்டபத்தே தேவியோடும் அரி ஆசனத்துவீற்றிருந்தார். பரமன் அங்கிருக் கும்போது பாவாடை பரிந்து சூழும் வரிசைகளோடும் வந்து மகிழும் நைவேதனஞ்செய்தார். அரி அயன் போற்றத்தீபாரா தனை செய்தனர். விரிஞ்சிலமாந்தரும் தேவலோகத்தவரும் கண் ணும் மனமுங்களிக்கச்சேவைசெய்தார்கள்.

நாடகசாலையோடு நட்டுவர் முன்னே வரவும் பாடகர் வாத்தியங்களோடு பாடி வரவும் மாடக வீணையோடும் மதங்கிய ராடிப்போதவும் ஆடகத்தட்டு ஏந்தி ஆயிழை மாதர்கள் சூழ்ந் தனர்.

அரம்பையர்கள் எவருஞ் சூழ்ந்து ஆலாத்தி ஏந்தி வந்தார் கள். மாதர்களெல்லாங் கூடிமுன் ஆடிப்பாடி வேய்முத்தரை யும் வடிவாளையும் போற்றித் துதித்தார்கள். சோபனங்கள் பாடி மின்னென விளங்கி நின்றனர். நந்தியங்கடவுள் பொற்பிரம் பேந்தித் தேவர்களைப் பந்திசெய்து கட்டியங்கள் கூறிநின்றார். இந்தவகை நாலாநாளில் இடபவாகனத்தில் ஏறி உலகம்போற் றப் பவனிவந்து ஒன்பதாநாளில் திருத்தேரில் வலம் வந்ததும் பத்தாநாளில் சிந்துபூந்துறை நீராடியும் கோயின்மேவித் தேவி யோடுங் குமாரர்களோடும் யிருந்தருள் செய்தார். அடுத்தநாள் பலிகள் கொடுத்து தேவபூசைகளும் பூதபூசைகளும் நல்கி அன் போடு அந்தணாளர்கள் வேதங்களை முறையே ஓதிக் கொடிகளை

இறைஞ்சி மகிழ்ச்சி கூர்ந்தார். நாரணன் நல்விழா நடத்திப் பிறகு தெப்போற்சவமுஞ் செய்வித்தான். திருவிழாப்பத்துநாளும் அன்னதானஞ், சொர்ணதானம், பூதானங்,கோதானம், முதலிய அளித்து மகிழ்ந்திருந்தான். இந்தவிதமாகப் பன்னிரண்டு மாதங்களுந் திருவிழாக்களைச்செய்து தேவர்கள்சூழ நெலீவேலிநாதர் சன்னிதியிலே அருச்சித்துத்துதித்துப் போற்றி செய்து முன் நின்றான். அப்பொழுது நெல்லை நிமலனும் நிமலியும் இலிங்கத்திலிருந்து தோன்றி காட்சி கொடுத்தருளித் திருவிழா எடுத்ததற்கு மகிழ்ந்தோம் வேண்டும் வரங்களைக்கேளென, மாலும் அடங்காமகிழ்கொண்டு ஆனந்தவசத்தனாகி நின்று துதித்துப்போற்றி ஐயனே! நெல்லை நாதனே! வடிவுடையாள் காந்தனே! இந்தவிதமாக எவர்களேனுந் திருவிழாக்கள் செய்தால் வீட்டின்பந்தருளவேண்டும் எந்தத்தலத்திலும் கோயில் எனக்கிருந்திடினும் வேணுமுத்தனே உன்னை எண்ணி மகிழ்ந்த கண்ணிணைகளோடும் சித்தம் உவந்து நாளுஞ் சேவை செய்திடவேவேண்டும். உன்மேல் அன்பும் பத்தியும் பரமனே அருளவேண்டும், என்று கேட்கத் தூயவன் இனிது நல்கித் திருமகள் மருவிய மார்புடைமாலுக்கு விடைகொடுத்தருளிப் பின் அம்பிகையோடே இலிங்கத்தூடு மறைந்தருளினார். வரதனரிலிங்கத்துட்கரந்தபின்னர் மாயனார் மகிழ்ந்து போற்றிப்பக்கத்தேயுள்ள ஆலயங்களையெல்லாம் அன்பினிற்றொழுது பின் திருமகளோடும் நெல்லைப்பரமனை அருச்சித்துத் துதித்துக்கொண்டே சமீபத்திலே இருந்தான். இதேவிதமாகப் பிரமனும் திருவிழாக்கள் செய்து நல்வரங்கள் பலபெற்று வலப்பாகத்திலே மகிழ்வுடன் இருக்கின்றான்.

இந்திரன் முதலிய தேவர்களும் இதேவிதமாகத் திருவிழாக்கள் செய்து வரங்கள் பல பெற்றுச் சுகமுற்றனர். மனு, மாந்தாதி, பூருவா இவர்கள் தாமும் எப்பொழுதும் விழாச்செய்வித்து நற்கதிகள் பெற்றனர். சூரியகுலத்திலுஞ் சந்திரகுலத்திலும் வந்தவர்களாகிய அரசர்கள் பலரும் பாண்டிய அரசர்கள் எல்லோரும் இதேவிதமாகத் திருவிழாக்கள்செய்து ஒப்பற்ற நற்கதியைச்சார்ந்தனர். என்று திருவிழா நடத்திய கதையைச்

சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குக்கூற, முனிவர்களும் கேட்டு வாழ்த்தித்துதித்து எங்கள் மயலற இக்கதை கேட்டோம் இன்னும் கன்னியோர் பாகன் முன்னர் கங்காளரூபமாக முன்னி அத்தலத்தில் வந்த காதையை மொழிந்தருளவேண்டுமென்று கேட்க, உளக்களிப்போடு சூதமுனிவர் முனிவர்களுக்குச்சொல்லுகின்றார்.

## ௱௭-வது, தாருகாவனச் சருக்கம்.

கொண்டலம் மேனித் தேவன் குறையறக் கங்கா ளத்துப்
பண்டைய கோலங் காட்டிப் பரிந்துதா ருகவ னத்தில்
அண்டிய முனிவர் சிந்தை யகந்தையை நீக்கி யின்பம்
மண்டலத் தளிக்கு மீசன் மலரடி போற்றி செய்வாம்.

நவமணிச் சிகரங்களும் பொற் கோபுரங்களும் மேருவைப் போலும் விதானக்கனக மண்டபங்களுங் கனக மாளிகைகளும் நெருங்கியுள்ளதும் மணிநெடு வீதி இருமருங்கினும் மருவிய பொன்னாலும் மணியாலும் அமைக்கப் பெற்ற தேவர் ஆலயங்களும் மாதவர்களின் ஆச்சிரமங்களுஞ் சோலைகளுஞ்சாலைகளும் வாவிகளுந் தூபிகளும் மிகப் பெருகிக்கவின் செய்வதும் மகரதோரணங்களும் மணியிடக் கயங்களும் வானளாவும் உயர்ந்தகேதனங்களும் மேடைகளும் நெருங்கிப் பொலிவதும் உருத்திர கணங்களும் உரகர் கின்னரர் கிம்புருடர்களும் யோகர் முனிவர்களும் அன்பர்களும் கூடிக்குழுமித் துதிக்கப் பெற்றதுமான வளமெலாம் நிறைந்த கைலைமலையின் மத்தியிலே மிகச் சிறப்பாக விளங்கும் உயர்ந்த சித்திர மணிமண்டபத்திலே அரம்பையர்கள் ஆனந்தத் தோடும் ஆடிப்பாடவும், விஞ்சைய மாதர்கள் வீணைவாசிக்கவும், மற்றவுலக மாதர்கள் தீபமும் ஆலத்தியுமெடுக்கவும், அருந்தவர்கள் ஆரணமொழியவும், துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கவும் குடை கொடி முதலியன விளங்கவும்; நற்றொண்டர்கள் போற்றவும் பல்லாயிரங்கோடி சூரியர்கள் ஒருங்கு கூடிப்பிரகாசித்தது போல உமாதேவி யாரோடும் மாலாதி தேவர்கள் சூழ்ந்து போற்றித் துதித்து இறைஞ்சவும்

நந்திதேவர்களைப் பந்தி செய்து கட்டியங் கூறவும், மற்றைத் தேவர்கள் ஏவல் செய்யவும், கணங்கள் போற்றிப் புகழவும், பூத கணங்கள் பல்லியங்களை முழக்கி ஆடிப்பாடவும், சிங்கஞ் சுமந்த மணியாசனத்து இரண்டு மக்களோடும் நாளும் வீற்றிருப்பார். உலகம் உய்ய மதுகைடவர்களைக் கொன்றருளிய வாயன் தூய நற்றவர் களெல்லாம் போற்றக் கருடன் மேல் ஏறிக் கொண்டு கயிலைக் குவந்தான் கயிலையில் வந்து வளங்களையும் அழகு களையும் கண்குளிரக்கண்டு மனமகிழ்ந்து நந்திநாயகனைப் போற்றிக் கடவுள் பால் செல்ல விடை பெற்றுச் சென்று சிவபெருமானைக் கண்டு தோத்தரித்து இருகரஞ்சிர மேல் வைத்து வணங்கி நின்றான். சிவபெருமான் மகிழ்ந்து விண் டுவை நோக்கி "ஓ விண்டுவே! நின் அன்புடைய தோத்திரங் கள் கேட்டு மகிழ்ந்தோம் வேண்டும் வரங்கள் கேட்பாயாக" என்றார் சிவபெருமானின் பொன்னடி போற்றி முன்புதானிறந்த மாயன் முதிர்சடந் தோண் மேலேந்தி அன்புறவரும் கங்காளக் கோலம் நான் அறிய வேண்டும் இன்புடன் தொழவும் வேண் டும் எனக்கருள்செய்யும் இவ்வரம் வேண்டும் என்றான். அதற்கு என்னை யாண்டருளுஞ் சிவபெருமான் விண்டுவை நோக்கி அவ்வாறே உனக்குச் செய்வோம் என்று கூறி மேலுங் கூறுகின்றார். பரைதவஞ் செய்யப் பெற்றதும வேதங்க ளெல் லாந் தவஞ் செய்து வேணுவென அமையப் பெற்றதும், இன் னும் பல வரங்கள் பெற்றதுமான திருநெல்வேலியில் மூலலிங் கமும் ஆதிலிங்கமும் விளங்கும். மால் பிரமன் முதலிய தேவர் கள் போற்ற அவர்களுக்கு இகபர முதவிக்காந்தி மதியும் அங்கு வீற்றிருக்கின்றாள். பொற்றாமரை கருமாரி கம்பையாறு சிந்து பூந்துறையோடு விளங்கும். பொருநையாறு முதலிய தீர்த்தங் கள் தன்னில் படிந்தோர்க்கு நல் கதியினைக் கொடுத்துக் கொண்டு விளங்கும் இந்தத் திருநெல்வேலியில் குறுமுனி வர்க்கு மணக் கோலங் காட்டினேம் காந்தி மதியோடும் வந்து அரசாட்சி செய்தோம் அந்தப் பதிக்குப் *பிரமவிருத்த புர மென்றும்பேராம். தேவர்களும் முனிவர்களுஞ்சூழ்ந்து எப்பொ ழுதும் தவஞ்செய்வார்கள். பிரளயமுடிவுகாலத்தும்அழிவின்றிக்

கன்னிப்பதியா யிருக்கும் என்று கலையாகம வேதங்களெல்லாங் கூறும் அத்தலமே தாருகாவனமும் ஆகும். உலகில் எனக்கு விருப்பமுள்ள பல தலங்களிருந்தாலும் நெல்வேலியே எமக்குக் கைலையாகும். இகத்தில் விரும்பி அத்தலத்தில் இருந்தோர் பிறந்தோர் இறந்தோர் மனத்தில் நினைந்தோர் ஆகிய இவர்க ளெல்லாம் அழியா முத்தியை அடைவார்கள்.

இத்துணைச் சிறப்புகளை எல்லாம் உடைய அத்திருநெல் வேலிப் பதியில் நீ விரும்பிய முதிய கங்காளவேடங் காட்டியருள்வோம், இலட்சுமியும் அப்பதியில் உன்னைக் கருதிச் சிந்தை மகிழ் கூர்ந்து அருச்சித்து அளவில் காலம் பூசை செய்து வருகின்றாள் ஆகையால், அப்பதியிற்சென்று அவளைச் சேர்கவென மொழிந்தருளினன். இதுகேட்டு ஆநந்தங்கொண்டு சிவபெருமானையுங் கவுரியையுந் தொழுது மன்னும் வரங்கள் பலபெற்றுப் போற்றித் துதித்து நின்றான். அச்சமயத்தில் தலங்களையெல்லாம் விரைவிற் சென்றுதரிசித்து தான் அங்கறிந்த புதுமைகளை எல்லாந் துலங்க அமலனிடத்தில் உரைக்கும் தூயவனாகிய நாரதர் அங்கு வந்தார். நந்திபெருமானிடம் விடைபெற்று உள்ளே சென்று சிவபெருமானின் சன்னிதியிற் சென்று தொழுது அர்ச்சித்துப் போற்றித் துதித்து நின்றார். அதுகண்ட சிவபெருமான் களிப்பொடு கண்டு நீ ஏதோ ஒரு காரியம் புகலவந்தாய் என்று கண்டோம் அதைச் சொல்வாயாக எனப் பெருமானே! நீ அறியாததொன்றுமுண்டோ? எல்லாம் நீ அறிந்ததே ஆனாலும் அதைச் சொல்லுகின்றேன் கேட்டருளவேண்டுமென்று நாரதர் கூறுகின்றார்.

ஆதியானே! பரம்பொருளே! தென்றிசையில் தாருகாவனமென்று ஒரு தலமுளது அத்தலத்தில் நெறியில்லாத முனிவர்கள் குற்றமற்ற கருமமே பொருளென்று தவங்கள் செய்கின்றார்கள். உன்னை நினைக்கின்றார்களில்லை. பதவி கொடுப்பதும் பாவத்தை நீக்குவதும் மறை பகருங் கருமம் என மொழிகின்றார். பஞ்சாட்சர மந்திரம் சடாட்சர மந்திரம் ஆகிய இம்மந்திரங்களைக் கூறுகின்றார்களில்லை. வேறு மந்திரங்களையே கூறுகின்றனர். அவங்களே புகல்கின்றனர் அரனே என ஒருகாலும் புகல்கின்

ரர்களில்லை, கலைகளுணர்ந்தும் அவனவன் செய் கருமந்தானே சொற்கதி பலனை யுதவும், சிவன் உதவும் பலன் ஒன்றும் இல்லை எனக் கூறுகின்றார்கள். அவர்களிடத்தில் நாயேன் சென்று அளவற்ற கருமங்களைச் செய்தாலும் அவனல்லாது பலன்வருமோ நீர் உண்மை நிலையை அறியீர்என மொழிந்தேன். அதற்கு அவர்கள் கருமஞ்செய்யாமற் சிவனே பலனைக் கொடுப்பது இது எவரும் சொல்லக்கேட்டிலோம், எமக்குந் தெரியாது, உண்மையும் இதுவே மகமாதி தவம்புரிந்தோரே பெரும் பலன் பெற்றனர், பெறுகின்றனர், நிகழும் இதற்குச் சிவனை நாம் ஏதுக்காக நினைப்பதென்கின்றார்கள். மறுத்தும் அவர்களுக்கு நான் இருவினைகளுக்குந் தக்க பலனை யுண்டாக்குபவன் சிவனே எனக் குறித்து வேதங்களும் ஆகமங்களும் சாத்திரங்களும கூறுகின்றதெனக் கூறியும் அவர்கள்கேட்கவில்லை. பின்னும் அவர்கள் அறியும்படி பலபல சொல்லியும் உன்னை நினையாதவர்களாய்த் தவம் புரிந்து கருமங்களை எல்லாம் வழுவில்லாது செய்துவருகின்றனர்.

அவர்கள் அறியாமயக்கால் இதுசெய்கின்றார்கள். பேதமில்லாவானவர்கள்மனுடர்கள்உன்னைநீதியொடும் பூசைசெய்யார் உன்னைநினைத்தறியார், உன்னருளில்லாது போவார்களே! உன்னருளில்லாமற்போனால் நரகத்தில், வீழ்வார்களே! இதுநன்றோ? முன்நாளில் தக்கன்நிந்தைசெய்துபட்டபாட்டை அறிந்தும் இந்நாளில் இவர்கள் உன்னைநிந்திக்கின்றனர். ஏது எடுத்துக் காட்டி நெறிகளைச்சென்னாலும் தெரிந்துகொள்கின்றார்களில்லை, ஆகையால், முதல்வா! இந்தமாயவனை அனுப்பி அவர்கள் அகந்தையைத்தீர்த்து அருள்செய்ய வேண்டுமென்று சொல்லித்துதித்து நின்றான். அமலனும் நகைசெய்தார். அப்பொழுது மாயனும் அறிந்து நாரதர் சென்னபடி செய்தருள வேண்டுமென, திருவுளமகிழ்ந்து, ஓ நெடியமுகிலே! நெறிமுனியே? நீங்கள் கேட்கும் வரத்தாலும் உலகமெல்லாம் உய்யவும் பணைகள் சூழ்ந்துஞ் சேர் செல்வேலிமுடிவில்லாதமுத்திதரும் முதியதாருகாவனத்தின் மடமை நிறைமுனிவர் அகந்தையைமாற்றுவோம், என்று அருள்செய்தான். நந்தியைநோக்கி நமதுநாதன் விடையைக்

கொணர்களனமொழிய நந்தியும் அலங்கரித்து விடையைக்கொணர்ந்தான். தாருகாவனத்தில் முன்னாளில்காளியோடு ஆடி, அவள் அகந்தையை அடக்கினதுபோல இப்பொழுது முனிவர்களின் அகந்தையைத்தீர்த்திடுவோம் என்றுரிஷபத்தின்மேல் ஏறியருளினார். கவுரியும் விடைமேற் கூடஏறிக்கொண்டாள். தேவர்களும் முனிவர்களும் பூதகணங்களுஞ்சூழ்ந்து கூடவர என்னைமுடிமிசைத்தாள்கள் வைத்தாண்டருளுஞ் சிவபெருமான் தாருகாவனத்தை நோக்கிப்புறப்பட்டார்.

வேதங்களைஓதும் வேதியர்கள் கூடிச்சூழ்ந்து நறுமலர்தூவிவந்தனர். நாதகீதங்கள் பலமுழங்கின. மாதர்கள் ஆடிப்பாடி முன்னேசென்றார்கள். குடைகொடி ஆலவட்டம் கவரிமுதலிய சின்னங்களைப் பூதர்கள் பிடித்துச்சென்றார்கள். இந்த விதமாகத் தேவர்களும் முனிவர்களும் அடியவர்களுஞ் சூழச்சிவபெருமான் பார்வதி தேவியாரோடும் விடைமேல் ஏறிப்பலதலங்கள் கடந்து கோகர்ணத்திற்கு பார்வதிதேவியாரை அவ்விடத்திலேயே இருக்கச்செய்து துணையாகநந்திதேவரையும் அவ்விடத்திலேயே இருக்கச்செய்து, பிரணவாகாரச் மானமிசையேறி மாயனுங்கூடவரச் சிந்து பூந்துறைவந்து சேர்ந்து தாருகாவனத்தை அடைந்து தம கோயில் முதலியவற்றின் வளங்களைக்கண்டு ஆநந்தித்து, வேறு உருவங்கொண்டு மாயனும் அரனுமாக நகர்முழுதுங்கண்டு பத்தியில்லாமுனிவர்கள் வசிக்கும் இடங்களை எல்லாங் கண்டனர்.

பிறகு மாயவன் முகநோக்கி முனிவர்களின் பன்னியரெல்லாம் விரும்புங்கங்காள வேடத்தை எடுக்கின்றோம்! நீயும் இவ்வுருவங்காணவேண்டுமென்றுவரங்கேட்டிருக்கின்றபடியால் அவ்வுருவத்தைக்காணுதி!என்று சொல்லிக்கங்காளவேடத்தைமனத்தில்எண்ணி முனிபன்னியரெல்லாம் விரகவஞ்சியராகும்படி பலகோடி அழகியமன்மதர்கள்வந்து தோன்றுருவம்ஒன்றெனநின்றார். அவர்நின்றவடிவத்தின் திருஅழகை வேதங்களுஞ்சொல்லமுடியாது. ஆயிரங்கோடி மின்பொன்னொடு விளங்குவதை ஒத்தசடைமௌலிபொலியவும், பிறைபோலும் நெற்றியில் திருநீற்றின் புண்டரத்தூடே ஒருசிந்தூரந்துலங்கவும், பவளவாயும் முத்தினைப்போன்ற பல்லும் ஆயிரங்கோடிப் பூரணச்சந்திரனை ஒத்த

முகமும் விளங்கவும் காதில் கவின் நிறைந்த குண்டலங்கள் அசையவும் முச்சுடராகிய மூன்றுவிழிகளுந் தோன்றவும் காள முண்ட கண்டங் கறையொடும் பிறகாசிக்கவும், பொன்மலைகளைப் போல நான்கு புயங்களும் விளங்கவும், அபய வரதகரங்கள் துலங் கவும், கொன்றைமாலையும் அக்கமாலையும் வெண்டலைமாலையும் விபூதியுந் திருமேனியில் விளங்கவுங், கரங்களில் சூலம்மழு பிர மகபாலம் வீணை துடி முதலியன விளங்கவும், இடையிலே புலித் தோல் விளங்கவும், விதியின் சிரத்தைக் கொய்த வயிரவ கோலமும் விளங்கவும், மதயானையின் கரம் போலத் தொடை விளங்கவும், பொற்பாதுகைதரித்த சரணகமலங்கள் விளங்க வும், உலகெலாந் திவ்விய பரிமளங் கமழ ஆயிரங் கோடி சூரியப் பிரகாசம்போல அமலன் கங்காள வுருவங்காட்டிநின்றருளினன்.

இந்த விதமாகக் கங்காளவேடத்து இயல்பு விளங்கவும், சிந்தை இங்கிதம் முகவிலாசத் திடை தெரியவும் வந்து பார்த் திடுங் கற்புடை வனிதையர் மயங்கவுஞ் சுந்தரத் திருவழகோடும் நின்ற தூயோன் மாலினை மனத்தில் நினைந்தருளினன். உடனே மாலுந் திருவை மணந்து முன்வந்து அன்று தேடியுங் காண கிலாத்திருவடி யழகையுங் கங்காள வேடத்தையுங் கண்டு வியந்து துதித்து நின்றான். மாலும் மாலுறமயங்கிப் போற்றித்துதிபல இயம்பி நிற்கச் சிவபெருமான் அன்பொடும் மாலினை நோக்கி முகுந்தனே! நீ திருவொடும் இந்த நகரத்தில் இருப்பாயாக என்று கூறி, உன் துதிகளுக்கு உவந்தோம் வேண்டும் வரங்களைக் கேளென இசைத்தார். அதற்கு மால்மன மகிழ்ந்து தேவர் மனிதர் முனிவர் முதலியோர்கள் பரவித் துதிக்க வித்தகத் திருக்கோலத்தினோடு இத்தலத்தில் இருந்து முத்தியருள வேண்டும் கண்ணுதற் கடவுளே! எவரேனும் இந் நெல்லைத் தலத்தில் வந்து உனது கங்காள வேடத்தைத் தொழு தால் அவர் படும் இடுக்கண்களைப்போக்கி முத்தியளித்திட வேண்டும் என்று மாயன் இவ்வரங்களைக் கேட்க வரதனும் மனமகிழ்ந்து நீ கேட்ட வரங்களைத் தந்தோமெனத்திருவாய் மலர்ந்தருளி, பிறகும் அவனை நோக்கி ஓ கண்ணனே! எம்மைக் கருத்திடை நினையாது இங்கு இருந்திடும் முனிவர்களை எல்லாம்

நீ மோகினி யாகவந்து உள்ளத்தகந்தை எல்லாம் அழிப்பாயாக என்று கூறியருளினர். அதுகேட்டு மால் பரவித்துதித்து விடைபெற்றுப் பெருமான் கட்டளை யிட்டருளியபடி செய்யச் சென்றான். கருமமே பொருளென்று சொல்லும் முனிவர்கள் கலங்கும் படியான அழகிய மோகினி உருவத்தை மனத்தில் நினைத்தான். உடனே வண்டுகள் முரலப் பெற்ற காரொத்த கூந்தலும், ஆயிரங் கோடி பூரணச் சந்திரக் கூட்டம் போன்ற முகமும், நீலோற் பலத்தை யொத்தவிழியும், பவள இதழும், இந்திர தனுவையொத்தபுருவமும், முத்தநகையும், பொன் மலையை யொத்த முலைகளும், பொன் மூங்கிலை யொத்த தோள்களும், பவளக் கொடி போலும் விரல்களும், மின்னல் போன்ற இடையும், அம்பறாத்தூணி போலுங் கணைக்காலும், தாமரை போலும் பாதங்களும் விளங்க முனிவர்க ளெல்லாம் கொத்தடிமை யென்று கூறும்படி நவமணி ஆபரணங்கள் ஒளிசெய்யத்தண்டை சிலம்பொடு அணிசதங்கைகள் புலம்ப மண்டலங்களி லெல்லாம் மெய்வாசனை மணக்கவும் மோகினிரூபம் அமையப் பெற்று முனிவர்கள் தவஞ்செய்யும் எல்லையில் நடந்தான். வேணுவன நாதர் பாணிதொடு அன்புடைய பண்புடைய பாவை இரு தனங்களசைய நடந்து முனிவர்களைக்கண்டு நாணி நகைத்தாள். வில்லையொத்த புருவ வேல்விழிகள்வீசி நிலவின் நகைகாட்டி சித்திரமென்றுஞ் செம்பதுமை என்றும் பத்திரமிலங்கவரு பாவை என்றும் மயங்க முத்திபெறலாமென்று சிவனை மறந்து தவஞ்செய்யும் முனிவரின் அவைக்கண் புகுந்தாள்.

மானமொடும் நாணமொடும் மையல்புரிவள், மோன மொடு செல்வள், முலைமூடுவள், முன்பில்லாது செல்வள், மன்மதன் விடும் நீலோற்பல கணைகள்போலப் பானல்விழியெங்கணும் பரப்பிஅயல் நின்றாள். இவ்வாறு நின்ற மோகினியைக் கண்டு முனிவர்கள் வேட்கையுட்கொண்டனர், தங்கள் விரதங்கள் குலைந்து தாம் வேள்விசெய்யும் மண்டபம் விட்டு நீங்கினர் கள். தம்மனத்திற் பேதமுற்றனர். முன்செய்த தவமும் பரிவும் நீங்கினர்கள். உள்ளும் உருகினர்கள். உடல் வெதும்பினர் கள். அணைந்துகொள்ளுதற்கு விரும்பி நாடினர்கள், துள்ளி

ஞர்கள். சூழ்ந்து வெண்சுடரைக்கண்ட பைம்புள்ளெனக் களிப்பர் பின் பொருமி ஏங்குவார்கள். தவம் செபம் தாங்கரும் மந்திரம் ஆகிய இவைகளை எல்லாம் நீங்கினார்கள். மோகினியின் நலத்தைக்குறித்து நோக்கினார்கள். தெய்வப்பெண்ணோ? நீரமகளோ? மலர்மகளோ? மானிடப்பெண்ணோ? அல்லதுமால் முன்தாங்கிய சுந்தரமோகினிவடிவமோ? சொல்லுங்கள், என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வர். பலபலபுலம்புவர். எழில் நோக்குவர் மன்மத பாணத்தால் வருந்திமாழ்குவர், உடையெலாம் அவிழ ஓடுவர், உடலும் மனமுஞ்சோர்ந்து மயங்கிவீழ்வர். கண்ணொடுகண்ணிணை கலந்து நோக்குவர். பெண்ணமுதாமெனப்பேசுவர். பலசொல்லி இரங்குவர் சிலர், வந்தடிபணிகுவர் சிலர், மருவும்நீரென்பார்சிலர், கொந்தவிழ்மாலிகை குழலிற் சூட்டுவார்சிலர், சந்தனம்பூசுவார்சிலர்,தனத்தின்முத்துவார்சிலர், அடிமிசைகிடந்தடியழகை நோக்குவார் சிலர், நெடிதுயிர்ப்பொடும் அவள்நேர்செல்வோர் தமைத்தடிகொண்டு சாத்தித்தாங்கள் சாருவர். பற்றுவர்.நெருங்குவர். பரிசிப்பவர் தமைச்செற்றவர் போலெதிர் சீறுவர்சிலர். நல்லமுதினுக்கு உம்பர்போலவே சுற்றுவர்தம் காமத்துயரினை எல்லாஞ்சொல்லுவர்.

ஆசையோடுகிட்டுவர் எமது உடல்பொருள் ஆவி எல்லாம் விலையாகக் கொடுக்கின்றோமென்பர். கட்டித்தழுவிக்கொள்வர் புளகாங்கிதங்கொள்வர். இவள் கூந்தல் இருளே! என்பர். இவள்நெல்லையில் நீலியோ?என்பர்.இவள்மனம் கல்லோ?என்பர். இவள்செய்யும் நகையால் உயிர்போம் என்பர். இங்குவரும் இவள்ஒருவனையே தழுவுவள் எல்லோரும் கிட்டிவருதற்குக்காரணமென்ன தூரப்போங்கள் என்பர். உடையைக்கண்டவர்கள் உடலைக்கண்டிலர். இடைகண்டவர் விழிகண்டிலர். நகைகண்டவர் முழுமதிமுகங்கண்டிலர். இந்தவிதமாக உடல்முழுமையுங்காணாராகிக் கண்டகண்களைப் பெயர்த்துவாங்க வலியற்றவராகிமயங்கி இவள் ஒருமாயை என்பர். தாமரையேஇவள் பாதம், வேலிணைகளே இவள்கண்ணிணைகள், முழுமதியே இவள்முகம், இவள் பூமாதேவியே இவள்பொறுமையும் நின்றுயிருக்கிறதென்பார், அயோக்கியர்கள்போல நாணமற்சில சொல்லுவர். உடம்

புவேறுபட்டனர். உள்ளம் வெதும்பினர். சிலர்சப்தித்தனர். சிலர் சூழ்ந்து நின்று ஆடினர். பக்தி, அருச்சனை, பாவனை லிங் கம், வித்தகமந்திரம், மெய்த்தவம் எல்லாம் முனிவர்களே! புத்தி யில்லாது என்செய்கின்றீர்கள்? முத்திதரவல்லவள் இம்மோகி னியே என்பர். முலையின்மேல் ஒருகரம்வைத்து ஒரு கரம்வீசி நடக்கும் இவர்தளிர்போலும் பதத்தில் பரற்கற்கள் உறுத்து மென்று முனிவர்களெல்லாம் வீதிகள் தூர்ப்பர்.

நிலத்தில் விழுவர் பெருமூச்சுவிடுவர், சிலர் கண்ணைத்திறப் பர், சிலர் திகைப்பர், சிலர் முன் வருவர். இவ்வனத்தில் தவஞ் செய்யும் பலனிது நீ இங்கு வந்தாய் என்பர். ஆசையின் மெ லிந்து வாடுகின்றோம் தவிர்த்தாள் என்பர். இனிமையாகப் பேசுவர் வாரும் இதுஉம் வீடு என்பர். வந்துபின் போகலாம் வாரும் என்பர். பூச்சூடிப்பொட்டிட்டததிசயம் இடை தாங் குமோ? என்பர். இரதிக்கும் மேலான அழகுடையவள் இவள் நம்சாலைக்கு வருமாறாற் கூடலாமென்பர். எமக்கு உயிர் நீயே! என்பர். கெஞ்சுவர். செம்பஞ்சூட்டியபாதம வருந்ாதபடிக்கு மென்மலர்பரப்பினோம் வஞ்சியே மெள்ள மெள்ள வாரும் என் பர். கானங்களிற்சென்று கடுந்தவஞ்செய்யும் முனிவரானாலுங் கடவுளரானாலும் வேல்விழிமின்னாரின் ஆசைமறக்கவல்லர் ஆவ ரோ? பலபலசொல்லி ஏங்கினர். தவத்தை எல்லாம் அழித்த மோகினியின் பின்னே தொடர்ந்து சென்றனர். தம்பெருமையை எல்லாம் வீண் ஆக்கினர். இது இவ்வாறிருக்க நைமிசாரண்ய வாசிகளே! சிவபெருமானின் செயல் கூறுகின்றேன் கேளுங்க ளெனக் கூறுகின்றனர். மாயனை அனுப்பின பிற்பாடு உலகு உய்யும்படிச்சிவபெருமான் கங்காளவேடந்தாங்கித்தூயகலனோடு மழுவுஞ்சூல முந்தாங்கி முனிமாதரின் மனையின்வழிச்சென்றார்.

பண்ணிசையோடும் மறைபாடுவர் நடிப்பர் கண்ணொளிபரப் புவர் தலைவாசற்படியில் நிற்பர், சிரிப்பர், பலிகேட்பர். கன்ன லும் பாலுந் தேனுங்கலந்ததை ஒத்த இன்னிசையைக்கேட்டு மாதர்களெல்லாம் வந்து தெருவில் சூழ்ந்து வேதங்களாலுங் காணுதற்கரியவனைக் கண்டனர். நிலைதடுமாறி அரனின் அழ கென்னும் கடலில் விழுந்து கரைகாணாதவராகிக் கலங்கி மயங்கி

வேறு பட்டனர். முனிபத்தினிகளெல்லாம் மால்கொண்டு செய்த அதிசய மனைத்தையும் எவரே சொல்லவல்லவர்; ஆயினும் சிறிது சொல்லுகின்றேனென்று சூதமகாமுனிவர் சொல்லுகின்றார். கேளுங்கள் முனிவர்களே! வீணையயிலும் பண்ணிசையாலே அந்திவண்ணனின் அழகைச்சிறிது கண்டோம், தாங்கமுடியாமயல் கொண்டோம், எங்களோடுவந்து இணங்காரோ? என்பர். இந்தவடிவம் மாயை வடிவமே! என்பர். சிலமாதர் அன்போடு எதிர்சென்றுகுண்டோதரனேந்திய கலத்தில் பொன்னகப்பையால் அன்னம் இடப்போய் அவரை முன்னின்று பணிவர். தம் மோகநிலையைச் சொல்லுவர். இவரே ஒப்புயர்வு அற்றவராகும், தபோதனரல்லர், பலிவாங்க வந்தவரேயல்ல மின்னிடை மடந்தையர் விகாரமயல்கூரவே இங்குவந்தனர் என்று சிலர் சொல்வர். சிலர் எம்பெருமானை நோக்கி ஐயரே! உம் ஊர் எது? உம்பெயரென்ன? இங்கு நீர் வந்த தன்மையை நோக்கில் எங்கள் தவப்பெருமையே என்பர். சிலர் வருவர், சிலர் பணிவர், சிலர் விழியாற்பொருவர், சிலர் புகழ்வர், சிலர் தம் மயல்களைப் புகல்வர். அரியதவமாதரும் உயர்ந்த அறிவையுடைய குலமாதருமாகிய அவர்கள் பலபல வேண்டினர். ஆச்சரியத்திலும் ஆச்சரியம் ஒருவர் சொன்னதை ஒருவர் சொல்லவேயில்லை. சிலர்க்குக் கலைபோனது. சிலர்க்கு வளைபோனது. சிலர்க்கு நாண்போனது. சிலர்க்குக்கலையும் வளையும் போனது. சிலர்க்கு கலை வளை நாண்போனது. சிலர் ஒரு கலைகொடிதென்பர். சிலர் முலைகள் குழைய மருவுமென்பர். மன்மதனும் இவர் வடிவு எழுதமுடியாதென்பர். மாலும் இவர் வடிவுகண்டன்றோ மாலானதென்பர். பூணுமணி புனையும் அணிபொற்றொடி இதெல்லாம்வீணையென்றுநெடுவீதியில வீசி எறிவர். முன்னழகு கண்டவர்கள் முன்னேயே நின்றனர். பின்னழகு கண்டவர்கள் பின்னேயே நின்றனர். இந்தவிதமாக மாதர்களெல்லாம் ஆசைமீறி ஓ திகம்பரரே! எங்கள் கொங்கைகளாகிய யானைதருவோம். சாந்தணிந்து சவாது மெய்பூசுவோம் சேர்ந்தணையும் என்பர். நிமலரின்மேல் ஆசையாய் வேறு தம்செயல்களெல்லாம் வெறுத்தவர் பாலன்னத்தோடு கைவளையையும் ஓட்டில் இடுவார்கள்.

எம்மைக்கூடிக் கலக்கலாகாதோ? எனக் கும்பிடுவர்சிலர். தென்றல் வந்து விளைந்துகொள்ள மன்மதன் கணைசிந்த உள்ளம் மருள்வது நீர் பார்க்கவில்லையோ? இப்பொழுது எம்மேல் இரக்கங்கொண்டு உமது நுதற்கண்ணால்வெந்த அவ்வுருவிலியை விலக்கும் என்பர். ஐயன் அழகைக்கண்ட மாதர் பின்வேறு ஒன்றுங் கண்டிலர். தழுவுமென்றுற்றழுவா திருக்கின்றீரே! நாங்கள் இறந்துபோவோம். எங்கள் தலை எழுத்துத்தான் என்ன? சொல்லும் என்பர். தருமத்தையும் நீதியையும் தக்கது இது,தகாதது இது என்பதையும் நோக்காதுசிலர் எம்மைத்தழுவும் என்றனர்.பலிக்கு வந்தவரே! எமது முனிவர்கள் இப்பொழுது வரமாட்டார்கள், எம்மனைகளிலிருந்து எம்முடன் கலந்து எமக்கு இன்பம் அருளிப்போம் என்று பதமிசை விழுவர்.அழுவர். தொழுவர். சிலர் புலம்பிநைவர். இன்று இவர் கூடாரேல் உயிர் நிற்காதென்பர் சிலர். இன்று இவர் கூடாவிட்டால் யார் இவரை விடுவர் என்பர் சிலர். இவர் தாண்டவம்புரி சிவபெருமானே என்பர் சிலர். அலகில் ஆடவர் ஆசைகொள்மேனியீர்! உலகம் ஏத்தி உவப்புறும் மேன்மையீர்! வெண்பலி ஏற்பதெதற்கு? என்பர். முப்புரத்தை நகையாலெரித்தவன் போல எம் அகத்தை முறுவலால் வெதுப்பு நீயாரென்பர் சிலர்? எம் ஆடையைத்தாரும் அல்லது எம்மோடு கூடும் என்பர் சிலர்.

எம்பெருமான் நடப்பர். மீளுவர். நான் மறைபாடுவர். புடைப்பர். கைத்தொடி பொங்கநின்று ஆடுவர். வீணைஎடுப்பர் அரன்புகழ்பாடுவர். அன்பரைப்போலத் துதி சொல்லுவர். இதை எல்லாங் கண்ட அப்பெண்கள் அழுங்குவர். முன்னே சென்று தம் மோகவேகத்தை மொழிகுவர். துதிப்பர், எம் கற்பையும் எம்மனவலியையுந் தொலைத்த நீர் விரும்பி அருள் செய்து அணையாதிருக்கிறீர் இது உமக்கென்ன நீதியோ? என்பர். மெள்ளவந்து போம் என்பர். சிலர் இவர் மங்கை பங்காளரே என்பர். சிலர் இவர் உமைபாகரானால் நம்மையும் விரும்புவரோ? என்பர். சிவபெருமான் நீலகண்டம் நெற்றிக்கண் முதலியவற்றை மறைத்து நம்மை மயல்செய வந்தனரென்பர் சிலர். புத்தியில்லா அம்முனிவரின் மாதர் நித்தன் வந்தெதிர் நிற்கவும்

பத்தி செய்யாமல் வைத்த ஆசையால் மயங்கி வாடினர். இவ்விதமாக மாதரெல்லாங் காமங்கைமிக்கு ஐயனைத்தொடர்ந்து சூழ்ந்து பின்றொடர்ந்தனர். மாதர்கள் சூழ சர்ப்பபூடணன் ஒரு வீதியிற் சார்ந்தான். அவ்வீதியில், வந்து சூழ்ந்த மாதர்கள் வரதன் அடியில் சிந்து பூவோடு கலன்களுஞ் சங்கினமுஞ் சுந்தரச் செழுந்தொடைகளும் மன்னுந்தனிமலர்த்தொடைகளு மேவிளங்கின. மாயனுமே அவ்வரன் வடிவுகண்டு மயங்கினு னென்றால் மாதரின் நிலே சொல்லவும் வேண்டுமோ? இறைய வன் எய்திய நலத்தைக்கண்டு முனிமாதர்கள் பரவசமாகி முன் னிற்க மன்னும் ஆதியான் வனிதையர் வதனத்தை நோக்கி நன் னலந்தரு முகமலர்ந்து இனிதருள் நயந்தான். நாடினர். உளம் நயந்தனர். நம்பன்மேல் ஆர்வம் நீடினர். கருப்பங்கொண்டனர். உள்ளத்தின் உறுதுயரின்றி நாற்பத்தெண்ணுயிரம் பிள்ளையைப்பெற்றனர்.

இறைவன் அருளினல் இமைப்பொழுதில் அம்முனி மாதர்கள் பெற்ற பிள்ளைகள் யாவரும் சிவபெருமானடியில் முறைப்படி தாழ்ந்து வணங்கினர். போற்றினர். இவ்வாறு போற்றிய மைந்தர்களே அறிவுடை மக்களே! நீர் நம்மை நினைந்தருந்தவஞ் செய்யுமென்றருளினர். அவ்வாறே செய்ய அப்புதல்வர்களும் விடைபெற்றுச் சென்றனர். அவ்வனத்திலேயே பரனை நினைந்து தவஞ்செய்தனர். மைந்தர்கள் தவத்தை நாடிச் செல்ல அம்மாதர்கள் எம்பெருமானை விட்டு நீங்காமலே சூழ்ந்து நின்றனர். அவர்கள் நின்றதோற்றம் பொன்மலையைச்சூழப்பாற்கடல் பரவியதுபோலிருந்தது. சிவபெருமான் நிற்கும் பொழுது ஆகமவிதிகள் தெளிந்து அன்பினோடு அறங்கள் செய்பவர்களாகிய போகர், கற்கர், அத்திரி, புலத்தியர், புலகர், காசிபர், பரத்துவாசர், கண்ணுவர், பிருகு, சம்பு, சுகர், சுமந்து, கௌதமர், வைசம்பாயர் முதலிய முனிவர்களும், இன்னுமுள்ள தவத்தினர்களும், யோகியர்களும், சிவபத்தர்களும் வந்து முறைப்படி வணங்கித் துதித்து நின்றனர். இவர்களின் மனைவியரும் அமலனுக்கு வெண்பலியையீந்துபரபரப்புடன்பணிந்துநின்றனர். இந்தவிதமாகப் பணிந்தவர்களுக்கெல்லாம் எம்பெருமானர் அருள்செய்தார்.

அவர்களும் அருளினைப்பெற்று விடைபெற்றுக்கொண்டு ஈத்த மிடஞ் சென்றனர். மற்றும் இவர்களெல்லாம் போய்ப் பின்னும் மால்கொண்ட தாருகவனத்து இருஷி பத்தினிகள் எல்லாம் எம்பெருமான் நடுவே நிற்கத் தாம் சூழ்ந்து நின்று தம் வளையுங் கலையும் போனதுபோல நாணும்போய்ச் சிவபெருமானைநோக்கி, முற்றிய காமத்தால் நாங்கள் மோகித்தோம். நீர் எங்களை இணங்கும் இல்லாவிட்டால் உயிர்போம் என்றனர். இதனை மோகினியான மாயன் கண்டான். உடனே நாதனை வந்து தரிசித்துப் பொன்னடி வணங்கித் துதித்துப் போற்றினன்.

தாருகவனத்து முனிவர்கள் மோகினியாகிய மாலின்பால் வைத்த காமமயக்கத்தால் மாலைத் தொடர்ந்து வந்தனர். கங்காளவடிவங்கொண்ட நாதன் மாலின் மோகினி வடிவத்தில் மயங்கிய முனிவர்கள் தன்னைக் கண்டுகொள்ளமுடியாதபடி கங்காள வடிவத்தை நீக்கி வேறு ஒரு வடிவாய் நின்றான். முகுந்தனும் நெல்வேலி அமலன்பா லன்பாய் நின்றான். தோகையர் பலருஞ் சூழ்ந்தனர். அப்பொழுது அரன் துலங்கும் எழில்கரந்து பின்னும் இசைகள்பாடித் திகம்பரனாக நின்றான். இந்தவிதமாக அமலன் நிற்க இறைவனை யிகழ்ந்த அறுபதினாயிரம் தாருகவனத்து முனிவர்களும் மாலின்மேல் இச்சையாக வந்தவர்கள், தம் மாதரும் மோகத்தால் கலையும் வளையுஞ் சோர நிற்பதைக்கண்டு ஓகோ! இவனைக்கண்டல்லவா நம் கற்புடை மாதர்களெல்லாம் இங்கிலையாயினர் என்று நினைத்தனர். தாம் கொண்ட காமத்தைக் கைவிட்டனர். நம் முன்னே ஒருவன் மாயமாக வந்து நின்று நம்மைமயக்கினான். நம்மனைவியர்முன்னே இப்பேதையொருவன்வந்து மயக்கி வசப்படுத்திவிட்டான் என்று சினந்து, ஒன்று கூடி இன்னலுற்றுஏங்கிஇரங்கிநின்று இவன்செய்கையென்று நாணங்கொண்டனர். பின் ஒருவாறுதேறி நம்மை மயக்கி நம் தவத்தைக் குலைத்தவள் மாயனேயாகும், நம்பன்னியரைக் கற்பழித்தவன்சிவனேயாகும் என்றுதெளிந்து, துணிந்து மாயன்நாம்செய் தவத்தை முடிப்பானல்லன் கங்கையைத்தரித்தவனின் ஏவலால் இக்காரியஞ்செய்தான். இவன்நம்தவத்தையழித்தாலும் இன்னும் வேண்டிய தவங்கள் செய்வோம், ஆனால் சிவன், மனைவியர்

கற்பையழித்து விட்டானே, இதுசந்திரசூரியர்கள் உள்ளவரையும் பழியாய்நிலைநிற்குமே என்றுகவலையுற்றனர். பின்வெகுண்டுஅழலெனப்பொங்கிச் சிறி மாதர்களை நோக்கி நீங்கள்யார்பின் செல்கின்றீர்கள் நெறிதருகற்புநீத்தீர் இனிஇங்கு நிற்பது எதற்கு? உங்கள் பதிக்கு ஏகும் என்றனர். மாதவர்சொல்லக்கேட்ட மாதர்களெல்லாம், இந்த நாதனைக்கண்டோரெல்லாம் மிக்கநலம் பெறுமுத்தரானர் இவரை வருப்பினோர்க்கும் அழிவுண்டோ? அறிவில்லா முனிவர்களே! பித்தர்கள்போல என்ன உளறுகின்றீர் என்றனர். அவர்கள் இந்தவிதமாக முனிவர்களிடங்கூறவே சிவபெருமான் மனமகிழ்ந்து அருள்செய்தார் அம்மாதரும் அவ்வரதனைமனத்துட்கொண்டு தம்பதியிற் புக்கார். அப்பெண்களெல்லாம் போனபின், ஐயன் அருகுநின்ற மாலுஞ் சேயிழைவடிவாய் நின்றான். சிவபெருமானைச் சிந்தியாது தம் இருந்தவமிழந்தமுனிவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் காண்போமென்று பிரமன் முதலிய தேவர்கள் வந்தனர். சூழ்ந்துபோற்றினர். கந்தரங்கறுத்ததேவன் கருணைகூர்ந்து இனிதுநின்றான். இவ்விதமாகநிற்கும் பரம்பொருளை அக்கன்றிய உள்ளத்துமுனிவர்கள் நெருப்பெழவிழித்து நோக்கிக்கொன்றிட வேண்டுமென்று கொடியசாபங்கள் கூறினர். அச்சாபங்கள் கைலை நாதன்பாற் சாராமை கண்டு இவனை என்னசெய்வதென்று திகைத்து நின்றனர். அப்பொழுது ஞானமுனிவர் சிலர் உங்கள் சாபஞ்செல்லாது பழுதுபடுமேயானால் அவன் சிவனேயாகும் அவனையார் வெல்வதென்றனர். அப்பொழுது கருமமே பெரிதென நினைத்துச் சிவனைசிந்தியாதுதவஞ்செய்யும் அறிவிலாமுனிவர்களிற்சிலர் ஞானமுனிவர்களைநோக்கி இவன்தூர்த்தனுகும் எங்கள் பன்னியரின்கற்பை நீக்கிப்பரிபவப்படுத்தி நமக்கு முன்னும் வெட்கமின்றிநிற்கின்றான் இது உங்களுக்குச் சரியாக இருக்கின்றதோ? இது நல்மரபுக்கு ஆகுமோ? இதின்மேலும் வேறுவசைவேண்டுமோ? என்றனர். பரிவுடன்நின்ற யோகர்கள் கூறுகின்றார்கள், பூமியில் எவர்கள் உங்கள்போல் 'தவம்' பொருளாகும் என்றேதிரிபுரம் எரித்த தேவைச்சிந்தியாதிருந்தனர். உங்கள் குற்றத்தைநீக்கவே இது செய்தானென்றனர்.

ஒவ்வொருவருஞ் செய்யும் இருவினைக்கும் பயன்தருவது சிவபெருமானுக் கன்றிவேறுயாவருக்கும் உண்டோ? அவனைச்சிந்தியாது செய்கின்றதவம் அவமாவதன்றி வேறுபயனுவது முண்டோ? உலகங்களை யெல்லாந் தானேபடைத்துத்தானே அழிப்பன் என்றனர். அதற்கு அவர்கள் நன்றாய்ச்சொன்னீர்கள். சிவனேயானல் இந்தவிதமாகச் செய்வனே? வந்தவன் எவனே பித்தன் உன்மத்தன் என்றனர். வலியனே? இவனென்பர். எத்தனை செய்தாலும் இரப்பவன் போல வந்து எழில்முலையார் தங் கற்பையழிக்க லாமோ? என்பர். அதற்குச் சிவயோகியர் உங்களிடத்தில் குறைகள் இருப்பதால் அக்குறையைத் தீர்த்தற்கு எம்மான் வலியவந்து அருள் செய்தான். நம்மனைவியர் அன்னன் மலரடி பணிந்து போற்றிப் பேரின்ப முற்றனர். அதுபோல் நீவிரும் தொழுங்கள் என்றனர். அதற்கு முனிவர்கள் சிவனென்றால் கையில் முத்தலை வேலுண்டே? கண்டத்தில் விடமுண்ட கறையுண்டே? இடையில் புலியாடை யுண்டே எம்மனை வியர்மேல் ஆசை கொண்டு பலிக்குவந்தவனை வணங்கலாமோ? என்றனர் பின் எமதாண்டவனை நோக்கி நீ யார்? உன் பெயரென்ன? நீ எங்கிருப்பது? குற்றமில்லாத எம்மனைவிமாரைக்குறைசெய்தாய். உனக்கு என்ன உண்டாகும்? நீ என்ன சொல்லப் போகின்றாய்? சீக்கிரஞ் சொல்லுக என்றனர். அதற்குச் சிவபெருமான்? அவர்களை நோக்கி நகைத்து "தாய் தந்தை நமக்கில்லை, சுற்றத்தாரும் இல்லை, ஊரும் இல்லை, பேரும் இல்லை என்றாலும், உலகம் என்பதெதுவும் நம் உலகமாகும். பெயரெலாம் நம் பெயரேயாகும். உயிர்களெல்லாமும் நம் சுற்ற மாகும். ஆனல், சுகம் துக்கம் என்பது எமக்கில்லை. இன்னும் ஒன்றுகேளுங்கள் இந்த மோகினியே எனது மனைவி, பிறர் மேல் உள்ளம் பற்றிலாதவள். இவள் கற்பு மிக்கவள். இவளை நாடி மாண்டவர் அநேகர். பலபல அண்டங்களை உண்டாக்கி அவற்றை யெல்லாம் ஒருபொறியால் பொடி யாகச் செய்வோம். எங்களுக்கு விருப்பமில்லை, வெறுப்புமில்லை, புலனறிந்த யோகர்களுக்கும் நாங்கள் புலப்படோ மென்றார். இகத்தில் அன்பாய் அறிவுடையவர்கட் கெல்லாம் மேலான சுகத்தைக் கொடுத்து

வுருவொடு இருப்போம். குற்றமற்ற சித்திதானம் இத்தலமே யாகும், ஆதலினால் நீதியோடு சித்தி நல்க நினைத்து இங்கு வந்தோம், என்றார், அதற்கு, அத்தவர்கள், இகழ்ந்து மூன்றுலகிற்கும் முதல்வன் நீ யானால் எங்கள் மனைவியர் கற்பை நீக்கிப்பழி செய்வாயோ? உனக்கும் எங்களுக்கும் ஏதேனும் பகையுண்டோ? எவர்தான் இந்த விதமான இழிந்த காரியத்தைச் செய்தார்? நீயாவனோ என்று கூறி எல்லோரும் ஒன்று கூடி இவன் மந்திரம் வல்லானாகையால் கற்பின் நல்ல நம் மனைவியர் கற்பை நீக்கும் தந்திரம் இவனுக்குண்டாயிற்று. சாபங்களுந் தனைச் சாராமல் எந்திரம் பலவுஞ் செய்வான், ஆகையால் இவனை நாம் கொல்லவேண்டும் என்று கூறி, ஆபிசார ஓமத்தைச் செய்யத் தொடங்கினர். அத்தீயோர் நெருப்பைப்போல் பொங்கி எழுந்து வேய் வனத்தின் மேற்பால் சென்று கொடிய ஓம குண்டத்தை உண்டாக்கினர். வேள்விக்கு வேண்டும் பொருளெல்லாங் கொண்டுவந்து அங்கு தீயவேள்வியைச் செய்தனர். அவ்வேள்வித் தீயிலிருந்து கொடிய தோற்றமும் பிளந்த வாயும் வெடித்த குரலும் முறுக்கு வாலுமுடைய புலி ஒன்று எழுந்தது. அதனை முனிவர்கள் எல்லாந் தொழுது, மூன்று கண்ணையுடைய பரனை இப்பொழுதே அழித்திடு என்று கூற, அதுவுஞ் சீறி எழுந்து எம்பிரானிடத்திற் செல்ல எம்பெருமான் அதனைப்பற்றி அதன் தோலை உரித்து அத்தோலை அம்முனிவர்கள் எல்லோருங்காண ஆடையாக உடுத்தான். பிறகு அத்தீயில் கணிச்சி எழ அதனையுஞ் சிவ பெருமான் மேல் ஏவினார், அதனை உலக நாயகன் என்படையாக இரு எனத் தன் கரத்தில் தாங்கிக்கொண்டார். அதுவும் அவர் கையிலேயே தங்கிவிட்டது. பின்னும் அம்முனிவர் சீறி வேள்விசெய்ய அதில் கரியொன்றெழக் காலகாலனைக் கொல்லென விடுக்க, அதுவும் வெகுண்டு பேருலகு அஞ்சவே வரலும் அதனைப் பிடித்து அதன் தோலையுரித்து மேலே போர்த்துக்கொண்டான். வானவர்கள் ஆர்த்தார்கள் முனிவர்கள் வேர்த்தார்கள். பின்னும் அம்மகத்தில் அண்டமும் இடியும்படி இடிக்குரல் எழுப்பி ஒருமான் முன்வர அதனை அம்முனிவர் ஏவ, எம்பெருமான் அதனைக் கரத்திற்றாங்கி

உன் சினந்தீர செவியிற் கூப்பிடென்று சொல்லியருளினார். பிறகு அனேக செம்பாம்புகள் வேள்வித்தீயில் எழுந்தன. அவைகளை முனிவர்கள் ஏவ உருத்து முன்சீறி உலகெலாம் ஒடுங்கிடவரலும் பாங்குறப் பரமன் அவற்றை முன் கருடன்பாற் பயந்தெய்திய பணிகள் நீங்கிடாதணிந்த மெய்யினி லணிந்து கொண்டான். அதனைக்கண்டு மால் முதலியோர் ஆர்த்தனர். பிறகு அவ்வேள்வித்தீயில் அசனிபோலார்த்து வெள்ளம்போல் வரும் பூதங்களைத் தந்திரமுனிவர் கண்டு நீங்கள் சங்கரனை முடித்திடுங்கள் என்று ஏவ, அவைகளும் வேகமொடு உமை ஒரு பாகன்முன் வந்தன, அவற்றை அருளொடும் இனிதுநோக்கி நீங்கள் எல்லோரும் நமது சேனையாகச் சூழ்ந்திடும் என்று கூற அவைகளும் அகமகிழ்ந்து சண்டனையுதைத்தோன் தாண்மலர் போற்றித் தானையாகச் சூழ்ந்தது. பிறகு அவ்வேள்வித்தீயில் வெண்டலை ஒன்றுதோன்ற அதனை ஏவினர் அது உலகெல்லாம் இற்றதென்று விரைந்து எழுந்து ஆர்த்து முன்வரலும், உமையொருபாகன் அதனைக் கரத்தாற்பற்றி உன்னாலானதை நீ செய் என்று தன் சென்னிமேல் வைத்தார். அது அவ்விடத்திலேயே விருப்புடன் நின்றுவிட்டது.

இவற்றையெல்லாம் முனிவர்கள் கண்டு இவனோடு சமர் செய்து முடியாதென்று உளம் நடுங்கி மந்தரங்கள் எல்லாவற்றையும் நினைத்தே அமலனைக் கொல்லும் என்று ஏவ அது தமரவொண்டுடியாய் உலகெலாம் ஒடுங்க மிக்க ஒலி முழக்கியது. இந்தவிதமான துடியின் இயல்பை யுணர்ந்தே தேவர்களெல்லாம் நடுங்கிப் பயந்தனர். அத்தனார் வித்தகம் இதுவே என்று வியந்து அதனை விறைமலர்க் கரத்திடை ஏந்தி நீ இனி நம்செவியிடை ஆர்த்திடு என்றார். அதுவும் அவ்வாறே யமர்ந்தது. முனிவர் யாவரும் இவ்வகை முயன்றும் வீணானமைகண்டு, எப்படி முயன்றாலும் இவனைக் கொல்லமுடியாதென்று தெரிந்துகொள்ளாதவராகி இவனை அழிவு செய்திடுவோம் என்றே மெய்வகை அவியிட்டு அழல் எழ வளர்த்து வேள்விசெய்தனர். அதில் வெகுண்டு மெய்வலித்திரலோன் முயலகன் என்போன் எழுந்தான். எல்லோரும் முடிந்த துலகம் இவனோடே என மொழிந்

தனர். முனிவர்கள் அம்முயலகனை நோக்கி முகமன் கூறி அந்த மில்லா இவ்வேள்வித்தீயோடும் நீர் போய் எம் மாதர் கற்பழித்த பாவியை அழித்திடும் என்று கூற, அவனும் அவ்வழலோடு கொதித்துச் சீறிவர கங்கைவேணியர்கண்டு கனலைக்கரத்திடை தரித்துத் திறலொடுவரும் முயலகனைக்குனித்தருளுஞ் செஞ்சரணத்தால் குப்புறத்தள்ளி முதுகின்மேல் மிதித்து ஏறி நின்றார். உலகெலாம் ஆர்த்துத்துதித்தது.

அதுகண்டு தீயோர்கள் கோபங்கொண்டு நெஞ்சழிந்து இயற்றிய வேள்வியில் கொல்ல எழுந்தவற்றை எல்லாம் மாற்றித் தீங்கில்லாமல் செயத்தோடும் நின்றானே என்று கூறி, வேறு வழிகாணாராகிச் சாபங்கள் மொழிந்து நின்றனர். அவர்கள் சொல்லிய கொடுஞ்சாபம் தூயவன் பாற் செல்லுமோ? நகைத்தபொழுது திரிபுரம் என்னவானதோ அதேதன்மையை இதுவும் பெற்றது. எல்லையில்லாதவன் இன்புற நின்றதன்மைக் கண்டு இனி நாம் கொல்லும் விதம் இல்லை என்று யாவருங் கூடித் தாம் கொண்ட கோபத்தை நீக்கி, மயங்கிக் குலைந்தனர். முற்பிறப்பில் செய்த வினைப்பயன் இது என்று பயந்தனர். விம்மிதத்தோடும் வேகுளியோடும் வாய்விண்டு பேசாதவராக எதிரே நின்றனர். தேவர்களெல்லாம் அமலனைப்புகழ்ந்து ஆர்த்தனர். அந்தோ! முனிவரின் புத்தியீனம் இருந்தவாறென்னே! ஈறிலானை முடிக்க எண்ணி அருமகம் முதலியவற்றையும் ஒழிந்தனர். தம் மேன்மையும் இழந்தனர். பின்னர் இந்தவிதமான முனிவர்கள் இறைவனை நோக்கி நிலைபெற்ற உன் வன்மையின் பலத்தையறிந்தோம், வரதா! எம்மனை விமார்கற்பழித்த பழிதீரத்துன்னும் நற்றவம் யாது அவற்றை எமக்குச் சொல்லியருள வேண்டுமென்று கேட்டனர்.

நல்லறிவில்லாதவர்கள் இவ்வகை கூற எம்பெருமான் நகைசெய்து "ஓ முனிவர்களே! உங்கள் மரபும் உங்கள் மெய்த்தவமும் அறிந்தோம். குற்றம் நீங்கியதும் மனைவியர் கற்புங் குறித்தோம். எம்மை நினையாது பொருத்தமுள்ள நல்ல தவம் நற்கருமங்கள் முதலியவற்றை உணர்வுடன் செய்தாலும் சென்று தீர்த்தங்களாடினும் தியானங்கள் செய்திடினும் சித்தி

பெறுது அழியுமென்று மறைகள் புகலும். ஓ புங்கமெய்த்தவ முனிவரே! யாம் ஒன்றுபுரியில் அதைத்தடுப்பதற்கு அரிபிரம ராலும் ஆகாது. எங்கும் நம்மை அல்லாமல் உயிர்கள் இயங்குவதில்லை. செங்கையாலெம்மை அருச்சிப்போர் நல்கதியினைச் சேர்வர். இதை நீவிர் அறிந்து பூசைசெய்து இனிதாக அன்போடு போற்றிசெய்தறிகிலீர், திகைத்தீர், பந்தமாகிய பாசத்தால் பருவரலுற்றீர். இது அறிவுடைமையன்று. நமைத்தினமும் பூசனைபுரிவீர். பழயதாகிய நெல்லையில் திருமூலலிங்கத்தை விதிப்படி அருச்சனை செய்வோர் விரும்பித்தொழுவோர், துதிப்போர், பணிவோர், வலஞ்சூழ்வோரிவர்கள் கதிமேவி நற்கனைத் தொடுங்கயிலையிலிருப்பர். ஆதலால் இலிங்கத்தை அன்பொடு போற்றி நீதியாற் சிவபூசனை புரிந்தெமை நினைத்தே குற்றமற்ற தவஞ்செய்திடும்" என்று கூறி மாதொரு பாகன் மோகினியோடும் மறைந்தான். மண்ணுளோர்களும் முனிவர்களும் வரதனைப் புகழ்ந்தனர். அத்தருவனத்துறை முனிவரர் நலம் என்று உண்ணினைந்திலர், மானத்தால் உள்ளம் அழிந்தனர்.

அப்பொழுது பூகம்பம் முதலிய உற்பாதங்களுந் தீய துன்னிமித்தங்களும் பல பல உண்டாக அதைக்கண்ட முனிவர்கள்உளம் நடுங்கி இதென்னமாயம் என்று நினைத்தனர். பின்னர் சிவபெருமானின் செயலே எனத்தீர்மானித்து நாம்செய்த குற்றத்தைத்தவிர்த்து அருள்செய்ய நம்பாற்கருணைகொண்டு தேவருய்யக்கடல் விடமுண்டகண்டர் வந்து அருள்செய்ய அது அறியாமல் மயங்குகின்றோமே! என்று சொல்லி இனி அவன் அருள் பெறுதற்கு என்னவழியென்று நினைத்து, அகத்தியரே நமக்குத் துணைசெய்வரென்று எல்லோரும் அகத்தியரிடஞ்சென்று பாதத்தில் விழுந்து வணங்கித்தோத்தரித்து, நெல்வேலிநாதர்க்கு அன்புடையமுனிபுங்கவா! கதிதருவது கருமமுந்தருமமுமே என்று எங்களறியாமையால் எண்ணிச்சிவன் பொருளல்லவேன்றிருந்தோம். மதியணிந்த நாதன் தருவனத்தில் வந்து புதுமை செய்து தானே பொருளென்னும் நிலையைத்தெரிவித்தான். அப்பொழுதும், எங்கள் பிழையை எல்லாம் பொறுத்து எங்கள் முன்காட்சிதந்த கடவுளடிவணங்காது இருந்துவிட்டோம். அவ

னும் மறைந்தனன். இப்பொழுது எங்கள் தப்பிதத்தையுணர்ந்து மிகவும் வருந்துகின்றோம் ஆகையால் நீதயவுசெய்து அவனைநாங்கள் இன்னொருமுறைகாண அருள்செய்வாயென நின்னை வந்தடைந்தோம் என்றனர். அகத்தியரும் அந்தவாசகங்கேட்டுமகிழ்ந்து அவர்களுக்கு இருக்கையும் நல்கிச்சொல்லுகின்றார்.

நீங்கள் மறைநெறிமுறை நீங்கியது தெரிந்து உமக்கு அருள்செய்ய வந்தான். இப்பொழுது அவனைக்காணவேண்டுமானால், பிரமனிடம் போவோமென்று அவர்களை அழைத்துக் கொண்டு பிரமன்வாழும் மனோபதி நகரிடைவந்தார். பிரமனை வணங்கித் துதித்துதித்தனர். பிரமனும் மகிழ்ந்து வந்தகாரியமென்னவேன்று கேட்க அகத்தியர் தாருகவனத்து முனிவர்களின் தவம் மோகினி யாலழிந்தமையும், அவர்களின் பன்னியர் கற்பு பெருமானாலழிந்ததும், இப்போழ்து தங்குற்றத்தையுணர்ந்து அமலனை அவர்காண அவாவிய தன்மையையும் ஆதியோடந்தமாகவிளம்பினர். அதுகேட்டுப் பிரமன் ஓமுனிவர்களே!. ஆதி நாயகனை மறந்து கெட்டீர், தமிழ்முனியோடு நீங்கள் வந்ததனாலுந் தீவினைகள் நீங்கிச்சிவன்பாலன்பு கொண்டு வருதலாலுஞ் சிலசொல்லுகின்றேன் கேளுங்கள். தருவனத்தில் எப்பொழுதும் இருந்தும் தாம்பிரசபைநாயகனைச் சிந்தை செய்திலீர். காந்திமதித்தாயை வாழ்த்தித் திருமூலநாயகனைத் தெரிசித்தேத்திலீர். இந்தநிலையறிந்தும் அன்பால் இரங்கி உங்களிடத்தில் யாசிப்பவன் போல் இன்பமுறும் வடிவினொடு வந்தும் வணங்காதிருந்து விட்டீர். இகழ்ந்தீர் உங்கள் மாதவமெல்லாம் இழந்து மயங்கினீர். எவர்களானாலும் நெல்வேலி நாயகனைநினைந்து போற்றாது என்ன தவஞ்செய்தாலும் தம்தவமிழந்து இன்னலுற்று உளம் மெலிந்து வெறுமையாகி யாசகர்கள் போல் எவரிடத்திலுந்திரிந்துபிறகு கொடிய அக்கினி நரகில் வீழ்வர். உங்களைப்போலவே முன் தக்கனென் பவன் சிவனை மறந்து நிந்தித்து வேள்விசெய்து அழிந்தான். அதுமுதல் தூயவர்கள் சிவத்துரோகி என்று அவன் பெயரையும் நினையார். உங்கள் செயலை என்னென்று சொல்லுவது.

மாயவனும் நானும் முன்னொருகாலத்தில் மனத்துஅகங்

யையால் அறிவு மயங்கிய போது சோதி சொரூபமாகத் தோன்றி நின்றான். அவன் அடி முடியைக்காண மாலும் நானும், பன்றியும் அன்னமுமாக முயன்றுங் காணமுடியாது துன்புற்றோம். அப்போழ்து எங்களுக்கு அருள் செய்தனன். அவன் இப்பொழுது உங்கள் பிழையைப் பொறுத்து அருள் செய்ய வந்தும் வணங்காது பெரும் பிழை செய்து விட்டீர்கள். அது இருக்கட்டும், யாசகர்கள் வந்தால் அவர்களுக்கு அன்னமிட்டு அவர்களை அருச்சனை செய்து வணங்குவதல்லாமல் சாபமும் இடலாமோ? ஓ தாருகவனத்து முனிவர்களே! கேளுங்கள் முன் மாதவர் பூசனை செய்து தம் மடந்தையையும் நல்கிப் பேறு பெற்ற கதை ஒன்று சொல்லுகின்றேனென்று கூறுகின்றார். நான்கு வேதங்களும் முற்று முணர்ந்து குற்றங்களி னின்றும் நீங்கி வேதங்கள் சொற்றபடி நடக்குந் தூயவனாகிய சுதரிசன னென்னும்வேதியன் தன் அழகியகற்புடையமனைவியை நோக்கி, ஓ பெண்ணே! நம் கடவுளாகிய உமை யொரு பாகன் நல் உருவோடு அதிதிகளென வருவன், ஆகையால், அதிதிகள் பூசை முறைப்படி அவர்கள் சொல் நெறிப்படி ஒழுகி மேலான இல்லற நன்மைகளெல்லாந் தீதற அருளொடு செய்குவாயாக என்றான். அவ்வண்ணமே அருந்ததி போலுங் கற்புடைய அவள் தன் கணவன் சொற்படி நடந்து வரும் நாட்களில் ஒரு நாள், யமன் பைந்தொடியின் 'அன்பையும் பத்தியையும் சோதிக்க வேறு ஒரு பிராமண வடிவங் கொண்டு முனிவன் இல்லாத வேளையில் அதிதியாக வந்தனன்.

இந்த விதமாக வந்த அதிதியைச் சுந்தர மயிலனைய அம் முனி பத்தினி கண்டு எதிர்கொண்டு சென்று தொழுது அழைத்து வந்து ஆசனநல்கி அருச்சனை செய்து துத்துதி நெய் யொடு அன்னம் படைத்து வழுவில்லாப் பூசனைகள் செய்தாள். அதனை எல்லாம் ஏற்றுக் கொண்ட விப்பிரன் அம்மாதை நோக்கி நீ திருத்தமாகிய பூசனைகள் செய்தனை நன்றாக இருக்கிறது, ஆனால், கருந்தடங் கயல்விழிக் கனியொழியனமே! காமத்தால் வருந்து கின்றேன் ஆதலால் என்னை நீ மருவுக என்றனன் அதைக்கேட்டுமுனி பத்தினி இதுவுங் கடவுள் செயலே எனத்

துணுக்குற்றுத் தெளிந்து, அதிதிபூசை மகிழ்ந்து உடனியற்றி அவர்கள் விரும்பி யவற்றை விருப்புடன் கொடுப்பதே நல்ல தருமமென்றுதன் நாயகன் தனக்குமொழிந்த மொழிப்படி நடப்பதே கற்பின் லட்சணமென்று நினைத்து அவ்வதிதியின் இச்சைப் படி நடக்கச் சம்மதித்தாள். இந்தவிதமாக அம்மெல்லியல் அணங்கு சம்மதித்தபொழுது வேதியனும் வீட்டிற்குள் வந்து விட்டனன். அவ்வாறு வந்த வேதியனை மறையோன் கண்டு சிந்தையன்போடு விருந்துசெய்யும் மாதவனே! உன் மனைவியோடு மருவுதற்கு உத்தரவுகொடு என்றனன். அதற்கு அவனும் அன்போடு தன்மனைவியை யளித்தான். உடனே அறக்கடவுள் கனிமொழியின்பங் கருதிடுபவனைப்போல் மனையிடை ஓர்பால் அந்தப்புரத்திடை மகிழ்விநோடும் புனையிழை மேனி தீண்டாமல் பொருந்திய அணையில் வைகி நனைமலர்க் குழலாளின் கற்பையும் நன்முனி கருத்தையுங் கண்டான்.

உடனே படுக்கையை விட்டு நீங்கிஉருவம் மாறித்தன் உருவங் கொண்டு முனிவனை நோக்கி நன்னெறி வழுவாமல் நீ செய்யும் பத்தியைச் சோதிக்க வந்தேன். தேவலோகத்தையும் பூலோகத்தையுங் கொடுத்திட்டாலும் உன்போலக் கற்புடை மனைவியைக் கொடுக்க வல்லவர் யாவர்? ஓ! முனிவனே! நான் மாதை விரும்பினவனல்லேன், நீ அந்தப் புத்த முதலியவளோடும் வாழ்தி. உன் பெயர் சொன்னவர்களுக்கும் அவமிருத்யு இல்லை என்று சொல்லிக் கூற்றுவன் தன்னிடஞ் சார்ந்தான். என்று கூறி அதிதி பூசை இத்தன்மையுடையது, அந்தோ! நீவிர் வீணேயிகழ்ந்துகெட்டீரே! என்ன, முனிவர்கள் உண்மையுணர்ந்து, கரங்கள்குவித்து வணங்கிப்பரமனை நிந்தைசெய்த சோகமுடையோம், அவருக்குச் சாபமிட்ட சிறியேம் இன்னும் உலகத்து இருந்து வாழவும் வேண்டுமோ? உன்னையே சரணமென்றடைந்தோம், பாம்பணிபரமற்கு ஆளாகும் வரந்தந் தருள்க என்று வேண்டினர். அதற்குப் பிரமன், அவர்களை நோக்கி உலகத்தில் சிவபெருமானைக் கருதியாகந் தவம் முதலியன செய்தவர் நற்கதி சேர்வர். அப்படி அல்லாதவர்களெல்லாம் யமன் கையிற் சிக்கித் துன்பப் படுவர் தீ நரகிலுற்று நெடுங்காலந் துன்ப

மனுபவிப்பர். அஃதிருக்கட்டும், கன்னி பாகன் உம்மிடத்தில் என்ன கூறினன் கூறுங்கள் என்று பிரமன் கேட்க, முனிவர்கள் வணங்கி "ஓ கமலத்தேவே! தண் மதிசூடும் பெம்மான் எங்கள்பால் வந்து எமது மயக்கத்தை நீக்கி இன்னருள் புரிந்து தேவதாருவனத்துறை மகாலிங்கத்தை, திருமூலலிங்கத்தை மறந்திடாதென்றும் அன்பாய் மகிழ்வோடு தரிசித்துத்துதித்து அறந்தவம் புரிந்து நியமமோடிருங்கள் என்றார். அத்தன் இவ்வாறு சொல்லியும் அறிவில்லாத எங்களுடைய அகந்தையைக் கண்டு மறைந்தனர். ஆகையால், உன்னிடத்தில் வந்தோம் பக்தியில்லாத நாங்கள் நித்தனைக் காணுமாறு அருள்செய்யவேண்டுமென்று வேண்டினர். பிரமன் அரனை நினைந்து வத்தித்துதித்து ஓமுனிவர்களே! ஈசன் உங்கட்கு மொழிந்தபடியே தெற்கேயுள்ள திருநெல்வேலிக்குச் சென்று வேணுலிங்கத்தையும் மூலலிங்கத்தையுங் காந்திமதித்தேவியையும் தரிசித்து வணங்கிக் கும்பமுனிவருடன் சென்று அவர் சொல்லியபடி தாம்பிரத்தினுலும் பொன்னினுலுஞ் சிவலிங்கத்தைத் தாபித்து வணங்குங்கள் என்றார். முன்னாளில் தருமதேவதை தேவதாருவனத்தில் சிந்து பூந்துறை நீர் ஆடிப் பல தவஞ் செய்து போற்றியலிங்கத்தை நீங்களும் போற்றுங்கள் இந்தவிதமாக ஒரு பருவகாலம் போற்றிப் பூசைசெய்யில் உங்கள் முன் வந்து அருள் செய்வான். தாருகாவனத்தில் அகத்தியரோடு சென்று அருந்தவஞ் செய்தால் மாசிமகத்தில் உங்கள் முன் வந்து அருள்செய்வான். ஆகையால் உடனே சென்று எந்தையாம் ஈசனை நினைத்துத் தவஞ் செய்யுங்கள் போங்கள் என்றார். உடனே அகத்தியரும் மற்றை முனிவர்களும் மகிழ்ந்து பிரமனைத் துதித்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு என்றுஞ் சங்கரன் இனிது வாழும் தாருகாவனத்தில் வந்து சேர்ந்து சிந்து பூந்துறை நீராடி அமலன் கோயிலினுட் சென்று முறையே வேணுவன நாதரையும் காந்திமதி அம்மையையும் மூலலிங்கத்தையுந் தரிசித்து சிவார்ச்சனை செய்தனர். அறுபதினாயிரம் முனிவர்களுந் தம் தம் பெயரால் ஒவ்வோரிலிங்கந்தாபித்து நாயகனை மனதில் நினைத்து நேயமோடு இருந்து நித்தமும் பூசை செய்தனர். வருடம் ஒன்றான பின்னர் அவ்விருடிகள் முன்னே மாசிமகத்தில் என்னையாளு

மைய நாதன் தானே கங்காளக் கோலத்தோடும் வந்து காட்சிதந் தருளினான். முனிவர்கள்கண்டு கரஞ்சிரமீது கூப்பித் தெண்ட னிட்டு அடியில் வீழ்ந்துபணிந்து போற்றித்துதித்தனர். கும்பன் போற்றநெல்லையில்வாழும் பரமனேபோற்றி! கோடி மன்மதரூப மாய் எம்முன்வந்து தோன்றுந்தேவேபோற்றி! திருநெல்வேலி வீதியில் மகரயாழின் இசையின்மிக்க பாட்டின் இசையொலியும் பண்புங்காட்டிப்பெண்களை மயல்செய்விக்கும் பிஞ்ஞகாபிரானே போற்றி! மாலும்பிரமனுங்காணு அடிமுடியுடையாய் போற்றி! மான், மழு, துடிகரத்தில் ஏந்தி போற்றி! புலியதாளுடையாய் போற்றி! முயலகன்முதுகில் நடித்தாய் போற்றி! என்று இன்ன வாறு அவர்கள் போற்றித் துதித்தலைக்கேட்ட பரமன் அதி மகிழ் கொண்டு அம்முனிவர்களுக்கு மெய்ஞ்ஞானத்தை இனிது அருள்செய்து மிக்கஎழில் பெறு தன் கோடிகோடி சூரியப் பிரகாச உருவங்காட்டினார். முனிவர்கள் மெய்ஞ் ஞானம் பெற்று இனிது ஆனந்தப் பெருங்கடல் முழுகினார் போலாயினர். ஒருப் படக்கண்ணிற் கண்டார் பின்னும் அவர் பதமலர் பணிந்து சொல்கின்றார்கள். "ஓ அருள் தரும் பரனே! நீ நின் ஆயிரங் கோடி சூரியப் பிரகாசமுள்ள உருவங்காட்டினை நாங்கள் மிகவும் பயங்கொண்டோம் கருணை கூர்ந்து சிறியேங் காணக் கயிலையி லிருக்குங் கோலங்காட்டி யருளவேண்டுமென வேண்டும் வேண் டுகோளுக்கிரங்கி யருளும்படி உமையொரு பாகன் விடைமிசைப் பார்வதி சமேதராய்த் தோன்றினார். மாதவர் கண்டு கைதலை மீது குவித்து ஆடினர். பாடினர். தொழுதனர். மெய்புளகங் கொள்ள ஆனந்தக்கண்ணீர்வர,

சுந்தர நீரணி சுடரே சரணம்!
கந்தர நிலக் கடலே சரணம்!
சந்திர மௌலித் தனியே சரணம்!
கொந்தா ரிளமுலைக் கூறாய் சரணம்!
கந்தனை யருளிய கனியே சரணம்!
பந்தந் தவிர்க்கும் பரனே சரணம்!
முந்தருள் முதலே சரணம்!
எந்தமக் கருள்க வினியனின் சரனே!

எனப் பலவாறு துதித்து "நெல்வேலித் தாணுவே நின் பெருமை பிரமனும் அறியானென்றால் மாயவலைத் தொடரில் அகப்பட்டு உழலும் எங்கள் அறிவினால் உணர்ந்து இயம்புதற்கு எளிதா குமோ? அற்பர்களாகிய நாங்கள் அறியாமற் செய்த பிழைகளனைத்தையும் பொறுத்து எங்களுக்கு அருள் புரிய வேண்டு மென்று அண்ணலார் பொற்பாத மிசைவேதியர்கள் வீழ்ந்தனர். கள். எழுந்து மனமாரத் துதித்தார்கள். கன்னியொருபாகன் மனமகிழ்ந்து உமக்கு வேண்டும் வரங்களைக் கேளுமென முனிவர்கள் "ஓ ஆதி மூர்த்தி நீ கங்காள உருவத்தோடும் வடிவுடையாளோடும். இருக்கவேண்டும். திருநெல்வேலியில் வந்து உன் கங்காளக் கோலத்தைத் தரிசிப்போருக்கு அவர்கள் செய்த பாவங்கள் நீங்கி நீயே மெய்ப்பலன் கொடுக்கும் முதற்பொருளென்னும் ஞானமுண்டாகிப் பெருகொளிசேர்க்கயிலாயத்தைப் பெற வேண்டும் இந்த வரங்களை எமக்கு அருளவேண்டும்" என்றனர். அப்படியே ஆகுக என வரமளித்துத் திருமூலநாதருக்கு மேல்புறத்தில் கங்காளகோலத்தோடு நின்றருளிச் சொல்லுகின்றார் ஓ முனிவர்களே பெண் உருவங்களெல்லாம் உமையவள் பங்காகும். ஆண் உருவமெல்லாம் எமது பங்காகும். ஆகையால், எவர்களையும் அரந்தை புரியாதவர்களும், சாதியால் இகழாதவர்களும் மேலான கதியைச் சார்வார்கள். காது கரம் கண்டம் கவின்முடி முதலிய இடங்களில் கண்டிகை யணிந்து விபூதி தரித்து விளங்குவோர் புண்ணியர் ஆவர். அவர்கள் நமக்குத் தொண்டராவர்.

இந்தவிதமாகக் கண்டியையும் நீறுமணிந்து பத்தியோடு பூசைபுரிவோர் பவநீங்கி நமது உருவம் பெற்று முத்திதலத்திருந்து சுகமனுபவிப்பர். நமது நல்லடியார்களைச் சிந்திப்போருந் தினந்துதிப்போரும் எம்மை அருச்சனை செய்தபேறு பெறுவர். எம்மடியவர்களை இகழ்வோர் சந்திர சூரியர் உள்ளவரையுந் தீநரகில் வீழ்ந்து துன்பப்படுவர். ஆகையால் நீங்களெல்லோரும் இனித்தினமும் எம்மைப் பூசைவழுவாமலியற்றி எம்மை வணங்கும் அடியவர்க்கு அமுதளித்துப் பந்தவினைப் பவந்தொலைத்து பரகதியைப் பெறுவீர்களாக. இந்த நெல்வேலியிலுள்ள தாரு

வனப் பெருமை பிரமனாலும் வேதங்களினாலுஞ் சொல்லுதற்கு அரிதாகும். இது சித்தி தலமாகும் இதிலிருக்கும் இலிங்கம் ஆகாசமாகும், வடிவுடையாள் பேரின்பங் கொடுப்பவளாம். வடிவுடைய நாயகி வயங்கும் ஒளிவடிவாகும். இவள் பூமியில் வரும் கம்பைநதிப் பக்கத்தில் அழகிய குகையிலிருந்து பெருந் தவஞ்செய்து பரனைக் கல்யாணஞ்செய்துகொண்டு அடியார் போற்ற வீற்றிருக்கின்றாள். முத்திதரும் மற்ற மூர்த்திகளும் அவ்வகையே ஆகும். விருப்பொடு மூலலிங்கத்தைக் காட்டி உமக்கு நாம் அறிவிக்கும் இந்த லிங்கமே வேதன் முதலிய எவரும் விரும்பிவந்து தோன்றுவதாகும். உலகத்தில் இது போல லிங்கம் வேறு ஒன்றுங்கிடையாது. என்றுகூறியருளுத லும் முனிவர்கள் பரவசமாய் பலதரம் நற்றுதிகள் புகன்று ஆர்த்துத்தொழுது பூசை முறை முறையே செய்து துதித்த னர். முனிவர்கள் இந்தவிதமாக இனிது இறைஞ்சுதலும் உமைகாதலன் சிந்தை மகிழ்ந்து நீங்கள் பூசித்தலிங்கம் ஆவி டையாளுடனே உதித்ததன்மையினால் இவ்விலிங்கத்தைப் போ ற்றுவோர் சிவகதியைப் பெறுவர். ஆதிலிங்கத்தையும் மற்று முள்ள லிங்கத்தையும் கங்காள கோலமுதல் மற்ற கோலங்க ளாகிய நம் உருவெல்லாம் பேணி அடிபணிவீர்களாக.

இந்த லிங்கங்களையும் மூர்த்திகளையும் பூசைக்காலங்களி லும் புண்ணிய காலங்களிலும் சிந்தை அன்போடு தரிசியுங்கள். திரை முன்னிட்டால் சேவை செய்தலாகாது. லிங்கமுன்னர் திரையிட்டிருந்தாலும் அடியவர்கள் சேவை செய்யலாம் நன்ற தாகும். தேவர்கள் முனிவர்கள் தீபாராதனை வேளை எம்மை உமைவடிவாளைச் சேவித்து உறுகதி அடைகுவர். ஆகையாலே திருநெல்வேலி அழிவில்லாத்தலமாம். பூமியிலுள்ள எவரும் வந்து நமைத் தரிசித்தால் மேன்மையான செல்வங்களைப் பெற்று வாழும்படி அருள்செய்து என்றும் நாமிங்கிருப்போம், என்றருள் செய்யுங்காலையில் முன்னே நின்ற மாயன் மோகினி வடிவம் நீங்கித் தன்பழம் உருக்கொண்டுவந்து அரன்பதத்தில் வீழ்ந்து வணங்கித்துதித்து நின்றான். அம்மாயனை அரனும் நோக்கி "ஓ மாலே! நீ மோகினியாகித் தாருகவனத்து முனிவ

ருக்கு மாலுண்டாக்கி அவர் அகந்தையை யழித்ததற்குளமகிழ்ந்தோம் உனக்கு வேண்டும் வரங்களைக் கேட்பாயாக" என்றார். அதற்குக்கடல்வண்ணன் நான் மோகினியாக வந்தபொழுது உன்னை மருவவிரும்பினேன் ஆகையால் மருவவேண்டும். இங்கு நின்று நீ ஐயமெடுத்தகங்காள கோலமும் முன்புவாமனவதாரத்தில்வந்து என் அகந்தைதீர்த்த அகோரகங்காள கோலமும் ஆகிய இவற்றை மங்கலமாகக்காணவேண்டும் ஆகிய இவ்விரண்டு வரமுந்தந்தருளுக தேவதேவே! என வேண்டினன். அதற்கு அங்கிவண்ணன் "ஒ கரியமாலே! தேவர்களுக்காக அமுதங்கடையுங்காலையில் கடலிற்றோன்றிய வமுதை தேவர்க்குஅளிக்க மோகினியாகிச் சிறப்புடன்நிற்கும் பொழுது ஆவலிற்கூடுவம், அப்பொழுது அரிகரபுத்திரன் பிறப்பன்என்றார். பிறகு மாலைநோக்கி இத்திருநெல்வேலி தட்சணகயிலையாகும். இவ்விடத்தில் யார்க்கும் ஒப்பற்றமேலான தூயஞானத்தைத்தரும்படியான எண்ணுதற்கரிய அகோரகங்காளக்கோலத்தை நீ பார்ப்பாயக என்று அந்தநல் வடிவத்தைக்காட்டி நின்றார். பல்லாயிரங்கோடிச்சூரியருதயம் போல, பல்லாயிரங்கோடிச் சந்திரோதயம்போல முகம் விளங்கப் பவளமணி வாயிடை குறுநகை விளங்கவும் திருநேத்திரமும் விளங்கவும் முடிமிசை கங்கை. அரவுசந்திரன் கொன்றை தலையோடு முதலிய விளங்கவும் மழுசூலம் முதலிய கரத்தில் விளங்கவும் மால் பிரமரின் தலை மாலை விளங்கவும் காலக்கினி ரூபமொடு பல்லாயிரம் அண்டமும் தொங்கும் மயிர்நுனிதோறுந்துவள அரையில் திருமால் அயன் ஆகிய இவர்களின் எலும்பு குலவவும் அரவஆபரணம் விளங்கவும் மணிபுனையரையிடை வயிரவகோலம் இலகவும் சூலம், கபாலம், கதை, வாள், கணை முதலியனகரத்திலகவும் பூதப்படைசூழ்ந்து விளங்கவும் நெற்றிமிசை வெண்ணீறிலகவும் சூலக்கரத்தில் திருமாலின் முழுஎலும்புந்திகழவும் அகோரமுழுங்கங்காள வயிரவ கோலமோடு தோன்றிய அழகினைக்கண்டு இருவிழிகளிலும் ஆநந்தவெள்ளஞ் சொரிய உச்சிமேற்கரங்குவித்து உடல்பரவசமுற்றுப் புளகாங்கிதங்கொள்ள பரிவோடும் அடிமிசை பலதரம் வீழ்ந்து வணங்கித்துத்தான் முன் நான் ஏனமாய்த்தோடியுங்கா

ணமுடியாத முடியையும் கண்டேன்! கண்டேன்! என்று ஆநந்தக் கூத்தாடினன்.

இறைவர் இந்தவிதமாக மால் மனங்களிக்க அருள்செய்து தருவன இருடிகளைநோக்கிமுடிவிலெம்முருவிதுபாருமென அவர்களுங்கண்டு சிரமேற் கைகுவித்து வணங்கிப் பல பல துதிகளைச் சொல்லினர். மற்றைய அடியார்களும் முறை முறையே துதித்தனர். தேவர்களெல்லாஞ் சிந்து பூந்துறையில் நீராடிப் பொற்றாமரை கருமாரி சூழ்ந்து திருவடிவாளைப்போற்றிப்பின் திருமூலலிங்கத்தைப்போற்றி அருமறைபகரும் ஆதிலிங்கத்தை அருச்சித்துப்போற்றி அனவரததானநாயகரைப்போற்றிக்கங்காளநாயகரைப்போற்றித்தோத்திரம் பலவுஞ் செய்தனர். இறைவனும் தேவர்களை நோக்கி நீங்கள் வேண்டும் வரங்களைக் கேளுமென்ன தேவர்கள் சொல்லுகின்றார்கள். ஓ ஐயனே! அகோரகங்காளக் கோலத்தைக்கண்டு வெருண்டு உளம் அஞ்சுகின்றோம் செய்ய இக்கோலத்தைத் திருமூலத்தானமான துய்யவே ரொளியோடும் துலங்கவே அருளவேண்டும், வேதியர் விண்ணோர் நாகர் முதலியோர்உன்னைப்போற்றிப்பாதம் அருச்சித்துஎத்திப்பரகதிபெறவு நல்கித்திருநெல்வேலியில் என்றும் இருக்கவேண்டும்" என்று வேண்டினர். அதற்கு இறைவன் புன்முறுவல் செய்து அன்னது செய்வோமென்று அவர்க்கு வேண்டும் வரங்களை எல்லாம் அளித்து பகாலிங்கத்தில் தன்னுருவங் காட்டி அருள்வயிரவரேயானார். இந்தவயிரவநாதரைச் சிந்தையன்போடு தரிசிப்போர் வினைகள் நீங்கி அரன் கயிலையிலிருப்பர்.

சன்னிதிக் கூவதீர்த்தம் கங்காள தீர்த்தமென்றும் வயிரவதீர்த்தமென்றுஞ் சொல்லப்படும் அதில் மூழ்கினால் பேய் பூதம் பிசாசு முதலியன விட்டோடி அஞ்சி மெய்பதறி ஆடும். கன்னியர் புருடர் மூழ்கின் அவர்கள் விரும்பிய வரங்கள் கைகூடும்.

வயிரவகணங்கள் சீறி வாய் மடித்து அதட்டிவந்து பேய் பிடித்தோர்கள் தம்மை பின்கட்டாய்க் கட்டித்தூக்கி கதையினாலடிக்க அப்பேய்களெல்லாம் ஓய்வில்லாது கூதறிக்கொண்டேயோடும். இன்னும் வயிரவகணங்கள் உலகத்திலுள்ள பூதங்களை எல்லாம் தண்டாலடித்து வாளிற் சுழற்றி எறிவர். அவர்

கள் பெயரைக் கேட்டாலும் பேய் பூதம் பிசாசு பில்லி சூனியம் பிரமஹத்தி எல்லாம் ஓடிவிடும். இந்த விதமாகப் பேய் விட்டோடப் பேய் பிடித்தோரெல்லாம் எழுந்து முன்போல வந்து வடுகநாதர் துணையடி பணிந்து அருச்சித்துத் தம்மனையில் சிறப்போடிருப்பர். திருநெல்வெலியில் வந்து வயிரவநாதரைத் தரிசித்து ஐந்து நாள் ஏழுநாள் தலவாசஞ் செய்வோர் மேலான கதியைச் சேர்வர். சூலமேந்துங் கங்காள வடுக நாதர் மணிக் கோயிலுக்குப் பின் வன்னிமரமொன்றுண்டு சிவனுருவுடைய அந்த வன்னி மர நிழலில் வைகிப் புவனங்களை யுண்டுபண்ணிப் புரந்தனர் புனிதனர் ஆகையால், அதற்கு நீர் எடுத்து விடுவோர் பத்தியோடு துதிப்போர் நற்செல்வம் பெறுவர் அதற்கு தினமும் பூசை தீபாராதனை செய்யவேண்டும். அத்தரு உலர்ந்தழியுங்காலத்தில் உலகம் மிகு துயரடையும் ஆகையால் அந்த வன்னி அழிவிலாதிருக்கச்செய்தால் பூலோகம் இனிது வாழும். இம்மரத்தைப் போற்றுவோர் கதியைச் சாருவர். தீதில்லா இம்மரத்தின் நிழலிலிருந்து தாருகாமுனிவர்க்கெல்லாம் சிவன் உபதேசஞ் செய்தான்.

அப்பொழுது மாயன் அயன் முதலிய தேவர்கள் எல்லாம் நாயகன் அடியிற் றாழ்ந்து நம்பனை நாங்கள் காணத்தாய் வடிவுடையாள் போற்றத் தாம்பிர சபையில் நின்று திரு நடனஞ் செய்யவேண்டுமென்று வேண்டினர், அதற்கு நன்றெனக்கூறி அன்பாய்க் கங்காளக் கோலத்தோடும் எவருங்காண முயலகன் முதுகின்மேல் நின்றாடினர். முயலகன் எழும்புந்தோறும் முதல்வனுங் குனித்தே யாட அண்டகோடிகளெல்லாம் அசைந்தாடிற்று. மயலறத்தேவர் நாகர் மாலயன் முதலோர் சேவை செய்தனர், நாதனும் நல்லருள் செய்தனன். உலகெமல்லாம் ஆடுதல் கண்டு கும்ப முனிவர் நாரதர் முதலியமுனிவர்களும் மால் விண்டுமுதலிய தேவர்களும் சுற்றுறநின்று போதும் எனத் துதிசெய்து வேண்ட நபகன் நடனம் நீங்கி காந்திமதியம்மையோடும் தூய கங்காள ரூபத்தோடும் ஏகி மூலலிங்கத்திற்கு மேல் புறமாக ஏய பொன் மணி ஆதனத்திருந்தார். தன்னைச் சூழ்ந்து வணங்கும் அரி அயன் முலலிய தேவர்களுக்

கும் முனிவர்களுக்கும் வேண்டிய வரங்களைத் தந்து அவரவர்களுக்கு விடை கொடுத்து அவரவர்களிடங்களுக்கனுப்பிவிட்டு ஜீவகோடிகளுக்கு அருள் செய்ய நெல்லையிலேயே நித்தியமாக இருந்தருளினார் சங்கரன் இனிது வாழும் தாருகா வனத்தில் கங்காள ரூபங்காண்போர் இப்பூவுலகில் உள்ள செல்வமெல்லாம் பெற்று இனிது வாழ்ந்து புகழ்நிறுத்தி முடிவில் போற்றருங் கைலை சார்வர். சிந்து பூந்துறையில் நீராடித் திருமூலத்தானரையும் சுந்தர மகாலிங்கத்தையுந் தூபகல் வடிவுடையாளையும் அன்பாய் அருச்சித்துப் போற்றுவோர் எம்மிறைவர் பொற்கழலில் இனிது பொருந்தி வாழ்வர்.

காளி, வயிரவர், துற்கை, கரும்பனைவீரர் ஆதியோர்கள் நெல்லைமா நகரைக் காக்க வாரண முரித்த நாதன் மகிழ்ந்தினிதிருந்தான். என்று சூதர் கூறப் பின்னுங் கூறுகின்றார். ஓ முனிவர்களே! சௌனகர் வியாசர் தன் புத்திரராகிய சுகரிடத்தில் கூறிய அரிய விஷயம் ஒன்றைக் கூறுகின்றேனென்று சொல்லுகின்றார். ஒப்பற்ற தில்லைக் கூத்தும் நெல்லைக் கங்காள முங்காண்போர் மேலான பரகதியைச் சேர்வர் சிவன் மேலாணை இது சத்தியம் என்றனர். இக்கங்காளக் கோலங் காணுங் கயவரும் பவங்கடந்து இன்பம் எய்துவர் தெரிந்தே இமையவர் மனிதரெல்லாம் நெல்லைக் கங்காளகோலத்தை செவ்வையாக நின்று போற்றித் தெரிசிப்பர். நீவிர் யாமும் அவ்வணி நகரிற் சென்று அமலனைச் சேவியுங்களென்று சொல்லினர் இந்த விதமாகச் சூதர் கூற முனிவர்கள் கேட்டு மகிழ்ந்து நெல்லை நம்பனாருளைப் போற்றிக் கொன்றை வேணியனார் கதையைக் கூறிய சூதரை என்றும் நீ வாழி என்று வாழ்த்தித் துதித்தனர். சூதர் முனிவர்களை நோக்கி தாருகவனத்து மாதர் காதல் கொள்ளும்படி வந்த கங்காள நாதர் கதையை எல்லாம் அறிந்தவாறுரைத்தோம் என்றார். அதற்கு நைமிசாரணியவாசிகள் சூதமுனிவரைத் தொழுது முகமன் கூறிக் கங்காளநாதர்கதையைக்கேட்டு சோகந்தவிர்ந்தோர் ஞானமுற்றோம் பிரானருள் பெற்றோம் என்று மகிழ்ந்து கூறினர். அதற்குச் சூதர் ஓ முனிவர்களே! நல்லியல் பொருந்திய இக்கதையைக் கேட்

போர் எழுதுவோர் படிப்போர் எல்லாம் எல்லையில்லா இன்பம் எய்தி இறைவனார் பதஞ்சார்வர் என்றார். பிறகு முனிவர்கள் நன்றே என உளம் மகிழ்ந்து கேட்டுத்திருநெல்வேலி நகரில் ஏழுமுனிவர்கள் வந்து இனிய பேறுபெற்றிடுங் கதையைச் சொல்லியருள வேண்டுமென்று கூறச் சூதர் மகிழ்ந்து சொல்கின்றார்.

## ருஅ-வது, சத்தவிருடிகள் கலியுகத்துக் கஞ்சிவந்து பேறுபெற்ற சருக்கம்.

கலியுகக் கொடுமைக் கஞ்சி கலைமிகு வசிட்ட னாதி
மலியெழு முனிவர் மற்றை வளம்பெறு தவரோ டெண்ணி
ஒலிமறை வேதற் சார்ந்தே யுணர்ந்தவ னுரைத்த வண்ணம்
நலிவிலா நெல்லை யுற்ற நலமினைத் துருகு வோமே.

கேளுங்கள் நைமிசாரணியவாசிகளே! அளவிலா உகங்களும், பிறகு பூதலத்தில் விளங்கும் நாலு உகங்கள் நானகில் மூன்று உகங்களுஞ் சென்று கலியுகம் தோன்றி நெறிமுறை திறம்பிற்று. அப்பொழுது இருபான்மைச் சப்தரிஷிகளாகிய வசிட்டர், அத்ரி, காசிபன், பரத்துவாசன், கௌதமன், சமதக்கினி, அங்கிரா என்னும் எழுமுனிவரோடு புலத்தியன், கோசிகன், வாமதேவன், பிருகு. கண்ணுவன், கிருது, புலகன் என்னும் இந்த ஏழு முனிவர்களும் சநகராதியர்கள் நால்வர் தம்மோடு கூடி நாம் தினமுஞ் செய்யுந் தவங்கள் சித்தியாகக் கூடிய தலம் ஏதென்று பிரமனைக் கேட்கவேண்டுமென்று யோசித்துப் பிரமன் வாழும் மனோபதி நகர்க்குவந்து தேவர்களும் முனிவர்களுஞ் சூழ்ந்து துதிக்க காயத்திரி சரஸ்வதி என்னும் இருமனைவியர்பக்கத்தே இருக்க நவமணி ஆதனத்திருக்கும் பிரமனைக்கண்டு பொன்னடி பணிந்து போற்றி வலஞ்செய்து துதித்து நின்றார்கள். பலவாறு துதித்து முறை முறை பணிந்து ஏத்தலும் அம்முனிவர்களைப் பிரமன் அன்போடு நோக்கிச் சனகரே! சத்தமா முனிவர்களே! எம்மை நாடிவந்த கருத்தென்னவென்று கேட்டான். அதற்கு அவர்கள் கலியுகம் வந்ததால் வந்தோம் என்றனர்.

இவ்வாறு முனிவர்கள் கூறக்கேட்ட பிரமன் முனிவர்களை நோக்கிக் கலியுகம் வந்தபின் என்னத்திற்காக அஞ்சி வந்தீர்கள் இராட்சதர்கள் கிட்டி ஏதேனுந் துன்பஞ் செய்தனரோ? வேறு ஏதேனும் இடையூறு வந்தனவோ? என்ன ஏற்பட்டது? சொல்லுங்கள் என்று கேட்டான். அதற்குத் தீதற்றமுனிவர்கள் பிரமனை நோக்கிக் கூறுகின்றார்கள். "ஓ உலகுபடைக்குங் கடவுளே! மனக்கிலேசத்தால் உனது அடைக்கலம் வந்தடைந்தோம் அதை நீக்கும் விதம் சொல்லியருளுக" என்று வேண்டிப்பின்னுஞ் சொல்லுகின்றார்.

கலியுகம் வந்துவிட்டது, இந்தக்கலியுகத்தில் தலங்களிலெல்லாந் தருமங்கள் நாசமாகிவிட்டது. பாவங்கள் எங்கும் பெருகிவிட்டது. எல்லோருஞ் சத்தியத்தைக் கைவிட்டுவிட்டனர். சத்தியத்தை விட்டோர்க்குப்புத்தி போகத்தை நாடுதலால் அரனடிக்கு அன்பாகி முத்திசேரும் முறையையும் முயலாதிருக்கின்றார்கள். கோடைக்காலத்தே எவ்வாறு சூரியன் உலகெலாம் வெதுப்புகின்றனனோ அதுபோல இக்கலிகாலத்தில் கலியும் உலகை வாட்டுகின்றான். அந்தணர் சாத்திரம், மறைமுதலியவற்றை மாறுபடக் கூறுகின்றனர். அரசர்கள் பொன்னுக்காசைப்பட்டுக் குடிகளை வருத்தி இறை வாங்குகின்றனர். தங்குரவரையுங் கொலை செய்கின்றனர். மற்றையவர்களுந் தங்கள் தங்கள் கருமங்களினின்றுஞ் சிதைந்தனர். காமக்குரோதங்கள் மிஞ்சிமாயையால் யாவரும் மூட்பெற்றிருக்கின்றனர். நெறியில்லாது வன்கொலை வஞ்சனை முதலியவற்றை நேயமோடு செய்கின்றனர். எவர்களும் மிஞ்சிய பாவமே செய்தலால் அறஞ்சிறிதுமில்லை. எவருஞ் சபையிலிருந்து கொண்டு தேவ தேவனைத் தூடணஞ்செய்வர். சூத்திரர் வேதமந்திரம் வேள்வியியற்றுவர். சாத்திரஞ் செப்புவர். தமக்கு ஒப்பில்லை என்று நீதி யந்தணரையும் நிந்திப்பர். கொஞ்சமும் ஒழுக்கமின்றியே வேதியர்சூத்திரர் தொழில்களை இயற்றுவர். வேதியர்கள் அருந்தும் அன்னத்தை விலை கொடுப்போர்க்களிப்பர், உண்ணும் நீரையுங் கிரையத்திற் குவிற்பர். விக்கிரகங்களையுஞ் சிவலிங்கங்களையும் விற்பர். வேசை போகமேமேலெனப்

புகல்வர். கலியுகத்தில் மோட்சத்தை எவர் பெறுவர். ஆற்றுத்து
யர் அவமிருத்து அச்சம் நோய் உண்டாகும். கள்ளருந்துவர்
காமத்தாற் பிறன்கடை காண்பர். பிள்ளை தாய்தந்தையை வருந்
திடப் பேசும். கொள்ளை யடிப்பர். குடிகெடுப்பர். இந்த வித
மாகப் பல தீமைகளைச் செய்யவே கலியுகம் வந்தது. இதன்
வன்மையை யவரே தவிர்க்க வல்லவர். இந்தப் பாவமெல்லாம்
எங்கே எம்மை வந்து பற்றுகின்ற தோவென்று பயந்து உன்
னைச் சரணம் புகுந்தோம் வேதநாயகனே எம்மைக் காத்தருள
வேண்டுமென்று வேண்டினர். அசுத்தமுடைய வெங்கலியைத்
தூரத்திச் சித்திநல்கும் ஒருதல முரைத்தருளுக என்று இரந்து
வேண்டினர். உடனே பிரமன் ஒரு கன்னற் பொழுது யோசித்
து பல தலங்களையும் பற்றி நினைந்து அதனதன் பெருமை
களைச் சீர்தூக்கி, ஒப்புயர்வற்ற தலந் திருநெல்வேலியே யாகும்
அதில் என்றுஞ் சிவபெருமான் அடியருக்கருள்செய்ய வடி
வுடைச் சத்தியோடு வீற்றிருக்கின்றான். அதில் மூலலிங்கம்,
சோதிலிங்கம், காந்திமதி ஆகிய இவர்கள் சுந்தரச் சோதியாய்
நாளும் விளங்குவர். வேதங்களெல்லாம் வேணுவாக வளர்ந்
திருக்கும். தருமதேவதை உறையுந் தலமும் அதுவேயாகும்.
உமாதேவி சிவபெருமானைப் பூசைசெய்த தலமும் அதுவே யா
கும். நதிகளிற் சிறந்த தெய்வீகமுடைய பொருநை அங்கு
செல்வதாகும். சிந்திப்போர் வினையை நீக்கும். சிந்துபூந்துறையும்
அங்கேயே விளங்கும். அத்தலத்திற்றான் நானும் என் புத்திரர்
களுந் தவஞ்செய்து பிரமபட்டம் பெற்று உலகைப் படைக்
கின்றோம்.

மாயனுந் திருநெல்வேலியிற் சென்றிருந்து நெல்லை நாத
னைக் குறித்துத் தவஞ்செய்து அவன் அருள்பெற்று அசுரர்
களைக் கொன்று புகழும் வலியும் பெற்று இவ்வுலகத்தை எல்
லாம் விழைவுடன் காக்கின்றான். இந்தத் தலத்திற்றான் நெறித
வறுந்தாருகாவனத்து முனிவர் தவங்களை மாய்த்து அவர் வேண்
ட அருள் செய்தனர். இந்தத் தலத்திற்றான் வாள்விழி வடிவை
மணந்து அனவரததான நாயகராகி உலகெலாஞ் செங்கோல்
செலுத்தினான். இத்தலத்து வந்து சுக்கிரனுந் திருமூலலிங்

கத்தைப் பூசித்துப் பணிந்து அமிர்த சஞ்சீவினி பெற்றான். அசுரர்க் கெல்லாங் குருவாகி இன்னும் நெடுவாணி லிருக்கின்றான்.

இன்னும் பல தேவர்களும் முனிவர்களும் அத் தலத்தே திருமூல லிங்கத்தைப் போற்றியே பெறலரும் பேறு பெற்றுப் பெருவாழ்வடைந்தனர்.

ஆகையால் முத்திநிலை விரும்பி அருந்தவஞ் செய்வோர்க்கு அத்தலம்போற் சிறந்த தலம் வேறு ஒன்றுமில்லை. தவஞ் செய்வோர்க்கு அவர்க்கு வேண்டிய வளித்தலாலே சித்திதலமென்றும் பெயராகும். அத் தலத்தை நினைத்தாலும் பேர் சொன்னாலும் ஒருநாள் இருந்தாலும் இறந்தாலும் பிறந்தாலும் கையிலே சேர்வா. ஆகையால், நீங்கள் அங்கு சென்று பொருநை மேவிச் சிந்துபூந்துறை நீராடி நெல்லை நாதனைப்பணிந்து போற்றில் பாதகக் கதியை வென்று பரகதி எய்தலாம் என்றார். முன் கும்பமுனிவன் அத் தலத்திற் சென்று திருமூல லிங்கத்தைப் பூசை பண்ணிக் கலியை வென்று விளங்குகின்றான். அவனோடு கூடி நீங்களும் அமலனை அருச்சித்தேத்தில் வெங்கலியை நீங்கித் தூயராக இருப்பீரென்றான். உடனே முனிவர்களும் போற்றித் துதித்து விடைகொண்டு விமானத்தேறி கடவுளின்பாதம் நினைந்து போற்றிக்கொண்டே பூமிக்கு வந்து கேதாரம் முதலாகவுள்ள பல தலங்களைத் தரிசித்துப் பூசித்துக் கொண்டே வந்து பொருநை நதிக்கரையைச்சார்ந்து சிந்துபூந்துறையில் நீராடிச் சிவபெருமானை நினைந்து துதித்துக்கொண்டே கும்பமுனிவரின ஆசிரமத்திற்செல்ல சனகராதியரும் முனிவரும் வருதலை யறிந்து கும்பமுனி எதிர்கொண்டு செல்லமுனிவரர் பாதத்தில் விழுந்து வணங்கிப் புகழ்ந்தனர். முனிய கும்பனும் எதிர்தொழுவார்வத்துடன் இருந்தனர். இருந்து பலவிதமாக இன்மொழி கூறித் துதித்து நெல்லை நாயகன் பதமலர் தொழ எங்களுக்கருள் செய்யெனப் போற்றக் கும்பமுனிவர் பேரன்பினோடு நோக்கிச் சப்தமாதவ முனிவரே! சனகராதியரே! நெல்லைவாழ் அமலன் மேலன்புடையவரே! நித்தனைத்தொழுவோம் வாருமென்று அழைத்துக்கொண்டு சென்று நெல்லையில் வந்து அந் நகரைவலஞ் செய்து வடிவாள் சுந்தரந்திகழ் கோபுரங்கண்டு தொழுது கருமாரி கவுரி

முதலிய தேவாரலயங்களுஞ் சூழ்ந்து நாதனார் திருக்கோயிலை யுஞ் சூழ்ந்து ஆதிலிங்கத்தையும் மூலலிங்கத்தையும் வடிவாளை யும் அன்புடன் போது கொண்டருச்சித்துத் தொழுது இன்ப சாகரத் தாழ்ந்திருந்தனர். அகத்தியரோடும் வேணுவன நாத ரைத் தொழுது விடைகொண்டேகிச் சிந்துபூந்துறையின் மருங் கே வந்து குறுமுனிவர் இருக்கை நின்று வந்து கோதரு முனி வர் கூடி அத்தலநதியின் பாங்கர்தம் பெயரால் சுத்த விருடிகள் தீர்த்தமென்று உறுதியின் உண்டுபண்ணி அதில்நீராடிப்பரமனைப் புகழ்ந்து போற்றி அவ்விடத்தே தங்களுக்குப் பன்னசாலைகளும் உண்டுபண்ணி அங்கு தங்கித் தினமுந் திருமூலலிங்கத்தையும் ஆதிலிங்கத்தையுந்தரிசித்து ஏத்தி உருகியசிந்தையோடும் அவண் உறைந்திருந்தனர். ஒவ்வொருவரும் தாம் தாமே ஒவ்வோர் சிவ லிங்கத்தை யுண்டாக்கிப் பூசையும் வேறுசெய்து வந்தனர். இந்த விதமாக நூறு வருடமங்கிருந்தனர். இம் முனிவர்கள் செய் யும பூசைக்குவந்து திருமூல லிங்கத்தூடு பரைமயார் பாகன் றோன்றித் தரிசனந் தந்தருளுதலும் முனிவர்கள் பரவிக் கமல பாதத்தில் வீழ்ந்து பணிந்து சென்னிமேற் கரங்குவித்து ஆனந் தபாஷ்பஞ்சொரிய மெய்ப்புளகொடு துதித்தனர். அதுகேட்டு நாதன் முனிவர்களை நோக்கி உங்கள் பூசைக்குந் துதிக்கும் மிக மகிழ்வுற்றோம் வேண்டும் வரங்களைக் கேளுங்களென, கேட்க லுற்றனர். நாங்கள் ஸ்தாபித்த லிங்கத்தில் ஏற்புற என்றும் நீ இருக்கவேண்டும், எங்கள் காரணத்தாலுண்டான தீர்த்தமும் என்றும் இருத்தல் வேண்டும், இந்தத் தீர்த்தத்தினிடத்தில் எம் மாலாக்கிய லிங்கத்தைத் தரிசிப்போர்க்குப் பாவத்தை நீக்கிப் பு னிதராக்கிக் கயிலைவாழ்வையளித்தல் வேண்டும். சிந்துபூந்துறை யில் எங்கள் பன்னசாலைகளினூடு பரிவுடன் இருந்து நாங்கள் உன்னைப்பூசித்து நித்தியமாக இருக்க அருள்செய்ய வேண்டும் என்று கேட்க அவ்வாறே யவர்களுக்கினியவர நல்கி ஞானோப தேசஞ் செய்து இனிது மூலலிங்கத்தூடே மறைந்தார்.

முனிவர்கள் வரம்பெற்று மகிழ்வுடனே ஈசனைப் போற்றித் துதித்து வெங்கலியினின்றும் நீங்கிச் சிந்துபூந்துறையில் வந்து தங்கி நெல்லை நாதனைத் துதித்துப் பூசித்துக்கொண்டு இப்

பொழுதும் இருக்கின்றார்கள், என்று கூறிச் சூதமுனிவர் தெரிந்தபட்டிற் கூறினேன் மேல் இன்னும் என்ன கேட்க விரும்புகின்றீர்களென்ன, மூலலிங்கத்தின் பெருமையைக் கூறியருளவேண்டுமென்று கேட்கச்சூதமுனிவர் அதன் பெருமை என்னால் சாற்றுந் தன்மையுடைய தல்ல ஆனாலும் நான் அறிந்தமட்டிற் சொல்லுகின்றேனென்று சொல்லுகின்றார்.

## ருகூ-வது, திருமூலலிங்கச் சருக்கம்.

*உலகழியுங் காலத்து மழிவின்றி நிலைநின்றே உயிர்கட் கெல்லாம்*
*மலமகற்றி மாண்பருளி மருவியொளிர் மூத்தான மாலிங் கத்தை*
*குலவுமர கதப்பாவை வடிவாளி னுடன்றோன்றிக் கோயில் கொண்ட*
*அலகுபடா மூலலிங்க வருட்சோதி யகத்தாக வமைப்பாம் மன்னோ.*

சோதி நாயகன் சுந்தரநாயகன் ஆதிநாயகன் அழிவில் நாயகன் வேய்வனத்து மூலலிங்கத்தில் விருப்பானான். அதனால் வேய்வனத்தில் வேதங்களும் அறிதற்கு அரிய காலமுங் கடைப் பிரளயந்தோறும் மேன்மையாயும் வளஞ்சிறந்ததுமான நெல்வேலியில் நவசத்தியம் ஆவுடையாளோடு விளங்கினான். இது முதல் லிங்கம், இஃதன்றி எட்டு லிங்கங்களுள அதாவது இரண்டாவது லிங்கம் கயிலையில் விளங்கும். மூன்றாவது லிங்கம் காசியில் விளங்கும். நான்காவது லிங்கம் கேதாரத்தில் விளங்கும். ஐந்தாவது லிங்கம் லெட்சுமிகிரியில் விளங்கும். ஆறாவது லிங்கம் திருக்காளத்தியில் விளங்கும். ஏழாவது லிங்கம் பொற் சபையில் விளங்கும். எட்டாவது லிங்கம் கச்சிப்பதியில் விளங்கும். ஒன்பதாவது லிங்கம் ஆலவாயில் விளங்கும். இந்த நவலிங்கத்தையுந்தரிசிப்போர்பவ நீங்கிப் புனிதராவர்.

முதல் லிங்கமாகிய நெல்வேலி லிங்கத்தைத் தொழுவோர் மற்றைய எல்லா லிங்கத்தையுந் தொழுத பயன் பெறுவர். இந்த லிங்கத்தை வேதங்கள் ஆதிப்பிரளயகாலத்திற் பூசித்து எப்பிரளயத்து மிறந்திடாது என்றும் இருக்கும் வரம்பெற்று நெல்லையிலேயே இன்றும் இருக்கிறது. தருமதேவதையும்

இடபத்தின் உருவமாய்ப் பிரதோடம் வருங்காலம் முறைப்படி பூசனைசெய்து எக்காலமும் அகன்றிடாதங்கிருக்கும். இந்த லிங்கத்திற்கு ஆதிலிங்கம், மூலலிங்கம், திரிகண்டலிங்கம், வேதலிங்கம், விண்டுபரவும் லிங்கம், தருமலிங்கம், கௌரிலிங்கம், தானலிங்கம், நிற்குணலிங்கம், கற்பலிங்கம், பராபரலிங்கம், பரமலிங்கம், சகுணகற்பகமாலிங்கம், கவுரி கல்யாண லிங்கம், வளர்ந்தமாலிங்கம், என்று இப்பெயர்களும் இன்னும் அனந்தம் பெயரும் விளங்கும், என்று சூதமகாமுனிவர்கூற நைமிசாரணிய ரிஷிகள் சூதரை நோக்கிக் கேட்கின்றார்கள் "ஓ முனிவர் பெருமானே! முன்னம் பரமன் தாருகாவனத்து முனிவரர் மூலலிங்கத்தைப் பூசைசெய்யக் கூறியதும் சுயம்பு லிங்கம், பிரதிட்டை லிங்கம இருபத்தைந்து மூர்த்திப்பூசை முதலியவற்றை எங்களுக்கு விளங்கக் கூறவேண்டும்" என்று கூறச் சூதர் சொல்லுகின்றார், இதன் விவரத்தைக் கும்பமுனிவர் தாருகாவனத்து முனிவர்களுக்குக் கூறினர்.

அதை உங்களுக்குச் சொல்லுகின்றேனென்று சொல்லுகின்றார். காசிமுதல் மற்ற எல்லாத் தலத்திலுமுள்ள சிவலிங்கமெல்லாம் இந்த நெல்லை லிங்கத்தினின்றுந் தோன்றியதே. இதன் கிளைகள் என்று சொல்லலாம். இந்த லிங்கத்திற்கும கயிலை லிங்கத்திற்கும் திருமூலலிங்கம் என்றே பெயர். தாய்க்கும் காந்திமதி என்றே பெயராம். அமலநாதன் உலகிற்கு அருள்செய்யப் பற்பல இடங்களில் இலிங்கமாகத் தோன்றுவன. அந்த லிங்கந்திரி மூர்த்தியுருவமாகும். நெல்வேலியிலே ஆவுடையாளோடு தோன்றுதலாலே இந்த நெல்லையே தூயதென் கயிலை என்று நான் மறைகளெல்லாம் பகரும் இத் திருநெல்வேலி சத்திசேத்திரமும் ஆகும் மால் பிரமன் முதலிய தேவர்களெல்லாம் இந்த மூலலிங்கத்தைப் பூசித்துக்கொண்டு என்றும் இங்கு வாசயாக இருக்கின்றார்கள். பலராக்காகத் தோன்றிய லிங்கத்திற்கு நாமபேதம் மிகுதியும் உண்டு. ஓ முனிவர்களே! பூமியில் ஆவிடையாளோடு தோன்றிய தலங்களைச் சொல்லுகின்றேனென்று சொல்லுகின்றார். காசியில் மால் பூசித்துப்போற்ற விசுவநாத லிங்கம் உண்டாயிற்று. அரிக்

கும் அயற்கும் அருள்செய்ய அண்ணுமலையில் லிங்கந்தோன்றி ற்று. மால் உலகங் காத்தற்காக அருள்செய்யக் காஞ்சியில் ஏகாம்பரலிங்கம் எழுந்தது. படைப்புத்தொழிலை மறந்த பிரமற்கருள் செய்ய விருத்தாசலத்தே லிங்கவுருவாய்த் தோன்றி னன் மாயன் அசுரர்களைத் தொலைக்கவேண்டிப் பொன்னம்பலவனடித் தாமரை போற்றக் கன்னிபாகன் சிதம்பரத்திற் கருணையிலிங்கவடிவானுன். திருமகள் மாலினைக் கல்யாணஞ் செய்துகொண்டு வந்து கமலாலயத்திருந்து சிவபெருமானை நினைந்து மிகுதவஞ் செய்தலாலே அத்திருமகளுக்கு வரங் கொடுக்கத்திருவாரூரில் இலிங்க உருவமாயினுன். பதினுன்கு லோகத்திலும் உள்ள உயிர்கள் மாயை வசத்தால் இருவினையாற் செய்யுந் தொடர்பில்வருந் தீமையையகற்றி அழியாத சீவன் முத்திகொடுத்தருளத் தூயமதுரையில் உயர்ந்த சொக்கலிங்கந் தோன்றியது. இந்தவிதமாகவே இன்னும் மற்றுமுள்ள தலங்களிலெல்லாம் அன்பாய் மன்னும் இலிங்கவடிவாகி வந்து தோன்றி உயிர்க்கெல்லாம் வரும்பவத்தை நீக்கி மேலான கதியைக்கொடுத்திடுவர். இது தெறிந்து உண்மை அடியார்கள் அரனைப்பணிந்து கதி அடைவர்.

சிவபெருமான் அடியார்கள் பொருட்டாக இலிங்கவடிவாக எழுந்தருளி இருக்குந் தலங்கள் முக்கோடிக்கு மேலென்று மொழிகுவர். பொன் வெள்ளி இரத்தினம் முதலியவற்றால் லிங்கம் எங்குமில்லை. ஆனுல் திருநெல்வேலியிலே திங்கள் புனையுந்திகிரி மூத்தாய்த்திரண்டு எழுந்தது. அது தங்குவிந்து நாதமொடு சத்தி சிவமாய்த்தானிருக்கும் சத்திபிரியாச் சிவந்தானே இரண்டாய் மூன்ருகி முத்தி கொடுக்கும் பொருளாகி ஆதிமத்தி அந்தமின்றி அடியார்களுக் கெளிதாய் ஓரெழுத்தாகவும் பஞ்சாக்கிரமாகவும் பூரணமாகவும் ஆனந்த சித்தவுருவாகி நின்ருெளிரும். மற்ற இடத்துள்ளன மறைந்து தோன்றும். இந்த நெல்லை மூலலிங்கமோ மறையா, என்றும ஒரே மயமாய்ச் சிறந்து விளங்கும். ஆகையால் மற்றய தலங்களிலுள்ள லிங்கமெல்லாம் இம்மூலலிங்கத்திலிருந்து தோன்றும் என்று மறைகள் இயம்பும். அடியார்கள் பவநீங்கிச் சுகமுறு

தற்பொருட்டு இரவும் பகலும் இத்தலத்திலிருந்து மூலலிங்கத்தையும் அன்னை வடிவுடையாளையும் வணங்கித் துதிப்பர்.

இதுதான் அகத்தியர் தாருக வனத்து முனிவர்களுக்குக் கூறிய பெருமையின் சுருக்கம் என்று சூதமுனிவர் சொல்லினார். இக்கதையைக்கேட்பவர் முக்கண்ணர் திருவருளால் இப்புவியின் பாக்கியம் பெருகி மாறா இன்பத்திலிருப்பர். ஈற்றில் முத்திபெறுவர் என்று மேலுஞ் சூதர் சொல்லச் சூதரைப் போற்றி எம்பவம் நீங்கினோம். இனி அத்தலத்திற் குடிகொண்டருளும் புரத்தை எரித்தோன் செய்த விளையாட்டை எல்லாங் கூறியருள வேண்டுமென்று கேட்கச் சூதர் உங்களுக்கு வேண்டவளர்ந்தலிங்கநாதன் பெருமை சொல்கின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## ௬௰வது, வேண்டவளர்ந்தமாலிங்கச் சருக்கம்.



பால்தரு மாய னஞ்சப் பாற்குடங் கவிழ்த்துப் பாரில்
மால்தரு மகனுங் காண மதிமுடி வடிவும் பெற்று
கோல்செயு மரசற் காகக் கூர்தர வளர்ந்து பின்னும்
பால்பெறக் குறுகும் நாதன் பனிமலர்ச் சரண்கள் போற்றி.

நீதியும் வளமுஞ்செறிந்த நெல்லை மாநகரில் மூலலிங்கம் எக்காலமும் அவிர்லொளிபரப்பித் தொண்டர்கள் போற்றப்பரையோடுஞ் சிறந்தினி திருக்கும், என்றபொழுது முனிவர்களெல்லாஞ் சூதரைப்போற்றி எப்பொழுதும் இத்தானத்தில் இருப்பரென்றும், ஓர்காலஞ் சோதியாய்த்தோன்றிடுமென்றும், நன்றில்லாத காலத்தில் மறைந்திடுமென்றும், பரையின் தவத்திற்காகத் தோன்றன ரென்றும் வேதங்களுக்கும் தருமதேவதைகளுக்கும் வந்து தோன்றின ரென்றும், மற்றவர்களுக்காக மூங்கிலில் முத்தாய்த்தோன்றின ரென்றுஞ் சொல்லித்தாங்களருளிய ஆதிலிங்கத்தின் முக்கியங்களைச் சொல்லுங்களென்று கேட்கச் சூதர் சொல்லுகின்றார்.

செம்பொன் மாடங்களோடு விளங்குந் திருநெல்வேலியில் சத்தியின் ரூபமாகிய தாம்பிரபன்னி நித்தமும்வந்து சூழ்ந்து எங்

கணுஞ் செறியும். இந்நெல்லை முன் தாருக வனமென்றும் பிறகு காலாகாலங்களில் வேறு வேறு பெயர்களும் பெற்றது. ஆதியி லுள்ள மூலலிங்கமும் அன்பருக்காகத் தோன்றித் திரும்பவும் மறையும். அதனால் நாமரூபமில்லானுக்கு நாமம் அனந்தம் ஏற்ப டும் காசிமுதலிய வேறு தலங்களிலும் இப்படியே கடவுள் தோன்றி செய்தலீலைகள் அளவில அதனை எவரே அறியவல்லர்?

எம்பெருமான் உலகஞ்சமமாக வடகயிலையில் இருக்கின் றோம். நீ இனிசென்று தெக்கணகயிலாயமாகிய நெல்லையில் இருஎன்று கும்பற்குக் கூறியருளினான். இந்நெல்லை எங்கோ னுக்கு வாசத்தானமாகிற கைலையேயாகும். பணைவனப்பதி யும் ஆகும், இதுதென்காசியும் ஆகும், உலகங்களை எல்லாம் காக் கவேண்டி எம்பெருமான்பரையோடும் முனிவர், விண்ணோர், போற்ற வாழ்ந்திருக்கின்றான். கொடிய நீதிதப்பிய அரசர்கள் அரசாட்சிசெய்யுங்காலத்திலும், கலிகாலத்திலும், அழிவு உண் டாகுங் கொடியகாலத்திலும், திவ்விய இத்தானத்தில் மறைந்து வைகுவன். ஆதியாம் இலிங்கம் என்றும் அனாதியாகவே இருப்ப தன்றி நூதனமாக வந்து தோன்றியதன்றாம். நாயகரும் அம்மை யும் மற்றையரும் அங்குவாழும் புராதன மூர்த்தியாகும் என்று மறைகள் கூறுவதை வியாதனார் கூறியபடி. சொல்கின்றேனென் றுசொல்லி அன்புடன் அரசன் வேண்ட நெல்வேலிலிங்கம் வளர்ந்த கதையைக் கேளுங்களென்று கூறுகின்றார். வளமிகுந் தபாண்டிநாட்டில் எம்இறைவர் வாழும் நெல்லை மாநகரத்தின் கீழ்பால் வடமுகமாக மணிகளைச் சிந்திக்கொண்டு அலைபெருக ஓடும் பொருநையின் கீழ்பக்கலிலேவிளங்கி ஓங்குவது மணவை மாநகரம் ஆகும்.

இந்நகரம் பலவளங்களாலும் நனிவிளங்கித் தேவாலயங் கள் யாகசாலைகள் போகசாலைகள் சிகரங்கள் முதலியவற்றோடு பொன்னாட்டிலும் நன்றென்று சொல்ல விளங்கும். யானை தேர்கள் பரிகள் கோடிகோடியாகத் தெருவெலாம் விளங்கும், இந்துகாந்தமணி மேடையில் மாதர்களின் செம்பஞ்சு சேர்ந்த மெல்லடிச்சுவட்டைநோக்கி நீரில்தோன்றுஞ் செங்கமலமென்று அன்னங்கள் பெட்டைகளோடு உலவும். இத்தகைய அளவற்ற

சிறப்புப்பொருந்திய மணவையில் மருகினிடமெல்லாம் மகளிரின் அணியணிப்பணிகளும் பொருநைக்கரைகளிலெல்லாம் நவமணிகளும் விளங்கும். சோலைகளில் அரம்பையர்களும், தேவர்களும், எந்நாளும் விளையாடுவார்கள். மனைகளிலெல்லாம் கன்னியர் மணங்கள் நடக்கும். அதுபோலவே வாவிகளில அன்னம் பெட்டையைச்சங்கொலிகக மணக்கும். அரசர்களெல்லாம் மனுமுறை திறம்பார். மாந்தர்கள் புலவியினுஞ்சத்தியமே புகல்வர். அடியார்கள் அரன் அடிமறவார்கள். இதுபோன்ற மேலானவளங்களெல்லாமுடைய நகரைமுழுது கண்ட ராமனெனும் பாண்டியன் நீதியோடு அரசுபுரிந்து வந்தனன.

இவன் காலத்து மாதவரும் நாவலரும் வானவரும் மகிழ்ந்தனர். வேதியரும் ஆவினமும் சைவநெறியோரும் நல்லறமும் நற்குடியும் குறையாது மேன்மேலும் பெருகிற்று. முழுதுகண்டராமனென்னும் அரசனுக்கு பசுநிரை மிகுதியாகவுண்டு. அப்பசுநிரைகளைமேய்க்கும் ஆயர்களும் பலர். அவர்களுக்கெல்லாந் தலைவனுக ஒரு ஆயன்இருந்தான், அவன்சிவபெருமானையே மனத்தில் நினைக்குங்கருத்துடையவன். இவன் பசு நிரையை வெய்வனத்தில் மேய்த்து மிருகபயங்களை நீக்கி இனிதுகாத்து பொருநைநீர் உண்பித்து மரநிழலில் அமைந்திருக்கச் செய்வித்து இரவினில் கொட்டகத்தே செறிவித்து அழகிய கன்றுகள் பாலுண்டு துள்ளிக் குதித்து விளையாடச்செய்து நாளும் பரிபாலித்து வந்தான்.

சந்திரவங்கிஷவேந்தனின் பெயராகிய முழுது கண்ட ராமன் என்னும் அப்பெயரேகொண்ட முழுதுகண்ட ராமக்கோனென்பது அவன் பெயர். படர்ந்த முகமுங்குழிந்தவிழியும் பாசிநிறைந்தபருத்தபல்லும் உடல் வளைவுங்கருநிறமும் உடையவன். ஒடுங்கிய இடையில் கம்பளமணிந்திருப்போன். நெடுவிரலும் வளைகாலும் உடையவன். நெரிந்தகுரலை யுடையவன். விசிறுங்ல தடி ஒருகையிலும் பாற்குடங்கள் ஒருகையிலும் வைத்திருப்போன். இவன அரசனுக்குத்தினந்தினம் பசுக்களைப்பால்கறந்து குடத்தில் நிறைத்துத்தன் ஆட்கள் சுமந்துவரக்கொண்டு ஒப்பித்து வருவன். இப்படி வருநாட்களில், ஒரு

நாள்மாலையில் இருட்டில் அதிபயத்தோடு ஆயரோடு வேய்வ னத்துவழியாக விரைந்து வரும்போழ்து வேய்வனத்து மத்தி யில் வந்தபொழுது பாற்குடங்களெல்லாங்கவிழ்ந்து பால்கள்சிந் திப்போயிற்று. குடங்கள் மட்டும் உடையவில்லை.

இது கண்டு கலங்கினான். பால்சிந்தியதையும் அங்கு பனை முளைவிளங்குவதையுங் குடம் உடையாதிருப்பதையும் குடம் உருண்டு ஓடினதையுங் கண்டு அதிசயமுற்றான். அரசன் கோபிப்பானே யெனப் பயந்தான். பிறகு மிகச் சினத்தோடு உருண்டுபோன குடத்தை எடுத்து வந்து பாலை வாரிவிட்டுத் தோளில் அரைக் குடப்பாலுஞ் சுமந்து கொண்டு நாளை நான் வந்து இந்த முளையை வெட்டி விடுகின்றேனென்று சொல்லிப் போயினன். பாலைப் பயத்துடன் சுமந்து சென்று பாண்டிய னின் வாயிற் காப்போரிடத்து ஒப்பித்து விட்டுத் திரும்பி வந்து விட்டான். வீட்டில் வந்து தன்மனை மக்கள் சுற்றத்தார் முதலியவரிடத்து மொழிந்தான். அவர்களும் ஆச்சரியப் பட்டனர். இவ்வாயன் அரசன் நாளை என்ன செய்வானோ எனப் பயந்து உணவும் உண்ணாது இரவெல்லாந் தூங்காது இருந்து அடுத்தநாள் முன்னாளிலும இரண்டத்தனை அளவு மிகு தியாகப் பால்கறந்து பெருங் குடங்களில் நிறப்பி எடுத்துக் கொண்டு வர அந்த நாளும் முன்போலவே மூங்கில் முளையில் இடறிப்பால் கவிழ்ந்து போயிற்று. அதுகண்டு ஆயன் கண் சிவந் து கோபித்துப் பிறகு இந்த இடத்தில் ஏதோ அதிசயங்களுண் டென அதிசயித்தான். முன்போலவே உருண்ட குடத்தை எடுத்துப் பாலைவாரிக் குடத்திற் சேர்த்துக் கொண்டு பாண்டிய னின் சேவகரிடத்தில் ஒப்புவிக்க அவர்களும் பால் குறைந்திருக் கிறதே என்னவென்று கேட்கப் பயமுற்று இன்னது சொல்வதென்று தெரியாமல் இனிமேல் குடம்நிரம்பப் பால் கொண்டு வருகின்றேன் கோபித்துக் கொள்ளாதீர்கள் என்று கைதொழுது வணங்கி மீண்டு மனிடஞ் சார்ந்தான்.

அன்றும் தன்மனைமக்கள் சுற்றத்தாரோடு நடந்த விஷயங் களைத் தெரிவித்துக் கவலையோடு உறங்காது படுத்திருந்து மறு நாட்காலை பெரும் பெருங்குடங்களில் நிரம்பப் பால் கறக்க

சுமந்துகொண்டு வேய்வனத்தின் வழியாக வரும்பொழுதுமுன் போலவே பாற்குடங் கவிழ, மனங்கலங்கி அதிசயித்து இன்று அரசன் என்சொல்வானே? இன்றென்சொல்வது என்று பயந்து உடையாது உருண்ட பானைகளை எடுத்துச் சிந்திய பாலை முன் போல்வாரி நிரைத்துக் கொண்டு அரசன் மனையைச் சார்ந் தான். வேலைக்காரர்கள் இன்றும் பால் குறைந்திருப் பதைக் கண்டு சமையற்காரர்க ளிடத்தில் தெரிவிக்க அவர்களும் இவ் வாயன் ஒரு நாளல்ல பல நாளும் இப்படியே குறை குடமா கவே பால் கொண்டு வருகின்றான் இவனை விடப் படாது அரச னிடங் கொண்டு போக வேண்டு மென்று அவனைப் பிடித்து அரசனுக்கு முன் கொண்டுபோய் இவன் சில நாளாக அரை யரைக் குடம் பாலாகவே கொண்டு வருகின்றானென்று கூற அரசனுஞ் சினந்து ஏன் நீ குறை குடப்பாலே கொண்டு வருகின் றாய்? எனக் கேட்க, இடையனும் மனம் வருந்தி அஞ்சி ஒடுங்கி நடுங்கி நின்று வாய் பொத்தி வாய்குளரி நாளையோடு குடம் நிரம்பப் பால் கொண்டு வருவேன் இப்பொழுது என் பிழை பொருத் தருளவேண்டும் எனப்பணிந்து கேட்க, அரசனும் இரங்கி இப்பொழுது நீ செய்த பிழையைப் பொறுத்தோம் இனிப்பால் குறையாமல் நிறை குடமாகக் கொண்டுவர வேண் டுமென அவ்வாறே செய்கின்றேனென்று தொழுது விடைபெற் றுக் கொண்டு தன் குடிசைக்கு வந்து தன் மனைவியினிடம் பால் கவிழ்ந்ததையும் அரசன் கோபித்துக் கொண்டதையுங் கூறிச் சொல்லுகின்றான். "அரசனுக்குக் கொண்டு போகும் பாலெல்லாம் வேய்வனத்தில் அங்குள்ளமுளையில் இடறிப் பால் கவிழ்ந்தது, அந்த முளையைச் சுற்றி ஒரு முளத்திற்கு மேல் போகாது வலமாகச் சூழ்ந்து வளைந்து நிற்கும். பாற் குடம் உருண்டு போகுமேயன்றி உடையாது, அந்த வழிவிட்டுவேறு வழிபோனாலும் அந்தவழியே சென்று பாலெல்லாங் கவிழ்ப் பேன். மூங்கில் முளையடியில் விழுந்தோறும் துக்கப் பட்டு இதற் கென்ன செய்வேனென்று அயர்வேன். கோடாலி கொண்டு வெட்டுவேனென்று நினைப்பேன் பிறகு அதைப் பற்றி மறந்து விடுவேன். பிறகு குடத்தில் கொஞ்சப் பாலிருக்

கும் அதைக் கொண்டுபோவேன். இந்த விதமாகச் செய்கின்ற தெய்வீக அதிசய மென்னவோ? அறியேன், இனிப் பால்குறைந் தால் அரசன் கொன்றிடுவேன் என மொழிந்திருக்கின்றான் ஆகையால் அம்மூங்கில் முளையை வெட்டுதற்கு என் அரையில் கோடாலியைக் கட்டிவை" என்று மொழிந்தான். அவளும் ஐயன் அருளால் மறவாது ஒரு மழுவைக் கொடியினால் தன்கண வன் அரையிற் கட்டிவைத்தாள். ஆயனும் பயத்தினால் உண வுண்ணாது உறங்காது அந்த மூங்கில் முளைதனக்குச் செய்யும் இடையூற்றை நினைத்துக் கொண்டே படுத்திருந்தான். விடிந் தவுடன் எழுந்து தினம்போலச் செய்வனசெய்து பால் கறந்து குடங்களில் மிகுதியாக நிரப்பிக் கொண்டு வேய்வன வழியாகச் சென்றான். அன்றும், முன்போலவே அம்முளையில் இடறிப்பால் முழுதையுங் கவிழ்த்தான்.

உடனே கனன்று கோடரியினால் வெட்டினான். அக்கோ டாரி வேதத்து உச்சியான் உச்சி மீது பாங்குறப் படவும் மெள்ளப் பதிந்தது பதியும் போதில் அங்கே குருதி வெள்ளம் ஆறுபோல் ஓடிற்று. இது கண்டு ஆயன் ஏங்கி அலறி வீழ்ந்து இரங்கினான். பிறகு பாண்டியனிடம் ஓடிவந்து சமுகத்திலே நின்று மலரடியில் வீழ்ந்து வணங்கி எந்தையே! இறையே சென்ற மூன்று நாளும் வேய்வனத்து நாயேன் பாற் குடங் கொண்டு வரும் போழ் தெல்லாம் ஒரு முளை இடறி டவே வீழ்வேன் ஆகையால் அந்தக் கட்டையை வெட்டிட எண்ணி கோடாரி எடுக்கப்போவேன் பிறகு எடாது மறந்து வந்திடுவேன். இன்று ஞாபக மாகக் கோடாரி எடுத்து வந்தேன். இன்றும்முன்போலப் பால் இடறினபடியால்கோடாலி கொண்டு வெட்டினேன். அதிலிருந்து இரத்தங் கடல் மடை திறந்ததுபோல வருதல் கண்டு மயங்கி நெஞ்சழிந்து வந்தேன். அவ்விடத்தில் உருவு ஒன்றுங்காணோம் எனக்கு ஒன்றுந் தெரி யவில்லை ஏதோ சிவன் செயல் அறியேனென்றான் இந்தவிதமாக ஆயன் கூற அரசனும் துணுக்குற்று ஏங்கிக் கண்ணப்ப நாயனார் போலக் கவலைப்படலானான். மந்திரிகள்சூழ உடனே வேய்வனத் தில் வந்து கண்டான், வேய்வனத்தின் வளங்களை எல்லாங்

கண்டான். மிருகம் பட்சிகளெல்லாம் பகையின்றி வாழ்தலைக் கண்டான். மூலலிங்கக் கோயிலும் மதிலுங் கண்டான். இவைகளை எல்லாங்கண்டு இது முன் ஒரு அழகிய நகராக இருந்திருக்க வேண்டும் என்று நினைத்தான். இந்தவனத்தில் வந்தபின் நல்நிமித்தங்கள் கண்டேன் பந்தமாம் வினைநீங்கிப் பரவசமடைந்தேன். இங்கே சுந்தரலிங்கம் ஒன்றுகாண்பேன் என்று தம்மந்திரி முதலியவரிடஞ் சொன்னான்.

பிறகு ஆயனோடு தொடர்ந்து சென்று மூலலிங்கத்திற்குத் தென்மேற்காக நதிபோலக் குருதி பொங்கநம்பனிருந்த மூங்கிற்பக்கம் புண்ணியவசத்தாற் போனான். போய்க் கண்டு கணணீர் பெருக அழுது பலபன்னி மேல் பரவசமாகிப்புலம்பி உலகமெல்லாம் என்னையிகழ ஆயன் பழிசெய்தான் நான் அப்பழிக்குக்காரணனாக இருந்தேனே என்று பல பல புலம்பி, வேதங்களெல்லாங்காண்டற் கரியவுன்னை என் கண்களிற் கண்டு களிக்க என்னதவஞ் செய்தேனோ? அரிபிரமர் காண்டற்கரிய முக்கணா! மூங்கிலூடே பொன்னிறம் பவளமேனிப் பொலிவு நீ காட்டுகஎன்று துதித்து வேண்டினான்.

இடையனோ வெட்டினான்? நானன்றோ வெட்டினேன். இந்தக்குருதிமாறு படமருந்துகாணேனே! இன்னும் உயிரோடிருக்கின்றேனே! என்று சொல்லுவன். ஆயனை நோக்கி இவ்வதிசயங் கண்டும் நீயும் வெட்டலாமோ! என்பான். இருள் நிறைமனத்தேன் அரும்பெருஞ் சோதியே! உன்னைக்காணத்தவஞ் செய்திருக்கின்றேனோ? என்றனன் இடையன் வெட்டியவெட்டு பங்கயன் காணுமதியணி முடியிலோ? சந்திரன் மேலோ கங்கையாண் மேலோ? உமையாள் மேலோபட்டதென்று பலபல சொல்லிப்பக்தி உடையவேந்தன் பரமனார் சென்னிமீதுகைவைத்துத் துடைக்க இரத்தவெள்ளம் மாறிவிட்டது அதுகண்ட அரசன் ஆடிப்பாடி ஆர்த்தான். ஆதியே! நீதியில்லா என்முன் இத்திருவிளையாடல் காட்டினாய் உன் உண்மைச்சொரூபங்காட்டியருள வேண்டுமென்று துதித்து வேண்டினான். உடனே சிவபெருமான் மிக்கசோதி சொரூப லிங்கவடிவாகத் தோன்றியருளினார். உடனே அரசன் பல்பலதுதிகள் புகன்று முறை முறைபணிந்து உனக்கு அபிடே

கஞ் செய்து பூசிக்க இச்சிறு உருவம் போதாது நான் திருவிழா நடத்துதற்குத் தக்கதாக வானுறவளர்ந்த பேருரு எனக்குக்காட்டவேண்டும் என்றான். மதிசூடியதலையின் வலப்பக்கத்து வெட்டுண்டகாயத்தோடும் குருதிமாறிய மெய்யோடும் அரசன் வேண்டுகோளுக்கிரங்கி அண்டகோளமட்டும் வளர்ந்து நின்றான். அப்பொழுது தேவதுந்துமிமுதலியவாத்தியங்கள் ஒலித்தன. தேவர்கள்போற்றிச் சூழ்ந்து பூமாரி பொழிந்தனர். வரைவன நாதன் பேருருவோடு ஓங்கிவளர்ந்ததை அரசன் நோக்கிப்பரவசமடைந்து பன்முறைபணிந்து போற்றிக்கைகுவித்துக்கண்கணீர் கலுழச் சூழ்ந்து தொழுது நின்றான். மற்றுமுள்ள மந்திரி சேனைமுதலியோரும் ஐயன் மேனி முழுது நோக்கிப் பரவசமடைந்து துதித்து நின்றனர். அப்பொழுது அரசன் முன்னுறவளர்ந்து நின்ற நாயகனை நோக்கி ஆருயிர்களெல்லாம் வருந்திடாதபடிக்கு இப்பூமியில் குறுகவேண்டு மென்று தாளில் வீழ்ந்து வேண்டினான். அரசன் வேண்டமுன் வளர்ந்த பெம்மான் ஆதியவிளையாட்டாகக்குறுகினான். உடனே அரசன் பேரன்பினோடு உடல்புளகங்கொண்டு சென்னிமேல் கைகுவித்துப் போற்றி வலஞ்செய்து இன்பசாகரத்தில் மூழ்கினான்.

பிறகு மணவை மன்னன், அன்பால் ஆவுடையாள் சாத்த உள்ளத்தில் எண்ணி கற்றவேதியரைப் பார்த்துக் கலைகள் சாத்திரங்களெல்லாம் முற்றுற உணர்ந்தோராய்ந்த முறை செய்யுங்களென்றான். அப்படியே அவர்களுஞ் சிந்தித்து ஆவுடையாளொன்று நீதியிற் சாத்த நெல்லை நாதன் நிமிர்ந்து வளர்ந்து நின்றான். அது கண்டு அரசன் வேறு ஒரு பீடம் போட அப்பொழுதும் வளர்ந்தார் பிறகு ஒரு பீடம் போட அப்பொழுதும் வளர்ந்தார். இதேவிதமாக வளருந்தோறும் ஒவ்வோர் பீடம் போட்டான். இந்த விதமாக இருபத்தொரு பீடம் அரசன் போட்டான். அப்பொழுதும், எம்மான் திருவிளையாட்டாக வளரவே அரசன் இது என்ன அதிசயமா யிருக்கிறது இனி மேற் பீடம் போட்டால் பூசைசெய்ய முடியாது, விதியும் அல்ல நாம் முன்னம் வளர வேண்டும் என்று கேட்டதால் வளர்ந்தார் என்று மனதிலெண்ணி வணங்கிச் சொல்கின்றான். நெல்லை

நாதா! இனிமேல் நீ வளர்ந்தால் பூசை செய்ய மாட்டார்கள் என்று இல்லாத என்னைப் பரிவுடன் ஆள வேண்டி இத்தனை அருளுஞ் செய்தாய், இப்பொழுதும் அடியேன் மேற்கருணை கொண்டு சாத்தும் பீடத் தளவாக இருக்க வேண்டும் என்று பலவாறு துதித்துவேண்ட அப்பொழுதும் நீண்ட அக்கோலங் குறுகக் காணாகி தன்னுயிர்க் குறுதிதேடி வாள் கொண்டு தன் கழுத்தை அரியப் போகையில் அரசனின் பத்தி முதலிவற்றைக் கண்டு அவன் கையையும் கத்தியையும் லிங்கத்தினிருந்து தன்கரம் நீட்டிப் பிடித்துக் கொண்டார் உடனே விடையின் மேல் பார்வதி சமேதராய்த் தோன்றிக் காட்சி கொடுத் தருளினார்.

அரசர் கோமான் கண்டு தொழுது ஆடிப் பாடித் தோத்திரங்கள் பல புகன்றான். மால் அயனோடு ஆதிதேவர்களுந் துதித்தார்கள். எண்டிசையுள்ளோருந் துதித்தனர். பூமியெல்லாம் மறையப் பூமாரிபொழிந்தனர். எம்பெருமானை அரசன் உலகெலாம் உய்யும் படிக்குறுகி யருளவேண்டு மென்று பலவாறு துதித்து வேண்டினன். உடனே அரன் நின் துதிகளுக்கும்உன் அன்புக்கும் பூசைக்கும் மகிழ்ந்தோம் எம்மிடத்து உனக்குள்ள பத்தியால் 'பவிய சூடாமணி' என்னும் நாமந்தந்தோம் என்னைச் சோதி மயமாய் முழுதுங்காணுதலால் உனக்கு 'முழுது கண்டராமன்' என்னும் பெயராகும் இந்தப் பிரளயத்தில் இருபத்தொரு பிரமர்கள் எம்மை நினைத்து அருச்சித்து இருபத்தொரு பீடங்கள் சாத்துவித்தார்கள். அதை எவர்களுங் காண நீ இருபத்தொரு பீடம் அமைத்தனை. பிரளயங்களிலெல்லாம் பிரமர்கள் எண்ணிறந்தோர் வந்து நம்மைப் பூசித்துப் பேறு பெற்றதால் இத்தலத்திற்குப் பிரமவிருத்த புரம் எனப் பெயராயிற்று, நாம் இது வரையும் அமை வனத்தில் மறைந்திருந்தோம் உனது பக்தியை உலகத்தவர் அறிய மேல் எழுந்து தோன்றினோம், நீ இனி மேல் எமக்குச் சிதநறும் பாலாட்டவேண்டும். எனக்குச் சிகர நெடுங்கோயில் முதலியன சமைத்து அலங்கரிப் பாயாக என்று கூறி உனக்கு வேண்டும் வரங்கள் கேளென அரசன் மகிழ்ந்துபோற்றித் தொழுது காந்தி

மதித் துணைவனே! நீ எனக்கு நித்திய பத்தியைத் தர வேண்டும். இத்தலத்தில் வந்து உன்னைத் தொழுவோர் உன்பொன்னடி பொருந்தி வாழ்ந்திருத்தல் வேண்டும் என்று இவ்வரங்களைக் கேட்டான். அதற்குச் சிவபெருமான் நன்றென உரைத்தருளி நீ நமக்குப் பாலபிடேகஞ் செய்யும் பொழுதெல்லாம் மழுமான் ஒன்றிய திருக் கோலங் காண்பாய் உலகத்தில் எவரேனும் எமக்கு ஆவின் பால் ஆட்டு விக்கும் பொழுது எமது உருவைக்காண்பர். எவரேனும் பாலபிடேகஞ் செய்தால் தம் பாவம் நீங்கி எமது உருப்பெறுவர். அழிவிலாக்கதி அடைவர் என்று ஆயனுக்கும் முத்தி கொடுத்தருளி லிங்கத் தூடு மறைந்தருளினார்.

அரசனும் விதிமுறை பூசனைபுரிந்து அருச்சித்து ஆகம விதிப்படி திருமூலநாதருக்கும் வேயின் முளைத்தலிங்கத்திற்கும் மற்றுமுள்ள மூர்த்தங்களுக்குந் தேவர்களுக்கும் ஆலயம் முதலியன கனகத்தாலும் மணிகளாலும் இனிதாக வகுத்து அலங்கரித்தான். பொற்றாமரை கருமாரி முதலியவற்றையும் அழகாக அமைத்தான். மற்றுமுள்ள வேதியர் முனிவர் முதலியோர்க்கு வேள்விச்சாலை முதலியன அமைத்து நகரத்தையும் அழகுபெற அமைத்தான். ஆகமவிதிப்படி திருவிழாக்களையும் அவ்வக்காலங்களில் நியமப்படி நடத்திவந்தான்.

அரிபிரமர் தேவர்கள் முன் எப்படி பூசைகள்செய்து அருச்சித்துத் திருவிழா நடத்தி வந்தனரோ அதுபோலவே திருவிழாக்களை நடத்தி ஆ, நிலம் முதலிய எம்மானுக்காக அளவற்றபடிவிட்டு விதிமுறை உலகத்தைப் புரந்து வாழ்ந்தான். பாலாட்டிய இடையன் தன்னை வெட்டினகாலத்தும் அவன் பாலாட்டினதற்காக முத்திகொடுத்தாரென்றால் விருப்புடன் பாலாட்டுவோர்க்கு முத்திகிடைக்குமென்பதற்கும் ஐயமுண்டோ? முழுதுகண்ட ராமன் நெடுநாள் உலகினைப் புரந்து பின் எம்மான் பதமலர் மருவி இன்புற்றான். பிறகு அவன் மைந்தன் ஈசானபாண்டியனும் முறையே அரசாண்டு குழகனடி போற்றிக் குறையிலா மலர்ப்பதங் கூடினன். பிறகு அவன்புத்திர பௌத்திரர்களெல்லாம் முறை முறை அரசாண்டு எம்மான் அடியிணைமருவிப்பேரின்பமுற்றனர்.

மனு, தசரதன், ராமன், நளன் முதலியோரும் இச்சிவலிங்கத்தைப் பூசித்துப்பேறு பெற்றனர். உலகத்து எவரேனும் திருநெல்வேலிவந்து மூலலிங்கத்தையும் வேய்முத்தரையும் வடிவாளையும் பூசிப்போர் பூமியிலே திருவெல்லாம் பெற்று முடிவிலே முத்திபெறுவர் என்று சூதர் நைமிசாரணியவாசிகளுக்கு உரைத்துப் பின்னும் உள்ள கதைகளைக் கூறுகின்றேன் கேளுங்களென நைமிசாரணிய வாசிகள் நெல்லுக்கு வேலியிட்ட கதையைக் கூறியருளவேண்டுமென அமலன் திருவிளையாட்டு அரிபிரமர்க்கும் அரிவரிது ஆனாலும் எனக்குத் தெரிந்த மட்டுங் கூறுகின்றேனென்று கூறுகின்றார்.

---

## ௬௧-வது, நெல்லுக்கு வேலியிட்ட சருக்கம்.

அந்தணன் மகிழ நெல்லை உமைவுற வெள்ளங் கொள்ளா
தெந்தைதன் கரத்தாற் காத்தே இனியநற் பூசை கொண்டு
முந்துறு பஞ்ச நீங்க மொய்வளம் பெருகச் செய்த
இந்தநற் கீர்த்தி கேட்டோர் இறையருள் பெறுவர் மெய்யே.

சிவபெருமான் நெல்லுக்கு வேலியிட்ட கதையை முன்னம் மாதவர்கள் கங்கைக்கரையிலிருந்து கேட்க வேதவியாசர் கூறினார். நானும் அங்கிருந்து கேட்டேன் அங்கு கேட்டவாறு கூறுகின்றேன். கேளுங்களெனச் சொல்ல நைமிசாரணிய வாசிகளும் மகிழ்ந்து கேட்பாராயினர். முழுதுங்கண்ட ராமன் உலகம் முற்றும் காத்துவருநாளில் மேகமேயின்றிப் பன்னிரண்டு வருடகாலம் மழையில்லாமல் சூரியன் மிகக் கொடுமையாகத் தன் கரங்களைப் பரப்பினான். விளைநிலங்களெல்லாம் அழலெழுபாலையாயின. குளங்கள், ஓடைகள், நதிகள், வாவிகள் எல்லாவற்றிலுங் கடலிலும் நீர் வற்றிற்று. பசுந்தரை வெடித்தது. உலகத்தில் அகவிலை குறைந்தது. பஞ்சம் மிகுந்தது. தானந்தவந்தருமம் எல்லாம் ஒடுங்கிற்று. ஆச்சிரமங் கெட்டலைந்தது. மக்கள் பசியால் வாடித்தூரதேயங்கள் சென்றனர். பலர் உலகில் மனைமக்களையும் நீங்கி வாடிப்பலவகைத் துன்பமும் உற்றனர். பலர் உயிர் இழந்தனர். சோலைகளெல்லாம்

பொடியாயின. மனிதர்கள் உண்ண உணவுங் குடிக்க நீரு மின்றி மடிந்தனர். இந்தவிதமாக உயிர்களெல்லாம் துன்பப் படும்பொழுது எமது அன்னை காந்திமதித்தேவி எங்கோன்வத னம் நோக்கி உலகெலாம் படைத்துக்காப்போய்! நீ இங்கிருக் க உயிர்கள் பசியால் வருந்தலாமா? உலகத்தில் உயிர்கள் வருந் தாதபடி பஞ்சத்தை நீக்கிக் காத்தருள்க என்ற பொழுது சிவ பெருமானும் நன்றென்று கூறி உளமகிழ்ந்து அவ்வாறே செய் வோமென்று சொல்லியருளினர்.

இது இப்படி இருக்க, இந்தவிதக்கொடியபஞ்சகாலம் வருதற்கு முன்னே வேதசன்மாவென்னுஞ் சிவமறையோன் வடதேசத்திலிருந்து தெற்கேயுள்ள தலங்களை எல்லாஞ் சேவை செய்ய மனைவிமக்களோடுவந்தான். பல தலங்களையும் முறையே தொழுதுபூசித்துக் கடைசியாக முழுதுங்கண்டராமன் அரசியல் நடத்தும் இழிவில்லாத கல்யாணபுரமென்னும் மணவையைச் சார்ந்து மனைவிமக்களோடு இருந்து வாழ்ந்தான். அப்படிவாழும் நாளில் உணவுக்கு வேண்டும் பொருளின்றி மனைவிமக்கள் வாடுவதைக்கண்டு மனம் வருந்திச் சிவத்தியானத்தில் இருந்து தூங்குங்காலை சிவபெருமான் சிவயோகியர்போல் அவன் கனவி டைத்தோன்றி அருமறையோனே! நீதுயர மொழிவாயாக. இது வரையிலும் நீ இங்குவசித்தாய் இனிநாம் வசிக்கும் இடத்திற்கு வருவாயானால் உனக்கு மிக்க செல்வந்தருவோமென்று சொல்லி மறைந்தருளினர். உடனே வேதியன் நித்திரைவிட்டெழுந்து தெளிந்து தன்கனவில் வந்துணர்த்தியது சிவபெருமானே என்று தன்னுடைய மனைவிமக்களோடு உடனே புறப்பட்டு பொருநை நதிக்குவந்து சிந்து பூந்துறையில் நீராடிப் பசி யோடுவருந்துந் தன் மனைவிமக்களுடன் திருநெலவேலிக்கு வந்து ஆலயத்துள்ளே புகுந்து திருமூலலிங்கத்தையும் வேய்வ னலிங்கரையும் மற்றுமுள்ளதேவர்களையும் முறை முறை சென்று தொழுது விதிப்படி அருச்சித்து அந்நகரில் குடியி ருந்தான். அப்பொழுது சிவபெருமான் அவனுக்கு மிக்க செல்வங்களையெல்லாம் அளித்தார். அவ்வேதியனும் அரன்செய லெண மகிழ்ந்து அவனைப் போற்றித் தினந் தினஞ் செந்நெல் அறுத்துச் சிவபெருமானுக்குத் தினப் பூசை செய்து வந்தான்.

முன்சொல்லியபடி உலகமெல்லாம் பஞ்சத்தால் வேதனைப் படுகின்ற காலத்தில் இவ்வேதியன் ஒருநாளாயினும் பூசை குறையாது செய்துவந்தான். இவன் பக்தியைச் சோதிக்க வேண்டி அவன் செல்வத்தையெல்லாம் நாளுக்குநாள் குறையும்படி எம்பெருமான் செய்து விட்டார். வேதியனும் தன் செல்வம் நீங்கவே சிவபெருமானுக்குச் செய்யவேண்டிய பூஜைக்கு வழி யொன்றுங் காணுகி, எம்பெருமான் சன்னிதிக்கு வந்து, அமலனே! மழை பெய்துவித்து உலகின் துயரினை நீக்கி உமை யோடு நீ பூசனை உவந்துகொண்டிடுநாள் எந்தநாளோ? என்று துதித்துக் கொண்டுவந்தன். நெல்லினைப் பரமர் சந்நிதிமுன் உலரப்போட்டு பூஜை முடங்காதபடி முன்போலப் பூசை செய்வதற்காகப் பொருனை நதிக்குப் போய் சிந்து பூந்துறையில் நீராடிச் செபதபங்களை முடித்துக்கொண்டு திருமஞ்சனம் நறு மலர் முதலிய எடுத்துக்கட்டிக்கொண்டுவந்தான். வரும் பொழுது சிவபெருமானின் திருவருளால் மேகங்களெல்லாங் கடல் நீரையுண்டு கருத்துப்பம்பி நிரம்பி இடித்து மின்னிப் பெருந்தாரையாகப்பெய்தது. இதுகண்ட சிவவேதியன் வேணுநாயகர்முன் பெய்தநெல்லை வெள்ளங்கொண்டுபோய்விடுமே! என்று நினைந்து மனம் வருந்தி விரைந்துவருவான். ஐயோ! இதற்கு முன்னமே அடித்துக்கொண்டு போயிருக்குமே திருமூலநாதர் பசித்திருப்பாரோ? வேறு நெல்லும் இல்லையே? எனச் சொல்லி அழிவான். புரண்டோடும் வெள்ளத்தில் நீந்திக்கொண்டுவரும் மறையோன், உலகத்தை எல்லாங்காத்தருளும் இறைவன் தனக்கென்று பூசைக்குநினைத்து உலரப்போட்ட நெல்லைக்காவாது இருப்பனோ? என்று நினைத்து மனதில் மகிழ்வான். இந்தவிதமாகப் பல பல நினைந்து பல பல சொல்லிக்கொண்டு இருண்மூடிய வழிதெரியாதுன்னும் நெறியூடு தனக்கொருதுணையுமின்றித் தெரிந்து வேய்வனத்தர் ஆலயத்துள்வந்தான். வந்துதான் வீடுகள் தோறும் சென்றிரந்து கொண்டுவந்து அமலன் சந்நிதியில் அவன் பூசைக்கிடப்பட்டநெல் மழையில் நனையாதிருப்பதையும் நெல்லைச் சூழ கைஉயர்ந்து வெள்ளங் கொள்ளாதபடிக் காத்து

நிற்பதையும் நடுவே வெயில் காய்வதையுங் கண்டு இது என்ன அதிசயம் என்று இருகண்ணீர் வாரப் பாண்டியனிடம் ஓடிவந்து தெரிவிக்க அவனும் அதிசயமுற்று வந்து கண்டு அமலர் நெல் வேலி நாதர் அடியில் வீழ்ந்து துதித்துப் போற்றி என்னை ஒரு பொருட்டாக, நினைத்து மழைபெய்வித்து எம்மை எல்லாங் காத்து மேவியனின் நெல் நனையாதபடி வேலியிட்டுக்காத்த சுந்தரநாதா! உனக்கு நெல்வேலி நாதனென்று வழங்குவதாக என்றனன். அந்தரதுந்துமி ஆர்த்தது வானவர் பூமழை பொழிந்தனர். அன்பரெல்லாஞ் சேவை செய்தனர்.

அரசனாகிய முழுதுகண்ட ராமன் பரமன் அடியைப் பல தரம் பணிந்து துதிசெய்து போற்றிக் காந்திமதி கமல மலரடி பரவி பரமன் இனிய அருள் பெற்றிருந்தான். சிவவேதிய னும் பற்பல துதி சொல்லி நெல்லுக்கு வேலிசெய்த நாதனை அன்பொடு தினஞ்செய்வதுபோலப் பூசை வழுவிலாது செய்து போற்றித்துதித்து மன்றினிலாடுவார் தம் மலரடியணைந்தான். நெல்லை வாழுந்தற்பரனருளினால் எங்கும் மழைபெய்து பஞ்சம் நீங்க வளம் மிகுந்தது. உயிர்களெல்லாம் மங்கலமாக இன்பம் பெற்று வாழ்ந்தனர். உலகத்துள்ளோரெல்லாம் இவ்வற்புதங் கேட்டு நெல்லை நாதனை வந்து தரிசித்து இன்புற்று நல்வரம் பெற்றுச்சென்றனர்.

ஆதியில் நெற்குவேலியான திறத்தினாலே திருநெல்வேலி நாயகனென்றே யானார். வேணுவனம் நெல்வேலி என்னும் பெயரால் வழங்குகிறது. இத்தலத்தின் பெருமையாரே உரைக்க வல்லார்? இந்தக்கதையைப்படிப்போர் எழுதுவோர் கேட்போர் மிக்கசெல்வமெய்தி வாழ்ந்து மெய்ஞ்ஞானம் பெற்றுக் கடைசியில் அரனடி அடைவர். ஓமுனிவர்களே! இதுதான் நாதன் உயிர்கள் பஞ்சத்தால் வருந்தாதபடி மழைபெய்வித்து வளமுண்டாக்கி அந்தணரின் நெல்லை வெள்ளங்கொண்டு போகாதபடி வேலியிட்ட கதை என்று சூதமுனிவர் கூற, நைமிசாரணியவாசிகள் மகிழ்ந்து நாங்கள் சிவனருள் முழுவதும் பெற்றோம் இன்னும் உள்ள அரன் திருவிளையாடல் களையுங் கூறியருள வேண்டுமென்று கேட்கச் சூதர் கன்னியோர் பாகனைக் கருத்துடன்

பூசை செய்தே தன்னைக் கொல்ல வந்த யமனை வென்ற சுவேத கேதுவின் மகிமையைச் சொல்லுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

## ௩௨-வது, சுவேதமுனி காலனைக் கடந்த சருக்கம்.

தனைப்பணி சுவேத னுய்யத் தாளினாற் கூற்றைக் கொன்று
வினைப்பிறப் பகற்றி மேலாம் விழையுநித் தியத்தை யீந்து
முனைப்பறு மெமனைப் பின்னும் முறைசெய வருளு மெம்மான்
நனைப்பணி மலர்த்தாள் போற்றி நந்தலைக் கணிவா மன்றே.

இதனை வியாசர் விரிவுறக் கூறியதனைக்கேட்டபடி கூறுகின்றேனென்று கூறுகின்றார். அடியார்க்கருளும் நெல்லை நாயகன் றன்னை ஒரு கற்பத்தில் திரு பூசித்து திருவிழா நடத்தினாள். இன்னும் அரிஅயன் இந்திரன் முதலிய மற்றைத் தேவர்களும் வேதங்களும்தருமதேவதையும் முறை முறை பூசித்துத் திருவிழாநடத்திப்பேறு பெற்றனர். சூரியகுலத்தார்கள் பலரும் சந்திர குலத்தார்கள் பலரும் முறைப்படி பூசித்துத் திருவிழா நடத்திப் பேறு மிகப்பெற்று இன்புற்றனர். நெல்வேலி நாதன் இந்த வாறு தம்மைப் பூசிக்கும் அரிபிரமாதியர்களுக்கும் அரசர்களுக்குங் குலதெய்வமாக இருந்து அவர்களுக்கு வேண்டுவன அளித்து அருள் செய்திருக்குங் காலத்து மதுரையிலிருந்து அரசாண்ட குலசேகர பாண்டியன் மலயத்துவச பாண்டியன் சுந்திர பாண்டியன் உக்கிர பாண்டியன் முதலியோரும் விழா நடத்தி இனிய பூசை செய்து நற்பேறு பெற்றனர். எம் நாதனைப் பூசித்துப் பேறு பெற்ற அடியார்களைக் கணக்கிடில் வானத்து நட்சத்திரங்களைக் கணக்கிடப் புகுந்ததே யொக்கும்.

துவாபரயுகத்தில் சூரியகுலத்திலுதித்த சுவேதகேது என்னும் அரசன் உலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் அரசாண்டு இன்புற்றிருந்தான். இவனுக்குமூப்பு உண்டான உடனே அரியதவஞ் செய்து உய்யவேண்டுமென்றெண்ணி அரசபாரத்தைத் தன்புத்திரனிடத்து ஒப்புவித்து வானப்பிரத்த ஆச்சிரமத்தைப் பொருந்தினான், நீங்கா நிழல்போல் மனைவி தொடர அவனுடன் கூடித்

தீர்த்தமாடி இருவோருஞ் சிவபெருமானை நினைந்து பூசனை புரிந்து வந்தனர். இவர்கள் இவ்வாறு அரனை அகத்தமைத்துப் பூசனை புரிந்து வரும் பொழுது, மனைவிக்கு அந்திய காலம் வந்து ஆவிதுறந்தாள். அப்பொழுது மனைவி பட்ட மரணத்துன்பத்தைக்கண்ட சுவேத மன்னன் இந்தமரணத் துன்பம் நமக்கும் ஒரு நாளைக்குவரும் இதனின்று நாம் தப்புவிக்க வேண்டும் என்று மனதிற் கொண்டு தன் மனைவிக்குச் செய்யவேண்டிய விதிப்படி ஈமக்கடன்களைச் செய்து கருமங்களையும் முறையேசெய்து முடித்தபிற்பாடு மரணவாதனையைமனத்தெண்ணி வருந்தி வெள்ளியினிடத்து வந்து வாழ்த்தி வணங்கித்துதித்து ஓ தானவர்குருவே! எனக்கு இன்னும் பிறவியுண்டானாலும் முடியும் பொழுதில் கூற்றுவனால் உபாதியில்லாமல் இருக்க அருள்செய்ய வேண்டுமென்றனன்.

அதுகேட்ட வெள்ளி உலகமுழுமையும்புரந்த அரசனே! நீ கொண்டகருத்து நன்று. என்றுசொல்லி மிருத்துஞ்சயவிஞ்சையைப் பொருந்த உபதேசம் பண்ணி இதைத்தினஞ்செபித்துச் சிவபெருமான் வாழுந் தலங்களிலெல்லாஞ் சென்று நீ சிவபெருமானையும் பார்வதிதேவியையும் அர்ச்சித்துப் பூசித்து வந்தால் எந்நாளும் உனக்கு எமவாதை இல்லை என்று சொல்ல இந்த விதமே செய்கின்றேனென்று அந்தவெள்ளியின் பாதந்தொழுது விடைபெற்றுக் கொண்டுசென்று கேதாரமுதலிய தலங்களையும், கங்கைமுதலிய தீர்த்தங்களையும் முறையே தரிசித்து ஆடிப் பாடிப் பூசித்துக் கடைசியாகப் பொருநையாற்றையடைந்து நதிவளத்தையுந் தலவளத்தையும் பெருமையையுங்கண்டு இது மிகு அற்புதமுடையதாகக் காணப்படுகின்றது இத்தலம் எல்லாத் தலங்களினுஞ் சிறப்புடையதாகக் காண்கின்றது இந்தநதி தென் கங்கையே என எண்ணிச்சிந்துபூந்துறையைக் கிட்டினான். அங்கு தேவர்களும் முனிவர்களுஞ் சூழ்ந்து இருந்து முறைப்படி நீராடுவதையும் எம்பெருமானை நினைந்து பூசை அர்ச்சனை முதலிய செய்வதையுங் கண்டு இது கயிலையே தென்காஞ்சியே என மனமகிழ்ந்து பரவசனாயினான்.

இத்தனை தலமுந்தீர்த்தமும் பார்த்தோம் இதுபோற்

சிறப்புற்ற தலத்தையுந் தீர்த்தத்தையுங் கண்டிலோம் என்று சொல்லிச் சிந்துபூந்துறை முதலிய தீர்த்தமாடி நல்ல செபதபங் களைச்செய்து சிராத்த முதலியன செய்து அங்குள்ள முனிவர் களைத்துதித்து அவர் தாள்களை வணங்கி அங்குள்ள அந்தணர் களுக்கு உணவு முதலிய உவப்பாய்ச் செய்வித்து அங்குள்ள விநாயகரை அகத்தியலிங்கத்தை மற்றுமுள்ள முனிவர்கள் பூசித்த லிங்கத்தையும் மகிழ்வோடு தெரிசித்துப் பூசித்துத் துதித்து மெய்ஞ்ஞானத்தையுஞ் சாத்துவிதகுணத்தையும் பெற்றான். பின் நெல்லை மாநகருக்குள் வந்து நகர் வளம் இனிது பார்த்து அகமகிழ்ந்து கோயிலுட் புகுந்தான். கோயில் வளங்களையும் பெருமகிழ்வோடு பார்த்து அன்போடு பொற்றாமரை கருமாரி முதலிய தீர்த்தங்களாடிச் சுந்தரவடிவாள் கோயில்சூழ்ந்து சன்னிதிக்கு வந்து என்னையாளுங் கருணை நாயகியைக் கண்டு பொன்னடி பணிந்து போற்றி இருகரங்குவித்து நின்று துதித்துத் தொழுதுபோய் வரதனார் வாழுங்கோயில் வலங்கொண்டு சூழ்ந்து வந்து விமலர் சன்னிதி முன் சென்று நந்தியைத் தரிசித்துப் போற்றிச் செழுமணிக்கோயிலினுட் புகுந்து திருமூலநாதரையும் வேண்ட வளர்ந்த மகாலிங்கத்தையும் சிதம்பரேசுரரையும் காளகண்டர் கங்காளமூர்த்தி அனவரத தான நாயகர் தட்சணாமூர்த்தி விநாயகர் சுப்பிரமணியர் காளி துர்க்கை வயிரவர் தண்டிசர் முதலியவர்களை முறைப்படி கண்டு பூசித்து மூன்று முறைவலம் வந்து பிறகு திருமூலநாதர் சன்னிதிக்கு வந்து இடபத்தின் பக்கத்தே வந்து மகிழ்வுடன் வணங்கி வாழ்த்தி நெல்லைநாதனை மனத்திலெண்ணி அக்கமாலை கரத்திலேந்தி பஞ்சாக்கரஞ் செபித்திருக்கும் பொழுது, கும்பமுனிவர் வடிவாளையுந் திருமூலநாதரையும் ஆதிலிங்கரையும் போற்றி முனிவர்சூழ இடபத்தின் அருகுவந்தார். அவரைச் சுவேதன் கண்டு இருகரங் கூப்பித்தொழுது மலரடிபணிந்து பலவாறு போற்றித்துதித்தான்.

கும்பமுனிவரும் "நன்று நின்வரவு, நீ வேண்டுவதென்ன வென்று கேட்டனன். நான் முன்செய்த தவப்பயனால் உலைவில்லாத இந்தத் தலத்துவந்து உன் பொன்னடி பணிந்தே

னென்றான். அகத்தியரும் மகிழ்ந்து சுவேதமுனியை அழைத்துக் கொண்டு தன் பன்னசாலையிலெய்தி பரிவுடன் ஆசனதல்கி அன்னம் பால் தேன் அதிரசக்கனி ஆகிய இவைகளை அருந்துமாறுநல்கி இத்தலபுராணமகிமையையுங் கூறியருளினார். உடனே முனிவனுங்கும்பமுனிவரின் பதமலரில் வீழ்ந்து வணங்கி இமையமலையிலிருந்து சேதுமுடிய உள்ள இறைவர் வாழுந் தலங்களை எல்லாந் தரிசித்துத் தீர்த்தங்களாடிக் கடவுளை எத்தித்துதித்து வந்தேன் அங்குள்ள தலங்களெல்லாம் அடியேனுக்குற்ற தீங்கினை நீக்கி முத்திசித்தி நல்கவில்லை. என் ஓங்கிய தவத்தால் இங்குவந்தேன். உன்னைக்கண்டேன் தீர்த்தயாத்திரைப் பலனும் பெற்றேன். எனக்குச் சித்திமுத்திகளையும் பெரும்பேறுகளையும் நலகவல்லது இதனினும் வேறுண்டானால் சொல்லியருள வேண்டுமென்று கேட்டான். அதற்குக் கும்பமுனிவர் முக்கட் கடவுள் வாழ்தலத்துக்கெல்லாம் நெல்வேலியே மேலானதலமாகும். என்னைச் சிவபெருமான், பூமிசமமுறும் பொருட்டுத் தெற்கேயனுப்பிய பொழுது இத்திருநெல்வேலியே கயிலாயமென்று சொல்லியருளினார்.

இது பராசத்தியும் ஆகும். இது எப்பிரளையத்தும் அழியாததலமும் ஆகும், இந்தத் தலத்திலே ஞானநாயகனும் இங்கே நலம்பெறவடிவாளோடு உலகமெல்லாம் படைத்து இனிதுஉயிர்களை எல்லாங் காத்து வருகின்றார்.

தருமதேவதை, மறை முதலியன செய்ததவத்தினால் இறைநித்தியதத்துவத்தை உதவி இங்கு இனிது இருக்கிறார். ஆகையினால் நானும் இங்கிருக்கின்றேன், இந்தத் தலத்தில் இருப்போர்க்கு அந்திய காலத்தில் எமவாதனை இல்லை. இத்தலத்தில் எம்பெருமான் செய்த திருவிளையாடல் ஒன்று கூறுகின்றேன் கேளெனச் சொல்லுகின்றார். பிங்களனென்று ஒரு தேவ இருடி பேரறிவுடையனாதலின் இது சிறந்த தலமெனக் கண்டு இத்தலத்தில் அகமகிழ்வுடன் வந்து கங்கையணி முடியானைக் கருத்து வந்து பூசித்தான். இந்தவிதமாக நாடோறும் இனிய சிவபூசை செய்து சுந்திமதி தூயமலரடி பரவிச் சுந்தரமும் அனவரதனை நாயகனையும் அன்போடு தரிசித்துப் போற்றிடு நாளையில்

ஒருநாள் சிவபூசைசெய்யுஞ் சமயத்தில் யமன் வெகுண்டு வந்து பாசக்கயிற்றை வீச முனிவனும் அஞ்சி வெருண்டு உமையொரு பாகனைப் புகழ்ந்தான். அடியவர்கள் இடரை நீக்கும் அமைவனத்தான் உடனே தோன்றி கொடிய யமனைக்கொன்று அம்முனி மகிழ்வெய்த நீ இந்த நெல்லையில் இருப்பாயாக வென்று கூறி நித்தியத்துவங் கொடுத்தான். அமைவனநாதன் அருள்பெறும் பிங்களவ முனிவனும் நித்திய தத்துவம் பெற்று நெறியோடும் பூசனைசெய்தே பத்தரொடு விண்ணவர் முதலியோர் பணிந்து தொழ இந்த நெல்வேலியில் இன்னமுமிருக்கின்றான் இந்தவிதமாகத் தேவர்கள் முனிவர்கள் மன்னவர்கள் பலகோடியர் அமலனை அருச்சித்துச் சிந்தைமகி ழன்போடு சிறந்த நித்திய பதவியைப் பெற்றனர். ஆகையால் இந்தத் தலவே அரன் உறையும் எத்தலத்திற்கும் மேலானதலமானது இந்தத்தலத்தில் உமை தவஞ்செய்து அறம்வளர்த்தாள் அவளை அரன் மணந்து இருந்து புரந்தருளினன். அனவரததான நாயகராய் அமர்ந்திருக்கின்றான். நாமும் இத்தலத்தில் உற்று பொதமும் யோகநிலைப் புதுமை யதிசயமுமுற்றோம். இந்தத் தலத்தின்பெருமையைச் சுப்பிரமணியருங்கூட அறிந்துணர்ந்திலர்.

அயன் முதலோர் எவர் கருதிச் சொல்ல வல்லவர் இதன் பெருமையைப் பல ஊழிகாலம் எடுத்துரைத்தாலும் அடங்காது. ஆகையால் நீயும் இந்தத் தலத்திலிருந்து நெல்வேலி யமலர்தனை வடிவாளோடும் அருச்சித்தேத்திச் சேவை செய்யில் பந்தவினைப் பவங்கள் நீங்கி முத்தனுகுவை யென்றார். உடனே சுவேத முனியுங் கும்பமுனிவரின் தாள்களை வணங்கி விடைபெற்றுச் சென்று தன்னிருக்கை சேர்ந்து நித்தியத்தை விரும்பிச் சிந்துபூந்துறையில் நீராடிச் சங்கற்பமுதலான செய்து செப தபங்களை முடித்துக்கொண்டு அங்குள்ள சிவயோகர் அந்தணர்முதலியவர்களுக்கு அன்னம், வத்திரம், அக்ராரம், புனற்சேத்திரம், திரவியம், பூடணம் கந்தபுட்பமாதியும் விசிறி குடை பாதரட்சை முதலானதும் ஈந்து மற்றுமுள்ள தானங்களையும் ஈந்து கோயிலுக்குள்வந்து மூலலிங்க நாதரையும் வேயீன்றநாதரையும் முறையே சரணம் பணிந்து அருச்சனைசெய்து தானும்

ஓர் லிங்கத்தைத் தாபித்துப் பூசைசெய்து பஞ்சாக்கரத்தையுஞ் செபித்து அரனுக்கு அன்பானன்.

இந்தவிதமாகத் தான் தாபித்த லிங்கத்தைப் பூசைசெய்தும் மூலலிங்கத்தையும் ஆதிலிங்கத்தையும் வடிவாளேயுந் தரிசித்துத்தொழுதுபோற்றிப் பன்னிரண்டு பருவம் பவமகலத்தவம் புரிந்தான். ஒருநாள திருமூலலிங்கத்தெதிரே ஒரு பக்கத்தில் தான் வைத்த சிவலிங்க முன்னர் பூசை முதலியன முறையே செய்யும் பொழுது யமன் உயிர் கவரத் தன் கோரவடிவோடு தோன்றினன். அதுகண்டு முனிவன் நடுங்கினன். அரனே நின் அபயம் என்று அடிமலர்த் தஞ்சம் புகுந்து நின் அடியரை இவனே அஞ்சாதுகொல்வன் என்றுகூறி நெஞ்சிடை விம்மி இமையவல்லிபாகனை நினைத்து பூசித்துப் பஞ்சாக்கர மந்திரத்தை ஓதினன். பலதுதிகள் புகன்றுன். அப்பொழுது காலன் அவன் முனம் நகைபுரிந்து ஓ முனியே! சிவனை நீ பூசனை செய்தனை நான் உன்னைக்கொண்டு போதலை விலக்குதல் அரிது என்றான். அதற்கு முனிவன் சிவபெருமானைத் துதிக்கும் அடியரும் உனக்கு அஞ்சுவரோ? அறிவிலாது நீ இது சொன்னுய் என்று கூறி, எதிரிலிருந்த லிங்கத்தை இருகரத்தாலுந் தழுவிக்கொண்டு சிவபெருமானை நினைத்து பல தோத்திரம் புகன்றுன். இது கண்டு அந்தகன் அண்டமும்வெடித்திட ஆர்த்துக் கைகொட்டிச் சிரித்து முனிவனை வைது பாசக்கயிற்றை வீசிக் கழுத்திறுகப் புயத்தொடு விசித்திழுத்துப் பின்னுஞ் சொல்லுகின்றான். சிவனைப் பூசித்து என வலியையும் விதியையுங் கடக்க விரும்பினை உன்முன் உறுலிங்கத்திலிருந்து சிவன் உன்முன் வரக்காண்கிலேன். என்னே புன்மையோய் இந்தப் புத்தி இதுதவிர்ந்து என்னுடனே தெற்கே வருவாயாக என்றான்.

அரனுகிய சுவேதனன் கேட்டு அலறிப்பதறி அஞ்சினன். அஞ்சித் தன்மேற்கிடக்கும் பாசக் கயிற்றைப் பார்த்து கண்ணீர் விட்டழுது உருகி நெஞ்சழிந்து உமை ஒருபாகனைநினைந்து பஞ்சாக்கரத்தைச் சிந்தையில் அழுத்தி வித்தகச்சோதியே! அபயம் முக்கணு! அபயம்! எனப்பலவாறு அபயம் வேண்டித்துதித்தான், உடனே சிவபெருமான் சுந்தர மூலலிங்கத்தினுடுதோன்றி

றான் நின்ற யமனை மார்புறக் காலாலுதைத்தார். உதைபட்டதும் யமன் இடியுண்ட அரவெனப் பயந்து நெஞ்சழிந்து ஓலமிட்டுக் கீழேவீழ்ந்து உயிர்விட்டு மடிந்தான். அதுகண்டு தவச்சுவேதன் உடம்பு பூரித்து ஆநந்தங்கொண்டு அமலனைத் துதித்தான். அவரும் பார்வதி சமேதராய்த் தன்குமாரர் இருவரும் பக்கத்தேவிளங்கி ரிடபாரூடராய்க் காட்சி தந்தார்.

அப்பொழுது முனிவனும் முடிவிலாத முனிவனைபோற்றி! கன்னியோர்பாகபோற்றி! கறையொளிர் கண்டாபோற்றி! எனப் பல்வாறுபோற்றித் துதித்து இணையடி இறைஞ்சி ஏத்திநின்றான். சிவபெருமானுங் கருணைகூர்ந்து நின் பூசைக்குந் துதிக்கும் உவந்தோம் உனக்கு வேண்டும் வரங்கள் கேளென! அதற்கு முனிவன் கூற்றையுதைத்த குஞ்சிதபாதா! பிறவியில் வந்துவந்து பிறந்துழலாவண்ணம் நித்தியபத மருளென்றான். அதற்கு அமலன் இந்த நெல்லையில் இருப்போர், சூழ்வோர், சிந்தையில் நினைப்போர், பிறந்தோர், இறந்தோர் ஆகிய இவர்களெல்லாம் பந்தமாம் பிறவிநீங்கிப்பரகதி அடைவர். இதுவே தட்சணகயிலையாகும். சிவபோகமும் இதுவேயாகும். மக்களெல்லாந்தேவராகும். வளர்ந்துள்ள தருக்களெல்லாம் வேதமாகும், வேதியர்களெல்லாம் பிரமனாகும் இந்தத்தலத்தின் மேன்மை விளம்பிட வல்லார்யார். பொருநையில் சிந்துபூந்துறை படிகின்றோரும், பொற்றாமரையினிதின் ஆடினோரும், ஆலயத்தை வலம்வந்து தரிசிப்போரும், இருவினை தொலைந்து எம்முருவெய்துவர். இத்தலத்தில் எம்மைப் பூசித்து அனேக தேவரும் முனிவரும் நித்தியப்பேறுபெற்றனர். அதுபோல நீயும் நித்தியப்பேறுபெற அருள்செய்தோம். நீ நம் கணத்துக்குத் தலைவனாக இருத்தி என்று அருள்செய்தார். இன்னவாறு முனி அருள்பெற்று அகமகிழ்ந்து பூசித்துப் போற்றிநின்றான். அப்பொழுது மால் முதலிய தேவர்கள் சூழ்ந்து பூசித்துப் போற்றிப் பூமாரி பொழிந்து துதித்து நின்றனர். அப்பொழுது நந்திநாயகன் முதலிய தேவர்கள் எம்பெருமானைத் துதித்து சிறியோர் அறிவில்லாமையால் செய்தபிழையைப் பொறுப்பதுபெரியோர்கடன்மை. அறிவில்லா மாந்தர் செய்திடுபவத்தால் புகுந்திடும் நரகு பாழாகாமல்

புத்தியில்லா மறலியை அருளொடுபடைத்தருளவேண்டுமென்று வேண்டினர். அவர்வேண்டுகோளின்படியே பிறகு யமனுக்கும் அருள்செய்தார். யமனும் உயிர் பெற்று அரியயன் தேடியுன்னா ளுச் சரணடிவீழ்ந்து போற்றித் தன்பிழை பொறுக்கும்படித் துதித்து வேண்டினன். பற்பல துதிகள் புகன்றான். அவனை யும் அமலன் நோக்கி உனக்கு வேண்டும் வரங்கள் கேளென, யமன் ஓ அமலநாதனே! எனக்கு நித்யபத்தி நின்மேல் வைத்திட வும், முறபவங்களை நீக்கி முத்தியை அளிக்கவும் வேண்டும். உலகத்துள்ளோர் மிருத்துஞ்சயனென்று! பெயரிட்டால் அவ மிருத்தின்றியும், வினைப்பயனின்றியும் வளங்களையெல்லாம் நிலை பெறப் பெருகக்கொண்டு நித்திய தத்துவமடைந்து மெய்ஞான போதமும் பெற்று நின்துணைப் பதமும் பெறவும் வேண்டும். இந்த நற்கதையைப்படிப்போரும் எழுதுவோரும் கேட்போரும் உனது சுந்தரவுருவம் பெறவேண்டும். இந்தத் தலத்திலிருப் போர், ஒருதினம் வந்தோர், பிறந்தோர், மரிப்பவர், நினைப்பவர் தாமும் பந்தமாம் வினைகள் நீங்கிப் பரமநின்பதம் பெறவேண் டுமென்று வேண்டினன். ஈசனும் மகிழ்ச்சியோடே அவ்வர மளித்துச் சொல்லுகின்றார். நம் கவுரி, கணபதி, குமரன், வயிர வன், பத்திரன், காரி இவர்களின் பெயரிட்டவரையும், நீறணிந் தோரையும், இத்தலத் திருப்போரையும், தொழுவோரையும், காண்போரையும், நீ தொடவேண்டாம் என்றுசொல்ல இயம னும் அடிபணிந்து அடியேன் அப்படியே செய்கின்றேனென்று விடைபெற்றுத் தான் தன்னிடஞ்சேர்ந்தினிதரசாண்டு வந்தான். சுருதிநாதன் சுவேதமுனிக்கு அருள்புரிந்து தேவர்கள் போற்ற திருமூலலிங்கப் பேரொளியூடு சென்று மறைந்தான். சுவேத முனி சிவபெருமான் வாழும் வேணுவனப் பதியில் அன்பாய் வைகி விதிப்படி சிவபூசனைசெய்து முனிவரொடு நித்தியமாயி ருந்து முத்திசேர்ந்தான். இதுவே சுவேதமுனிவரின் கதை எனச் சூதமுனிவர்கூற நைமிசாரண்ய முனிவர்கள் புகழ்ந்து போற்றி இன்னும் பரமர் கதைகள் கூறவேண்டுமென்றுவேண்ட முனிவர்பெருமான் கூறுகின்றார். ஆதி பரன் உறையுந்திருநெல் வேலியில் தேவர்களெல்லாம் அன்பாய்வந்து சோதிலிங்கப் பிர

திஷ்டைசெய்த கதையைச் சொல்கின்றேன் கேளுங்களென மயிர் பொடிப்ப ஆனந்தபாஷ்பஞ் சொரிய உளமகிழ்ந்து முனிவர்கள் கேழ்க்க சொல்லுகின்றார்.



## ௬௩-வது, சிந்துபூந்துறை மகிமை இலிங்க மகிமைச் சருக்கம்.

எண்ணுறு தீர்த்த மெல்லாமி இனிதுற ஆடுந் தீர்த்தம்
புண்ணியத் தீர்த்தஞ் சிந்து பூந்துறை யதனின் மிக்க
தெண்ணிடி லில்லை யில்லை தெளிபதி தம்முள் மிக்க
பண்ணைநல் வனமே யாகும் பரிவுடன் துதிப்பாய் நெஞ்சே.

உலகமெல்லாம் புகழும் நெல்வேலித் தலமகிமையையும் மூர்த்திமகிமையையும் தீர்த்தமகிமையும் திருநேத்ரமுடைய பரமனே அறிவனல்லாமல் தேவர்களாலுஞ் சொல்ல முடியாதென்றால் எவர் சொல்லவல்லவர்?

தவஞ்செய்த அம்பிகைக்கும், மால், பிரமர்முதலிய தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், அரசர்களுக்கும் காட்சி தந்து அவரவர் வேண்டியவற்றையளித்தமையால் இத் திருநெல்வேலி சிவசித்தித்தலமாகும்.

திருவிழாப் பத்துநாளும் நாதன் சிவெலிபின்சூழ்ந்து நலம்பெற மிகவும்வேண்டி, மலடராகிய ஆண் பெண் பீட வெண்பலியையுண்டு அரனைச்சூளிற் புத்திரப்பேறு பெறுவர். அரசிழந்தோர், நோயர், தரித்திரர் அனவரததான நாயகரைப் பொன் வீதியில் வரும்போது தரிசித்தால் தம்வருத்தம்நீங்கி விரிபுவனம் போற்ற வேந்தராயிருப்பர்.

பொருநை மாநதியில் சிந்து பூந்துறையதனில் மூழ்கித் திருமூல லிங்கம் ஆதிலிங்கங்களைச் சிறந்து போற்றி நல்லறஞ் செய் காந்தி மதி அம்மனின் பதமலர் தரிசிப்போர் சிவனடி சேர்வர். அறிவில்லாதவர்களானுலுஞ் சிந்து பூந்துறையில் நீராடினுல் தம்பாவங்கள் நீங்கிமோட்ச வீட்டையடைவர். பொருநையில்ஒரு நாள் முழுகினுல் கோடிகோதான பலன்கிடைக்கும். இரண்டுநாள்

மூழுகினால் ஆயிரத்துப் பத்து சாந்திராயண விரத பலன் கிடைக்கும் மூன்று நாளாடினால் பதினெண் கிரிஸ்சர பலனுண்டாகும். சிந்து பூந்துறை மூழ்காதவர் சிவாநந்தக் கடலில் முழுகார். வேய்வனத்தைக்காணாதவர் சிவலோகங்காணார். எவரும் சிந்திக்கும் புலையராளுலும் நெல்லையென்றொருகாற் சொன்னால் பிறவி நீங்கிப் பரன் பதம் அடைவர். இந்த நற் பொருநைச் சிந்து பூந்துறையில் முன்னாள் ஒருவன் மூழ்கித்தன் பூனைக்குட்டியையும் முழுகுவித்தான். இதே விதமாக மூன்று நாள் செய்ய மூன்றுநாள் பூனை உடலை நீத்து தேவ வடிவம் பெற்று பொன் விமானத்தேறி அந்தரம் புகுந்து அரன் பதம் அடைந்தது. அது கண்ட முனிவர்களெல்லாங்கரஞ்சென்னிமேற்கூப்பிப் பிறைசூடியைத் தொழுது சிந்துபூந்துறையே தீர்த்தம், நெல்லையே கயிலாயம் என்றனர். பூனைக்கே இத்தகைய பதங்கிடைக்குமானால் மேலான முனிவர்களுக்குத்தரும் பலனை என்சொல்வது? பிறந்ததிலிருந்து ஒரு நாளுஞ் சிந்து பூந்துறையில் ஆடாமல் எவ்வளவு மிகுதியாகப் புண்ணியஞ் செய்தாலும் பயனாகாது. பிதுர்களுக்குச்சிந்து பூந்துறையில் எள்ளுடன் நீரும் கொடுத்திட்டால் விரும்புவர்.

விதிபாதம், மகாபாதம் முதலிய விசேஷ நாட்களில் சிந்துபூந்துறையில் ஆடினால் அரன்றாள் சேர்வர். மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் அறுபத்தாறு கோடி தீர்த்தங்களுஞ் சிந்து பூந்துறையில் மூழ்கித்தம் பாவம் நீங்கினதென்றால் இதன் பெருமை செப்பவும் வேண்டுமோ? சிந்து பூந்துறையில் தைப்பூசத்தில் மாகத்தாமைந் தாடினோர்க்கு அறுபத்தாறு கோடி தீர்த்தமெல்லாம் ஆடினோர்க்கு என்ன பலனுண்டாகுமோ, அதினும் மிகுதியாகவுண்டாகும். தேவர்களிலெல்லாம் எப்படிப்பரம் பொருள் மேலோ? அது போல் நதிகளுள்ளெல்லாம் பொருநையே மேலானது. தீர்த்தங்களிலெல்லாஞ் சிந்துபூந்துறையே மேலானதாகும். இது வரையுஞ் சிந்து பூந்துறை மகிமை சொன்னோம், இனி தேவர்கள் நெல்லை முழுதும் லிங்கங்களை வைத்துப் பூசை செய்த கதையைச் சொல்லுகிறேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார். சிவபெருமான் முடிசூடிச் செங்கோலோச்சிப்புவியனைத்தும் புரக்கு நாளில் மால் பிரமர் முதலியோர் நெல்லை நாதர் பதம்

பணிந்து போற்றி நின்று பல வாறு துதித்துப் போற்றி நாங்க ளுய்யத்தக்க பணிவிடை சாற்ற வேண்டு மென்று வேண்டினர். அதற்கு எம்பெருமான் எமது பணிவிடையில் ஏற்ற முடையது எம்மைப் பூசித்தலே என்று சொல்ல, அன்று முதல் எல்லோரும் அன்பாய்த்தனித்தனி ஒவ்வொருவரும் லிங்கம் ஏற்படுத்தித்தம் பெயரிட்டு அறுகு வில்வம் முதலியகொண்டு மதிசூடியின் பொன் னடியிலிட்டு அருச்சித்துப்பூசித்துவந்தனர். இந்தப்படி இவர்கள் செய்யவே கோவில் இரு பிரகாரங்கள் தெரு வீதி மணி மாட கூடங்கள் மண்டபங்கள் மடங்கள் வாவி முதலிய இடங்களி லெல்லாம் எள்ளிருக்க இடமின்றி அடங்கலுஞ்செல்வழிகளெல் லாமடைத்துத்துன்னி யெங்கும் நெருங்குதலால் அவர்கள் தூய வனை வலம்புரிந்து தொழ முடியாமல் அந்தியும் பகலும் மனது றப் போற்றி நினைத்து அனவரததானநாயகனே! எங்கள் மயல றவுனை வலம் வந்து போற்றவேண்டும் இந்தவகை புரிய வொட் டாமல் எங்கும் லிங்கம் இருந்தது. இதற்கு இன்னபடி செய் வதென்று நீ வந்தருள்செய்திட வேண்டும் என்று வேண்டினர்.

உடனே, புரமெரித்த நாதன் விடைமேற்றோன்றி மால் அயன் முதலியோரைப் பேதுறேலென உரைத்துப் பிறங்கி நா ளும் விரவியெங்கும் நிறைந்த லிங்கம் அனைத்தும் மேதினிக்குள் ளே மறைந்துவெளியாய்க் காட்ட அருள்செய்தார். தேவரெல் லாங்கண்டு புகழ்ந்துவாழ்த்தி முன்போல ஆலயத்துட் பரிவாய் வந்தனர். கோயிலைவலம்வந்து வரையீன்ற முத்தரையும் மூலநாத ரையும்அனவரததானநாயகரையும் கங்காளநாதரையும் காந்திமதி யம்மையையுங் கந்தசுவாமியையும் கணபதிமுதலிய தேவர்களை யும் சிந்தை மகிழ்ந்து அன்புடனே சேவைசெய்து தெருவீதிகளை வலஞ்செய்து சிறப்புற்றனர். சன்னிதிக்கு வந்து பற்பல தோத் திரங்கள் புகன்றனர். நாதனே! நீ காந்திமதித்தேவியோடு எந் நாளும் இப்பதியில் இருந்தருள்செய்யவேண்டும். உன் கமல பாதம் போற்றி நாங்களும் இங்கிருக்கவேண்டும் துன்றிலிங்கப் பிரதிட்டை யின்னமங்கே தோன்றாமல் மறைவாகத் துலங்க வேண்டும். நெல்லையில் பிறந்தோர் இறந்தோர் நினைப்போர் இருப்போர் சித்தராகி எல்லையிலாப் பேரின்பமெய்தி எங்கும்

விளங்கும் கயிலாசமிசை இருக்கவேண்டும். பலபதியிலுஞ் சரிப்போர் இவ்வூரில் வந்தால் பாவங்கள் பற்றறவே நீங்கவேண்டும். இந்தவரங்களை யெல்லாம் எம்மையாளுடை நாயகனே! தந்தருளவேண்டுமென்று வேண்ட, இறைவன் அந்த வரங்கள் தந்தோம் தந்தோம் வேய்வனத்தில் நீங்களும் எந்நாளும் இருந்து மகிற விதிப்படி எம்மைப் பூசை செய்யுங்களென்று சொல்லி மறைந்தருளினர். அப்படியே எல்லோரும் பன்னியருடனிருந்து சிவபூசை என்றும் வழுவாமல் புரிந்தினிய மகிழ்ச்சி கூர்ந்தனர்.

மால் பிரமர் ஆன தேவர்கள் பூசித்த லிங்கமெல்லாம் சிவபெருமானின் திருவருளால் நூறு விற்கிடை மண்டலபூமி விரவிமேவி எங்கும் நிறைந்திருப்பதனால் இந்த ஊருக்கு இலிங்க ஆகாரபுரமென்று பெயராம். அங்கு வசிக்கும் மாந்தர்களெல்லாம் செல்வம்பெற்று மேலான பரகதியை அடைவர். முன் வினைப்பயனால் சிறிது மாந்தர் வலம்புரிந்து பதிதராயிறக்கும் போது வயிரவன் கைச்சூலமீது, சுழன்று ஒருநாளிகையில் அந்தப் பவங்கள் நீங்கிச் சூரியசந்திரருள்ளவரையுங் கைலாயத்திருப்பர். நெல்லைநகரில்வந்து செய்தபுண்ணியம் ஒன்று அநந்தமாகும். யாவரும் விரும்பும் இத்தலத்திலிருந்தோர் சென்று கால் மிதித்த தலங்களும் புண்ணிய தலங்களாகும். என்று சூதர் வியாதரிடத்திற் கேட்டபடிசொல்லி நைமிசாரணியவாசிகளெல்லாங் களிப்பெய்தப் பாடலங்கம்பை மகிமையைச் சொல்லவேண்டுமென்று பணிந்து துதித்துக் கேட்கச் சொல்லுகின்றார்.



## ௬௪-வது, பாடலங்கம்பை மகிமைச் சருக்கம்.



அருந்தவத் திருக்கு மன்னே அகிலாா யகியை ஈசன்
பொருந்துதல் மணங்கொண் டாரப் புகழுமை யோகம் போக்கும்
திருந்துநற் கம்பை யாற்றைத் திகழ்கரை யிலிங்கந் தன்னை
பெருந்துவர் பிறப்பின் நீங்கப் பேசுவம் நாளுந் தானே.

சிவபெருமான் உமையவளை இமையமலையில் வந்து மணம் புரியும் நாளில் தேவரும் முனிவரும் மற்றைத் தாவரசங்கமமெல்லாம் எம்மிறைவர் மணக்கோலங்காணவந்தபடியால் வடக்

குந்தாழ்ந்து தென்புலம் உயர சிவபெருமான் அகத்தியரை நோக்கித் தேவர்கள் துன்பம் நீங்கவும் பூமிசமனாகவுந் தென் பாகஞ் செல்கெனக் குறுமுனிவன் மணக்கோலங்கண்டு பின் றென் பூமிக்குச் செல்கின்றேனென்றான். சிவபெருமான் அது வுரை பூமிபொறாது துன்பம் பெருகும் உடனே செல்க, நாம் அங்கு நெல்லையில் மணக்கோலங்காட்டுவோம் என்றருளினார். தனக்கு ஒரு நதியருளவேண்டுமென்று கேட்க, அரனும் அம் மைகரத்துதித்தபொருநையைத் தந்தருளலும் அதனைக்கமண்ட லத்தில் வைத்துக்கொண்டுசெல்வோன் சிவபெருமானை நோக்கி இன்னொரு வரங்கேட்கின்றான். பரமனே அத்தலத்தில் பாதாளவாகினியாய் அருணநிறமதுவாகி ஆனந்தமயமாகி வரும் பாடலங்கம்பை நதியைநான்காண அருளவேண்டுமென்றுதுதித் து வேண்டினன். அந்நதியைக் கண்டோர் அருந்தினோர் ஆடினோர் பரிசித்தோர் எல்லாம் பந்தவினைப்பவநீங்கிப் பரகதி அடைவித்தாய் ஆகையால் அடியேனும் அரிவையும் அந் நதியாட விரும்பினோம் நாயகனே இந்தவரம் அருள்செய்ய வேண்டுமென்று வேண்டினன்.

நமது திருநெல்வேலித்தலம் பெறும் பாடலங்கம்பையை எவர்காணமுடியும். நீயும் நின்மனைவியும் காண அருள்செய் வோம் நீ பொதியமலையிற்சென்று பொருநையைப்பூமியிற் செல் லவிடுத்து அவளையும் வருணனுக்குக் கல்யாணஞ் செய்வித்துத் திருச்செந்தூரில் அறுமுகனைப் பணிந்தேதத்திமற்றைத்தலங்களை எல்லாம் போற்றிசெய்து சிந்து பூந்துறையில் நீராடி நெல்வே லிக்குவந்து நம்கோயிலை வலஞ்செய்து பொற்றாமரை நீராடி அறம்வளர்த்த காந்திமதியை அடிதொழுது கணபதி ஷண்மு கன் மூலலிங்கம் வேணுவனலிங்கம் கங்காளர் நடராசர் துர்க்கை அனவரததானர் தட்சணாமூர்த்தி முதலிய தேவர்களை எல்லாம் பணிந்துதாம்ரசபையைப்போற்றித்தபோவனத்திலிருந்து தவங் கள்செய்யும், அப்பொழுது நாம் உமையைக் கல்யாணஞ்செய்ய வருவோம் அப்பொழுது கம்பாநதியையும் வருவிப்போம் என்ற ருள் செய்தார் அப்பொழுது கும்பன் சிவபெருமானை வணங் கித் தபோவனம் எங்கிருக்கின்றது அதன் பெருமைகளையுஞ்

சொல்ல வேண்டுமென்று வேண்டினன். மூலலிங்கர் உறை கோயிலுக்குத் தென்மேற்காகும் அம்மாதவோவனம் அதில் நமக்கு விருப்பம் அதிகமாகும். இந்தத்தாருகா வனத்தில் ஒரு காரணத்தால் அம்மை வந்து தவஞ்செய்வள், நாம் அவளை அங்குவந்து மணந்திடுவோம். எப்பொழுதும் அவ்வனத்தைக் கீழ்த்திசையில் தடிவீரனென்னுஞ் சாத்தன் காவல் புரிவன். பரைதவஞ்செய் கோயிலுக்குக் கீழ்பால் சருவதீர்த்தம் என்றொருதீர்த்தம் உண்டு. அங்கே மேற்கு முகமாக ஒருலிங்கம் ஒன்று உண்டு அவ்விலிங்கத்திற்கு விசுவேசரெனப்பெயராம் அதற்குக் கீழ்பால், வருணனுண்டுபண்ணிய வருணதீர்த்தம் ஒன்றுண்டு அங்கு அவன் ஒரு லிங்கத்தைத் தாபித்து விருப்போடு நெடுநாள் பூசைசெய்து வேண்டும் வரங்கள் பெற்றான். அதற்குத்தெற்குப் பக்கத்திலே அரைக்கடிகை தூரத்திலே ஒருலிங்கம் உண்டு. இது விசுவாமித்திரன் தாபித்து மிகப் பூசை செய்து விமானமொன்றமைத்து வேள்வி செய்து வரமெலாம் இனிது பெற்றான். பச்சிமதிக்கினிடத்தில் காசிபன் அமைத்த லிங்கம் ஒன்றுண்டு. இங்கே காசிபன் ஆகமப்படி யாகம் ஒன்றியியற்றி பெறுதற்கரிய பெரும்பேறு பெற்றான். மாதவர்கள் எல்லாம் இந்தவிதமாகத் தவம்புரிந்து மகிமை பெற்றார்கள்.

இங்கே பாதலத்தினூடு வரும் கம்பையாறு பிரவாக ரூபமாகி, ஆதியாம் பிரமலிங்கந்தனக்கு மாலையாக வலஞ்சூழ்ந்து அன்பாகப் போற்றிப் போதமொடு தூயமலரேந்தி நம்மைப் பூசைசெய்து தோத்திரங்கள் புகன்றுபோவாள். தேவர்கள் தினம் அருச்சிப்பார்கள். கந்தருவர் வீணை இசைபாடி தொழுது வாழ்வார். அரம்பையர் நடனம்புரிவர். மற்றையுலகினுள்ளோரும் வந்து வணங்குவர், ஆகையால் அத்தலத்தில் நீயும் லோபாமுத்திரையும் அங்கு சென்று தவம்புரிந்து கொண்டிரு, அப்பொழுது விசுவேசலிங்கத்தோடும் சூழ்கம்பை நதியையும் காண்பாய். அத்தலத்திலிருந்து கீழ்பால் நெடும்பாதலத்தினூடேசென்று மிக்க கருமாரி பொற்றாமரையின் மேவி தரும தீர்த்தத்திற்கூடி அப்புறம் எக்கிய தீர்த்தத்திலணைந்து சென்று தீவினையைப் போக்குஞ் சிவதீர்த்தமாகுஞ் சிந்து பூந்துறையிற்

கூடும். இந்தவிதமாக இருக்கும் விசுவேச லிங்கநாதன் சன்னிதிக்கு வடபுறத்தோர் இலிங்கம் ஸ்தாபித்து உன் பெயரிட்டு பூசைசெய்வாயாக, நாமும் அங்கே மாதினோடும் வந்திருப்போம். வணங்குவோரின் ஜென்மவினைப்பவங்களை எல்லாந்தீர்ந்து பாரில் செல்வமெய்திப்பரகதியுஞ் சேர்வர். உன் பெயரிடும் அகத்தியலிங்க முன்னர் யாகசாலை உண்டுபண்ணி வேள்வி வளர்த்து வருணதீர்த்தத்தில் மகத்தானம் பண்ணி கருமமெல்லாம் முடித்த பின்னர் இனிய அவியுதவி அத்தலத்திலே யிருப்பாயாக என்று தென்றிசைக் கனுப்பினர். குறுமுனியும் தொழுது போற்றி விடைபெற்றுச் சென்று மலையமேவிபொருநையைப் பூமியில் விட்டு, செந்தூர் சென்று முருகக்கடவுளைப் போற்றிச் சிந்து பூந்துறையில் நீராடி, நெல்வேலி நாதன் கோயில் புக்கு ஆதிலிங்கர் மூலலிங்கர் தேவி வடிவாள் அனவரதத்தான நாயகர் இவரை அர்ச்சித்துப் போற்றி தபோமுனிவரோடு தபோவனத்தைச் சார்ந்தான். சிவபெருமான் சொல்லியபடி வருணதீர்த்தத்திலாடி சிவபூசைகளை முறையே செய்து புண்ணியக் கம்பையும் லிங்கமும் காண்பதெந்நாளோவென அந்திவண்ணனைச் சிந்தித்துக்கொண்டிருந்தான்.

அப்பொழுது பாடலங்கம்பைநதிப்பாவை *அத்திவெற்பிடைத்தோன்றி அவனியோடதிகப்பிரவாகமாய்ச் சிவபெருமான் அருளிய முறைப்படி சர்வதீர்த்தத்தில் வந்து குமிழியாய் எத்திசைப்பலகோடி நதிகளும் இன்பமாய்த் தொழுதேத்த எழுந்தனள். காணரிய பாதலலிங்கமும் பாடலங்கம்பைநதியையுங் கண்டு களிகூர்ந்து ஆனந்தக்கண்ணீர் கலுழவே மேனி பரவசமாக நின்று போற்றித் தெண்டனிட்டுத் தோத்திரம் பல கூறி பன்னகாபரணன் தாளை உன்னும்பொழுது அங்குறை லிங்கத்திினூடு ஆயிரங்கோடி சூரியர் ஒளியாய் எம்பெருமான் விடையிசைத் தோன்றினர். கும்பமுனியும் பலமுறை சென்று அடியில் வீழ்ந்து போற்றித் துதிக்க ஈசன் வேண்டும் வரங்கேளென அருளினர். அதற்குக் குறுமுனியும் நாதனே நின் தாண்மலரிடத்தில் எனக்கு என்றும் பத்தியிருக்கவேண்டும்.

இந்தக் கம்பைநதி நெல்லையில் என்றுந்துலங்கவேண்டும் என்று இருவரங்கேட்டனன்.

ஈசனும் அவ்வாறே யாகுக என வரமளித்து மத்திமர் அரசுசெய்காலத்து ஒழிவாய் நல்லவர் காலத்தில் யாம் வெளியாவோம். இந்தப்பாடலங்கம்பை யாறதனில் சோதிலிங்கத்திருஆலை பந்துரயமண்டபங்கள் கட்டுவோருந்தூய பூசைசெய்வோரும் குபேரனைப் போலச்செல்வமுற்று வாழ்வர்.

இந்தத் தலத்தில் அக்கிராரங்கட்டி மறையவரைக்குடி வைத்து நிலம் முதலியன அவர்களுக்களிப்போர் ஆயிரந்தலைமுறையோடும் முத்திசேருவர். இந்தத்தலத்தில் பிறந்தோர் இருந்தோர், இறந்தோர், வாழ்ந்தோர், நினைத்தோர், தவம் புரிந்தோர், புனன்மூழ்குவோர், தீர்வினை அருந்தினோர் வினைநீங்கி முத்தி சேர்வர். என்று இந்தவரமெல்லாம் அளித்து எம்பெருமான் அந்தலிங்கத்துள் மறைந்தார். குறுமுனியும் அச்சிவலிங்கத்தை விதிப்படி பூசித்துக் கோயிலில் அக்கிராரம் முதலான வகுத்து ஆடலும் பாடலும் என்றும் பிறங்கிடச்செய்தான் சிவபெருமான் முன்சொற்றபடி வடபுறத்தில் தன்பேரால் ஒருலிங்கம் ஏற்படுத்தி ஆலயமும் வளமாய்ச் செய்து பூசித்தான். அதற்கு முன்பக்கத்தே ஒருயாகசாலை அமைத்து தன்மனைவியோடு மிருந்தமகம் வளர்த்து அவியைத்தேவர்க்களித்தான்.

வரதன் அருள்பெற்று அநேகவரங்கள் பெற்றான். ஓர்பிரளயத்தில் பன்னிரண்டு வருஷம் மழையில்லாது பணியாகிய வேதங்கள் வாடி நொந்து கண்ணுதலைக்குறித்துத் தவஞ்செய்ய அவனருளினால் வடகங்கையோடு மருவி உயர்பாதலத்தூடுபோந்து வேணுக்கு அமுதூட்டும் கம்பையாற்றின் பெருமையை எவர் அறியவல்லர், கம்பை என்று பேர் சொன்ன மாத்திரத்தே பரகதியைப் பெறுவர். இத்தகைய கம்பை நதிவருணதீர்த்தம் சருவதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஆடிவிசுவேசலிங்கர் திருக்காமாட்சி அம்மன் முதலியரைப் பூசித்துப் போற்றித தபோவனத்தில் அன்பாய் இருந்து பிறகு கும்பர் வேணுவனத்துற்றுத்தன் பன்னசாலையில் பரிவுடன் இருந்தார். இதுவே எனக்குவியாதர் கூறியதாகும் என்று சூதர் நைமிசாரணிய வாசிகளுக்குக் கூறி

ஞர். முனிவர்கள் தொழுது போற்றிக்கருமாரி தீர்த்தமகிமையைக் கூறவேண்டுமென்று கேட்க, யான் அறிந்தபட்டிற் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

## கூ௩வது, கருமாரிமகிமைச் சருக்கம்.

செவியினி லுற்ற போழ்தே சேர்ந்துள பவத்தைப் போக்கி
புவியினி லின்ப வாழ்வைப் பொருந்துறத் தந்தே யீற்றில்
நவியுடைக் கரத்தர் தாளில் நாட்டிடுங் கருமா ரிப்பேர்
திவியநற் றீர்த்தந் தன்னைத் தினமனத் தெண்ணி யுய்வாம்.

கன்னிகாதீர்த்தம் வடிவாள் கோயிலின் மேற்புறம் விளங்கித்தோன்றும். இநதப் பணைவனத்தில் வந்தவணிகனை மகிழ்வோடுகணிகை ஒருத்திநோக்கி இந்த அந்தணற்கு வெற்றிலை பாக்குத்தா என்றாள். தன்காதற்கிளத்தியாகிய அவள் கூறிய சொல் தட்டாது அந்தணற்குப் பாதிபாக்கிலை கொடுத்தான். அதனை வேதியன் வாங்கியுண்டு வருத்தம் நீங்கினான். பின் பூங்கமலப் பொன்வாவிப்புனலில் மூழ்கி வடிவாள் பாதம் பணிந்து பிரகாரத்திலே தேங்கமழ்குழலாள் மேலவாவியைத் தெரியக்கண்டார் கணிகை அந்தநீரை வாரிப்புரோட்சித்தாள். அதனைமறையோன் கண்டு இந்நீர் புரோட்சித்தாயே அதன்சிறப்பை எனக்குக் கூறவேண்டுமென்று கேட்டான். அதற்கு அவள் இந்தக்கருமாரி ஆகாயகங்கையினும் முக்கியமானது. மோகமாய்க் கேட்போர் பாவம் முழுதும் போய் முத்திசேர்வர். ஆகையால் நானும் அந்தக்கதையினைக் கூறுகின்றேன் கேளெனக் கூறுகின்றாள். இந்தமணவூரிலிருந்து அரசாட்சி செய்தநல்லறிவு மிக்க இந்திரத்துய்மநாம வேந்தன் ஒருநாள் நெல்லை நாதனைப் பூசிக்கக்கோயிலினுள்புகுந்து சன்னிதியில் எம்பெருமானைத்தொழுது யோகநிட்டையில் இருந்தான். அச்சமயம் துருவாச முனிவர்தன் மாணவர் சூழத் தலங்களையெல்லாந் தரிசித்துக்கொண்டு நெல்லைநாதனைத் தரிசிக்க ஆலயத்துட் சென்றான். அங்கு மன்னவன் எழாமல் வீற்றிருத்தலைக் கண்டு எதிர்கொள்ளவுமில்லை தொழவுமில்லை என்று கோபித்து யானையாகுக எனச்சபித்து விட்டான். அது தெரிந்த

அரசன் முனிவர்தாளில் வீழ்ந்து பிழைபொறுக்கவேண்டுமென்று வேண்ட, அதற்கு முனிவர் நாமிட்டசாபத்திற்கு மெய்வருந்த வேண்டாம் நீயானையாய்த்திரியும் போது நெல்லை நாதனை நினைப்பாய் அப்பொழுது அச்சாபம் நீங்கும் என்று அருளிச்செய்து கருணைசேர் நெல்லை நாதனைப்போற்றித்துதித்துச் சென்றார். அரசனும்முனியிட்டசாபப்படி யானையாகி பலவனம் புகுந்துதிரிந்து பின்பொதிய மலைக்குப்போனான். அப்பொழுது ஒருசிம்மங்கண்டு துரத்திற்று யானையும் ஓடிமுற்றவப்பயனால் நெல்லைப்புனிதனை நினைந்து கோயிலுக்குள் வந்து மின்னிடை வடிவாள் கோயில் மேல் புறத்துள்ள கருமாரிப் புனலில் ஆழ்ந்து பின்னுறவந்தசிங்கம் அஞ்சும்படி வீறிட்டு சென்மநீங்கித் தேவஉருவெடுத்து கோயிலை வலம்வந்து வேய்வன நாதரையும் வடிவுடையாளையுந் தொழுது பொன்விமானமேறிக் கைலை மலையைச் சேர்ந்தான். அவனை இந்திரன் நோக்கி கருமாரிப்புனலில் நீ மூழ்கியதால் பாவந்தீர்ந்தாய், ஆகையால் நம்கணங்கள் கோடிசுற்ற இங்கிருத்தியென்ன அவனும விளங்கவீற்றிருக்கின்றான். அவ்யானை மூழ்கிவீந்துகதியினைப் பெறுதலாலே 'கருமாறி' எனப்பெயராயிற்று. இதுவே இதன்கதை மறையோய்! என்ன அவனும் மகிழ்ந்து சென்றான். வணிகனுங்கணிகையுந் தம்மிடஞ் சேர்ந்தனர். வேதியன் மூப்படைந்து நெல்லைத்தலத்தினிலிறந்தான். அப்பொழுது காலதூதர் இவன் பாவி என்று தம்கரத்துத்தண்டிலடித்தனர். அப்பொழுது வேதியன் நெல்லை நாதா தஞ்சம் என்றான்.

உடனே சிவகணங்கள் வந்துகாலதூதரைத்துரத்திப் போக்கி மாயும் வேதியனைத் தூயவிமானத்திலேற்றினார்கள். அப்போது தூதர் கணங்களை நோக்கி, இவன்முழுப்பாவி இவனைவிமானத்திலேற்றுதற்குக் காரணமென்ன கூறுங்களென? பவந்தீர்க்கும் நெல்லையில் இறந்தபடியினாலும் கருமாறிக்கதைகேட்ட தாலும் பாவம் நீங்கிப் புனிதனாயினனென்றனர். சரி எனத் தூதர் அகன்று போயினர். அந்தணன் கைலை மருவிவாழ்ந்தான்.

அவனை அமலன் நோக்கிநெல்லைநகரில் இறந்ததால் தீயபவம் நீங்கினை, திவ்வியவிமானத் தோடும் ஆயிரங்கணங்கள் சூழ அரசனாக இருத்தி என்றருளினர். இதுவே கருமாரி தீர்த்த மகிமை

என்று சூதர் கூறினர். நைமிசாரணியவாசிகள் தொழுது போற்றிப் பொற்றாமரை மகிமையைக் கூறியருள வேண்டு மென்று வேண்டச் சூதமுனிவர் கூறுகின்றார்.

---

## ௩௩-வது, பொற்றாமரைச் சருக்கம்.

பிரமனுந் தேவர் தாமும் பிறங்கிய யாரு மன்பால்
விரவிவந் தாட வன்னோர் விழைவன வளிக்குந் தீர்த்தம்
உரகபூ டணர்பொன் னன்ன உருவமா யுத்தி வாவி
வரமிகு தூய்ய பொற்றா மரையினைத் துதிப்பாய் நாவே.

ஓ நைமிசாரணிய முனிவர்களே! இப்பொற்றா மரைத்தீர்த்தத்தை மால் நாரதருக்குக் கூறினர் அதை நான் கேட்ட மட்டிற் கூறுகின்றேனென்று கூறுகின்றார். முன்னோர் காலத்தில் திருமகளோடு இருக்கும் பொழுது நாரதர் வந்து தொழுது சேவடி போற்றி வேய் வனத்துப் பொற்றாமரைக் கதை எல்லாம் இன்னுங் கேட்க ஆசையாக இருக்கிறது சொல்ல வேண்டுமென்று பணிந்து கேட்க மால் கூறுகின்றார். ஓ நாரதரே நீர் நல்லகதை கேட்டீர் சொல்லுகின்றேன் கேளும், எவர் பிறந்தாலும் இறந்தாலும் இருந்தாலும் நினைத்தாலும் முத்தி தரவல்லது திருநெல்லை ஆதிநாயகி வடிவுடையாள் திருக் கோயிலின் பக்கத்தில் வடகீழ்ப் பக்கத்திலே பொற்றாமரை பூக்கும் புனல் நிறைந்து விளங்கும் இத்தடாகம் இருக்கிறது. இது பிரளயந் தோறும் அழிவிலாதிருப்பது.

சிவபெருமான் என்னையும் அயனையும் படைத்து உலகங்களை உண்டாக்கிக் காப்பீர்களாக எனமொழிந்தார், நாங்கள் கேட்டவரங்களைக் கொடுத்தார். அதேவிதமாக உலகைப் படைத்துக் காத்துவரும் பொழுது பிரமன் படைப்புத்தொழிலை மறந்து சிவனைக்குறித்து இந்த நெல்லையில் வந்து இப்பொற்றாமரைக்கரையிலிருந்து கலைமகளோடு பதினாயிரம்வருடம் தவஞ் செய்தான். அப்பொழுது நெல்லை நாதன் அப் பொற்றாமரை வாவியிலிருந்து பொன் அன்னமாக வந்து உபதேசித்தருளி வேண்டும் வரங்களுமீந்து அத்தடப் புனலில் மறைந்தார்.

அவர் பொன்னிற மாக அத்தடப் புனலில் மறைந்ததனால் அத் தடாகத்திற்கு ஏமதீர்த்தம் என்று பெயராயிற்று. உலகெ லாங் கதிபெற அனகன அத்தடத்தில் அலங்கார அப்புருவா னான். அத்தடாகத்தில் பிரமனும் ஒரு காலத்தில் பொற்றாமரை யோடு தோன்றுதலாலும் அவ்வாவிக்குப் பொற்றாமரை எனப் பெயராயிற்று. புவியுயிரனைத்துந் தீதகன்று மூத்திப் பேற்றை அடையப் பாடலங் கம்பையாறும் பாதலத்திலிருந்துபொற்றாம ரையில் வந்து சேர்ந்திருக்கும். இத்தீர்த்தத்தில் மூழ்கினோர் எவ ராயிருந்தாலும் தம் சஞ்சித வினை நீங்கி நற்கதிசார்வர். அத்த டாகக் கரையில் எங்கும் எப்பொழுதும் தேவர்களிருப் பார்கள். பொன்னிறத் தாமரை பூக்கும் அத்தடாகத்தே படிந்தவர் சிவனு லகிற் சார்தல் உண்மை. நாமும் நம் திருமகளுடன் வரதனை வழுத்திக் கொண்டு வடபுறத்திருப்போம்.

வசிட்டன், வாமதேவன், காசிபன், சாபாலி, பரசரன், வியாசன், பங்கிருடி, கோசிகன், முதலிய நற்றவமுனிவர் தின மும் அத்தடாகத்தில் மூழ்கிவாழ்வார். இவர்கள் அத்தடத் தின் எட்டுத்திக்குகளினும் மிருந்து தவங்கள் செய்வார்கள்.

அத்தீர்த்தமேன்மையை நன்றறிந்து வேதங்கள் சொல் லியபடியே சொல்லியிருக்கிறார்கள். அதனைச் சொல்லுகின்றேன்.

எவர்க்குந் துன்பஞ் செய்தோர், பழியே சொல்வோர், பசுவைக்கொன்றோர், பிரமகத்தி தோடமுடையவர், புரங்கொ டுத்தோரைக் கொன்றோர், வேதஞ்சொல்வோரைப் பகைத்த வர், அவர்களைக் கொன்றவர், இன்னும் பெருமபாவங்கள் செய் வோர், இவ்வாவியில் மூழ்கினால் தம் பாவமெலாம் நீங்கிப் புனித ராய் வாழ்ந்து முத்தி அடைவர் என்று வசிட்டன் சொன்னான்.

பொற்றாமரையில் மூழ்கி நெல்லைநாதனைச் சேவித்தால் கல் வியும் பேரறிவும் பெற்றுக் கயிலையில் வீற்றிருப்பரென்று வாம தேவன் சொன்னான்.

பொற்றாமரையில் திதி தானம் செய்தால் கயையிற் செய் த பெறும் பலனுக்கு ஈரையாயிர மடங்கு அதிகமாகப் பெறுவ ரென்று காசிபன் மொழிந்தான்.

மனைவியைப் பிறர்க்கு ஈந்து வாழ்வுபெற்றிருப்போர், நெல்லைப்பெருவிலைக்கு விற்போர், பெருவட்டிக்குக்கொடுப்போர் இத்தடாகத்தில் மூழ்கினால்பாவம் நீங்குவரென்று சாபாலி புகன்றான்.

பொற்றாமரையில் மூழ்கி உண்டி நீத்து நெல்லைநாதனைச் சேவிப்போர் நற்கதி அடைவரென்று பராசரன் சொன்னான்.

புள்விலங்கு ஏதேனும் இத்தீர்த்தத்தைக் கண்டால் நாதனுக்கு அன்பு பூணும் நல்லறிவு தோன்றி இந்நீரில் மூழ்கி முத்தியை அடையும் என்று வேதவியாசன் விளம்பினான்.

மாதப்பிறப்பு வருடப்பிறப்பு க்ரகணகாலம் ஆகிய இக்காலங்களில் மூழ்கினால் பிறப்பு நீங்கும் முக்தி எய்துவரென்றுங் கோசிகன் கூறினான்.

திதி, பாதம், அயனம், ஆண்டு, விசு, இரண்டிடபசிங்கமதி சேரும் மகரந்தேளென்று வரும் மாதப்பிறப்பில் அன்பாய் பொற்றாமரை மூழ்கின் முத்தி உண்டாம் என்று சிவபெருமானை ஒத்த பிங்கிரிடி சொன்னான்.

இந்த மாதவர்களும் மற்ற முனிவரர்களும் பொன்னுலகோரும் வந்து இப்பொற்றாமரையில் மூழ்குவரென்றால் அதன் மேன்மையை யாவரே அறிய வல்லவர். வியாழஞ் சிங்கத்தில் வரும் அக்காலத்தில் பொற்றாமரையில் ஆடுவோர்கள் ஜெனன கோடியிலெல்லாஞ் செய்தபாவம் நீங்கிப் பெருஞ்செல்வம் பெற்றுக் கடைசியில் கைலை சேர்வர். பொற்றாமரைக் கரையிலிருந்து ஒரு மறைவலானுக்கு இன்னடி சிலீந்தால் குணங்கொண்ட ஆயிரம் மறையவர்களுக்குப் பிறதலத்திலிருந்து கொடுத்த பலனை நல்கும். சிவபெருமானையன்றி யாரிதன் பெருமை சொல்ல வல்லார்.

இதிற்படிந்து சிவனைநினைந்து போற்றிச் செபம் தபம் தியானம் நவசிரார்த்தம் முதலிய செய்வோர்கள் சூலமேந்துங் காலனைக் கண்ணுற் காணார். இந்தப் புட்கரணியின் காற்றுப்பட்ட தாவர சங்கமமெல்லாம் முத்தி சாருஞ் சத்தியம்.

இதன் விசேடத்தை ஆராய்ந்து அறியாதோரேனும் இதில் ஒருமுறை ஆடினோர் நெறியுறு செல்வம் பெற்று நீள்பெரு

ஞானம்பெற்றுச் சிவசாரூப்பியமும்பெற்றுக் கைலையில்வாழ்வர். ஒருநாள் பொற்றாமரையாடில் ஆயிரங் கோதானம் அளித்த பலன் எய்தும். மூழ்கி ஓர் இரவு தங்கினுல் பிறப்பகலும்.

ஆதிரை தைப்பூசம், அட்டமி, அம்மாவாசை, பிரதோடம், சோதிநாள், துலாமாத உதயம், மாகமாதம், மகாமகம், பிறந்தநாள் இன்னும் உள்ள விசேடநாட்களில் ஆடினுல் தங்குலங்களோடும் உற்ற தீவினைகள் எல்லாம் நீங்கி உலகில் நெடுநாள் இன்புடன் வாழ்ந்து பின் முடிவில் கைலை சேர்வர். இதில் மூழ்கி வரதனை வணங்குவோர் பவம் நீங்கி பஞ்சாக்கினி மத்தியில் நெடுங்காலந் தவஞ்செய்தோர் பெற்றபேறைப் பெறுவர் இத்தீர்த்தத்தில் ஒரு தரம் முழுகினோர் பிரயாகையில் சென்மம்மட்டும் முழுகினோர் பெறும் பேற்றைப் பெறுவர்

முன்னர் ஓர் உகப்பிரளைய காலம் முடிந்தபின்னர் பிரமன் பொற்றாமரைக் கரையிடையிருந்து நற்றவஞ்செய்து வரதன் அருளால் உலகம் எல்லாம் படைத்துவருங் காலத்தில் நான் என்காதின் குறும்பியையெடுத்து பூமியிற்போட்டேன் அது சமர் செய்யுங்கொடிய பாவிகளாம். மதுகயிடவர்களாயிற்று. மது கைடவர்களான இவர்கள் கண்ட திக்கெல்லாஞ் சென்று கடுங் கொலை புரிந்து தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மற்றையர்களுக்கும் இடுக்கண் மிகச்செய்துவந்தனர். ஏழு மேகங்களையும் பிழிந்து நீர் குடிக்கவல்லவர். பலவரைகளைத் தூளாகும்படிக் குதிக்க வல்லவர். இவர்களுக் கஞ்சித் தேவர்களெல்லாம் மிகப் பயந்திருந்தனர். இவர்கள் பொற்றாமரை வாவிக்கரையில் இருந்த பிரமனின் முகத்துள்ள வேதங்களைப் பண்டுதோன்றிய உபநிடதத்தோடு பறித்துக்கொண்டோடிக் கடலிற் புகுந்தொழித்துக் கொண்டார்கள். அப்பொழுது பிரமன் தொடர்ந்து சென்று அவர்களைப் பிடிக்கமுடியாதவனுகித் திருப்பிப் பொற்றாமரைக் கயத்தில் வந்து சிவனருள்பெறவேண்டித் தவஞ் செய்தான். எந்தையே என்ன என்னையும் நினைத்தான். நான் அவன் முன்சென்று அஞ்சேல் இங்கேயே இரு நெல்வேலிநாதன் அருளால் மறைகளைக்கொண்டு வந்து தருகின்றேனென்று திருமகளையும் அங்கேயே இருக்கவைத்து மீனமாகிக் கடலிற் புகுந்து

அவர்களைக்கண்டு பெருஞ் சமர்செய்து கொன்று வேதங்களைக் கொண்டுவந்து பிரமனுக்குக் கொடுத் துபதேசித்தோம். வேதன் பொற்றாமரைக் கரையில் தவம் பயின்றதனாலேயே பெற்றான். இல்லாவிட்டால் பெற்றிருக்கமாட்டான். ஆகையால் இந்த வேதங்களை அந்தணர்கள் பரிபாலனம் பண்ணுதல் கடன். வேதங்கள் ஓதாதமறையவர்கள் நீசராவர். ஓதி அங்கதைமறப்போர் இழிந்தோராவர். பொற்றாமறைக் கரையிலிருந்து வேதம் ஓதின் முத்தி அடைவர். பிரமன் பொற்றாமரையில் தவஞ்செய்தே இலகுஞ் சொர்க்கம், நரகம் ஆகிய இவைகளைப் படைக்கும் திறம் பெற்றான். தசப்பிரமாவைப் புதல்வர்களாகப் படைத்தான். அவர்களிற் காசிபன் முதலியோர் பொற்றாமரையில் மூழ்கியே மறைப்பொருளுணர்ந்தனர். தெத்தாத்திரையரும் இத்தலத்தில் மூழ்கியே தவஞ்செய்து சுருதி சாத்திரங்கள் எல்லாம் உணர்ந்தார். வாணியும் இதிற்படிந்து தவஞ்செய்தே கலைமகளாகிப் பரமனை மணந்தாள். மற்றுமுள்ள தேவர்களும் தபோதனர்களும் பெற்றபேறெல்லாம் இதில்மூழ்கினதினாலேயேதான் உண்டாயுற்று.

இத்தீர்த்தத்தின் நீரை இருகையால் வாரி உண்டோர் மறைகலைகள் சைவசாத்திரம் பலவுங் கற்றுச் சிவனடி மருவி வாழ்வர். இத்தீர்த்தத்துள்ள மீன்முதலிய சீவஜெந்துக்களெல்லாம் தேவர்களும் முனிவர்களுமேயாம். இன்னும் நாரதனே அதிசயங்கள் பலவுண்டு சொல்லுகின்றேன் கேள் இப்பொற்றாமரையில் அரவுண்ட தவளை அரவணியும் பெம்மான் உருவுபெற்றுகைலை மருவிற்று. இதன் வடபாலில் நின்ற ஒரு மானை வேடன் எய்தான் அது கீழேவீழ்ந்து மழுவோடு மானை ஏந்துஞ் சிவனுருப்பெற்று வெள்ளிவெற்படைந்தது. இதில் நடந்த கதை ஒன்றை நாரதனே சொல்கின்றேன் கேளெனச் சொல்கின்றார். திசைமுகன் அருளால் வாணியினிடத்தில் திலோத்தமை பிறந்தாள் அவள்மேல் பிரமன் காதல்கொண்டான்.

அப்பாவம் நீங்க, வாணி, கங்கை நீராட நடந்து காசிமாநகரை யடைந்தாள். விசுவநாதர் பொன்னடி பணிந்தாள். பல்பல துதிகளிசைத்தாள். சிவபெருமான் அங்கு காட்சி

கொடுத்தருள ரோமசன் மார்க்கண்டன் முதலியோர் தொழுது போற்றுவதையுங் கண்டாள், இவளுங்களி கூர்ந்து போற்றித் துதித்து நின்றாள் பின் ரோமசரிடஞ் சென்றாள், அவரும் நீ கருதியிங்கு வந்ததற்குக் காரணம் என்னென்று கேட்டார். அதற்கு அவள் நெல்வேலியில் பொற்றாமரைக் கரையில் அன்பொடு இருந்தேன் இப்பொழுது உத்தர கங்கை யாடவே வந்தேன் என்று உரைத்தாள். உரோமசனும் மூக்கின் மேல் ஒரு கன்னற்பொழுது கைவைத்து அதிசயித்து சிவசிவா என்று சொல்லுகின்றார். என்னகாரியங் குறித்து இங்குவந்தாய் முனிவரும் மற்றுளோரும் உன்னைக் கோபிப்பர்களே! தங்கக்கட்டி தம் கையிலிருக்கச்செம்புக்காசிற் கிரந்து செல்வோர் தன்மை போல தாம்பிர பன்னிக்கு மேல்பால் வேணுவனத்தில் பொற்றா மரையிருக்க ஏன் வீணே இங்கு வரவேண்டும். அது கங்கையினும் மிகச் சிறந்த தன்றோ என்றான்? அதற்கு வெண்டாமரையாள் நான் பொற்றாமரை மகிமையை அறியேன் எனக்குச் சொல்லியருள வேண்டு மெனச் சொல்லுகின்றாள். தேவர்களும் முனிவர்களும் இப் பொற்றாமரை, கங்கையினும் விசேட முடையதென்று தவங்கள் செய்வர் முன்னு மவ்வாறு செய்வோர் கதையை நான் சொல்லுகின்றேன் கேள் என ரோமசர் கூறுகின்றார். அயோத்திமன்னன் சகரபுத்திரர் கதியடையும்படிப் பகீரதன் கங்கையைக் குறித்து நெடுநாள் தவஞ் செய்து கங்கையைக் கொணர்ந்தான். அவள் அயனுலகம் இந்திரலோகம் முதலிய எல்லாம் அஞ்சும்படி வந்து பொற்றாமரைக்குள் புகுந்தாள். அப்பொழுது ஐயன் புன்னுனி நுண்டுளிபோல் சடைமேலடக்கினன். பொற்றாமரை விடுத்ததாரையினை ஐயன் நீ அவ்வழி கொண்டுபோ என்று பகீரதனுக்குப் புகன்றான். விமலன் உரைத்தபடியே கங்கையும் பொற்றாமரை வழியாய் வெள்ளிய திரை களோடு சென்று ஆலயத்தைச் சூழ்ந்து பகீரதன் பின் நடந்து சன்னுவன் உட்கொண்டு காது வழியாய் விடப்பிறகு ஒடிச்சகரர் என்புகளை நனைத்துப்புனிதமாக்கிக் கடல் புகுந்தாள்.

சிவபெருமான் சடையினிற் புனைந்த கங்கை அருவிபோல் விண்ணினின்றும் அமுத தாரைகளாய்ப்பொற்றாமரையில் மருவி

வீழும். இத்தகைய பொற்றாமரையைக் காண்போர் பெருகு செல்வம் பெற்று நற்கதியைப் பெறுவர். உலகத்திலுள்ள மூப்பத்து மூன்றரைக் கோடி தீர்த்தமும் உலகிலுள்ள மற்றைத் தீர்த்தங்களும் இந்தப் பொற்றாமரையில் இலகும் நீருருகுமிழியாய் எழுந்தகி விசையும். ஓ சலசையே! இன்னொன்று சொல்லுகின்றேன்கேள். வியாழ பகவானுடைய மனைவியைப் புணர்ந்த சந்திரன் சாபம் பெற்று நீக்குதற்கு வழியறியாமல் பிரமனைவணங்கி வேண்டிப் பிரமன் சொல்லியபடி நெல்லைக்குச் சென்று. பொற்றாமரையில் மூழ்கி நெல்வேலி நாயகனையும் வடிவுடையாளையுந் தொழுது சாபம் நீங்கி நல்வரம் பெற்று விண்மிசை விளங்கினான்.

இந்தவிதமாகக்குருபத்தினியைப் புணர்ந்தோனுக்கும் பேறளிக்கும் அந்தத்தீர்த்தத்திற்குச் சென்றால் பாவம் நீங்கிப் புனிதமுற்று எண்ணிய சித்தியெய்தும் அங்கு நீ செல்க என்றான். பின்னும் கலைமகள் நீயும் உன்பக்கத்திலிருக்கும் மார்க்கண்டரும் திவ்விய அப்பொற்றாமரையை விட்டு இங்கிருப்பானேன் என்றுகேட்டாள். அதற்கவர்கள் மாதே! தாருகாவனத்தில் பொற்றாமரையில் வாசமாய்த்தவங்கள் செய்துகொண்டிருந்தோம் விசுவநாதரைக் கருதி இங்கு வந்தோம், வந்து தவஞ்செய்யும் பொழுது அவர் தோன்றி கருதிய வரங்கள் எமக்குவுதவி, வேணுவனப் பொற்றாமரைத் தலத்திலிருந்து இங்குவந்தீர் அந்தவழ்போலும் விசேடமுள்ள வேறு தலம்இல்லை. அத்தீர்த்தம்போலும் விசேடமுள்ள தீர்த்தம் வேறு இல்லை. நெல்லைத் தலத்தில் ஓடு கல் எல்லாம் எமது உருவாம் ஆகையால் கழை வனத்தைக் காண்போரும் மருவி இருந்து வாழ்வோரும் மழுமான் கரத்தினராய்க் கைலையில் இனிது வீற்றிருப்பர். அங்கு உறையும் வேணுவனநாதர் நாமாகும். அத்தலத்தை எவரேனும் இகழ்ந்தால் எரிசொரி நரகத்தில் இடர்ப்படுவர்.

ஆகையால் நீங்கள் அத்தலத்திற்குச் சென்று தவஞ் செய்யுங்கள் என்றார். கங்கை முதலிய தீர்த்தங்களெல்லாம் அங்கேயே உறையும் என்றார். ஆகையால் நாங்களும் அங்கே போதப்போகின்றோம் என்றான். உடனே சரச்சுவதி ஓ உரோ

மசமுனியே! நான் அத்தலத்தையுந் தீர்த்தத்தையும் விட்டு நீங்கி வந்த அபசாரத்திற்கு என்னசெய்வதென்று கேட்டனள். அதற்கு உரோமசர் தலைகீழாய்ச்சென்று சேர்ந்து அத்தடம் மூழ்கி மூலலிங்கத்தையும் வடிவாளையுந்தரிசித்துப் போற்றுவா யாக என்றனர். அவளும் நன்றென விடைபெற்றுத்தலைகீழாகவே சென்று வேணுவனமுற்றுப்பொற்றாமரை படிந்து கோயிலைவலம் வந்து நாதரையும் வடிவாளையுந் தரிசித்துத் தவஞ்செய்து தன் நாயகன் பாவத்தையுந் தன் பாவத்தையும் போக்கி புனித மோடு ஞானமெய்தப் பெற்று கல்வித்தெய்வமாய் விளங்குகின் றாள். உரோமசரும் மார்க்கண்டரும் நெல்லையுற்றுப்பொற்றாமரை யடைந்து அங்கேயே பொருந்தித் தவஞ்செய்தனர். விசுவாமித் திரனும் தான் வசிட்டர் புத்திரர்களைக் கொன்றமையால் பிர மகத்திவந்து தென்புறுத்தக் கைலை சென்றுதவம் புரிந்தான். கைலை நாதனுந்தோன்றி எதைக்குறித்துத்தவஞ் செய்கின்றாய் என, தான் பிரமகத்திதோடத்தை நீக்கிக் காத்தருள வேண்டி னான். கைலை நாதன் நெல்லை சென்று பொற்றாமரையாடினால் பிரமகத்தி நீங்கும் என்று கூற அவனும் அப்படியே வந்து பொற்றாமரையாடி மூலநாதரையும் வடிவாளையும் மற்றத்தேவர் களையுந் தொழுது பிரமகத்தி நீங்கிப் பெருமை பெற்றான்.

பிரமன் சரசுவதி சாவித்திரியோடு பொற்றாமரைக்கு மேல் கரையில் சிவனை நினைந்து தவஞ்செய்து இனிதிருக்கையில் ஓர் நாள் கங்கையாடப் போகையில் சரஸ்வதி ஒரு விச்சாதரமா தின் பாடல் கேட்டுக் கூடவராது தங்கினாள். அதனால் பிரமன் சினந்து சாபமிட, அச்சாபப்படியே நக்கீரர் முதலிய பல புலவர் களாகப்பிறந்து ஆலவாய்க் கடவுளும் ஒரு புலவராய் விளங்க இருந்து பின் ஆலவாயண்ணலருளால் நெல்வேலி சென்று பொற்றாமரையாடிக் குற்றம் நீங்கி விளங்கினாள். நாயகன் விடை மிசைத்தோன்றி அருள்செய்து பொற்றாமரையின் மேல் பால் இருக்க என அருள்செய்ய அங்கேயமைந்திருக்கின்றாள். இத்தீர்த்தத்தில் மூழ்குவோர்க்கும் இதனைத் தரிசிப்போர்க்கும் உண்போர்க்கும் நரகதியில்லை. நோய் இல்லை, மூப்பில்லை, மரணமில்லை, எமவாதனை இல்லை, வறுமை இல்லை, எல்லாக்

செல்வமும் பெற்று இனிது வாழ்ந்து கயிலையை மருவி வாழ்வர் என்று கண்ணன் நாரதருக்குக் கூறினரென்று சூதர் நைமிசாரணிய முனிவர்களுக்குக் கூற அவர்களும் மகிழ்ந்து கேட்டு இன்னுமுள்ள தீர்த்த மகிமைகளைக் கூறவேண்டுமெனக் கூறுகின்றார்.

---

## ௬௭-வது, தீர்த்தச் சருக்கம்.

---

உலகுள தீர்த்தத் தெல்லாம் உயர்வுடை யனவே யான
அலகிலாச் சிறப்பு மிக்க அமையுமெண் ணான்கு தீர்த்தம்
இலகவே கொண்ட நெல்லை இரும்பதிச் சிறப்பை யெண்ணி
கலகவெம் பிறப்பை நீக்கிக் கவின்பத முறுவா மன்றே.

இந்நெல்வேலியில் கயிலையிலுள்ள தீர்த்தங்களுங் காஞ்சியிலுள்ள தீர்த்தங்களும் மற்றைத் தலத்திலுள்ள தீர்த்தங்களும் இதில் உறைவதால் சர்வதீர்த்தபுரம் என்று பெயராகும். இத்தலத்தில் முப்பத்திரண்டு தீர்த்தங்கள் உண்டு இத்தலத்திலுள்ள தீர்த்தங்களெல்லாம் தத்துவ மயமாகும். ஒன்றிலேயே சர்வதீர்த்தமுந்தான் நல்கும் இத்தீர்த்தங்களில் ஒரு தீர்த்தத்தில் மூழ்கினால் மூழ்கினவர்களுக்குப் பூமியை ஆளும்போக போக்கியமுண்டாகும். கலி நீங்கும். மன்மதன் அழகு உண்டாகும். பாதகமெல்லாந் தீயிற் பஞ்செனப்பறந்துபோகும்.

சிந்து பூந்துறை, வடிவாள் கோயிலுள் சன்னிதியின் வடகிழ்ப்பாலுள்ள பொற்றாமரைத் தீர்த்தம், சுந்தரவடிவாள் கோயிலின்மேல் பால் சூழ்பிரகாரத்தில் தோன்றும் கவுரி தீர்த்தமென்னுங் கருமாரிதீர்த்தம், பாதலவாகினியாகி இப்பதி சூழுந் தீர்த்தங்களிற்பொருந்திச்சிந்து பூந்துறையிற்கூடும். பாடலங்கம்பை, வரைவனத்தர் கோயிலுக்குத் தென்மேற்காம். வருணகற்கம்பைத்தீர்த்தம், உமைதிருக்கோயிலுள் பிரகாரத்தில் ஈசான மூலையில் அமைந்திருப்பதும் கம்பாநதி அங்கெழப்பெற்றதுமாகிய திரிகூடத்தாங்கு நின்ற ழைப்பித்ததீர்தம், கருமாரி குமரக்கோயிலுக்கு வடபுறம் உள்ள உருத்திரதீர்த்தம், பொற்றாமரையில் வாயுமூலையில் மால் உண்டாக்கிய சக்கரதீர்த்தம்

சக்கரதீர்த்தத்திற்கு அடுத்ததென்புறத்திலுள்ள அக்கினி உண்டாக்கிய அக்கினி தீர்த்தம், இறைகோயிலில் பெரிய இடபத்திற்குத் தென்புறத்தில் பொற்றாமரையிலுள்ள சக்கரதீர்த்தத்திற்கு நேர்வடபாலிலுள்ள இலக்குமிதீர்த்தம்.

உருத்திரதீர்த்தத்திறகு மேல்புறத்தில் கருமாரிதீர்த்தத்திற்கு வடக்கில் உள்ள தருமதேவதைத்தீர்த்தம், நெல்லைநாதன் கோயில்வடகீழ் மூலையில் வடுகன்கோயிலின் முன்உள்ள பிசாசமோசன தீர்த்தம் என்று வழங்கும் அக்கினி தீர்த்தம், இதற்கு மேலுள்ள அமலன் றீர்த்தக் கூவம் என்னும் தேவதீர்த்தம், இதற்குமேல் பாலுள்ள வாயுவின் மூலையில் குபேரன் பத்தியொடுவைத்தகுபேர தீர்த்தம், கோயிலின் மேலைக்கோபுர வாசற்கு மேல்புறமுள்ள இராமன் கோயில் கருடனுக்குமுன் மாடத்தெருவிலிருக்கும் வயினவதேவதீர்த்தம், இதற்கு வடக்கிலிருக்கும் பிரத்தும் பனதீர்த்தம், நெல்லை அலர்திருச்சன்னிதி முன்பாக அம்பலத்தில் இருக்கும் கங்கை முதலிய தீர்த்தங்கள் மேவப்பெற்ற சர்வதீர்த்தம், வடிவாளும் நெல்லைநாதரும் ஆனிவிழாவில் வந்து தெப்பமேறும் தெப்பக்குளமாஞ் சந்திரபுட்கரணி, வடிவாள் கோயிலுக்குக் கீழ்பால் கரும்பனை வீரன்கோயிலுக்கு ஈசானத்தில் உள்ள தருமதீர்த்தம், கரியமாணிக்கமாயன் கோயிலுக்குத் தென்கிழக்கோர் கோயிலின் முன்னுள்ள பாற்கரபுட்கரணி, தொண்டர் கணயினர் கோயிலுக்கு முன்புதோன்றும் பத்தப்பிரிய தீர்த்தம், சிந்து பூந்துறைக்கு வடபாலிற் பொருந்திய ஓர்பாறைதனில் பிரமன் பாதம் பதித்திருக்கும் அதன்பக்கத்துள்ள ருத்ரபாதத் தீர்த்தம், இதற்குத் தென்பாரிசத்துள்ள இருடிகள் தீர்த்தம், சிந்து பூந்துறைக்கு மேல் பாகத்தில் தேவர்கள் எக்கியஞ்செய்திடும் கயிலாய நாயகர் கோயிற்கு வடபாலிலுள்ள எக்கிய தீர்த்தம், சிந்து பூந்துறைக்குத் தென்பாலில் முப்பத்திரண்டு நுகத்தடியின் அளவு தூரத்திலுள்ள அகத்தியர்தீர்த்தம், இந்தத் தீர்த்தத்திற்குத் தென்பாலிலுள்ள தேவபாண்டி தீர்த்தம், இந்தத்தீர்த்தத்திற்குத் தென்பால் ஒரு கூப்பிடு தூரத்துள்ள சனற்குமார தீர்த்தம், இந்தத் தீர்த்தத்தின்தென்பாலுள்ள துற்கை சன்னிதிக்குக் கீழ்பால் பிரமன்

றும் துற்கா தீர்த்தம், இதற்குந் தெற்கேயுள்ள கௌதமதீர்த்தம், குறுக்குத் துறை என்னும் தீர்த்தம், மேலநத்தம் அக்கினீசுரர் முன்னிருக்கும் அக்கினி தீர்த்தம், இதற்குத் தென்பால் உமைகோயிலுக்கு மேற்கதாக இருக்கும் காருண்ணிய தீர்த்தம் என்னு இம்முப்பத்திரண்டு தீர்த்தங்கள் என்றும் நெல்லையில் விளங்கும், இதில் விதிப்படி மூழ்கி எம்பெருமானைச் சேவிப்போரும் இத்தீர்த்தத்தின் நீர் உண்போரும், பரிசிப்போரும் இத்தீர்த்தத்தின் பெயர் சொல்லுவோரும் நினைப்போரும் தம்பல பிறப்பிலுந் தொடர்ந்து வரும் பாவங்களும் நீங்கிப் புனிதராகி இவ்வுலகில் உள்ள எல்லா நல்ல வளங்களும் பெற்று, நெடுநாள் தம்மனைவி மக்கள் சுற்றத்தாரோடு இனிது வாழ்ந்து பின் ஈற்றில் விளங்கும் பொன் விமானத்தில் ஏறிக் கைலைசென்று கடவுள் அடிபொருந்தி நீங்காது முத்தி இன்பத்திருப்பர்.

இவற்றில் சிந்து பூந்துறை பொற்றாமரை கம்பை, கருமாரி, வயிரவன் முன்கூவம், தெப்பக்குளம், குறுக்குத்துறை துற்கா தீர்த்தம், சர்வதீர்த்தம், என்னும் இவைகள் நவதீர்த்தம் என்று சொல்லப்படும்.

இந்நகரிலுள்ள தீர்த்தங்களி லெல்லாம் ஆடுவோர்க்கு நோயில்லை. துன்பமில்லை. செல்வம் மிகப்பெறுவர். மால் முதலியோர் அழியும் ஆதியாம்பிரளையத்தில் அமலன் அம்பிகையோடு வீற்றிருக்குங் காலையில் ஈசானர் தமையுளத்திடை உதிப்பித்தான். வந்த ஈசானன் எந்தையே உனைப்பூசிக்கும் இடம் எனக்கருள்வாய் என்றான். திருநெல்வேலி நமக்கு அன்பாம் அங்கே சென்று அருச்சனை செய் என்றான். அவ்வாறே தலங்களை எல்லாம் தரிசித்துக்கொண்டே நெல்வேலி சென்று மூலலிங்கத்தையும் ஆதிலிங்கத்தையும் தொழுது ஈசானதிக்கில்வந்து தன் பெயரால் ஒரு லிங்கம் அமைத்து இலக்குமி தீர்த்தத்தில் நீராடிப் பூசைபுரிந்து வைகினன்.

அப்பொழுது வேதமும் தருமமுங் வந்து ஈசானதேவன் தாளினை வணங்கி யாங்கள் ஆதிலிங்கத்தை அருச்சிக்க வேண்

டும் ஓத நீரன்றி நல்ல உதக நீரருள வேண்டும் என்று வேண்டினர். உடனே ஈசானன் ஈசானத்திக்கிற்சென்று அந்த ஆலயத்திற்கு ஐந்து குரோச எல்லையில் குறுமுனிவாழும் ஆச்சிரமத்திற்குக் கீழ்பால் சூலத்தாற்குத்தினன். அச்சூலம் அண்டமூகடுறுயக்கீழேபோயிற்று அகழ்த்திடுஞ் சூலத்தை வாங் கமிகுந்த தீம்புனல் மேல்நோக்கி மாநிலமீது போதக்கண்டு மகிழ்ந்து அத்தீர்த்தத்திற்கு ருத்ரபாத தீர்த்தமென்று பெயர் இயம்பினன். இது புனிததீர்த்தம் என்றெண்ணி ஈசானதேவன் நெல்லைப் பிரமனைப் பூசைசெய்தான் தருமமும் வேதமும் பூசை செய்தன. அப்பொழுது ஈசானதேவர் முன் எம்பெருமான் தோன்றித் தன் சின்னங்களாகிய மான்மழு சூலம் விடை முத லிய அளித்தார். முத்தொழிலியற்றும் வரம் முதலியன கொடுத் தான் வடிவாளும் வேண்டும் வரம் பல நல்கினள். பின் இறை வர் லிங்கத்தூடு மறைந்தார். பிறகு ஈசானதேவன் நெற்றிக் கண்பொறி ஒன்றால் பிரளயத்தை அகற்றிட வவனிமீது மேய நல்லுருத்ரபாததீ[illegible]மும் விளங்கிற்று. திருநெல்வேலியிலி ருந்து அம்புவி முதலிய அண்டகோடி எல்லாம் உண்டாக்கி ஈசானதிசையில் தேவர் முதலியோர் போற்ற இனிது இருக் கின்றான். இந்தச் சிறந்தருத்ரபாததீர்த்தத்தில் மூழ்கித் தேவர் நாகர் முதலியோர் நெல்வேலிநாதர் தம்மை விதியிற் பூசித்துக் கதியுற்றனர்.

அத்தீர்த்தத்திற்கு மேல்பால் வடதரு விளங்கித் தோன் றும், இருடிகள் தலமாம் அங்கே சடாதரனிருப்பதாகும் அங்கே பிரேதபருப்பதம் பிறங்கி ஓங்கும். அவ்வரையின் பிதிர்பாதம் பதினன்குண்டு அங்குச்சென்று திதிபிண்டதானம் மாளையம் முதலிய செய்வோர் சாரூபமுத்தி சேர்வர் பிதிர்க ளும் அன்பு கூர்வர். இது போலக் கங்கைக் கரையிலும் ஒன்று உண்டு. இங்கு மாவலியும் வந்து போற்றி வணங்கிக் கேட்ட வரமெலாந் தரப்பெற்றான். தென்புலத்தேவர் பதினன்கு பெயரும் பதினன்கு சிவலிங்கம் வைத்துப் பூசித்தனர். அவை நெல்லையில் காற்றிக்கிடத்தும் இருக்கும். இதனை இறைஞ்ச

வோர் முத்தி எய்துவர். ருத்ரபாத தீர்த்தத்திற்கு ஈசான திக்கில் ஒரு குரோச எல்லையில் ஈசானர் லிங்கம் ஒன்று வைத்து அமைத்துப் பூசைசெய்தார். அவ்விலிங்கத்திற்கு ஈசான ஈசுரர் என்று பெயர். அங்கு சென்று அரனைத் தொழுவோர் முத்தி பெறுவர்.

ருத்ரபாததீர்த்தத்தின் தெற்கே இருகன்னலெல்லை தூரத்தில் சிவன் அமைத்த அனுதியதான சிவதீர்த்தம் ஒன்றுண்டு உலகில் எவரேனும் இத்தீர்த்தத்தில் ஆடில் தம்கோடி குலத்தோடும் வெள்ளிமலையில் வாழ்வர். ஓ முனிவர்களே! இனி இந்தத்தலத்தில் நீராடும்விதஞ்சொல்கின்றேன் கேளுங்கள் ஒரு பகல்போது உண்டி ஒழித்து விநாயகரைத் துதித்து அடுத்த நாள் பாரணம்பண்ணிப் பின் தீர்த்தமாடவேண்டும். ஆடிப்பூதான கோதானங்கள் சொர்ணதானங்கள் முதலியன நல்கி பிராமணர்க்கு அன்னம் வழங்கவேண்டும். ஒருவனைத் தீர்த்தமாட்டவேண்டுமானால் தருப்பையால் அவன் உடம்பை வகுத்து பின் குளிர் புனல் ஆட்டவேண்டும். உண்டி நீத்து மயிர் குறைத்து நீராடில் சூழ்பவந்தோறுஞ் செய்த தீவினை அனைத்தும் நீங்கி சிவனடிக் கமலஞ் சேர்வர்.

இந்தவிதமாக முப்பத்திரண்டு தீர்த்தங்களிலும் ஆடி நெல்லை நாதனையும் வடிவுடையாளையுந் தரிசித்துப் பிரகாரஞ் சூழ்ந்து மூங்கிலின் முட்டில் மஞ்சனம்பெய்து தானங்கள்செய்து ஆகம புராணங்கள் மெய்ஞ்ஞான சாத்திரங்கள் வாசிப்போர் சுற்றத்தோடும் இறைவர் சூழ் கைலை மேவி வாள்வர். என்று சூதர் கூற நைமிசாரணிய வாசிகள் இன்னும் நெல்வேலிக்காதை அறிந்தவாறு சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர் அன்னதான மகிமையைச் சொல்வேனென்று சொல்கின்றார்.



## ௩௮-வது நீலவண்ண னன்னதானமகிமைச்சருக்கம்.

கொலைமுதற் றீய வெல்லாங் கொண்டபுன் னீல வண்ணன்
மலைமகள் பாகன் வாழும் வரைவனத் தடைந்தே யோர்நாள்
புலைவழித் திருடி யுண்ட பொருந்துண வதனிற் கொஞ்சம்
கலைமறை யோற்கீந் துய்ந்த கதையினைத் தருகு வோமே.

சிவபெருமான் வாழுந் தலத்திற்கெல்லாஞ் சிறந்ததும் சிவலோக மென்றுந் தட்சன் கயிலை என்றும் விளங்குவது திருநெல்வேலியே. இந்தத் தலத்தில் எவரேனும் இரவலர்க்கு வள்ளி இலை அளவு அன்னம் ஈந்தால் கோடி அசுவமேதயாகம் பண்ணிய பலனுண்டாகும்.

சிவயோகருக்கு அன்பாகப் பூசை செய்து பொற்கலங்கள் வைத்து அறுசுவை அன்னந் தரில் ஒரு அன்னப்பலனுக்கு ஆயிரம் ஆண்டாக அவிர் ஒளிமானத்தோடும் அரன் உலகு அடைந்து வாழ்வர். பூசுரர்க்குச் சத்திர முண்டாக்கி அறுசுவையோடு அமுதூட்டி. வாசமென் மலருஞ் சாந்துங் கொடுப்போர் தேசுடைய விமானத்தோடுங் கைலையில் வாழ்வர். நெல்லை வீதியில் எவர்களேனும் மடங்கள் கட்டி யாதுலர் தமக்கன்பாக அறுசுவை அன்னம் ஈந்து நற்கதி பெற்றோரை எவ்வளவென்று எவரே சொல்ல முடியும். யான் அறிந்த ஒருகதையைச் சொல்லுகின்றேன் கேளுமெனச் சொல்லுகின்றார்.

வளம் மிகுந்த சோழநாட்டில் சூரிய புரத்திலே சசிவண்ணன் என்னும் வேதியன் மிகச் செல்வத்தோடு அறநெறி தவறாது வாழ்ந்து வந்தான். அவனுக்கு அவன் மனைவி வயிற்றில் நீலவண்ணனென்று ஒரு புதல்வன் பிறந்தான். அவன் அறநெறி ஓதாமல் வேதியர் தொழிலை விட்டுத் தீநெறி புகுந்து மாமிசம், மது, முதலியன உண்டு புலைச்சியரைக் கூடிப் புலைச்சேரியிலேயே வாழ்வான். கலகம் புரியும் பொல்லாதவன் களவு, சூது, முதலிய தீக்குணங்களெல்லாங் குடியாக அமைந்திருக்கப் பெற்றவன். இவன் கையில் ஆயுதந் தாங்கி வழியிற் போவோர் வருவோரை வழிப்பறித்து எங்குஞ் சென்று எவர்க்கும் இடர் செய்து ஒரு வேளாண் மரபில் வந்த ஒரு பெண்ணொடு

அவன் இன்பந்துய்த்து நாளைக்கழித்து வந்தான். இதேவித மாக முப்பதுவருஷங் கழித்தான். அவளுக்குத் தினந் திருடி யே கொடுப்பான். ஒருநாள் பொன்வேண்டி ஒரு வேதியனைக் கொன்று அவன் பொருளையும் அவன் ஆபரணத்தையுங் கவர்ந் து வந்து அம் மடந்தைக் கீந்தான். ஊரிலுள்ளோர் இவன் ஒரு அந்தணன் உயிர் கொன்றான் பிடியுங்கள் அடியுங்கள் கட் டுங்கள் கண்ணைப் பிடுங்கி ஊரைவிட்டு ஓட்டுங்கள் என்பார். இ தைக்கேட்டு நீலவண்ணன் நாமிங்கிருந்தால் நம்மைக் கொன்று விடுவார்களென்று அஞ்சி ஊரைவிட்டுப் பாண்டிநாட்டிற்கு ஓடி விட்டான். பிறகு உடம்பிற் பல மில்லாமலும் உணவில்லாமலும் நோய்கொண்ட வனுகி துணைவரும் இல்லாமல் தூரதேசங் கள் சென்று மானம் நீங்கி ஊர்தோறும் இரந்துண்டான். பின் முன்புசெய்தபுண்ணியம் ஏதோ இருந்தபடியினுல் அந்தப் பாவி தேவர் மீதேவன் வாழும் நெல்லைமாநகரத்திற்கு வந்தான். அங்கு வந்த வேதியர் மனையில் இரந்து உண்டு புறந்திண்ணை யில் படுத்து உறங்கிவந்தான். நீலவண்ணன் இந்தவிதமாக நெல் லைநகரில் இரந்து அதிகமாகச் சாப்பிடக் கிடையாமல் துன் பப்படும் பொழுது ஒருநாள் ஒரு வேதியன் தன் மனைவியோடு தீர்த்தமாடச் சென்றது பார்த்து அவன் மனைக்குள் புகுந்து சோற்றைப் பாண்டத்தோடு திருடிஎடுத்து சோற்றை வயிரார வுண்டு மிஞ்சினதை பலி எடுக்கும் பிரமணன் பாத்திரத்தில் அவன் வேண்டாம் என்று சொல்லச்சொல்ல ஒரு பிடி யன் னத்தை அவன் பாத்திரத்தோடொன்றாய்க் கலந்தான். மிச்சி லன்னம் இது எனக்கு வேண்டாம் வேண்டாம் என்றிடவும் பொச்சன் எனது பாத்திரத்திற் போட்டான், இகழப்படாதே? விருப்போடொருவன் இலைபோட் டுண்ணுகையில் எச்சில் கலந் தால் அவ்வன்னம் இகழாது உண்ணவேண்டும். அவ் வன்னத் தைப்புசித்தோர் புசித்தவுடன் எழுந்து குளிர்ந்தநீரில் ஒருதரம் முழுகினுல் தீரும் தோடமென்றே வேதம் உரைக்கும் அந்நெறி யையும் விட்டு, இகழ்ந்தோர் நரகத்தில் ஒரு அன்னத்துக்கு ஒரு ஆண்டாகக் கிடந்துழல்வர் என்னும் இந்த மறையையும் புகன்று நீலவண்ணன் இட்ட அன்னத்தையும் புசித்து வாவியில் மூழ்கி

வேய்வனத்திலிருந்து சனனவினை ஒழிந்து கைலை அடைந்தான். பிறகு நீலவண்ணனும் மூன்றுநாள்நெல்வேலியிலிருந்துபின்முன் போல உலகெலாஞ் சஞ்சரித்தான். இவன் துயிலும்பொழுது கொடிய விட நாகமொன்று சீறிக் கொத்திற்று. அவனும் விடந் தலைக்கேற மாண்டான். உடனே யமதூதர்கள் வந்து இடி யேறேபோல் ஆர்த்துப் பாசத்தால் மடலோடு மடல் விரியப்பிற் கட்டாய்க் கட்டி அடித்துக்கொண்டு போம்பொழுது, கைலை நா தன் ஏவச்சிவகணங்கள் விமானத்தோடு வந்து மறையோனைக் கண்டனர். கண்டவுடனே, யமன் காலபடர்கள் தமைக்கூவி முன் வினை செய்பாவியென்று பாசக்கயிற்றாற்பிணித்திவனைக் கொண்டு போகாதீர்கள் எம்மிடங் கொணருங்கள் என அத்தூதர் இந்தப் பாவியை யமலோகமே கொண்டு போவோம் என்றனர். உடனே சிவகணங்கள் மழுப்படையால் எமதூதர்களைக் கொன்று அந் தணனை விமானத்திலேற்றித் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கக் கைலைக்குக் கொண்டு போயினர். அப்பொழு எமதூ தர்கள் கணங்களைக் கண்டு மிக்க கொடிய பாதகனைப் புனித மான மிசை ஏற்றிக் கடவுள் முன் கொண்டுபோகின்றீர்களே! இவன்செய் புண்ணியம் என் என்றனர்? அதற்குக் கணங்கள் ஓ காலதூதர்களே! இந்த நீலவண்ணன் ஏற்றுக்கொடியோன் வாழ் நெல்லையில் மறையோனுக்கு ஒருபிடி அன்னம் இட்டபடி யால் மூவேழ்தலைமுறையும் நரகிற்கிடந்தோரும் சிவலோகத்தை அடைந்தனர். இவனை எம்மிறைவன் மானத்தேற்றிக் கொணர்க என்றான், நாங்கள் கொண்டுபோகின்றோம் என்று கூறி ஊழுல கம், மதியுலகம், இமையோருலகம், விதியுலகம், மாலுலகம் சென்று அவ்வுலகர் பணிந்தேத்தக் கைலைக்குக்கொண்டுபோய் நாதன்முன்விட்டனர். வேதியனுஞ் சிவபெருமானின் திருவுரு வைக்கண்டு மகிழ்ந்து போற்றித்துதித்து அடிமிசை வீழ்ந்து தொழுதான். அவனை அமலன் நோக்கி மகிழ்ந்து நீ நமது வே ணுவனத்தில் மறையோன் ஒருவனுக்கு ஒருபிடிசோறீந்தாய் அதனால் நமக்கு இன்புடையவனுய் ஒரு நூறுகோடிகணங்களுக் குத்தலைவனாக சுவணனென்னும் பெயரோடு இந்தமானமோடு கயிலைவரையிடத்திரு என்று உரைத்தான்.

புனிதன்உரைத்தபடி இவனும் சகலலோகங்களிலும் கணங்கள்சூழ மழுமான் கரத்தேந்தி விமானத்தேறிச் சஞ்சரித்து என்றும் புதிய போகம் அநுபவித்துக்கொண்டிருந்தான். திருடிய அன்னத்தில் ஒருபிடி அன்னம் ஈந்தவன் செய்த பாவமெல்லாம் நீங்கி இத்தகைய சிறப்போடு இருந்தான் என்றால் உரிமையுடனே அன்னதானஞ்செய்வோர் பலன் யாருரைப்பர்?

ஓ முனிவர்களே! அன்னமளித்த நீலவண்ணன் கதையை அறிந்தவாறு உரைத்தோம் இன்னம் அன்னதானம் புரிந்தோர் கதையில் அறிந்ததுரைக்கின்றேனென்று சொல்லுகின்றார்.

## ௬௯-வது, ஆனிவிழாவில் அன்னதான மகிமைச் சருக்கம்.

மானினல் விழியாள் பாகன் மருவிவாழ் நெல்லை தன்னில்
ஆனிநல் விழாவிற் றேரை யன்புடன் தரிசித் தோர்கள்
கூனிய கோரத் தந்தக் கூற்றுவ னுலகு செல்லார்
மோனிவாழ் கைலை சார்வர் முறையவ ரெமக்குக் கோவே.

இத்தலத்தில் வந்து நெல்லைநாதனைச் சிந்தித்துப் பூசித்து அமுதுதவினோர் சிவபெருமானின் உருப்பெற்று கைலையில்வாழ்வர். பண்டு நடந்ததோர்கதை சொல்லுகின்றேன் கேளுங்கள். சததிருதி என்றொரு சிவயோகி மறைவல்லோன் எம்பிரானையே தொழுவோன் அவன் புகழையேவிரிப்போன் நெல்லையில் ஆனித் திருவிழாத்தேர் தரிசிக்க விரும்பி முதல் நாளேவந்து முதல்வனை முன்புறவணங்கி அடுத்தநாள் சிந்து பூந்துறையினும்பொற்றாமரையினும் நீராடிக் கோயிலினுட்புகுந்து திருமூலலிங்கத்தையும் ஆதிலிங்கத்தையும் வடிவாளையும் அனவரததானநாயகரையும்மற்றையமூர்த்திகளையும் முறை முறை தரிசித்துத் தொழுது ஆலயத்தை வலம்வந்து பிறகு திருத்தேரில் அனவரததானநாயகரையுங் காந்திமதியம்மையையுந்தரிசித்து மிகுபசியால் வருந்தி மறையோர் வீதிவந்து சிவவேடம் விளங்கத்திருவோடு கையிற்றாங்கி நடம்புரிந்துகொண்டே குறுநகைதோன்ற யாவருங் காண ஆடுவார். ஐயன் புகழைப் பாடுவார். அன்னங்கொணரும்

என்பார். அப்பொழுது அநேகர் பால், கனி, கன்னல், தேன், அதிரசம், அமுது, பட்சணம் முதலியன அன்பாய் உச்சிவயோகிக் களித்தனர். சிலர் அறுசுவையோடு அமுதீந்தார்கள். இவர்க்கு அமுதிட்டோர், அடகுபாலாதிகளீந்தோரும் கண்டோரும்ஜெனனமெல்லாஞ் செய்தபாபம்நீங்கிக் கனகவிமானத்தேறி கைலை எய்தினர். தமது இங்குரவரைக்கொன்றோர், நிந்தித்தோர், களாவு முதலிய செய்த பாபியர்களும் இச்சிவயோகிக்கு அன்னமீந்து பவம் நீங்கி அரன்கயிலை அடைந்து வாழ்ந்தனர். மற்றும் தானஞ்செய்தோர் தேரைத் தரிசித்தோர், வடந்தொட்டோர், நீர், மோர், பானகம் ஈந்தோர், வீசினோர், விசிறிதந்தோர் இவர்களெல்லாமுங் கைலைசேர்ந்தனர். எமன் தன் உலகத்திற்கு ஒருவரும் வராமலும் தனக்கு வேலை இல்லாமலும் இருந்ததினால் சீறி வேணுவனத்தில் வந்து மால்பதம் பணிந்து தன் சூலபாசத்தையுங் கதையையும் வைத்து இந்தப்பதியில் ஆனித்திருவிழாத் தேர் தரிசித்தோரெல்லாங் கைலைக்குப் போயினர் எமபுரங்காலியாக இருக்கிறது. இனிச்சூலபாசத்தையுங் கதையையுந் தாங்கியிருப்பதாற் பயனென்ன என்றுகூறி வருத்தப்பட்டுக்கொண்டான். அதற்கு மால், கூற்றுவன் முகத்தை நோக்கி அறிவில்லோய் ஆதியில் நானும் பிரமனும் அகந்தையால் வாதிட்டுச்சோதியாய் நின்ற மறைச்சுடரை அடிமுடிகாண்போமென்று ஏனமும் எகினமுமாகி முயன்று காணமுடியாது உழன்றோம். பின் அவ்வுருவம் நீங்கி எம் உருவமெய்தாது நெல்லையில் வந்துதவஞ் செய்து அவ்வுருவம் நீங்கி எம் உருப்பெற்றோம். திருமலன் முன்நெல்லையைச் செங்கோல் செய்தபோது உயிர்கள் எமபுரஞ் செல்லாமல் உனக்கு முன் இருந்த ஒரு கூற்று வருந்த இந்த நெல்லையின் சிறப்புச்சொன்னோம். எம்மான் மார்க்கண்டனுக்காக ஒரு கூற்றுவனை யுதைத்துக்கொன்றார். பின்னும் நெல்லையில் பிங்கலவர்க்காக ஒரு கூற்றுவனையுதைத்தார். சுவேதற்கா நீ பட்ட உதையையுமறந்தனையோ ? தலவிசேடத்தாலும் பரமன் அம்பிகையோடு இந்தப் பூமியைத்தாங்குதலினாலும் திருவிழாத்தரிசிப்பதனாலுந் திருவிழாத் தேரில் நீர்மோர் அமுது முதலிய அளிப்பதனாலும் தம்பாவம் நீங்கிக் கயிலை சேர்வர். இவ

ளடியார்களை நாங்களே வணங்கவேண்டுமென்றால் நீ வணங்கி னால் தான் உயர்வை அடையவேண்டுமென்பதுஞ் சொல்லவேண் டுமோ? உருத்திரர் உன்னை உதைத்துக்கொன்று எங்கள் வேண் டுகோளுக்காக படைத்தபோது எம்மடியார்களை நீம்போற் கருதென்று கூறியதை மறந்தனையோ? ஆகையால் சிவனடியா ரைப்பூசிப்பாயாக என்றுகூறக் கூற்றுவன் ஞானம்பெற்று நன் றென மாலைப்போற்றி வணங்கி விடைபெற்றுத் தன்னூர்போய்ச் சேர்ந்தான் என்று சூதர்கூறி இனித்திருநீற்று மகிமை கூறுகி றோம் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௭௰வது, வீபூதிமகிமைச் சருக்கம்.

நீறணி பெம்மான் முன்னாள்நேர்வரு சனற்குச் சொன்ன
பேறருள் நீற்றை மெய்யிற் பிறங்குயர் முடியிற்பூசி
நாறரு வினையை வீட்டி நாயகன் கைலை மேவி
கூறணி பிறையான் றய்ய குஞ்சிதக் கழல்சேர் வோமே.

முக்கட்புண்ணியன் மால் பிரமாதி தேவர்கள் போற்றக்கயி லாயத்திலிருக்கும் போழ்து சனற்குமாரன் சிவபெருமானின் பங்கயப்பாதந் தொழுது போற்றி உலகத்தில் அரியதருமத்தை நான் அறியும்படி நீபுகன்றருள வேண்டு மென்ன அதற்குப் பூதி யே தூயதாந் தருமம், இதுவே இருவினையை நீக்கி முத்தியளிக் கவல்லது என்றார். அதுகேட்டு மகிழ்ந்து அதுஎன்ன எப்ப டித்தரிப்பது? எங்கே தரிப்பது? இவற்றை எமக்கு உரைத்தருள வேண்டுமென்று கேட்கச்சொல்லுகின்றார்.

எமக்கினியதிரு நீறுகற்பம், அனுகற்பம், உபகற்பம் என மூன்றாகும். அதனுள் சிறப்பித்துக் கூறுங் கற்பந்தனக்கு சிறப் புடைய பசுவின் வருக்கம் உரித்தாம், அதனை நீ அறியச்சொல் கின்றேன்கேள்ப்பாயாக. மலடு, வால், காது, கொம்பு முதலிய அ வையவக்குறையில்லாத, கிழம், பிணிமுதலிய கொள்ளாதசிறந்த அழகுகுணமுடைப்பசுக்கள் உவாக்கள் அட்டமி பன்னான்குதிதி ஆகிய இத்திதிகளில் இட்ட கோமயத்தை தரையில் வீழாது தா மரை இலையில் சாதமந்திரத்தாலேற்று மேற்செறிந்து துன்

னும் வழும்பை நீக்கித் தூய்தாக்கொணர்ந்து ஓரிடத்து வாமத்தால் அமைத்துப் பிசைந்து கையாற்புருடத்தினுருட்டி உடனே வெய்ய ஓமத்திற்பதடி யோடுவைத்து தீங்கில்லாத பாகங்கண்டீசானத்தெடுத்து தூய வத்திரத்தால் வடிகட்டிப் புதியகுடத்தில் அடைத்து சுத்தமான இடத்தில் காயத்திரிமொழிக்கு பூசைசெய்து பத்ரமாக வைத்தல் வேண்டும். அனுகற்பம் என்பது அன்று எடுத்த கோமயத்தை அன்றுருட்டி அகன்று சுடினும், சென்று உணக்கி அடினும் அனுகற்பம் என்ற பெயரால் விளம்புவர். சித்திரை மாதத்தில் வனத்தில் காய்ந்தகோமயத்தை எடுத்து இடித்துத்துகளாக்கிக்கோசலம் கலந்து உருட்டி முன்சொன்னமந்திரப்படி உண்டாக்குவர். இதுவும் அனுகற்பமென்றே சொல்லப்படும். இனிஉபகற்பமென்பது, வன்னிவனத்துற்று அவ்இயற்கையால் வெந்துள பொடியை ஐந்திற்பெய்து மந்தரமோதி முன்சொன்னபடி உருட்டி வைத்துத் தழலில்வைத்து எடுப்பர். வெண்மையாய் இருந்தால் புண்ணியமாம். மஞ்சளாக இருந்தால் வறுமைஉண்டாகும். நீலம் தீமையையும்பிணியையும் உண்டாக்கும். கருமை ஆயுள் நீக்கும். பன்னிரண்டங்குல உயரம் எட்டங்குல அகல முள்ள துணிமான்றோல், புலிஉரி, முதலியவற்றால் வாயகலமாக இருக்கும்படிதைத்து அதில் இட்டுவைக்க வேண்டும். வலக்கையிலுள்ள இடைமூன்று விரல்களால் பதினாறிடங்களில் நீறணியவேண்டும். நெற்றி, மார்பு, புயம் முதலிய இடங்களில் மூன்று விரலாலும் இடவேண்டும். காதில் உச்சியில் தொட்டால் போதும். அழுக்குப்படுதல் நடுவிரல்வீழாதிருத்தல், வளைந்திடப் பூசுதல், அதிக விலக்கமாகப் பூசுதல் ஒன்றோடொன்றுறப் பூசுதல் ஆகாது. தீட்சைபெற்றோர் மூன்றுவேளையும் நீரிட்டுப் பூசவேண்டும்.

மறையோர் பாதாந்தம் தூளாகவும் புனைவர். பூசைசெபதபம்மந்திரம் முதலியவற்றை நீறுபூசாது செய்திடிற்பயன் எய்தாவாம். நீற்றைப் பூமியிற் சிந்தில் அளவில்காலம் நரகெய்துவர். ஒருகையால் வாங்கினதும், விலைக்குவாங்கினதும், வெற்றிடத்திற்கண்டதும் ஆகாது தலையசைத்துக் கொண்டும் தலைகவிழ்ந்துகொண்டும் நடந்து கொண்டும் நீறுபூசினும் நன்மைபயக்கா

று நீமையேயபயக்கும் என்று சிவபெருமான் சொல்லியருளினுர். என்று சூதர் நைமிசாரணியவாசிகளுக்குச் சொல்லியருளி மே லும் இப்பொழுது அக்கமணியின் பெருமையைச் சொல்லுகின் றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ஏக-வது உருத்திராக்க மகிமைச் சருக்கம்.

திரிபுரம் வேவ மூரல் செய்திடு மீசன் கண்ணில்
பரிதர வந்த துள்ளி பார்மிசை யக்க மான
உரிதர வதனைப் பூண்போ ருமையொரு பாகன் வாழும்
தெரிதரு கைலை சார்வர் சிறியனேற் கவரேதெய்வம்

பொல்லாத திரிபுரத்தவுணர்க்கு அஞ்சி மாயன் நான்முகன் முதலோர் தவஞ்செய உமையோர்பாகன் சென்று ஆயிரம் ஆண் டு இமைக்காமல் இனிது பார்த்தான். அப்பொழுது முக்கண் ணினும் இருந்து நீர் புனிதமாகத் தனித்திடு துளிகள் வீழ்ந்து அந்தத்தலத்தில் வளந்தரு முருத்திராக்க மென்னும் நீண் மரங் களாய்வையம் உய்ய எழுந்தது. வெண்மைபொன்மை செம்மை கருமை எனு நிறங்களோடு விளங்கிற்று. அந்தணர்க்கு வெண்மை யும் அரசர்க்குப் பொன்மையும் வணிகர்க்குப் பொன்மையும் சூத்திரர்க்குக் கருமையும் ஏற்றதாம்.

ஒருமுகம் சிவனுருவாம் இதனை அணிந்தால் வேதியரைக் கொன்ற பாவம் நீங்கும். இரண்டு முகம் இறைவனோடு கூடிய இறைவி யுருவாம் இது கோக் கொலை முதலிய கொலைபாதகங் களை நீக்கும். மும்முகம் கனலி உருவாகும். பெண் கொ லைப்பாவம் நீக்கும் நான்குமுகம் அயனுருவமாம். இது அத் திகளைத் தீர்க்கும் ஐந்து முகம் உருத்திரன் வடிவாம், ஆறுமுகம் குமரக் கடவுள் வடிவாகும், இப்படியே மற்ற முகங்கள் எல்லாந் தேவவடிவமாய்த் துலங்கும்.

உருத்திராக்கம் அணிபவர் பெருமை அனந்தனாலுஞ் சொல்லி முடியாது நாய்க்கணிந்தாலும் நற்கதி பெறுமென்றால் நார்க்கணிந்தால் அவர் பெறும் நலம்பேசவும் வேண்டுமோ? எப் படி அந்தணர்க்குப் பூணூல் முக்கியம் இருத்தல் வேண்டுமோ அதுபோலச்சைவர்களுக்கு நீறுங்கண்டிகையும் அவசியம் இருத்

தல் வேண்டும் அக்கமணியைச் சிரத்திலுங் கண்டத்திலும் புயத்திலும்மார்பிலும் அணியவேண்டும்இவ்வுருத்திராக்கத்தைக் கண்ணால் நோக்கினாலும் வாயால் உச்சரித்தாலும் பயனும் என்று கூறிச்சூதமுனிவர் ஓ நைமிசாரணிய வாசிகளே பஞ்சாக்கர மகிமையையுஞ் சிறிது கூறுகின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௭௨வது, பஞ்சாக்கரமகிமைச் சருக்கம்.

அத்தனி னுருவே யான அஞ்செழுத் துண்மை விண்ணோர்
நித்தமு முயன்றுங் காணார் நினைந்துளத் தமைத்தோர் கைலை
வித்தகத் தலத்தின் மேவி விமலனு ருருவங் கொள்வர்
சித்தம துவந்து நெஞ்சே செப்புக வதனை நீயே!

திருவெழுத்தஞ்சும் எம் இறைவர் உருவாகும். இது எல்லாமந்திரங்களுக்கும் மேலானதாம் இவ்வைந்தெழுத்தை யோதிற் புண்ணியமுண்டாம். பாவம் போம். கைலை சார்வர். இவ்வைந்தெழுத்தின் உண்மை அறிந்து பெரியோர்கள் பிறவி நீங்கிப் பரப்பிர மந்தாமாவர். சிந்தனைக்கு மெட்டாச் சிவானந்தமாகுமாகும். இப்பஞ்சாட்சரத்தைப் பிரணவத்தோடு குருமுகமாக ஓதி உணர்ந்தாரானல் சோகவாரியில் அழுந்தாது சாரூபஞ் சார்வர். வேதம் ஆகமம் புராணங் கலைகள் எல்லாங் கூறுவது இவ்வஞ்செழுத்தின் பொருளும் பெருமையுமேயாம்.

இந்த அஞ்செழுத்தை அகத்திற் பதித்து அரனைப் பூசிப்போர் பிறவி நீங்கி கைலை வாழ் சிவனுருப்பெற்று வாழ்வர். இவரைக்கண்டோரும் இவர் நிழல்பட்ட தாவரமும் புனிதமாகும். சிவன் அருளிய இந்த மந்திரத்தை அந்தணர் பிரணவத்தோடும் அரசர் பிரணவத்தை நீக்கியும் வைசியர் சூத்திரர் சிகர முதல்மகர மீறாய் உச்சரிப்பதுவே உசிதமாகும். ஐந்தெழுத்தை ஓதுவோரைத் தேவதேவனே என்பதல்லால் மனிதரென்று மதிப்பது தீதாம். இந்த ஐந்தெழுத்தில ஒரெழுத்தின் பெருமையேனும் அயன் மாலும் அறிவதரிது.

திருநீறு அக்கமணிந்து ஐந்தெழுத்தோதி நெல்லையில் எம்

மான் கோயிலை வலஞ்செய்து எம்மானைத் தரிசிப்போர் சிவனுவர் சத்தியமே என்று சொல்லிச் சூதர் நைமிசாரணியவாசிகளை நோக்கி ஓ முனிவர்களே! பஞ்சாக்கிரம மகிமையையும் மிகச்சுருக்கிச் சொன்னேன் இனிச் சிவபூசை மகிமையையுஞ் சுருக்கிக் கூறுகின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௭௩-வது சிவபூசை மகிமைச் சருக்கம்.

விரிபல வுலகத் தெல்லாம் விளம்பிடுந் தேவ தேவன்
நரிபரி யாகச் செய்த நாதனே என்ப ரன்னோன்
தெரிவரும் பாதப் பூசை செய்பவர் மலர்த்தாள் என்றன்
கரிசுடை மனத்து மாசைக் கழற்றுமோர் மருந்தா மம்மா.

தேவர்களுக்கெல்லாந் தேவனாக விளங்குபவன் சிவபெருமானே, அப்பெருமானுக்குச் செய்யும் பணிவிடைகளிலெல்லாஞ் சிறந்தது அர்ச்சனையாம். அவ்வாறு செய்வோர் அரசராகி இன்பவீட்டையடைவர். சிவபூசை எவர்களுக்கும் நித்தியகருமமாக இருக்கவேண்டும். இவ்வாறு செய்வோர் அண்டகோடிகளுக்கெல்லாம் அதிபராய் இனிது வாழ்வர். மால் சிவபூசை செய்தே சிவபெருமான் அருளால் உலகத்தைக் காக்கின்றான். திருமகளைத் தனக்கு மனைவியாகப்பெற்றான். பிரமனும் சிவபூசையினாலேயே அவனருள் பெற்று உலகத்தைக்காக்கின்றான் கலை மகளையும் மனைவியாகப் பெற்றான்.

இந்திரன், குபேரன், எமன், வாயு, அக்கினி வருணன் முதலிய தேவர்களெல்லாஞ் சிவபெருமானைப் பூசித்தே இப்பொழுது இருக்கும் பெரும்பதவி பெற்றனர். சூரியன், சந்திரன் முதலியோர்கள் சிவபூசை செய்தலல்லவோ உலகுக்கெல்லாம் ஒளி செய்கின்றார்கள். திருமகளும் வாணியுஞ் சிவபூசை செய்தே முறையே செல்வத்திற்குங் கல்விக்குந்தலைவியரானார்கள். வசிட்டர், வியாசர், அகத்தியர் முதலிய முனிவர்களுஞ் சிவபெருமானைப் பூசித்ததனாலல்லவா பெருஞ் சிறப்புற்றிருக்கின்றார்கள். மனு அரிச்சந்திரன், நளன், ராமன் முதலிய சூரியகுலத்து அரசர்களும் யயாதி தருமன் முதலிய சந்திர

குலத்தரசர்களும் மற்றையோருஞ் சிவபூசையாலே சிறப்புற்றிருக்கின்றனர். சிவனருளில்லாவிடத்து உலகத்து ஒருவரும் உயர்வை அடையமுடியாது.

தயவு, சற்குணம், வனப்பு, சத்தியம், தியாகம், சூரம், கீர்த்தி, யோகம், இன்பம், நற்கருமம், வெற்றி, பெருமை இவைகள் எல்லாஞ் சேரவிரும்புவோர் சிவபெருமானைப் பூசித்தால் மிக எளிதில் பெறுவர். திரிபுரத்தைச் செற்றவன் அல்லாமல் வேறு பொருளில்லை. ஆகையால் எவரும் ஈசனைப் போற்றுதலே கடனும். எப்பொழுதுஞ் சிவபெருமானைத் தரிசிப்பது மிகமிக உசிதமாகும். முப்பொழுது தரிசித்தல் பூசித்தல் உசிதமாகும், இல்லாவிட்டால் ஒரு நாளைக்கு ஒருமுறையாகிலுந் தரிசித்தல் பூசித்தல் வேண்டும் அவ்வாறு செய்யாவிட்டால் அந்த நாள் வீணுளேயாகும். நெல்வேலியில் கங்கை முடி புனைந்தவனை அருச்சனை புரிந்தால் பிணியண்டா, மிருகம் பேய் அரவு, இடி இவற்றிற் கஞ்சார் உலகங்கட் கெல்லாந்தலைமை பெற்று கைலையில் கணங்கள் தொழ வீற்றிருப்பர். கூன், குருடு முதலிய அங்க ஈனமும் வறுமையும் பெற்றிருப்போர் எம்பெருமானைச் சிந்தித்துப் பூசியாதவரே. சிவபூசை செய்யாது உண்டால் உண்ட அது புழுவாகும். சிவபூசை செய்யாதவரைக் கண்டாலுங் கண்டவர்க்குப் பாவம் வந்தடையுமென்றால் வேறு என்ன சொல்வேன். கொலைமறவோர் பாதகர் ஆகிய இவர்கள் சிவபூசனை செய்யும் அடியார்க்கு அடிமையாகில் நரகவாதனை நீங்கிப் பொன்னுலகில் இந்திரபதம் பெற்றிருப்பர். இதற்கு ஒரு கதையுண்டு சோழநாட்டிலே சூரியபுரத்திலே ஒரு வேதியன் ஒழுக்கங் கடந்து மதுமாமிசமுண்டு காமாந்தகனாய் புலைச்சியரையுமருவி வாழ்ந்தான். இதுகண்டு அவன் சுற்றத்தார் அவனை வெறுத்துத் துரத்திவிட்டனர். இவன் அவ்விடம் விட்டு நீங்கித் தன்னைப் போலவே தீயொழுக்கமுடைய வேறு கீழ்க்குலப் பெண்ணோடு கூடி ஊர் ஊராய்த்திரிந்து புண்ணிய வசத்தால் நெல்லைக்கு வந்தான். அங்கே திருவிழாச் சமய மாதலால் அங்குவந்த சிவயோகியாகிய சம்புசித்தனைக் கண்டான்.

பின் சிலநாள் சென்று அவர்கள் இருவர்க்குங் காலமுடிவு வந்து இறந்தபோது எமபடர்கள் வந்து துன்பப்படுத்த வந்தனர். உடனே சிவகணங்கள் அவர்களைப்போர்செய்து துரத்திவிட்டுத் தாங்கள் கொண்டுவந்த விமானத்திலேற்றிக்கொண்டு கைலைக்குச் சென்றனர். பாருங்கள் நைமிசாரணியவாசிகளே! சிவயோகியைக்கண்ட பாவிக்கும் பரமன் கைலை கிட்டிற்று ஆகையால், சிவபூசையினுஞ் சிறந்த தொன்றுமில்லை. எல்லாவற்றிலும் நெல்லை மூலலிங்கத்தையும் வடிவாளையுந் தரிசிப்பின் தாமே லிங்கத்தை வைத்துப் பலகோடி வருடம் பூசைசெய்யும் பேறு பெறுவர் என்று கூறினர். நைமிசாரணியவாசிகள் கேட்டு ஆநந்தங்கொண்டு பிரதோட மகிமையை விரித்துரையுமென்று கேட்கச் சூதமகாமுனிவர் மகிழ்ந்து கூறுவாராயினர்.

## எசு-வது, பிரதோடமகிமைச் சருக்கம்

கரியமால் முதலோ ரெல்லாங் கடைவரு காலத் தின்றித்
தெரிதரு நீரு மாய்வர் சிவமெனும் பொருளே நின்று
வரிநெடுங் கண்ணாள் காண வளர்திரு நடனஞ் செய்யும்
பெரிதது பிரதோ டம்மாம் பேசதைச் சிந்தித் துய்வாம்.

பூரணனாகிய எம்பெருமானின் பாதங்களைப்போற்றிச் சூதமுனிவர் பிரதோட மகிமையைச் சொல்லுகின்றார்.

ஆதியுகங்கள் நான்காம், இவை யிரண்டாயிரங்கூடினால் பிரமனுக்கு ஒருநாளாகும் இந்த நாள் முப்பது கூடப்பிரமனுக்கு ஒரு மாதமாகும். இந்த மாதம் பன்னிரண்டு கொண்டது ஒரு வருடமாகும். இந்தவிதமாக நூறுவருடஞ் சென்றால் அயனுக்கு ஆயுள்மாயும். மாலுக்கு, அயன் ஆயுள் ஒரு நாளாகும். மாலும் தனக்கு நூறு வயதாகும் மட்டும் இருப்பன். அவன் உயிர் நீங்கும்போது அண்டங்களும் உயிர்களும் மற்றைய எல்லாமும் அழியும். ஒன்றும் இராது அந்நாள் எங்கோன் நெற்றிக்கண்ணழல்எரிக்கநீறும்,எங்குஞ்சுடலையாகி அமலமாய்த்தோன்றும். தேவிகண்டு களிக்க நின்று எம் ஐயன் திருநடனம் புரிவன், அத்தினந்திரியோதசியாகும் அன்று இரவிலே

மன்னுயிர்களுக்கெல்லாம் தோடங்கள் தீர்ந்ததாலே அது மேலான புண்யகாலமென்று அத்தனுர் மகிழ்ந்துகூறினர், ஆதலால் மாதந்தோறும் பக்கந்தோறும் பதின்மூன்றுநாள் வரும்போது போம்போது முன்பின்னுள்ள மேதருகாலம் பிரதோடகாலமாகும்.

இந்தப்பிரதோடகாலத்தில் யாவர்களேனும் ஈசன் பொன்னடிபணிந்து போற்றிப்பூசைசெய்தருச்சிப்பின் முடிவிலாச்செல்வம்பெற்று கதிவிடெய்திப்பேரின்பம்எய்துவர். இறைவனைத்தினந்தினம் மூன்றுகாலமும்போய்த் தரிசித்துப்பூசித்தபயனை எய்துவர். பிரதோடகாலத்தில் எம்பிரானை அல்லது வேறுதேவரைத் தொழுவோர் நரகம் புகுவர். பிரதோடம் நீங்கினபின்சிவபெருமான் பலஅண்டகோடிகளையும் படைத்து சகலசீவன்களுக்கும் அருள்செய்யத் தேவர் முனிவர் மற்றையோரெல்லாங் கண்டு துதிக்கத்திருநடனஞ் செய்தருளினர். அப்பொழுது மால் அயன் முதலியோர் போற்றிப் பிரதோடகாலத்தில் பூசிப்போர்க்கு முத்தியருள வேண்டு மென வேண்டிக் கேட்க அவ்வாறே எம்பெருமான் வரமளித்திருக்கின்றர். சனிப்பிரதோடத்தில் இல்லில்லிங்கப்பிரதிட்டைசெய்து தரையை மெழுகிநற்கோலமிட்டு அலங்காரங்களெல்லாஞ் செய்து வடமுகமாயிருந்து பூசை அர்ச்சனை முதலிய முறைப்படி செய்யவேண்டும். இது செய்யமுடியாதவர் ஆலயஞ்சென்று தொழவேண்டும். தூயவிடைபின்னின்று சோம சூத்திரம் வரைக்குங் காயம் அசையாமல் இருகை கட்டித்துதித்துக்கொண்டு வலமாக வந்தால் ஒரு பிரதட்சணம் அனேக பிரதட்சணப்பலனைக் கொடுக்கும். இரண்டுலிங்கம் அமர்ந்திருக்கும் ஆலயத்தில் பேதமாமிடம் வலம்பிரதக்கணமாகாது.

நோய், தரித்திரம், அகாலமரணம் பேய், பில்லி, சூனியம் பித்துமுதல் உற்றிடுசெஞ்சிதத்தைஒழித்து மணமலிபாக்கியம்நல்மகப்பேறு முதலியவற்றைப் பெறவிரும் புவோர் நீறணிந்து அக்கமணி பூண்டு ஐந்தெழுத்தை நெஞ்சுறநினைத்துப் போற்றிக் கோயிலை வலம்வந்து அரனைத்தரிசித்திடவேண்டும் பிரதோடகாலத்தின் பெருமையைத்தருமதேவதை அல்லாமல் வேறியார்

அறியவல்லார். பிரதோடப்பெருமையைக்கேட்கும் உத்தமரே சிவனடியைப்பெறுவர் என்று சூதமுனிவர் நைமிசாரணியவாசிகளுக்குக் கூறினர். அவர்களும் அகமகிழ்ந்து கேட்டுப் பந்தவினைப்பவந்தொலைக்குங் கதைகளின்னம் பகர்ந்தருள வேண்டுமென்று வேண்டினார்கள். புட்பார்ச்சனையின் பெருமையை வியாதர் எனக்குச்சொல்லினர் அதை நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன் கேளுங்களெனச்சொல்லுகின்றார்.



## எரு-வது, புட்பாற்சனைமகிமைச் சருக்கம்.

இத்தரை யுய்ய வென்றே இனியநெல் வேலி தன்னில்
முத்தென வரையிற் றோன்றும் முகிழ்முலைப் பாகன் றோளில்
சித்தம துவக்கப் பூவின் திகழ்தொடை யணிவோர் தம்மை
நித்தமுந் துதிப்ப தொன்றே நிகழொரு வேலை யற்கே.

நெல்வேலி நாதனுக்குப் பன்மலர் கொண்டு பூசிப்போர் பூமியிற்பாக்கியங்களெல்லாம் பெற்று அனுபவித்துப்பின் வீடு பெறுவர்.

பாதிரி, கொன்றை, வில்வம், பஞ்சவில்வம், எருக்கு, ஆத்தி, சூதம், சூரியகாந்தம், மத்தம், சுரபுன்னை, சாதிப்பூ, சண்பகப்பூ, சந்தனப்பூ, தும்பைப்பூ, மந்தாரை, நெய்தல், வாகை வன்னி, நாயுருவி, நெல்லி, கோங்கம், இலந்தை, எலுமிச்சை அறுகு, காரகில், தேவதாரம், நந்தியாவர்த்தம், மகிழ், முல்லை கத்தரி, கடம்பு, வாழை, தாழை, நவ்வல், காந்தம் தாமரை, தெற்பை, சாலியிலை, மல்லிகை, மருக்கொழுந்து, வெட்டிவேர், குங்குமப்பூ, மலர்வழி, கையாந்தகரை, துளசி, முதலிய மலர்தளிர் வேர்களை அன்பொடு எம்மானுக்கருச்சித்தால் பிறவித்துயர் நீங்கிப் பேரின் பஞ்சேர்வர்.

இவைகளெல்லாஞ் சிவபெருமானுக்காகு மென்றாலும் கொன்றை, வில்வமாலிகை, பஞ்சவில்வம் வெள்ளெருக்கு, ஊமத்தை, வன்னி, அறுகு, ஆத்தி. பாதிரி, வெண்தும்பை இவற்றைச் சூட்டின் இறைவர்க்கு அதிவிருப்பாகும். கடம்பு, சந்

தனம் மருக்கொழுந்து, சண்பகம், குங்குமப்பூ செங்கழுநீர், முல்லை, முதலியபுட்பங்களில் தேவி எனதன்னைக்கு விருப்பமாகும்.

மாயனுக்கு மகிழ், துளவு, நெல்லி இவைவிருப்பாகும். கணபதிக்கு அறுகு, கொன்றை, கத்தரிவிருப்பமாகும். குமரவேளுக்குக் கடம்பு, வெட்சி வாழைப்பூ விருப்பமாகும் சிவபெருமான் தாழை அணியார். மாலுக்கு வில்வம் இல்லை.

விநாயகர்துளவம் அணிந்திடார். இந்தவிதமாக விருப்புள்ளது இதுஎன்று தெரிந்து அர்ச்சிப்போர் பெறும்பேறு எவரே எடுத்து உரைக்கக கூடும் நெல்வேலியில் நந்தவனம் வைப்போர்களும் நந்தவனம் வைப்பதற்குப் பொருள் உதவி செய்வோரும் நந்தவனத்திற்கு நீரெடுத்து விடுவோரும் நறுமலர் மரங்கள் வைப்போரும் நாயகன்கையிலை கூடிவாழ்வர், வேணு நாயகற்கு பொன்னாலும் வெள்ளியாலும் வில்வம் கொன்றைமாலை முதலியனசெய்தணிவோரும், நவமணிமாலை அணிவோரும் பத்திப்பாமாலை அணிவோரும் அருங்கையிலை தன்னில் சிவனுருப்பெற்று அனேககாலங் கோடிகோடி கணங்களுக்குத்தலைவராக வாழ்வர். என்று கூறி ஓ முனிவர்களே! புட்பார்ச்சனை மகிமைசொன்னோம் இனி எங்கோனுக்குவந்த ருத்ராபிடேகமகிமை சொல்கின்றேன் கேளுங்களெனமுனிவர் மகிழ்ந்து கேட்கச்சொல்லுகின்றார்.

---

## எசு-வது, உருத்திராபிடேக மகிமைச் சருக்கம்.

---

கருணையங் கத்தர் தன்பாங் கருதநல் லபிடே கங்கள்
பெருமையாய்ச் செய்து தேனு பிறங்கிய வரங்கள் பெற்று
திருவுடன் பொலிந்த தன்மை செப்பியவென் நெஞ்சே காண்டி
மருவிடு மதனை நீயும் மதித்தினி துணுற்று வாயே.

திரிபுரத்தைப் புன்னகை யாற் காய்ந்த பெருமானுக்கு எவரேனும் உருத்திராபிடேகம் விரும்பிச் செய்வோர் வினை நீங்கிப் பரகதி அடைவர். இவ்வபிடேகத்தை ஆலயங்களில மாதம் ஒருதரம் புரிந்தால் உலகத்தில் வளங்கள் மீறும். நீதியுண்டாகும். மகப் பெறுவர். நிதி சேரும். புகழ் சேரும், பஞ்சமு

நீங்கும். இதைச் செய் வித்தோர்க்குப் பெறுதற்கரிய பெரும் பேறெலாம் வந்துசேரும்

இந்த அபிடேகஞ் செய்வதற்கு வேண்டுந் திரவியங்கள் வெண்ணெ, கந்தாறு நெய், தயிர், பால், இளநீர், தேன், முதலியனவே. திரு மேனிகுளிரும்படி மஞ்சன மாட்டிப் பட்டும் அணிகளுஞ் சிறப்பாய்ச் சாத்தி மலர் மாலைகள் புனையவேண்டும். இது போலவே அம்மைக்குஞ் செய்ய வேண்டும். சாம்பிராணி முதலிய தூபங்களுந் தீபங்களுங் காட்டி உருத்திர ஜெபம் முதலியன செய்து நைவேத்திய மிட்டுத் துதித்துப் போற்றல் வேண்டும். அந்தணர் ஆயிரம் பேருக்கு அன்புடனே அறுசுவை யுண்டி கொடுத்துண்பித்துக் கோதானம் பூதானஞ் சொர்ணதானம் முதலியன செய்ய வேண்டும்.

இந்த மகா அபிடேகத்தை நெல்லையில் வாழும் எம்பிரானுக்கும் வடிவுடைய நாயகிக்கும் விநாயகர் சுப்பிரமணியர் முதலிய தேவர்களுக்குஞ் செய்வோர் பவநீங்கி முத்தி பெறுவர் இந்த விதமாக மால் அயன் முதலிய தேவர்கள் எம் பெருமானுக்கு அபிடேகஞ் செய்து பெறுதற்கரிய மேலான வரங்கள் பெற்றிருக்கின்றார்கள். தேனு முன்னொர் காலஞ் சிந்து பூந்துறையில் நீராடிப் பின் சந்நிதி முன்புள்ள பொற்றாமரை நீராடி நூறுவருஷந் தவஞ் செய்ய எம்பெருமான் கோடி சூரியப் பிரகாசமாகக் காட்சி கொடுத் தருளினார் அப்பொழுது தேனு போற்றித் துதித்து தருமதேவதை தனக்கு, மகவாகப் பிறக்கவும் அரனுக்கு அது விடையாக இருக்கவும் மறை வேள்வி கோடி செய்தபலன் தன்பால் வரவும் மகிழ்ந் தெவருங் கேட்டவை எல்லாம் அளித்திடு சக்தியும் வடிவுடை நாயகிக்கு இருளைப் பெண்ணாக இருக்கவும், தன்பால் விரும்பி அபிடேகஞ் செய்து கொள்ளவும், சிவன் முதல் எல்லாத் தேவர்களும் தன்னிடத்து வசிக்கவும், இன்னும் பலபல வரங்களும் பெற்றுச் சுகமுற்றும்பர் நாட்டில் வாழ்கின்றது. எவரேனும் நெல்லை நாதனுக்குப் பாலபிடேகஞ் செய்தால் பால் சூழ்ந்து பரவிய நிலத்துள்ள மண்ணின் ஒரு துளிக்கு ஒரு கோடி யுகமாகக் கைலையில் இன்புற்று வாழ்வார்.

தருமதேவன் கிரேதாயுகத்தில் நெல்லை நாதனுக்கு விதிப்படி அபிடேகஞ் செய்து பூசித்துப் போற்றி அநேக பிரலரும் மேன்மைப் பெருவரங்க ளெல்லாம் பெற்றுள். ஆகையால் முனிவர்களே! நெல்லையில் திருமூல நாதருக்கும் ஆதிலிங்கத்திற்கும் வடிவுடைத் தாய்க்கும் இவ்வருமை யபிஷேகஞ் செய்வோர். உலக இன்பமெல்லாம் பெற்று ஈற்றில் எம்பிரான் வாழுங் கைலையில் நீண்டகாலம் வாழ்ந்து இன்புற்றிருப்பர் என்று கூற, நைமிசாரணிய வாசிகள் மகிழ்ந்து இன்னுஞ் சிறந்த சிவகதைகள் சொல்ல வேண்டுமென்று வேண்டச் சொல்லுகின்றார்

## எஎ-வது, சிவபுண்ணிய மகிமைச் சருக்கம்.

கூற்றினை யுதைத்த கோமான் கோயிலைச் சமைத்த பேர்கள்
ஆற்றலி னளவில் காலம் அரசராய் வாழ்ந்து பின்னர்
சாற்றிடு கைலை சார்வர் சாற்றுமவ் வண்ண மென்றோ
போற்றிடு மடியேன் பூண்டு பொருந்துநாள் தரணிக் கண்ணே

சிவபுண்ணிய மாவது புனிதர்க்கு இனியதாகும் நல்வேள்விகள் இயற்றுதல்முதலியனவாகும். இதனைச்செய்வோர்க்குதேவர்கள் போற்றும் படியான அம்புவி ஆட்சியை நல்கும் மெய்ஞான வீட்டின் பமுந்தரும் சிவ புண்ணிய மகிமையைப் பற்றி சிவ பெருமான் ஆதிநாள் பார்வதிக்குச் சொல்லியிருக்கின்றார், அதைச் சுருக்கிச் சொல்லுகிறேன் கேளுங்களெனச் சூதர் சொல் கின்றார். மண்ணால் இலைபால் சருகால் புல்லால் சங்கரன் கோயில் செய்தால் அவர்கள் பூமியில் அரசராகி பின்கைலை சார்ந்து வாழ்வார். பசிய பட்டால் படங்களால் பரமற்கு ஆலயம் இயற்றுவோரும் குபேரன் போல் வாழ்ந்து ஈற்றில் கைலை சார்வர். சுட்ட செங்கல்லாலுஞ் சுண்ணும்பாலுங் கட்டடங் கட்டினோரும் கட்டத்தூண்டினோரும் உதவி செய்தோரும் நினைத்தோரும் பூமியில் புகழ்பெற்றுச் செல்வத்தோடு வாழ்ந்து கைலை மருவி வாழ்வர். கைலை மந்தரம் இமகிரி, கந்தவேதண்டம் மேரு இவ்விடங்களில் கோயில் கட்டுவோர்க்குப் பரகதி

நிட்சயம்! நிட்சயம்! நான்கு, எட்டு, பதினறு, நூறு, ஆயிரம் எனக்கால் களமைத்து மண்டபங்கட்டி ஈசனைத் தாபித்துச்சிறப்புடன் கட்டளை முதலிய செய்கின்றவர் பூமியில் பேரரசாக வாழ்பது வினை நீங்கி ஈற்றில் கைலை மருவி வாழ்வார். ஆலயங்களும் திருவீதிகளும் கொடிமரம், மடைப்பள்ளி மற்றுமுள்ள உறுப்புகள் ஆகிய இவைகளை இயற்றினேரும் பரகதி எய்துவர். வாகனம், ஆபரணம் திருப்பணித் தளவாடங்கள் முதலிய ஆலயங்களுக்கு வாங்கி வைப்போரும் பழயவற்றைப் புதுக்கு வோருங் கோயிலை அலங்கரிப் போரும், சுத்தஞ் செய்வோரும் திரு அலகிடு வோரும், மெழுகுவோரும் கோலமிடுவோரும், உலக இன்பங்களை எல்லாம் பெற்று நெடுங்காலம் இன்போடு வாழ்ந்து கடைசியில் கைலை மருவி வாழ்வர்.

ஆலயத்தை இடிப்போர் கட்டுவோரைத் தடுப்போர். ஆலயத்தை அசுசிப்படுத்துவோர் அழிவுதரும் அழல்நரகில் நெடுங்காலங் கிடந்து துன்பப்படுவர். எத்தலத்திலும் செய்கின்ற சிவபுண்ணியத்திலும் நெல்லையில் செய்யுஞ் சிவபுண்ணியம் ஒன்றுக்கு ஆயிரமாகப் பெருகிப் பேறுதரும். ஆலயத் திருப்பணியைப் பார்த்தோர், புகழ்ந்தோர் இவர்களுமே அழிவில்லாப்பதம் பெறுவரென்றால் ஆலயஞ் சமைத்தோரின் பெருமையைக் கூறவேண்டுமோ? எம்பெருமான் நெல்லை நாதனுக்குச் சிந்துபூந்துறையினது நீர் கொண்டு ஆட்டுவோர்க்குப பலகோடி வேள்வி இயற்றினேர்க்கு எய்தும் பலன் எய்தும் எண்ணை முக்கண்ணூர்க்கு ஆட்டில் அதிலும் அதைவிடப் பதின்மடங்கு பலனுண்டு. பசு, காராம்பசு, கபிலை முதலியவற்றின் நெய் ஆட்டுவோருக்கு ஒன்றுக்கொறதிகமான பலன் பெருகும். பஞ்சகவ்வியம் பால்பஞ்சாமிர்தங் கருப்பஞ்சாறு இளநீர் முதலியவற்றல் நீராட்டின் மேலான பேறுகள் எல்லாங் கிடைக்கும். சந்தனுதித்தயிலத்திறல் அபிடேகஞ் செய்தால் அவர் பெறும்பேறு ஈராயிரம் நாவுடைய ஆதிசேடனுலுஞ் சொல்லமுடியாது. இது எதனுல் விசேடமானதென்றுல், ஆயனுல் வெட்டுண்ட வேய்வனநாதர் வடுவைக்கண்ட முழுதுகண்டராமன் கலங்கியபோது சிவபெருமான்றேன்றி,

சந்தனாதித் தயிலத்தால் நம்மை நீராட்டுக என்றனர். இதனை எமக்கு ஆட்டும் எவரும் குலத்தொடுங் குழுவோடும் இன்பமெல்லாந் துய்ப்பர் என்றனர். ஆகையால் இது மிகச் சிறப்புடையது என்றான். இன்னுங் கேளும் நைமிசாரணிய ரிஷிகளே! சூரிய நாராயணன் என்றொரு வேதியன் எம்பெருமானுக்கு ஒருநாள் சந்தனாதித் தயிலம் ஆட்டாததினால் நரகில் எமதூதர்கள் வருத்த வருந்தினான். பத்தியோடு ஆவுடை நாயகிக்கும் சந்தனாதித்தயிலம் ஆட்டினால் ஞானம் பெறுவர்.

மாலாதி தேவர்கள் இந்தச் சந்தனாதித் தயிலத்தால் எம் நெல்வேலி நாதனையாட்டிப் பெருமான் பேரருள் செய்யப் பெற்றுப்போயினர். எம்பெருமானுக்கு யானை, குதிரை, ரிஷபம், பசு முதலிய விட்டுவைப்போர் இந்திரன் முதலியோர் தொழு மேலான பதம் பெறுவர். எம்பெருமான் கோயிற் பொருளைத் திருடுவோர் திருடவினைப்போர் குலத்தொடு நாசமெய்தி நரகில் நெடுநாள் துன்புறுவர். திருநெல்வேலியில் வந்து மடம் நந்தவனம் சத்திரஞ் சோலை குளம் நீர்ப்பந்தல் முதலியவற்றை வைப்போரும் அன்னம், ஆடை முதலிய அளிப்போரும் ஊழூழி காலங் கைலை மருவி இன்புற்று வாழ்வர். முன்னாள் ஓர் கற்பத்தில் உலகெலாம் நீர்மூட மாலும் பிரமனுந் தாங்கள் தாங்களே கத்தனென அகங்காரங்கொண்டு சிருட்டி திதியையும் மறந்தார். அப்பொழுது கருணையினால் அவர்களுக்கு அருள் செய்யுமாறு பதினாயிரயோசனை தூரப்பரப்பு வித்தீரணமாய்த் திருமூலலிங்கம் எழுந்து ஓங்கியது. அதுகண்டு அதிசயித்து மாலும் பிரமனும் அடிமுடிகாண்போமென ஏனமும் எகினமுமாய் உருவெடுத்து முயன்றுங் காணாது நெல்லைத்திருமூலலிங்கத்திடத்து வந்து அடி தொழுது போற்றி எங்கள் அகந்தை தீரவளர்ந்த பெருமனே! எமக்கருள் செய்யவேண்டுமென்று வேண்ட அதற்கிரங்கிப் பின்னுநானும் மகாலிங்கந்தன்னின் நாப்பண் இலிங்கவடிவாய் சாணளவு உயர்ந்தான்.

அந்தலிங்கம் பொன், வெள்ளி, படிகம், முத்து முதலியவுருவமல்ல, அது அனக வொளியின் மயமாக இருந்தது. அப்படித் தோன்றிய பெருமான் அவர்களை நோக்கி உலகம் யாவையுங் கா

ட்டிமறைக்குங்காரணமாம். இடதுபுறத்துமாலும் வலப்புறத்தில் அயனும் தருமதேவதை நெஞ்சிலும் வேதங்கள் உச்சியிலும் விகும். மற்றைப்பூதங்களுக்கும் இருப்பிடமாகும். இது ஆகாசலிங்கம். இதுபோல் நீங்கள் வேறுலிங்கம் உண்டாக்கிப் பூசை செய்யுங்கள் என்று சொல்லி எம்மான் மறைந்தருளினர். அது போலவே மால் அயன் முதலியோர் தாம் தாம் தனித்தனிலிங்கம் ஏற்படுத்திச் சிவபூசை செய்து தம்மிட்ட காமியம் பெற்று உய்ந்தனர்.

பிரமன் கொண்ட காலிங்கத்தையும், இந்திரன் மரகதலிங்கத்தையும், குபேரன் பொன்லிங்கத்தையும், வருணன் படிகலிங்கத்தையும், விசுவதேவதைகள் வெள்ளிலிங்கத்தையும், வாயுபித்தளை லிங்கத்தையும், மால் இந்திர நீலலிங்கத்தையும் அட்டவசுக்கள் வெங்கலலிங்கத்தையும், அசுலதேவர்கள் பார்த்திபலிங்கத்தையும் அக்கினிதானன்ன லிங்கத்தையும், சூரியன் செம்பிலிங்கத்தையும், சந்திரன் முத்து லிங்கத்தையும், நாகராசன் பவளலிங்கத்தையும், வித்தியர் திரிலோகலிங்கத்தையும், அசுரர்கள் உருக்குலிங்கத்தையும், சப்தமாதாக்கள் பஞ்சலோக லிங்கத்தையும், பூதம்பாசாசு ஈயலிங்கத்தையும், துத்தநாக லிங்கத்தையும், முறையே பூசித்து உயர்வுபெற்றனர். மண்ணாலும் பூமியாலும் மரத்தாலும் லிங்கஞ் சமைத்துப் பூசித்தாலும் வெகுகோடி வருஷம் புனிதன் உலகில் வாழுவர். சிறுவர் விளையாட்டிற்காகப் புழுதியினை லிங்கமாகப் பிடித்துப் பூசைசெய்து விளையாடினும் கைலையில் குலத்தொடுங்களிப் பொடு நெடுநாள் வாழ்வர். இதுதான் சிவபூசை மகத்துவமென்று சூதர் சொல்ல மகிழ்ந்து சிவபெருமானை நினைந்து துதித்து இன்னும் சிவகதைகள் கூறுமென்று முனிவர்கள் சூதரைக்கேட்டனர்.



## ௭௮-வது, தீபச் சருக்கம்.

அத்தனார் கோயிற் றீபம் பிறங்கவே தூண்டி யாகு
நித்தமா வலிவேந் தான நிலைபுகழ் போற்றி போற்றி
ஒத்தவா மனனின் வீறை யொடுக்கியே யவன்றோல் வாங்கி
சுத்தமாண் மேனி தாங்குஞ் சுந்தரன் றாள்கள் போற்றி.

அகமகிழ்ந்து கேட்ட முனிவர்களுக்குச் சூதமுனிவர் சிவபெருமானின் மலரடியை நெஞ்சினுள் நினைந்து நெய்விளக்கேற்றுந் தீபக்கதையைச் சொல்லுகின்றார். நவமணிகளாலும், பொன்வெள்ளி வெங்கலத்தாலுந் தூய திருவிளக்குண்டாக்கி நறுநெய் வார்த்து வெள்ளிய திரிபோட்டுத் தீபமேற்றி ஆதிலிங்கம் மூலலிங்கம் அனவரத தானர் வடிவம்மை முன் ஏற்றுவோர் கண்ணுதல் உருவம் பெற்றுக் கைலையில் வாழ்வர். கருங்கல்லால் மட்கலத்தால் விளக்கு ஏற்றினால் இரசத வெற்பு அடைகுவர். எந்திர சக்கர விளக்கு, தேர் விளக்கு, தோரணவிளக்கு, பிரபை விளக்கு, தூக்குவிளக்கு முதலிய விளக்குகள் ஏற்றுவோர் முத்தாய்ச் சிவலோகஞ் சேர்வர். நறுநெய்யில்லா விட்டாலும் எள்தயிலத்தாலும் விளக்கு வைப்போர் கைலை சேர்வர். பரமன் ஆலயத்தில் ஒருதுளி நெய் எள்தயிலம் முதலியவற்றை நினைத்து விளக் கேற்றுவோர் சிவனையாவர்.

பெரும்பாதகரானாலும் நெல்லை நாயகன் சிகரக்கோயில் தீபத்தைத் தரிசித்தால் பவம் நீங்கி முத்திபெறுவர். நெய், தயிலம் இல்லாது வேறு எந்தத் தயிலத்தா லாகிலும் விளக்கேற்றினவரும், தகழி ஈந்தவரும், திரியிட்டவரும், தூண்டி விட்டோரும், எண்ணைவாரென்றவரும் விளக்கிடு வோர்க்கு அன்னம் பொன் அளிப்போரும் புவிபுரக்கும் அரசராவர்.

பிரதோடம், சிவநிசி முதலிய விசேட தினங்களில் திருவிளக்கிடுவோர் பார்முழுதுங் காக்கும் அரசாகிப்பின் முத்தி எய்துவர். திருவிழாக்களில் தீவட்டிகளையும் பலவகை விசித்திரத் தீவட்டிகளையும் ஏந்திச் செல்வோர் பேரின்ப வாழ்க்கையுறுவர். கார்த்திகையில் கோயிலெல்லாம் மாடங்களிலெல்லாம் தீப

புரங்களிலெல்லாம் விளக்கிட்டுக் கார்த்திகைத் தீப உற்சவம் கொண்டாடுவிக்கும் அரசர் தம்குழுவோடும் இன்புற்று வாழ்ந்து பேரின்பப் பேறு பெறுவர். இக்கார்த்திகைத் தீபத்தைத் தரிசிப் போர் காலனுலகம் புகாது கண்ணுதலுடன்மருவி வாழ்வர். தீப மகிமைக்கு ஒருகதை சொல்லுகின்றேன் கேளுங்கள் என்று மீண்டுஞ் சொல்லுகின்றார். மாபலி என்போனுக்கு முன்னே எண்ணரும் பலபிறப் பிருந்தன. மாபலி யாவதற்கு முன் மூன் றாம் பிறப்பில் இத் திருநெல்வேலியில் தாமோதரன் என்னும் வேதியனுக்குப்பிள்ளையாகப் பிறந்திருந்தான் பரம்பபன்என்னும் பெயரால் விளங்கினன். இவன் அளவில் பாவங்கள் செய்து வந்தான். குருமனையில் எல்லோரும் உறங்கும் பொழுது முக்க லப் பெருந் தானியங்கவர தான் இன்னும் பொன்களவு செய் வான், மதுவருந்துவான், கொலை செய்வான். காமங்கொண்டு பலமாதரைப் புணர்வான். இவன் பல பாவங்களைச் செய்வான். மங்கை நல்வடிவாள் புனைசண்பக மாலையைத் திருமேனியில் தன்கைபடத்தொட்டெடுத்துத் தானுந் தான்புணரும் தோகை யையும் புனையும்படிச் செய்தான். இந்தவிதமாக மூன்று நாள் கழித்தான். இப்படி யெல்லாம் பாதகஞ் செய்த இவன் ஒருநாள் நெல்லை நாதர் வீதியில்வடிவாளோடு, உலாவ வரும்பொழுது இடபவாகனஞ் சுமக்கின்றோர் இளைப்புறும் பொ ழுதுதான் சிறிது தாங்கிச்சென்றான். ஒருசமையம் அம்மைக் குச்சண்பகமாலை அன்போடு செய்து அணிந்தான். சிலநாள் சென்று மூப்பாலும் நோயாலும் இறந்தான். உடனே எமது தர்வந்து அவன்செய்தபாவத்திற் காகத்தண்டித்து நரகிடையிட் டனர். பிறகுதன்பாவமெல்லாந் தீர்ந்து குருவின் வீட்டில் தா னியந்திருடியதன்மையால் எலியாகப்பிறந்தான். முன்செய்த புண்ணிய வசத்தால் நெல்லை நாதர் கோவிலிலிருந்து நெறியொ டும் கோயிற்பண்டங்களைத் திருடாது அவற்றை அழிக் காது நாதன் மேலன்பாகவே இருந்து தினமும் வலஞ் செய்து கொண்டிருந்தது. பிறகு கார்த்திகையன்று நாதன் சந்நிதியில் ஒருவிளக்கில் திரிஉள்ளுறப்பற்றிக்கொண்டு போகும் போது தன்முகத்தினுல் தூண்டிவிட்டது. சிலநாள் சென்றபோது,

இவ்வெலியை பருந்து கவர்ந்து சென்றது. அது தன்னிடம் கொண்போய் மூக்கினாற்கொத்தும்போது தவறிவிழவே தப்பித்து ஒருவளையிற் புகுந்துகொண்டும் பிழைக்கமுடியாமல் மரணவேதனைப்படும் பொழுது அரசனாகப் பிறக்க விரும்பிற்று. பிறகு இறந்த பின்பாவம் ஒன்றும் இல்லாமையாலும் வடிவுடை அம்மைக்குச் சண்பகமாலைஇட்டதினாலுந் திருவிளக்கைத் தூண்டிய புண்ணியத்தாலும் நெல்லையில் விரோசனனுக்குப்பிறந்து மாவலிச் சக்ரவர்த்தியாயிற்று அவுணர்களுக்கெல்லாம் அரசாக அரசாண்டு வந்தான். பின் நெல்லையில் வந்து தீபதூபங்களிட்டுத் திருவிழா நடத்திக் கார்த்திகைமுதலிய சிறப்பெலாஞ் செய்து போற்றி நெல்வேலிநாதன் காட்சிசெய்யப்பெற்று மேலானவரங்கள் பலபெற்றான்.

திரிலோகமுந் தன்கீழ்ப்படிய இந்திரன் ஏவல் செய்ய அரசாண்டான். இந்திரன் நெஞ்சழிவதையுந் தேவர் பலங் குறைதலையுங் காசிபர்கண்டு துளபமாலேநோக்கித் தவஞ்செய்து மாவலிதன்மையைக்கூறி இந்திரனைக் காத்தருளவேண்டுமென்று துதித்துக்கேட்க மாலும் அருள்கூர்ந்து அக்காசிபர்வயிற்றிலேயே வாமனனாகப்பிறந்து மாவலிபால் மூன்றடிமண் இறந்து ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து ஓரடியால் அம்மாவலியைப் பாதாளஞ்செல்லும்படியாக அவன் தலையில் கால்வைத்து அழுத்தினான். அப்பொழுது அம்மாவலிமாலைத்துதித்துச் சிரஞ்சீவிப்பட்டமுங் கார்த்திகை மாதமெல்லாம் மேலே வந்து கார்த்திகைத்தீபம் பார்க்குந் தன்மையும் பெற்று பாதாளலோகத்தில் வாழ்ந்தான். மாவலி போன பின் மால் அகோரமாகச்சீறினான் தேவர்கள் சிவபெருமானிடஞ்சரண்புக அவர் அஞ்சலென்று சொல்லி வயிரவரை நோக்க அவர் சென்று விண்டுவை அடக்கி அவன் தோலையுரித்துச் சட்டையாகப்போர்த்துக்கொண்டு முதுகெலும்பைத் தண்டமாகத் தாங்கிச் சொரிதருங்குருதியோடு தங்கமழுவுஞ் சூலமுங்கரத்தில் தோன்ற திருநெல்வேலியில் வந்தார். வந்து திருநெல்வேலிநாதர் பதம் பணிந்து போற்றிச் சட்டை நாதரென்னும் பெயரோடு தம் கோயில் சார்ந்து இருந்தார். மாயனும் தன் ஆணவம் நீங்கி

நெல்லைநாதனைப் போற்றி அவன் அருளால் முன்னுருப்பெற்று வேண்டும் வரங்களையும்பெற்று வைகுண்டம்போய்ச் சேர்ந்தினி திருந்தான். மாவலி சிவபெருமானுக்குத் தீபங்களியற்றிப்பூசை செய்ததனால் பாதாளலோகத்திலிருந்து இன்னும் அரசாட்சி செய்து வருகின்றான்.

சிவபெருமான் நெல்லைநாதனுக்குத் தீபமிட்டசிறப்புச் சொன்னோம் இனி தொண்டர் மேன்மைகளைச் சொல்லுகின் றேன், கேளுங்களெனநைமிசாரணியவாசிகளுக்குச் சூதர் சொல் கின்றார்.

## ௭௧-வது, தொண்டர்கள் மகிமைச் சருக்கம்.

காதலாற் கைலை நாதன் கழல்மிசை யன்பு கொண்ட
பாதக மில்லா வன்பர் பதமல ருள்ளஞ் சேர்த்தி
வாதனை யகலப் போற்றி வாயுறத் துதித்து வாழ்தல்
போதமே யில்லா நெஞ்சே புரிதொழி லுனக்குத் தானே.

நெல்வேலிவாழும் பரமன் மெய்யடியார்களை வழிபட்டேத் திப்பூசை செய்து அன்னவஸ்திரம் பொன் முதலிய விருப் புடன் கொடுப்போர் பூமியில் சகல போக போக்கியங்களைப் பெற்று நெடுநாள் வாழ்ந்து முடிவில் முத்தி இன்பம் எய்துவர். என்னையாண்டருளுஞ் சிவபெருமான் தன்னடியார்களைப் பூசிப் பவர்களைத் தன்னைப் பூசிப்பவர்கள்போல்நினைத்துக் காட்சிதந்து வேண்டும் வரங்களையருளுவர் சனகராதியோர் உமைபாகனை நோக்கி உனக்கு உவப்பதாகிய நற்கருமம்யாது என்றபொழுது அடியாரின்பூசையே எனக்குவிருப்பமுடையது, அவர்களுக்கும் எனக்கும் பேதமில்லை வேதாகம புராணங்கள் சொல்வதும் இதுவேயாகும் தேவர்கள் முனிவர்கள் கந்தருவர்கள் நாகர் முதலியோர்களில் அநேக கோடியர் அடியார் பூசையாலேயே முத்தி பெற்றிருக்கின்றார்கள். எம் அடியாரைப் பூசித்து அவர் பாதநீர்தன்னையுங் கொண்டோர் பந்தம் நீங்கிப்பரகதி பெறுவர் எம் தொண்டரைத் தரிசிப்போர் பரிசிப்போர் அவர் கிழற்பட்டோர்கள் அவர்வாசகங்கேட்டோர்கள் மகிழ் பெருஞ்

செல்வமோங்கி நிலமிசை நெடுநாள் வாழ்ந்து குழுவொடுங் கைலை சென்று குழுமிக்குலவிவாழ்வர். கல்வி அறிவுஞானம் இல்லாதவராலும் நீறு அக்கம் அணிந்த எம்மடியவரைப் போற்று வாராயின் நெற்றி விழியுடைய எம்முருவம் எய்துவர் எமக்குச் செய்யும் பூசைப் பலனைப் பார்க்கிலும் எம் அடியவர்களுக்குச்செய்யும் பூசை நூறுமடங்கு அதிகபலனைத்தரும் நாம் என்றுந் தொண்டர் உள்ளத்திலிருப்போம். அவர் புசித்தது நாம் புசித்ததாகும். அவர் செல்லுமிடமெல்லாம் நாம்செல்லுமிடமாகும் அவர் செய்வது நாம் செய்வதாகும் என்று சிவபெருமான் கூறியருளியிருக்கின்றார். ஓ முனிவர்களே! அடியார்களுக்கு இருபத்து மூன்று லட்சணங்களுண்டு அவற்றில் நீறும் கண்டிகையும் புனைதல், குரவரைப்பூசிந்தால், ஈசன் நாமங்களை இயம்புதல், அரன்பூசனை பக்தியொடுசெய்தல், நித்தமுஞ் சிவதருமங்கள் புரிதல், நிமலன் உத்தமக்கதைகேட்டல், ஆலயம் ஓம்பல், பத்தரல்லாதவரிடத்தில் துய்த்தல் நீத்தல், தொண்டருக்கு ஈதல், அரனைப்புகழ்தல் ஆகிய இப்பத்தும் புறஅங்கம் எனப்படும்.

சிவபெருமான் திருவிளையாடல்களைச் செப்புந்தோறும் நாத்துடித்தல், ஆதரத்தோடு அதரம் அசைந்திடுதல், அங்கங் குலுங்குதல், மயிர்ப்புறம் பொடித்தல், வேர்வையுண்டாதல், கண்ணீர் செறிதல், அழுகல், தன்னுணர் வற்றுாவெழாதிருத்தல், வாய்திறந்தழுதிடல், உமையொருபாகன் உள்ளத்துறத் தனைமறந்திடுதல் ஆகிய இப்பத்தும் உள்ளங்கம் எனப்படும். ஒப்பற்ற அஞ்செழுத்தை உன்னுதல், மானதபூசை, கருமிடற்றரனைத் தன்னை பொன்றெனக் காணல் இம்மூன்றும் உள்ளத்திலக்கணம் என்று சொல்லப்படும். கடைசியாகச் சொன்ன உள்ளளத்து லட்சணங்களாகிய மூன்றையும் உடைய உத்தமராச் சிவன ஓர்ந்து மேலோர் பாங்குடன் பணிவர். சிவாலயங்கட்டல், இலிங்கப் பிரதிட்டை பண்ணுதல், தொண்டரைப் பூசித்தல், சிந்து பூந்துறையாடித் தினமும் நெல்லை நாயகனைத் தரிசித்தல், நந்தவனமுண்டாக்கல், நறுமலரெடுத்துச் சாத்தல், வீதிகள் தோறும் மடங்கள் கட்டல், அந்தணர், வறியோர் அடியார்

முதலியவர்களுக்கு அன்னமளித்தல். சிவபுராணங்கள் கேட்டல், சொல்லல், எழுதுதல், அடியார்களுக்குற்ற தீங்குகளைத் தீர்த்தல், சிவனடியாரைத்தண்டித்தல், சிவ திரவியங்களை வவ்வில் உயிர் விட்டேனும் வாங்கல் ஆகிய இவைகளெல்லாஞ் சிவனடியாரின் சிறந்த குணங்களாம். இது சிவபணிவிடை என்றுஞ் சொல்லப்படும். எந்த சாதியாராயிருந்தாலும் இந்த லட்சணங்களை எல்லாம் உடையவராயின் அவர் தமை ஈசனென்றே எண்ணிப்போற்றுவோர் பூமியிற் புகழொடு வாழ்ந்து முடிவிலா முத்தியெய்தி இன்புற்றிருப்பர் என்று சூதர் கூறி வருணாச்சிரமநல்லொழுக்கங்களைக்கூறுகின்றேன் கேளுங்களெனச் சூதர் கூறுகின்றார்.



## அ௰-வது வருணாசிரமநல்லொழுக்கங்கூறிய சருக்கம்



ஒழுக்கமே எவர்க்கு மேன்மை யூட்டிடு மிம்மை வாழ்வை
இழுக்குறா தாக்கு மையன் இருசரண் சேர்க்கு மென்றே
வழுக்கிடா துயிர்கள்வாழ மறைமுறை யியம்பு மேன்மை
விழுக்குண மில்லா நாயேன் விரும்புநா ளெந்த நாளோ.

எத்தலத்திலும் செய்பாவங்கள் நீங்கும் இந்தத்தலத்தில் செய்பாவம் நீங்காது என்று சொல்லமுனிவர் கைகூப்பித்தொழுது அது என்னகாரணஞ் சொல்லியருளவேண்டுமென்று முனிவர்கள் கேட்கச் சூதர் கூறுகின்றார். நெல்லை மாதலத்திலும் மற்றைத் தலத்திலும் பாவஞ் செய்யாதிருந்து புண்ணியமே செய்வோர் உயர்ந்தோராவர். இந்தத்தலத்திலிருந்து அறியாமையாலாகிலும் அஞ்ஞானத்தாலாகிலும் செய்யும் பாவங்களெல்லாம் பொற்றாமரையாடிப் புனிதனையும் வடிவாளையுந்தரிசித்துப் பாதத்துப் பண்மலர் கொண்டருச்சிக்க நீங்கும். சத்திதவஞ்செய்த நெல்லைத்தலமுந் தாயாகும், அங்குள்ள மாதரை மோகித்தால் தாயை விரும்பிக் கூடியவன் சேரும் நரகத்தில் சேர்வர்.

ஆகையால் வேதங்கள் சொல்லிய ஒழுக்கப்படி நடந்து வாழ்வோர் பூதலம் போற்றும் புனிதர் ஆவர். நல்லொழுக்க

மும் ஆச்சிரமதருமமும் மாறாமல் ஒழுகுவோர் அத்தன்வாழ் கைலை வாழ்வர். நல்லொழுக்கம் உடையவரே அறம்பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் பெறுவர். பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்று வன்னம் நான்காகும். பிரமச்சாரியம், கிரகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என ஆசிரமங்கள் நாலாகும். தீநெறியொழுகின் நமன் தண்டித்து நரகிற் செறிப்பன். நல்லொழுக்கம் உடையார் அரனுலகடைந்தின் புற்றிருப்பர்.

உயிர்களைக்காத்தல், பொறை, சத்தியம், ஐம்பொறி அடக்கல், உயிர்களைக் கொல்லாதிருத்தல் முதலிய சிறந்த காரியங்களையே செய்தல் வேண்டும். இவற்றை இயமம் என்று பெரியோர்கள் சொல்வர். புனல்படிதல், விரதம், தக்கோர்ச் சேரல் தானம், மோனம் ஆகிய இவைகளை நியமம் என்று சொல்லுவர்.

அதிகாலையில் துயிலெழுந்து விநாயகன் முதலிய எல்லாத் தேவர்களையும் முனிவர்களையும் உயர்ந்தோரையுஞ் சிந்தித்துப் பெற்றோர் முதலிய ஐங்குரவரை நெஞ்சாரத் துதித்து நகர்க்குப் புறம்பே நானூறுவிற் கடைபோய்க் காலையில் உத்தர திசையிலும் மாலை தென்பாலும் நோக்கி உவர் நிலம் மன்றத்திற்குச் சமீபமானயிடம் ஆகிய * இடங்களில் இருக்காமல் ஒதுக்கிடத்தேபோய் மலசலங்கழித்து விதிப்படி சவுசஞ்செய்து கொம்புகொண்டு பல்தேய்த்துத் தூயநீராடி அரன்கோயிலை ஆகமமுறைப்படி வலஞ்செய்து தொழுது, பிறகு உண்டு எம்பெருமான் புகழைக் கேட்பதும் பிரசங்கிப்பதும் எந்தை சிவபிரானைச் சிந்தித்தேலௌகிககாரியங்களிற் புகுதலும் அந்தி வந்ததும் முறைப்படி சந்தி முதலிய செய்து அமலன் கோயில் சூழ்ந்து போற்றித் துதித்து உண்டு பின் சிறிது உலாவி எம்மானைச் சிந்தித்துத் துதித்து நிறை குடம், மணி, விளக்கு, கண்ணடி இவற்றைத்தலைமாட்டில் வைத்துக்கொண்டு நித்திரைக்குப் போகவேண்டும். தன் வீட்டில் கீழ்த்திசையும் மாமன் வீட்டில் தென்றிசையும்மற்ற இடங்களில் மேற்குத்திசையிலும் தலை

* இதனை எம்மாலியற்றப்பட்ட நித்தியகருமானுட்டானம் என்னும் நூலிற் பார்க்கக்காணலாம்.

வைத்துப் படுக்கவேண்டும். வடதிசையில் தலைவைத்துப் படுக்கவே கூடாது. இதுதான் நித்திய ஒழுக்கமென்று கூறி மேலுஞ் சொல்லுகின்றார்.

## அக-வது பிரமசரியச் சருக்கம்.

மக்களே முதல வெல்லாம் மகிழ்திரு விளையாட் டாகத்
தொக்கவே படைத்துப் பின்னர் தொடர்நெறி காட்டி மன்ன
மிக்கதா மந்தத் தூய வியன்வழி செலுத்து மெம்மான்
துக்கவா றகற்றுஞ் செந்தாள் தொழுதினி திரும்பா மிங்கே.

ஓ முனிவர்களே! முதல் மூன்றுவருணத்தோருக்கும் கருவுற்றதிலிருந்து இறக்குங்காறும் இறந்தபின்னுஞ் சடங்குகள் பலவுள. அவற்றை எவரே யாரும் முற்றுமெடுத்து மொழியவல்லார். கருவுற்றபின் நாலாமாதம் ஆறுமாதங்களில் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்யப் பெறவேண்டும்.

பிறந்தபின்பன்னிரண்டாநாள் நாமகரணஞ்செய்யப்பெறல் வேண்டும். ஆறுமாதத்தில் அமுதூட்டப் பெறல் வேண்டும். வருஷப்பூர்த்தி முதலிய செய்யப்பெறல் வேண்டும். கன்னவேதைச்சடங்குமற்றையவும்செய்யப்பெறவேண்டும். அந்தணர்க்கு எட்டு வருஷத்திற்குள்ளும். அரசர்க்குப் பதினொரு வருஷத்திற்குள்ளும், வைசியர்க்குப் பன்னிரண்டு வருஷத்திற்குள்ளும் உபவீதந் தரிக்கப் பெறல்வேண்டும். அதற்குப்பின் காயத்திரிமுதலிய, அவரவர் வருணாசிரமத்திற் கேற்றபடி ஓதப்பெறல் வேண்டும்.

நித்தியபிரமசாரியமும் உண்டு, அதுபலவகைப்படும். பிரமசாரிய நிலையில் குருவழிநிற்றல் வேண்டும். மறையோர் இல்லில் அன்னம் பிட்சை செய்தே குருவுக்கு உண்பித்து மீதத்தை தானுண்ண வேண்டும். பிரமசாரியத்திருக்கும்போது மகளிரின் மேலாசை வைக்கலாகாது தம்சுற்றத்தாரோடு சேர்ந்து உண்ணல் கூடாது. கந்தம், பூ, தாம்பூலம் முதலிய உபயோகித்தல் கூடாது. முனிவர்களைக் கண்டால் எழுந்து காலில்விழுந்து வணங்கவேண்டும். அவர் பக்கத்துநின்று அவர் அருளைப்பெறு

வேண்டும். மஞ்சம் பாய் இவற்றில் படுக்கக்கூடாது. வாகனம் முதலிய இவற்றை ஏற்றுக்கொள்ளுதல்கூடாது. பகலிற்றூங்கலாகாது. இடையில் முப்புரியான முஞ்சிபுல் தரித்திருத்தல் வேண்டும். காமம் முதல் ஆறுதீக்குணங்களையும் அகற்றவேண்டும் பஞ்சாக்கர மோத வேண்டும். நீறும் அக்கமணியும் அணிய வேண்டும்.உதையத்திலும் அந்தியிலும்சமிதையால் ஓமஞ்செய்து நெல்வேலிநாதரைத் தொழுவேண்டும். அந்தணர் பதினாறு வயதிற்குமேலும் க்ஷத்திரியர் இருபத்திரெண்டு வயதிற்கு மேலும் வைசியர் இருபத்திநான்கு வயதிற்குமேலும் சாந்தியின்றிப் பூணூல் புனைந்திருத்தல் கூடாது. மறையோர்க்குப் புரசே தண்டாகும். அரசர்க்கு அரசந்தண்டேந்துதல் இனிது. வணிகருக்கு வெதிரந்தண்டாகும். இந்தத் தண்டில் கோவணங்கட்டுதல் சிறப்பாகும். இத்தண்டின் அளவு சென்னிமுதல் மூக்கினளவாகும்.

பலி ஏற்று உண்டு குருமுகமாக வேதமெல்லாம் ஓதிப்பின் சமாவர்த்தனஞ்செய்து ஒரு கன்னிகையை மணந்துகொள்ளல் வேண்டும். இந்த சமாவர்த்தனஞ்செய்தபின் கல்யாணஞ்செய்திருப்பில் நிந்தையாம். நித்தியகர்மம் இவர்க்காகா. ஒவ்வொரு ஆசிரமத்திலும் உள்ளோர்கள் அந்தந்த ஆசிரமத்தில் நில்லாதிருப்பாரானால் அவர்களுக்குத் துறக்கங்கிடையா. குரவரைப் பழிப்போர் எரிவாய் நரகில் வீழ்வர். என்று சூதர் கூறித் தூய மனைவாழ்க்கைத் துணையாம் மனைவியின் இலக்கணஞ் சிறிது கூறுகின்றேன் கேளுமெனச் சொல்லுகின்றார்

## ௮௨-வது மகளிரிலக்கணங்கூறிய சருக்கம்,

உயிரினைப் படைத்துப் பின்னர் உவப்புற வாண்பெண் ணென்றே
செயிரறு பாலை யாக்கிச் சேர்ந்திடு மறத்தை யோதி
மயரற நடத்தி யின்பம் மதித்துணை வமைத்த நாதன்
கயிரவ மனையை தாள்கள் கருதியே துதிப்பா மன்றே.

நல்ல கற்புடைய மனைவியிருக்கும் வீட்டில் செல்வம் நீங்காமலிருக்கும். எப்பொழுதும் மங்களமாகவேயிருக்கும். ஆகையால் நல் எழின்மாதரைப் பொருந்துவது சொல்கின்றேன். கே

ஞங்களெனச் சொல்கின்றார். பிரமசாரிய விரதமியற்றிய பின் குருவருளால் இல்லறத்திற் புகவேண்டும். இல்லறம் மற்றைய மூன்று அறத்திலிருப்பவருக்கும் பெருதவிசெய்வதால் நல்லறம் எனப்படும். இல்லறத்துக்குத் துணையாகிய மனைவி ஒத்த வளாக இருத்தல் வேண்டும். உரிய கோத்திரத்தில் உதித்தவளாகவும், உடல் பிணி இல்லாதவளாயும், நோயில்லாக் குலத்தில் பிறந்தவளாயும், ஆண்பிள்ளை பெருத சந்ததியிற் பிறவாதவளாயும், பணி, புள், வரை, விண்மீன், நதி இவற்றின் பெயரில்லாதவளாயும் அமுதமொழியுடையவளாயும், பூர்ணச் சந்திரன்போன்ற முகமுடையவளாயும், பல மைந்தர்களோடு பிறந்தவளாயும், சாமுத்திரிகா லட்சணப்படி நல்ல லட்சணங்கள் உள்ளவளாயும் இருக்கும் ஒரு பெண்ணையே மணத்தல்வேண்டும். தன்குலத்துக் கிசையின்றி செல்வம் அழகு இதுபற்றி கீழ்க்குலப்பெண்ணை மணந்தால் நரகுண்டாமென்று சொல்லி மேலுஞ் சொல்லுகின்றார். கற்புடைப் பெண்கள் கணவன் உண்டபின்னே உண்பர். கணவன்உறங்கியபின் உறங்குதல், அவன் எழுமுன் எழுதல், கணவன் தன்னருகிருக்கும்போது தன்னை அணிகலன்களால் அலங்கரித்துக் கொள்ளுதல், அருகில்லாது நீங்கியிருக்கும்பொழுது அவைகளை நீக்கியிருத்தல், கணவன் கோபித்துத் தண்டிக்குங் காலையில் எதிர்ந்து பேசாதிருத்தல், வசிக்கும் வீடுவிட்டு நீங்காதிருத்தல், கணவர் ஏதேனும் கேட்கும்போது இல்லையென்று சொல்லாதிருத்தல், தன்வீட்டுக் கருமங்களன்றி வேறுவீண்கருமங்கள் செய்யாதிருத்தல், வீண்வார்த்தை பேசாதிருத்தல், பொய்சொல்லாதிருத்தல், விழாப்பார்த்தல், ஆலயம்போதல் நோன்புசெய்தல் முதலியவற்றை கணவனின் கட்டளைப்படியும் விருப்பின்படியும் நடத்தல், தன் ஆபரணங்களைக் கணவன் மாற்றுட்கு ஈந்தால் விரும்பி இருத்தல், வயோதிகர் இல்லாவிடில் இல்லாதிருத்தல், கணவன் உயிர்போய் விடுமென்று பெயர் சொல்லாதிருத்தல், கணவன் உண்ட மீதத்தை அமுதெனஉண்ணுதல், இரவோர் துறந்தோர் தெய்வம் இறந்தோர் ஏவல்செய்வோர் வருவிருந்து இவர்களுக்குத் தம் கணவனருளின்படி நடத்தல், கணவன் குறிப்பறிந்து நடத்தல் முத

லிய இது போன்ற சிறந்த செயலெல்லாங் கற்புடை மனைவியர் லட்சணங்களாம். கணவனைப் பிரிந்து தாய்வீட்டிருக்க விரும்புதல், விழாப்பார்க்க விரும்புதல், ஆடவர்பலர் முன்னிற்றல் முதலியன கற்பிலா மாந்தர் குணங்களாம்.

கற்புடைய மனைவியர் தம் நாயகன் எவ்வளவு பாவியாக இருந்தாலும் நமன் அவனிடத்துவர அஞ்சுவன். கற்புடையவர்கள் சொற்படித் தேவரும் பணிந்துசெய்வர். கற்புடைய மாதர் மிதித்த இடமெல்லாம் புனிதமுறும். கற்பிலாமாதர் தம்பிறந்த குலத்தவரையும், புகுந்தகுலத்தவரையுங் காலன் வெய்ய நரகில் சேர்த்துவன். கணவன் இறந்தால் கூட வுடன்கட்டை யேறுவோர் தேவரெனப் போற்றப்படுவர். அணிநீத்து ஒரு போதுண்டு தரையிடை உறங்கித் தன் அன்பனை அடைய நோற்பதே கற்புடைய மாதர்கள் கடன் என்று சூதர் கூறி ஆசாரங் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## அ௩-வது ஆசாரங்கூறிய சருக்கம்.

வேதநெறி யுரைத்தபடி ஆசாரம் அனைத்தினையும் விரும்பிக் கொண்டே
காதலொடு மநுவழியே நின்றறத்தை யியற்றுதற்கே கடையே யுள்ளம்
போதவிரும் பிடுமதனால் புகழ்கயிலை நாதனையே பொருத்தமாக
நீதமுறற் றுதியம்பி யவைபெற்று நனிவாழ்ந்து திகழு வேனே.

உலகத்து மணங்கள் பிரமம், தெய்வம், ஆரிடம், பிரசாபத்தியம், அசுரம், காந்தருவம், ராக்கதம், பசாசம் என எட்டுவகைப்படும். ஒருவனையழைத்து மிக்ககலனோடு வாத்திய முழக்கக் கல்யாணஞ்செய்துகொடுத்தல் பிரமம் என்று சொல்லப்படும். இரண்டுபசு எருது இனிது வாங்கிக்கொண்டு தக்க தன் மகளைவீதல் மிக்க ஆரிடமாம். சுற்றத்தார் பெண்ணை அக்கினிக்குமுன் விரும்பி அளித்தல் பிரசாபத்தியமென்றுசொல்லப்படும். இவ்வகையால் மணஞ்செய்து பெறப்பட்ட மாதிடத்திற் பிறந்தபிள்ளைகள் உலகத்தில் புகழ்பெற்று பெருஞ்செல்வுற்றுவாழ்ந்து ஈற்றில் தங்குலத்தாரோடு கைலைசார்ந்துவாழ்வர். மிக்கபொருளை வாங்கிக்கொண்டு கன்னியை அளித்தல்

ஆசுரம் என்று சொல்லப்படும். குமரனுங் கன்னியும் தம்முட் கலந்து கூடல் காந்தருவமென்று சொல்லப்படும். ஒரு பெண்ணை வலாத்காரமாகப் பற்றிக்கொள்ளுதல் ராக்கதம் என்று சொல்லப்படும்.

சொல்லிய இந்த மணங்கள் மூன்றும் அரசர்க்கு உரியதாகும். தூங்கும்போது புணருவது பசாசப்புணர்ச்சியாகும். இதனை உலகில் யாரும் இழிவென்றுகூறுவர். வேதியர் முதலாயுள்ளோர் மாதினை மணக்கில் செங்கை பற்றுதல் மரபாகும். மறையோர், வேந்தர் கன்னியை மணக்கில் கையில் அம்புபிடித்திடல் உரிமை.

வேதியர், வேந்தர், பரதவர் மகளிரை வேட்பின் உழவு கோல் பிடித்தல் நன்றாம். வேதர்முதல் மூவரும், வேளாளமாதை மணக்கில் மாதினுடைய ஆடையின்றலைப்பைப் பிடித்திடல் உரியதாகும். இந்தவிதமாக நல்மணத்தில் கொண்ட பெண்கள் நல்லபுத்திரரைப்பெறுவர். தீயவழியில் கொண்ட மாதர் துர்மார்க்கப்பிள்ளைகளைப்பெறுவர்.

மனைவியர் பூத்தநாள் முதலாகச் சாத்திரவிதிப்படிப் புணரலாம். இந்திரன் வரமளித்திருக்கிறபடியால் கருப்பமுற்றிருந்தாலும் புணரலாம். அருமறைநூலிற் சொல்லிய விதிகளைக்கவனிக்க வேண்டும். ஆயுதந்தாங்கக் காவலர் கைப்பொருள்வாங்கலும்வியாபாரஞ்செய்தலும், விதித்திடா மணத்தின்வருந்திருவை வேட்டலும், பொருள்விரும்பி மறைபுகலாதிருத்தலும் நெறிமாறலும் இவைகளெல்லாம் அந்தணற்கு ஏற்றதாகாததாம். பஞ்சமாவேள்விகள், மகங்கள், அதிதிபூசைகள், சற்பணங்கள், ஓமங்கள், முதலியவற்றை முறையேசெய்தல்வேண்டும். வரும் விருந்தினரைஉபசரித்திடல்வேண்டும். புங்கவர் தென்புலத்தோர் துறந்தோர் கழித்த சேடம் புத்தமுதின்மிக்கதாம். அதிதியர்களுக்கு அன்னம் படையாது தம் வயிற்றில் அடைக்கும் அன்னம் புழுவாகும். மூக்குலத்தோரும் இருபொழுது வயிச்வதேவம் இயற்றுவிட்டால் ஒழுக்கந் திறம்பினராவர், நரகிலிடப்படுவர். வத்திரமின்றி நீருள் மூழ்கலாகாது. கோயில், மறையவர், துறந்தோர், மனுநெறிவந்தோர், புலவர், நீர்க்கும்பம் முதலிய உசிதப் பொருள்கள்

எதிர்வந்தால் வலஞ்செய்து போதல்வேண்டும். மனையவளோடு கூடி யுண்டல் ஆகா. ஊனருந்துதல், மூத்தவளைப் புணர்தல் கனவினும் நினைத்தலாகா. உணவு உண்ணும்போது உயர் தவிசில் இருந்திடலாகாது. நெருப்பை வாயால் ஊதுதல் உயிர்களைக்கொல்லுதல் நகங்கிள்ளுதல், நடக்கும்போது மயிர் உலர்த்தல், நித்திரைசெய்யும்போது எழுப்புதல், பீடத்தைக் காலாலுதைத்திடல் உடைந்தகலத்தில் உண்டல் படுத்துக்கொண்டுண்ணல் கைகால் முகங்கழுவாது உண்ணல், பொய்பேசல், ஒருபக்கமாய்ப் பேசுதல் இவைகள் ஆசாரக்குறைவெனக் கூறியருளி மேலுஞ் சூதர் இல்லறதருமத்தையுஞ் சுருங்கக்கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## அச-வது இல்லறங்கூறிய சருக்கம்.

அல்லுற விளங்குங் கண்டன் அவனியோர் உணர வென்றே
இல்லறம் பெரிதே யென்பான் இருமனை தழுவி நின்றான்
சொல்லற மதற்கு மாண்பு சுதரெனப் புதல்வர்ப் பெற்றான்
நல்லற நாட்டும் அந்த நாதனார் மலர்த்தாள் வாழி.

இல்லறம் அருளொடும் அன்போடும் நடத்தவேண்டும். உயிர்களிடத்து இரக்கங்காட்டவேண்டும். உயிர்களைக்கொன்று உண்ணக்கூடாது. பிறருக்குத் தீங்கு நினைத்தால் அது தனக்கு வருமாதலினால் எவர்க்குந் தீங்கு நினைக்கப்படாது. தீங்கு நமக்குச்செய்தோர்க்கும் நன்மையேசெய்திடவேண்டும். உலகத்தில் பொருளின்றி எக்கருமமும் ஆகாதாகையினால் தருமவழியில் நின்று பொருள் சம்பாதிக்கிடவேண்டும். சம்பாதித்த பொருளை அறவழியிலேசெலவுசெய்யவேண்டும். தாய் தந்தை குரு அதிதி, விருந்தினர் இவர்களை ஓம்பாதவனை மூழுமகன் என்று உலகினர் சொல்வர். அரியநல் விருந்துவந்தால் எதிர்கொண்டழைத்தல் முகமன் கூறல் உண்பித்தல் அருகிருந்துபசரித்தல் ஆகிய இவைகளைச் செய்திடல்வேண்டும் தந்நிலைக்குத் தகாத காரியங்களைச் செய்தல் பொய்கோள் குறளை கடுஞ்சொல் கோபித்தல் முதலியன இல்லறவாழ்வுடையவனுக்காகாதாம். நித்திய நீராடல்

ஆலயத்தொழுதல், மகஞ்செய்தல் வேள்விசெய்தல், இறந்தோர்க்குப் புனலளித்தல் முதலியன இல்லறதருமமாகும். இரவலர்க்கீந்து இசைபடவாழ்தல் நல் அறனாகும். சிலகத்தாலன்றிக்கையினால் அடியில் இடுதல் தீதாம். இருப்புத் தவ்வியாலிடுவோர் அருநரகடைவர். அதனை அயின்றோர் மலநுகர்ந்தவர் களாவர்.

உண்டு கைஅலம்பிய பின்னர் திரும்பவும் போசனஞ் செய்தால் நரகிற் புகுவர். தீயகனவுகண்டால் உண்ட உணவு எதிரெடுப்பில், மாதரை மருவிடில் நீராடல்வேண்டும். ஆன்றோருழியில், வீட்டில், மகச்சாலையில், ஆலயத்திற் செல்லும் பொழுது பாதுகையாகா. கையிலும் மடியிலுங் கலம் வைத்து உண்ணுதல் தீது. இந்தவிதமாகக் கூறிய இல்லற ஒழுக்கங்கள் மாறாது நடத்துவோர் புவிபுகழ வாழ்ந்து கைலையில் அரன்பதம் மருவி வாழ்வர். என்று கூறிச் சூதர் மேலும் உங்கட்குத்துறவறங் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## அ௫-வது. துறவறங்கூறிய சருக்கம்.

துறவறம் பெரிதே யென்னத் துணைமுலைக் கவுரி பாகன்
அறமுறை சனகர் நால்வர் அன்புடன் கேட்ட காலை
திறமுறு யோகு காட்டித் திருமகள் மகனை வீட்டி
மறலியின் திசையை நோக்கி மாண்புற நின்றான் வாழி.

ஓ முனிவர்களே! இல்லறத்து இருந்து வாழ்ந்தபின் மூப்பு பிணி அடையு முன்னரே வானப்பிரஸ்தாச்சிரமத்தை அடையவேண்டும். மனைவியோடும் மனைவியைப் புத்திரர் பால்வைத்துச் செல்வதுமுண்டு. மயிர் நகங்களையாதிருத்தல் வேண்டும். பகல் முழுதும் வனத்திற் சஞ்சரித்து இரவில் ஆசிரமசாலையி லமரவேண்டும்.

ஒருவேளை உண்ணவேண்டும் காட்டில் விளையும் பண்டங்களை நீக்கிக்கந்தமூலாதிகளை அருந்தவேண்டும். வனத்துள்ள பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல்வேண்டும். பின் அவர்

களிடம் உபதேசங்கள் பெற்று சாந்திராயண முதலிய விரதங் களை அநுட்டிக்கவேண்டும். உடலை வற்றுவிக்கவேண்டும் பொறிகளை அடக்கவேண்டும். ஓரிடத்திலே விரும்பித் தங் காது பல இடங்களிலுஞ் சஞ்சரிக்கவேண்டும். சிந்தையில் யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கவேண்டும். சீவசெந்து முளைமுதலியவைகளை மிதியாது கவனித்து நடக்க வேண்டும்.

காவிவஸ்திரந்தரித்திருத்தல் வேண்டும். தத்துவவிசாரணை செய்தல் வேண்டும் .அட்டாங்கயோகம், அவ்வியோகமம் அன் பாய் விதியிற் பயிலுதல் செய்யவேண்டும் இல்லாவிட்டால் மேன்மையுண்டாகாது. சிவன் பரத்துடனே ஒன்றாகும்படி யோக நூலிற் சொல்லியபடி யோகாப்பியாசஞ் செய்யவேண் டும். புறக்கரணங்களனைத்தையும் உட்கரணங்களுடனே சேர்த் தி, மனத்தை புற்கலனிடத்திலடக்கிடவே யொடுக்கி சரீரமக் கோரம் ஆறுந்தழுவிடாப்புற்கலனை முதலாயோங்கு தேவனுந் தற்பரம் பொருளினொன்றாய்க் கூடல் சிறந்திடும் நல்யோக மெனச் செப்புவர்.

யோகநிலை கைவந்தோர்க்கல்லால் மற்றையோர்க்குப் பரத் தின்நிலையறிந்து காணமுடியாது. ஆசனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பதை முறை தவறாது நன்குகவனித்து அநுட்டித்தல் வேண்டும். யோக நிலையிலிருக்கும் போது பலமாயை வற்புறுத்தும் இடத்து பேதலியாது உறுதிநிலைநின்று ஒப்பற்றவொருபொருளை உணர்ந் திடுதல் வேண்டும். இத்தகையயோகஞ் செய்தற்கு வேதங்க ளெல்லாம் பணையாக நின்று தவஞ்செய்த பணைவனமே சிறந்த தாகும். இது பற்றியன்றோதாய் உமையும் இத்திருநெல்வேலி யில் அறம்வளர்த்து யோகுசெய்தாள். அகத்தியர் முதலிய இருடிகள் இன்னும் யோகஞ் செய்துகொண்டிருக்கின்றனர்.

இந்தவிதமாக வானப்பிரஸ்தாச்சிரமம் முடிந்தவுடன் சந் நியாச ஆச்சிரமத்தைக் கொள்ளவேண்டும். சன்னசம் பூண்டு

* இவற்றின் விரிவெல்லாம் எம்முடைய • யோகவிளக்கமென்னும் நூலிற் காணலாம்.

சிந்து பூந்துறையாடி நெல்லை நாதனைச் சேவிக்கின் நிலைபெறு முத்திபெறுதல் நிட்சயம். மரணகாலத்திற்கு முந்தியேனும் நெல்லையுற்றுச் சிந்து பூந்துறையாடி நெல்லைநாதனைத் தரிசித்துத் தொழுவோர் முத்திபெறுவரென்ன அந்தியகாலத்தை எப்படி அறிவதென முனிவர்கள் கேட்கச் சொல்லுகின்றார். உயிர் பிங்கலையில் மூன்றுநாளோடினால் ஒரு ஆண்டில் மரணமென்று தெரிந்துகொள்ளலாம். பத்து சரங்களும் நாளுபையத்தினெய்தில் உயிர்மாயும் என்பது தெரிந்து கொள்ளலாம். மும்மலங்கள் மூன்றும் அறக்குறைந்தியல்பு மாறில் ஓர் பருவத்தில் மரணமாகும் என்று இந்தவிதமாக வாசிநூல் சரநூல் கணநூல் சோதிடநூல் முதலியவற்றால்தெரிந்து நெல்லையைச் சார்ந்து சிந்து பூந்துறை பொற்றாமரை முதலிய தீர்த்தங்களாடி நெல்லை நாதனையும் வடிவாளையுந்தரிசித்தால் என்றுங் கயிலையில் நாதன்றாளில் ஒன்றி வாழ்வர் என்று சூதர் கூறி இனி சருவபாபங்களுக்கும் உள்ள பிராயச் சித்தங்களைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.



## ௮௯-வது, சர்வப்பிராயச்சித்த சருக்கம்.

பவமெனப் புகலும் யாவும் பாவியேன் புரிந்தேன் வீணே
புவனமு மிகழ யாக்கைப் பொதியினைச் சுமந்தே னின்னாள்
தவமுறு பயனை வேண்டித் தனிவரை நாதா வேன்றேன்
அவமறுத் தென்னை யாண்டே யருளுக வவனி வந்தே.

அறக்துறந்தோர் தாமும் மாதர்மேல் ஆசைபட்டால் அவரைத் தீண்டினால் கிரிச்சரங்கள் செய்து பிராணாயாமம் செய்து சிவபெருமான் மலரடிவணங்கவேண்டும். மாறைபால் பொய் மறந்து சொல்லின் ஒருதினம் உணவு நீங்கிப்பிராணாயாமம் நூறு செய்திடவேண்டும். மாதர் மென்முறுவல் நோக்கித் தாது பகல் விழில் மூன்றுநாள் உணவு நீத்து பிராணாயாமம் நூறு செய்யவேண்டும். ஏதேனும் ஒன்றன் உயிரைத் தெரியாமல் வதைசெய்தால் சாந்திராயண விரதமனுட்டித்துச் சிவபூசை செய்தல் வேண்டும்.

பஞ்சமாபாதகரோடு அறியாது கூடினால் அப்பாவத்தீர்ச் சிந்து பூந்துறை பொற்றாமரையாடி நாதரையும் நாயகியையும் தொழுது போற்றல் வேண்டும். கள்ளுண்போர், கொலை செய்வோர், களவுசெய்வோர், குருபத்தினியைப் புணர்வோர், பிறன் மனையைப் புணர்வோர், ஆகிய இவர்களும் பெரியோரை நிந்தித்தோர் பிறன் பொருள் கவர்ந்தோர் நல்லோர்க்கு ஊறு செய்தோர் ஆகிய இவர்களுஞ் சாந்திராயணங்கிரிச்சர முதலிய விரதங்களை யனுட்டித்துச்செய்து சிந்துபூந்துறை பொற்றாமரை முதலிய தீர்த்தங்களில் நீராடிக்கோயிலைவலஞ்செய்து அனவரத தான நாயகரையும் வடிவாளையுந்தரிசித்துப் பூசித்து வணங்கின் பவநீங்கி முத்தியைப்பெறுவர் என்று சூதர் முனிவர்களுக்குக் கூறி நாலு உகங்களுந்தவம் புரிந்த கதை சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௪௭-வது, நாலு உகங்களுந் தவம்புரிந்து பேறுபெற்ற சருக்கம்.

தோன்றிம் யுகங்கள் நான்குந் தொன்மறை முறையே போற்றி
ஆன்றநற் றவத்தைச் செய்ப வவைமனங் களிக்கத் தோன்றி
ஏன்றநல் வரங்க ளீந்தே யிமையவர் துதிக்க நெல்லை
கான்றரு பதியில் வாழுங் கடவுளைப் பரவு வோமே.

ஓ முனிவர்களே! சர்வமுஞ் சத்தியுள் ஒடுங்கும். எங் கோன் அருளினால் அவளிடத்திருந்துந்தோன்றும். மாலபற் குப்படைத்தலுங் காத்தலு மருளினார். அதேவிதமாக அயன் படைக்க மால் காத்தருளினார். வேதன் உலகங்களை எல்லாம் படைத்து நாலு உலகங்களையும் படைத்தான். அவ்யுகங்களை நோக்கிப்பிரமன் நீங்கள் நிலைதபயன் அடையவேண்டுமானால் பரமனைப் போற்றுங்களென யுகங்கள் நான்கும் பிரமனைப் போற்றி நாங்கள் எந்தத்தலத்திலிருந்து போற்றுவதென்று கேட்க, அன்னை அறம் வளர்த்ததும் வேதங்களெல்லாம் மூங்கிலென அமைந்து எம்மானைப்பூசிக்கப் பெற்றதுமாகிய திருநெல் வேலியெம்மானுக்குதந்த இடம் நீங்கள் அங்கேபோய்த்தவஞ்

செய்யுங்கள் மழுவுடைக்கரத்தான் வந்து அருள்செய்வானென்ன அவ்யுகங்களும் நன்றெனக்கேட்டுமகிழ்ந்து பிரமனைத்துதித்து விடைபெற்றுச் சென்று நெல்வேலியைச் சூழ்ந்து போற்றிக் கோயிலுட் சென்று பொற்றாமரை நீராடி வடிவாளைப்போற்றி திருமூலநாதரையும் போற்றி நெல்லைநாதர் அனவரததானர் முதலிய தேவர்களின் சரணம் போற்றி ஐந்தெழுத்தோதி வடபால்வந்து ஐம்பொறியையும் அடக்கித்தந்தம் பெயரால் ஒவ்வோர்லிங்கம் இயற்றி நெறிப்படி நெடுங்காலம் பெருந்தவங்கள்செய்து வந்தன. அப்பொழுது இடபாரூடராய் பார்வதிசமேதராய்க்காட்சி கொடுத்தருளினார். ஆனந்தபாட்பஞ்சொரியநாலு உகங்களும் படிமிசை வீழ்ந்து போற்றித்தொழுது பற்பலதுதிகள் புகன்றன. அதற்கிறைவன் உங்கள் தவத்திற்கும்பூசைக்கும் துதிக்கும் உவந்தோம் வேண்டும் வரங்கள்கேளென அந்தவுகங்கள் இறைவா! நாங்கள் வைத்தலிங்கத்தூடு இருந்து பூசனை கொண்டருள வேண்டும், எங்கள் அதிகாரம் எங்குஞ் செல்லவேண்டும் என்று கேட்க இறைவர் அவ்வாறே யளித்தோம், கிருதயுகம்மோட்சயுகமாம், திரேதாயுகம் தருமயுகமாம் துவாபரயுகமே அத்தயுகமாம்,கலியுகம் காமயுகமாம்.தருமவிடை முதல் யுகத்தில் நான்கு காலோடும் இரண்டாவது யுகத்தில் மூன்று காலோடும் மூன்றாவது யுகத்தில் இரண்டுகாலோடும் நான்காவதுகாலத்தில் ஒருகாலிலும்நிற்கும். இந்தவகையே நான் விளங்க மேவுந் தலங்களி லெல்லாம் அறமே என்றும் விளங்கும் எல்லாத்தலங்களிலும் எமக்கு நெல்லையே விருப்புடையது. ஆகையினால் அங்கே கலியுகத்தும் முன்னையுகங்கள் போலவே இருங்களென்று விடைகொடுத்து லிங்கத்தூடுமறைந்தருளினார். ஆகையினால்நெல்வேலியில்ஒருகணப்போது இருந்தவர்கைலையில் பலநாளுறைந்தபயன் பெறுவர். இந்தத்தலத்தில் மனிதரோடுவிலங்குபுள் முதலியன உயிர்விடும் பொழுது சிவபெருமான் வடிவாளோடு வந்து பிரணவமந்திரத்தை யுபதேசிப்பர். இத்தலத்தில் சிந்து பூந்துறையில் தென்புலத்தோர்க்குச் சிரார்த்தம் திதி பிண்டம் கொடுக்கில் அவர்கள் கைலை மருவிவாழ்வர்.

அயலூரில் ஒருபாதகன் இறந்தான் அவனை ஒருவருஞ்விரும்

பித்தகனஞ் செய்யாமையால் வெளியேகிடந்த அவன் அங்கம் ஒன்றை ஒருபருந்து எடுத்துப்பறந்து வந்து சிந்துபூந்துறையில் ஒருமரத்தில் உட்கார அதுதவறி சிந்துபூந்துறைக்கரையில்வி ழுந்தமையால் உடனே சிவரூபம்பெற்றான். முடிவிலா இப்பெரும் பாதகனும் முத்தியுல கடைந்தானென்றால் இத்தலத்தின் பெரு மை என்னாற் சொல்லுதற்கு எளிதோ என்று கூறினர். முனி வர்கள் மகிழ்ந்து துதித்து இன்னும் எம்பெருமான் கதைகள் சொல்லவேண்டுமெனச் சூதர் கூறுகின்றார்.



## அஅ-வது, அரதகவடிவம்மைச் சருக்கம்

தேவரும் பிறரு முய்யத் தீயபுன் துற்கன் மாள
மேவரு சூல மோச்சி மிகுமவன் வலியைப் போக்கி
பூவரு மயனும் மாலும் போற்றவே நின்ற தேவி
தூவரு சரணப் போதே தொழுமென துளமுப் போதே.

முனிவர்களெல்லாஞ் சூதரைநோக்கி விரியமுற் கடவுண் மைந்தனே! வேய்வன மகிமையில் இன்னும் மரகதவடிவாள் தோற்றமும் வரவும் அவுணர் குலத்தை வென்றமையும் உரை செய வேண்டுமென விரும்பிப் போற்றிக் கேட்டலும் உவகை யோடு சூதர் சொல்லுகின்றார்.

அருவமாகவும் உருவமாகவும் அருவுருவமாகவும் இருக்கும் ஆதியான பரஞ்சோதிக்கு உரிமையாயும் பாதி உடம்பினுள் குடி கொண்டிருப் பவளும் உலகெலாம் பயந்து ஐந்தொழிற்குங் கருமமாய் மாயவித்துமாய் மோட்சகாரணமுமாய் இருக்கின்ற பராசத்தியின் திருவிளையாடல் பலவுள அதனை யார் தெரிந்து உரைக்க வல்லவர். அவள் திருவருளால் அவள் மகிமையை அறியலாமே யொழிய மற்றபடி அறிதல் முடியாது. பூமி யெல்லாம் அளந்த மாலும் இன்னும் முற்றும் உணரான். நான் அறிந்த மட்டிற் கூறுகின்றேன் கேளுங்களெனச் சிவபெருமா னையும் வடிவுடை நாயகியையும் நெஞ்சிடை நினைத்துத் தியானம் பண்ணிச் சொல்லுகின்றார்.

காசிபனிடத்தில் ஆற்றல்சாருரு வேனுமசுரன் உதித்தான் அவனுக்குத் துறகன் பிறந்தான். இவன் இமையமலையில் அக்கினி மத்தியிலிருந்து தவஞ் செய்து தேவர் முனிவர்கள் எவராலுஞ் செயிக்கவும் அழிக்கவும் முடியாதவரமும் மிகுந்த பலமும் ஜெபமும் தேரும் தேவ படைகளும் பெற்றான். பிறகு ஆதிசத்தி மற்ற தேவர்களின் சத்தியோடு கூடிவந்தால் அவளால் துஞ்சும் வரமும் பெற்றான். துறகன் அவுணர்களுக்கரசாய்ச்சகலலோகங்களையுஞ் செயித்து அவற்றையெல்லாந் தனக்கு ஏவல் செய்யும்படி அரசாண்டுவந்தான். உலகெலாம் அசுரரேசெறிந்தனர். இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் மானத்திற்கஞ்சி ஒளித்துக்கொண்டனர் நீதிஒளித்தது. நியமமாதவரும் கைவிட்டார். வேதமும் வேள்விக்கனலும் போய் மறைந்தது. இந்தவிதமாக மூன்றுலகங்களையும் நெடுநாள் அரசாண்டுவந்தான். தேவர்களெல்லாம் பிரமனிடத்தில் முறையிட்டுக்கொள்ள, அவன் எல்லாஞ் சிவன்செயல் அவனருளின்றி ஒன்றும் நடவாது ஆகையால் நீங்கள் எல்லோரும் சிவபெருமானிடம் போய்த் தஞ்சம்புகின் காப்பாரென்று கூற எல்லோரும் பரமன்வாழ்கைலைசார்ந்து எம்பிரானடியில் வீழ்ந்து வணங்கிப் போற்றித்தம் குறைகளைக்கூறி எம்மைக் காத்தருள வேண்டுமென்று தாழ்ந்து இரந்துகேட்க இறைவன் நீங்கள் அஞ்சவேண்டாம் நாம அவனைக்குழுவொடு நம்சத்தியால் அழிப்போம் நீங்கள் இன்புற்றிருக்கலாமென்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டுத்தன்னடியரைரட்சிக்கும் பொருட்டு மாதுமையைப்பார்த்து ஆடலாற் காளிவருதி என்று அழைத்தார். உடனே ஆதிநாயகி இடத்திலிருந்து காளிவந்தாள். வந்து, காளிவுருவம் அகன்றிடத் தவஞ் செய்யுமாறு விடை பெற்று இமையமலையில் சினகரம் புகுந்து சிவபெருமானைக்குறித்து தவஞ் செய்தாள். அப்பொழுது சிவபெருமான் வந்து காட்சி தந்தருளுதலும் காளி வடிவம் நீங்கப் பெற்றுக் கணவனைத் தழுவிக் கொண்டாள். சுரிதிநாதனுங் கருணை நாயகியும் விடைமிசை யிருந்து முன்மருவிய காளிமவுடற்கு பேருபிருதலை பெருதிற லகோர சத்தியாய் எழுந்து போர்த்தடி பணிதலும் கவுசிகை என்னும் பெயர் வணங்கி அவளை

அழைத்துக் கொண்டு உமையோடும் நெல்லைக்கு வந்தருளினார். கவுசிகையை ஈண்டு உறை எனப் பணித்து நாயகன் சோதி நாயக ருருவிற் சேர்ந்தார். உமை வடிவிற் சார்ந்தாள்.

இது இப்படி இருக்க துற்கன் தேவர்களை எல்லாம் வென்று, தோளாற்றலால் அயனையும் மாலையுந் தொடர்ந்து போருக் கழைத்தான். அவர்கள் எம் சிவபெருமானை இவ்விடர் நீக்குவரென்று நெல்லையில் வந்து துதித்துப் போற்றித் தங் குறையைச் சொல்லி இரக்க, இவர்களை அஞ்சல் என்றருளி கவுசிகைக்கும் அவ்விடத்தில் அமரராயுள்ளவர்க்கும் சத்தியுறும் வகையுள்ளத்து உன்னுதலும் பருவரலகற்றி என்னை யாட்கொள்ளும் பைந்தொடி மேனியில் பேரொளி பதினான்குலகமும் மாசற விளங்கிற்று. சென்னியில் சிவபரஞ் சோதித் தேசும், தோளில் மாயவன் தேசும், அங்கையிற்பருதி தேசும், பயோதரத்தில் மதியின் தேசும், கூந்தலில் மறலி தேசம், மூன்றுவிழிகளிலும் எரியின் தேசும், பிராணவாயுவில் குபேரன் தேசும், காதில் மருதின் தேசும் ஆக மேனியெல்லாம் தேவதேசு விளங்க நின்றாள். தேவர்க ளெல்லாந் துதித்தனர். தேவர்கள் சத்தி எல்லாம் வந்தெய்தப் பெற்ற குமரிவந்து தன்னடி பணிதலும் கோமளவல்லி அவளைத்தடவிக் கொடுத்து நீயேயான் எனக்கூறி அணியெலாம் பூட்டி அன்புடன நோக்கி அரதக வடிவாளென்று நாமங் கூறிச் சத்திகளும், மழு, எழு, பிண்டி, பாலம் முதலிய வண்படைகள் நல்கிச் சிங்கவாகனமும் ஈந்து துற்கன் ரத்த பீசனாதி அவுணரைக் கொன்று தேவரைக் காத்து பொற்றாமரையில் மேல்பால் வீற்றிரு என்றருளினாள். அமலரும் அம்மை, சொற்றபடி செய்எனக்கூறிசத்துருக்களை வெல்லக்கூடிய சூலமொன்றீந்தார்.

அப்பணிபுரிவன் என்று அவளுந் துதித்துப் போற்றி அருள் விடை பெற்றுச் சென்றாள். எம்பெருமானும் நாயகியுந் தத்தம் பேருருவிற் போய்ச் சேர்ந்தனர். தேவர்களெல்லாம் கவுசிகைபால் வந்து துதித்துத் தம்மை ரட்சிக்க வேண்ட, அவர்களை அஞ்ச லென்றருள் செய்து தன்னுருவி லிருந்தும் அநேகங் கோடி சத்திகளுண்டாக்கி உமாதேவியா ரருளியபடி அயன் செய்த பொற்கோயிலுள் புகுந்து வீற்றிருந்து காளாத்தி

ரியைத் துற்கன்பால் தூது போக்க அவளும் அவன் பாற்சென்று அவனை நோக்கி நீ அடங்கி பாதலத்து உறைதியோ அல்லது அழிகின்றுயோ? என்று கேட்க அத்தூர்த்தன் அவள்எழில் நோக்கிக்காதலுற்றான். என்பால் உறைதி என்று சொல்லினன். அதற்கவள் எம் அன்னையிடம் அநேகர் உளர் அங்கேவருக என்றுசொல்லிச்சென்றாள். உடனே துற்கன்பற்றிக்கொணர்மினெனத்தம் படைஞரை ஏவ அவர்கள் நெருங்குதலும் விழித்து நோக்கினள். அவர் சாம்பராயினர். உடனே கவுசிகைபால் வந்து உற்றன உரைத்தாள். துற்கன் தன் படையழிந்ததைத் தூதரால் கேள்வியுற்றுப் பெரும்படையுடனே நெல்லைக்கு அவனும் போர்செய்ய வந்தான். தேவர்கள் கண்டு மருண்டு ஓடிவந்து கவுசிகை பால் சொல்ல அவளும் போருக்குச்சென்று அவுணப்படைகளை எல்லாம் அழித்து அவனையும் மார்பில் உதைத்து அவனைக்கீழேவீழ்த்தி இடதுகாலால் மிதித்து நின்றாள். அவன் திரும்பவும் மாயப்போர் செய்ய அவன் மாயப்போரை எல்லாம் நெற்றிக்கண்ணாலழித்து அவனை சூலத்தாற் குத்திப்பிழந்து பூதங்களுக்குணவாக அளித்தாள். உடனே தேவர்களெல்லாம் வந்து போற்றித்துதித்தனர். துற்கனைக்கொன்றமையாலே துற்கையென்றொரு நாமம் ஆவதாக எங்களுக்குவரும் இடர்களை எல்லாம் நீக்கியருள்வாயாக என்று விடைபெற்றுச் சென்று தத்தம் இடம் போயினர். அன்னையும் அரியாசனத்து வீற்றிருந்து உலகினைப் புரந்தாள்.

இந்தவிதமான சிறப்புடைய துற்காதேவியின் ஆலயத்தின் முன்னின்று துற்கை மந்திரத்தை செபிப்பினும் ஒருமண்டலம் பணியினும், தத்தமக்கியன்ற மட்டும் அபிடேக நிவேதனம் செய்யினும் முத்தமிழ்த் தொடையல் புனைந்திடினும் சித்தியும் முத்தியும் எய்தும். இந்தவிதமாகும் அரதகவடிவாள் காதை என்று சொல்ல முனிவர்கள் அகமகிழ்ந்தனர். இந்தச் சிறப்புறு கதையப்படிப்போர் கேட்போர் சிறந்த செல்வங்களெல்லாம் பெற்று இனிது வாழ்ந்து பின் கைலை சேர்ந்து வாழ்வர்.



## அகூ-வது, பிட்டாபுரத்தி அம்மைச் சருக்கம்.

திருவயிற்றி லண்டமெல்லா மமைத்தருளிப் பின்னின்று திகழக் காக்கும்
பெருமலேழி னைவுதலாற் புவியுய்ய விண்ணுய்யப் பிழைசேர் தூற்கன்
பொருதிறல்சேர் சண்டனொடு முண்டனையும் மருகளையும் புரிந்து கொன்ற
திருமருவு கவுசிகையுங் காளியுமே எனைக்காப்பர் திருவி னம்மா.

ஓ முனிவர் பெருமானே! தூற்கை மகிமையைக் கேட்டோம் இனிக்காளி தோற்றமும் செயமும் சிவபெருஞ்சோதி ஆவலோடுற்று ஊர்த்த தாண்டவஞ் செய்த இயல்புங் கூறியருள வேண்டுமென்று முனிவர்கள் கேட்கச் சூதமுனிவர் கூறுகின்றார்.

காசிபரின் மனைவி திதியின் மகளாகிய மோகினி பெற்ற சும்பன் நிசும்பனென்னும் இவர்கள் எரியிடை நின்று ஆயிரம்வருடம் பிரமனைக்குறித்துத்தவஞ்செய்து ஆடவரால் இறந்துபடாதிருக்கும் வரமும் வலியும் பலபடைகளுந்திரிலோக அரசாட்சியுந் தேரும் இன்னும் பலவரங்களும் பெற்றனர். இவர்கள்வரம் பெற்றசெருக்கால். அவுணர்களுக்கரசாகி பொன்மலைக்குமேற்றிசையில் அணிநகரொன்றமைத்து அதிலிருந்து அரசு புரிந்து வந்தனர்.

இவ்விருவருங் கடலொத்த பெருஞ்சேனையோடு சென்று மூன்றுலகத்தவரையும் வென்று அவர்திருவெலாங் கவர்ந்து தேவரெல்லாம் பணிகேட்க அரசுசெய்து வந்தனர். வானவர்க்கு அஞ்சிஒளித்திருந்த தானவரெல்லாம் வெளிப்பட்டு இவ்விருவர்தாளிணைகளையுந் தொழுது இன்புற்று இருந்தனர். இவர்கள் கொடுமைக்கஞ்சி மால் பிரமாதியர் எல்லாம் பொன்மலையிலேலொரு குகையிலே போய் ஒளித்திருந்தனர். முனிவர்களைத்தவஞ்செய்யாதொறுத்தனர். இதற்குமுன் மரணமுற்றவரில் இவர் போலும் வலிமையுடைய வரொருவருமில்லை என்றிசைக்கும் படி மிகவலிமையுடையவராக இருந்தனர். யமனும் இவர்பெயர்கேட்கில் அஞ்சுவன். இவர் அடிபெயர்த்து வைத்தால் பூமியும் முதுகுளுக்கும், ஆதிசேடனும் பாரந்தாங்காது துன்புறுவன். இந்த விதமாக நெடுங்காலஞ் சும்பனும் நிசும்பனும் இனிதின் வீற்றிருந்தனர் தேவர்களெல்லாஞ் சிவபெருமானிடம் வந்து சரணம் புகுந்தனர். அப்பொழுது அஞ்சலென்றருள் செய்து உமாதேவி

யைப்பார்த்து இவர்க்கிடர் புரியும் அவுணரை எல்லாம் அழித்துக்காப்பாயாக என அவளும் வேணுவனத்துறையுந்துர்க்கையை மனத்தில் நினைத்தாள். உடனே கவுரியுஞ் சிங்கத்தின் மீது ஏறி வந்து எம்பெருமானையுந் தேவியையும் போற்றித் துதித்து அழைத்தருளிய பணிவிடை என்ன கூறியருள வேண்டுமென்று கேட்க அன்னையும் சும்பன் ஆகியோரை அழித்துத்தேவரைக் காவென, அவளும் அப்படியே என்று கூறிவிடைபெற்றுச் சென்று நெல்லை மேவித்தன்னைத்தொழுந் தேவர்களைக் காக்க மனத்திலெண்ணினள், அப்பொழுது துர்க்கை வடிவிலிருந்து காளிவந்துதித்து நான்செய்யவேண்டும் பணிஎன்னவென்று கேட்டாள். இறைவியும் நீபிட்டாபுரத்தி என்று நாமங்கொண்டு என்சேனைகளுக்குத்தலைவியாகஇருந்து கொடிய அவுணர்களாகிய சும்பன் நிசும்பன் என்பவரை இங்கு தந்தரமாய்க்கொண்டு வருகஎன்றாள். உடனே மோகினி உருவெடுத்து அவர்கள் பயிலுஞ் சோலையிலிருக்க அவர்கள் கண்டு சண்டனையும் முண்டனையும் அனுப்பிக்கொணர்க என அவர்கள் வந்து எம்மிறைவர் அழைக்கின்றனர் வருக என அவளும் அவர்கள் சபையில் செல்ல, அவர்கள் மிகக்காமங்கொண்டு எம்மிடத்திலே இருஎன்று சொல்ல மோகினியாய் வந்த காளியும், 'நீங்கள் மூவுலகும் ஆளும் வேந்தர்கள் நானோ வரைவனத்தில் இருக்குங் கவுசிகையின் தோழி என்னை விரும்புதல் முறையல்ல கன்னிதனைச் சென்றடையுங்கள்' என்றனள் விதிவலியை யாரே வெல்லமுடியும் கதித்து எரிகின்ற நெருப்பைத் தசை என்று நினைத்து ஈக்கள் வந்து விழுந்து மாய்வது போல் கவுசிகை என்ற பேர்கேட்ட மாத்திரத்தில் மிகக்காதல் கொண்டு வரைவனத்து விரைந்து வந்தனர். வந்து சுக்கிரீவன் என்னும் படைத்தலைவனை நோக்கி கவுசிகையை நின் தந்திரத்தினால் கொணர்க என அவனும் உடனே புறப்பட்டான்.

காளியும் திரும்பிவந்து கவுசிகையின் பக்கத்தே தொழுது நின்றாள். வந்த அவுணன் தேவியை எம்மிறைவரைமணந்துகொள் என்று கேட்கக் கவுசிகை சினந்தாள். உடனே அவன் ஓடி தன் இறைவரிடங் கூற அவர்களும் போருக் கெழுந்தனர், தூம்ர

லோசனன் போருக்கு முதலில் வந்தான். அவனை ஹுங்காரத்தால் காளி கொன்றாள். பிறகு சண்டனையும் முண்டனையும் அனுப்பினார் அவர்களுஞ் சென்று தம் திறமெலாங் காட்டிப் போர் செய்தனர். அவர்களையும் முறையே முண்டனை வாளினாலுஞ் சண்டனைச் சூலத்தினாலுங் காளி கொன்றாள். தேவர் பூமழை பொழிந் தார்த்தனர். பிறகு காளி சண்டன் முண்டன் தலைகளை எடுத்துச் சென்று கவுசிகை முன் வைத்தலும் அவளும் மகிழ்ந்து சண்டனையும் முண்டனையுங் கொன்றதனால் அவளுக்கு சாமுண்டி என்று பேர் தந்தாள். சும்பனும் நிசும்பனும் தம்வீரர் இறந்தனரென்று கேட்டுப்பெரும் படையுடனே வந்தனர். தேவ ரஞ்சிக் கவுசிகையின் சரண்புக்குங் காத்தருளகதேவி! எனவேண்ட அவர்களை அஞ்சலெனப்புகன்று தன்திருமேனியினின்றும், நாரணி, கௌமாரி, பிரமாணி, மயேசுவரி, விசையை, நாரசிங்கி, வைட்டுணவி, வராகி என்னும் மடந்தையரைப் படைத்து ஒவ்வொருவரிடத்து ஒருகோடிபதாகினியைக்கொடுத்துப் போருக்குடன்வரச்செய்து தானும் போருக்குவந்தாள்.

அவுணர்கள் அரும்போர்செய்யும் பொழுதுகவுரியும் மயேசுவரிமுதலிய எழுவரும் போர்செய்து சும்பனைக்கொன்றனர். நிசும்பனைக் கவுசிகை சூலம் விட்டுக்கொன்றாள். தேவர்களெல்லாம் மிகஆநந்தங்கொண்டு கவுசிகையைத்துதித்தனர். அவளும் அவர்களுக்கு வேண்டும் வரங்களளித்து விடைகொடுத்தனுப்பிவிட்டு எழுவருடனுங் கோயிலினுட்சென்று பணிவன நாயகனை வடிவாளைப்போற்றி செய்த எழுவரையும் அவர்க்கு உறையுள் வேறு இயற்றி அவர்களைக்குடியிருக்கச் செய்து தான்தன் கோயில் புகுந்தாள். கவுசிகையின் உத்தரவின்படி காளியுஞ் சேனையோடு நகர்க்குஉத்தரதிசையில் கோயிலிலமர்ந்திருக்கின்றாள்.

வடக்குவாய்ச் செல்வி, நெல்லை மாகாளி, சண்பகச் செல்வி பிட்டாபுரத்தி என்னும் பெயர்களோடு வேணுவனத்தை எந்நாளுங் காத்துவருகின்றாள். இது இப்படியிருக்க சும்பனும் நிசும்பனும் இறந்த தன்மையை அவர்களின் சகோதரி புத்திரன் கேட்டு பொன்மலையிற் சென்று ஆயிரவருடந் தவம் புரிந்து பிரமனிடத்தில் தன் மேனியிலிருந்து குருதி பூமியுற்றால் தன்னைப்

போலக் கொற்ற வெம்படைகளோடும் எண்ணிறந்த கோடியர் தோன்றவும் அவர்கள் மெய்க்குருதி பூமியிற் றோயில் அவர்கள் போல் பல்லாயிரங் கோடியர் தோன்றவும் வரம் பெற்று இன்னும் அளவில்லாத படைகளும் ஆற்றலும் வெல்லவல்ல தேரையும் பெற்றுத் தன் மாமன்மார் அரசாண்ட நகரத்தை அரசாண்டுவந்தான். அளவில் சேனையோடு சென்று தேவரை எல்லாம் வென்று தனக்கு நிகர்வோரில்லாதிருந்தான். ஈராயிரங் காதம் உயரமும் அதிற்பாதி மெய்த்தடிப்புமுள்ளவனென்றால் அவனைக் கண்டு எவ்வுயிரே பயப்படாதிருக்கும். தம் மாதுலரைக் கொன்ற பழியைவாங்க நெல்வேலிக்கு வந்தான். அது தெரிந்து கவுசிகையும் காளியும் எழுவரும் மற்றைச்சேனையும் தொடரப் போர்க்குச் சென்றாள். எழுவரும் அவனோடு போர்செய்ய அவன் உடம்பில்வரும் ஒவ்வோர் துளிக்கு பலகோடி திறலுடை ரத்தப் பிசரெழுந்தடர்ந்தார். அதுகண்டு மிக வெகுண்டு போர்செய்ய அவர் உடலில் இருந்துவரும் ஒவ்வோர் துளிக்கு வெற்றிசேர் பலகோடி இரத்த பிசர் ஆர்த்தெழுந்தார். அவர்கள் தொகையை எவர் விரித்துரைக்கும் ஆற்றலுடையார்? மூன்றுலகும் பறந்து பரவி நிரந்து நின்றனர்.

இதுகண்டு உலகுதட்டழிந்தது. திக்கஜங்களும்வீழ்ந்தயர்ந்தது. அட்டநாகங்களும் மயங்கின. தேவர்கள் மெய் நடுங்கி நடுக்குற்றனர். கூற்றுவன் மெய்மறந்தான். வடவைக் கனலுங் குளிர்ந்தது. காற்று மங்கியது. உலகத்துள்ள மன்னுயிரெல்லாம் வெருவி யலரின. இதைக் கவுசிகை கண்டு காளியை நோக்கி "இரத்த பிசர் மெய்க்குருதி பூமியிற் படாமற் பூமியை நாவினால் மறைத்துக்கொள், நான் அவர்களை அழித்துக்கொல்கின்றேன் குடல்தசை எல்லாம் வாய்ப்பட நுகர்" என்று கூறினாள். அவளும் அவ்வாறே நாவை நீட்டித் தரையெலாம் மறைக்க கவுசிகையும் இரத்த பிசரை காளி நாவின்மேல் வைத்துப் போர் செய்தாள். அனேகங்கோடி இரத்தபிசர்க்கு அனேகங்கோடி கவுசிகையாய் இருந்து போர் செய்தாள், அவர் இரத்தம் தசை ஒன்றும் நிலத்துறுதபடிக் காளி உண்டாள். தேவர்கள் பூமழை பொழிந்து ஆர்த்தனர் கவுசிகை தன் கோயில் புக்காள்.

இரத்தபீசர் ஊன் நுகர்ந்த காளியும் வெறியுடன் எழுந்து நானிலம் உலைய வான்முகடதிர நடம்புரிந்து உலகினை அலைத்தாள். உலகந் தட்டழியும் பான்மைகண்டு அயைவனப் பரமன் முன்வந்து மொய்குழலே! உலகத்தை நலிவிக்காதே என்றுகூறக் காளி இறைவனை நோக்கி என்னோடு உனக்கு ஆடச் சாமர்த்திய மிருக்குமானால் ஆடுஎன்றனள். இறைவரும் உடன்பட்டு ஆடினார். அவள் ஒத்து உடன் ஆடுந்தன்மையை நோக்கி உமாபதி ஊர்த்த தாண்டவமாக வித்தக நடனம் புரிதலுங் காளி வெள்கி வெறியொழிந்திடலும் அத்தன் மறைந்து கோயிலினுட் புகுந்தான். காளியும் தன் கோயில் புக்குப் பசும்பொன் ஆதனத்திருந்தாள். இந்தச் சிறந்த நகரில் காளிமுன்னிருந்தே அவள் மந்திரத்தை மகிழ்வோடு ஓதினாலும் ஒரு மண்டலம் பணிந்தாலும் பூசனை புரிந்தாலும் கவிமாலை புனைந்தாலும் வேட்டனவெலாம் பெற்று இன்புற்றிருப்பர். இத்தகைவிதமாக வழிபட்டு அனேகர் அவமிருத் தொழிந்து வெம்பிணி தீர்ந்து அட்டசித்தி எய்தப்பெற்று நற்கதி அடைந்தனரென்று பிட்டாபுரத்தியின் திருக்கதையைச் சூத முனிவர் கூற முனிவர்கள் அக்கன்னியைத் துதித்தனர். வேணுவனலிங்கத்தினின்று நாரணன் றோன்றிவைகுங் கதையைச் சொல்லியருளுக என்று முனிவர் கேட்கச் சூதர் சொல்லுகின்றார்.



## ௯௰-வது, நெல்லைக்கோவிந்தர் சருக்கம்.



சித்தனார் நெல்லைக் கோமான் திகழ்திரு வுளத்தின் வண்ணஞ்
சுத்தமா லிங்க நின்றுந் தோன்றிய விண்டு தன்னைச்
சித்தமா சகல வுன்னித் திருவெலாம் பெற்றுப் பூமேல்
ஓத்தமா வாழ்வி லென்று முறுகநா மினிது மாதோ.

சிவபெருமான் முன் ஒருகற்பத்தில் உலகமெலாந் தன்னுள் ஒடுக்கித் திரும்பவும் உண்டாக்கக் கருதி திருமாலைக்கழைவனைத்து ஆதிலிங்கத்தினின்றும் மகிழ்வுடன் றோற்றுவித்தான். தோன்றிய மாயன் ஈன்ற தாய் தந்தை ஆதி நீ என்று அருச்சனை செய்தனன். இந்துபூந்துறை பொற்றாமரையாடி நீறு கண்டிகை

யணிந்து விதிப்படி சிவமந்திரத்தைஓதித் தேவுக்கும் விடைக்குந் தென்பால் சக்கரத்தால் ஒரு தீர்த்தம் உண்டாக்கி அந்நீரைக் கொண்டு ஆட்டுவித்தான். விதிமுறை தேவ ஆண்டு ஆயிரவரு டம் பூசித்துவந்தான். நெல்லைநாதன் அவ்விலிங்கத்தினின்றும் உமையோடும் காட்சி தந்தான். மாலும் மகிழுடன் பலபல துதி கள் சொல்லிச்சிவபெருமானிடத்தில் பல வரங்கள்பெற்றுப் பிர மனுந் தனக்குக் குமாரனைப் பெற்றான். சிவபெருமான் அரு ளியபடி சிவபெருமானுக்கு வடபக்கத்தே பள்ளிகொண்டிருக் கின்றான். அங்கிருந்து இரவும் பகலும் உளத்திலமைத்து வழி பட்டு உலகமெலாஞ் சஞ்சரித்து உலகத்தை ரட்சித்துவருகின் றான். அரனைத் துதித்தலாலே திருவும் வலியும் பெற்றோம் என்று மகிழ்ந்து துதித்துவருகின்றான். அரனுக் கென்னை ஒப் பென்போர் அருநரகடைவர் என்றார். முனிவர்கள் வேணுவனத் துறையும், நெல்லைக் கோவிந்தனைப் போற்றிக் கதியுற்றவ ருண் டோ எனக்கேட்கச் சூதர் சொல்லுகின்றார்.

காசிபர் மரபில் வந்த புண்டரிகன் என்பவன் உல கத்துள்ள தலங்களி லெல்லாஞ் சென்று சித்தி சேரா னகி நாரதரைக் கண்டு நான் உலகிலுள்ள சிவதலங்களையும் விண்டு தலங்களையுஞ் சென்று தரிசித்தும் சித்த சுத்தி மேவ வின்றி மெலிந்தேன் நீ அருள் செய்ய வேண்டு மென்று கூற நாரதன் நெல்வேலியின் சிறப்பும் தான் அங்கிருந்து பேறு பெற்றதுஞ் சொல்லி நீங்கள் அங்கிருந்து தவஞ் செய்யின் சித்தி எய்து மென்ன அவர்களும் நெல்லை சென்று நெல்லை நாதரையுங் கோவிந்தரையும் போற்றித் துதித்துப் பொற்றாமரை யின்மேற் கரையிற் சென்று அக்கினி மத்தியிலிருந்து நூறாண்டு தவஞ் செய்தான். மாலும் கருடா ரூடராய் சங்கு சக்கர பாணியாய்க் காட்சி கொடுத் தருளினார். புண்டரீக னுஞ்சென்றடி வீழ்ந்து பணிந்து வேண்டும் வரங்கள் பெற்றான். பாசுபதவிரதமுற்றுப்புரிந்த மையினால் நாம் நின்பால் வந்தோம். நெல்வேலி நாயகனை நினைந்து போற்றிச் சித்த சுத்தி பெருக என்று சொல்லி மறைந்தருளினான். பிறகு புண்டரீகன் நெல் வேலி நாயகனை மிக்க அன்போடென்னி அருந்தவ முமூற்றி தூய்

மையுஞ் சித்தியும் பெற்றுத் தன்னிடஞ் சென்றான் என்று சூதர் கூற முனிவர் மகிழ்ந்தனர்.

## ௬௩-வது அரியய னருச்சனைச் சருக்கம்.

மாலயன் காணு நாதர் மருவுமுன் னூழி தன்னில்
மலாயன் கொண்ட சீற்றம் மனமயக் கிவற்றை நீக்கித்
தாலநல் லிலிங்க மாகித் தன்மதி றுடைத்தே யின்பம்
ஏலவங் கவருக் கீந்த விபல்பினைப் புகழ்ந்து வாழ்வாம்.

மாலும் அயனும் எமது நெல்லை நாதனைப் பூசை செய்த கதையைக் கூறியருள வேண்டு மெனச் சூதமுனிவர் கூறுகின்றார்.

முன் ஒரு பிரமகற்ப முடிவில் ஊழி வெள்ளம் உலகம் மூன்றையுங் கவர்ந்து கொண்டது. திருக்கைலை அப்புனற்கு மீது எழுந்து நின்றது. அந்தமலையில் ஒரு ஆலிலை மேல் அச்சுதன் றுயின்றான். பிறகு உலகும் மன்னுயிரும் உண்டாதற்கு உளத் தெண்ண மால் உந்தியிலிருந்து ஒரு தாமரை நூறு யோசனை பரப் பிற்றண்டுவர அதில் அயன் அன்ன வாகனத்துடன் வந்தான். இப்பிரமன் நெல்லையுற்று நெல்லை நாதனைப் பூசித்துப் படைக்கந் திறலும் மற்றும் வன்மையும் பெற்றான் பிறகு பாற் கடலில் தூங்கும் மாலைக் கண்டு இவன் யாரோ தூங்குகின்றவன் என்று பொறாமை யோடும் அவன் நெஞ்சில் தட்டி எழுப்பினான். சிதரன் விழித்து எழுந்து நீ யாரென்ன பிரமன் நான முதல்வன் எண்டிசையும் எவ்வுலகும் எப்பொருளும் என் வயிற்றில் இருப்பது காண்டி என்றான். சிதரனும் அவன் உடலிற் சென்று உலகம் உறைதல் கண்டு திரும்பி மீண்டுவந்து என் வயற்றில் இதற்கு எழுமடங்கு இருக்கும் புகுந்து காணென, அவ்வாறே அயன் புகுந்து நோக்கி வெளியே வரும் பொழுது மாதவன் நவத் துவாரங்களையுஞ் சேமித்தான். அப்பொழுது இவன் பெரிய வஞ்சகன் என்று நினைத்துப் புரை வழியாய் வெளியேவந்து சீறி ஆற்றுவையேல்போருக்குவா என்றழைக்க அவனும்சம்மதித்தான் இவரும் நெடுநாள் பொருதனர்.

தெய்வப் படைகளெல்லாந் தொடுத்தனர். கடைசியாக இருவருங் கண்ணுதலோன் படையை ஏவினர். உடனே இருவருக்கும் இடையே சிவபெருமான் லிங்கவுருவாய்த் தோன்றினர். மாலயனும் அதிசயிக்கும் போது அசரீரி நீங்கள் இறவாவண்ணம் இச்சிவலிங்கந் தோன்றிற்று என்ற வுடனே அவர்கள் வணங்க, நெல்லையில் வந்து பரஞ்சுடரை வந்து பூசை செய் திருமின் உங்கள் மனவயிரம் நீங்கும் எனப் புகன்றது. அங்கு தோன்றிய லிங்கமும் அமைவன லிங்கத்திலூடே மறைந்தது. மாலும் அயனும் நெல்லை சென்று சிவபெருமானை விதிமுறை பூசித்தனர். அரன் அருளால் பகை நீங்கி நண்பு கொண்டு முறையே படைத்தல் காத்தல் என்னுந் தொழில் செய்து வருகின்றனர் என்று சூதர் கூறி மேலுஞ் சொல்கின்றார்.

---

## ௬௨-வது, நாரதச் சருக்கம்.

---

பூரத முடைய பெம்மான் புகழ்ப்பணை வனத்து முன்னாள்
நாரதர் போற்றத் தோன்றி நல்வர மளித்த வண்மை
பாரத மொழிந்த வாயான் பரிந்துசொல் வண்ணஞ் சொற்ற
தூரதச் சூதன் தாள்கள் தொழுதினி திருப்பா மன்றே.

முனிவர்களே! நாரதர் நெல்லை நாதனைப் பூசித்துப் பேறு பெற்ற தன்மைசொல்கின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

பிரமனால் பெறப்பட்ட பரிசுத்தமுள்ள நாரதன், பிரமனை நோக்கிச்சித்தியும் முத்தியும் எய்தத்தவஞ்செய்தற்குப் பூமியில் ஒருதலம் சொல்லி யருள வேண்டு மென்று பணிந்து வேண்டப் பிரமன், தலங்களி லெல்லாஞ் சிறந்தது நெல்லை அதில் என்னைப் போலும் பிரமர்கள் பலகோடியரும் நாரணர் பலகோடியரும் முயன்று தவஞ்செய்து முத்தி பெற்ற சிறப்பைப் புகலப் பல கோடி நாவுடையவர்க்கும் ஆகாது; அங்கு நீ சென்று பூசிப்பாயாக என்ன அவ்வண்ணமே நாரதன் நெல்லை வந்து விதிமுறைப்படி தவஞ்செய்து சிவபெருமான் வந்து வேண்டும் வரங்கள் தரப்பெற்று புகழ்பெற்றான் என்று சூதர்கூறி மேலுஞ்,

சொல்லுகின்றார். சிவபெருமானைப் பூசித்தலினாலேயே நினைத்த இடத்திற்சஞ்சரிக்கவும் எவர்மனத்தும் இருப்பதையும் அறிந்து கொள்ளும் வன்மையும் சிவபெருமான் சமீபத்திருந்து பாடும் பாக்கியமும் பெற்றான் என்று கூறி இனி அனந்த ஞாதியோர் வரம் பெற்ற மகிமையைக் கூறுகின்றேன் கேளுங்க ளெனக் கூறுகின்றார்.



## ௬௫-வது, அனந்தஞாதி நாகவரசர் வரம் பெறுசருக்கம்.



தோடணி செவியன் போற்றுந் தூயநல் லடியற் கின்ப
வீடருள் பரமன் முன்னாள் விரும்பியே தொழுத பாந்தட்
சேடனுக் கினிமை யாகத் திருவருள் செய்து துய்ய
ஆடக வணியாக் கொண்ட வமலரின் மலர்த்தாள் வாழி.

நெல்லைநாதனை அனந்தஞாதியோர் பூசித்து வளம்பெற்ற சிறப்பைக் கூறவேண்டுமென்ற முனிவர்கள் கேட்கச் சூதர் கூறுகின்றார்.

ஆதிசேடன் நித்தியப் பேறுவிரும்பி நெல்வேலியடைந்து ருத்திரமந்திரத்தைப் பத்தியொடு பன்னீராயிரம் முருப்பகர்ந் தேத்தித் தவம்புரிந்தான், அப்பொழுது சிவபெருமான் விடைமிசைக்காட்சி கொடுத்தருளினார். சேடனும் மகிழ்ந்து பணிந்து துதித்துப் பூமியைத்தாங்கும் ஆற்றலும், கலையெலாங் குற்றம் நீங்க உணருந்தன்மையும் எம்பெருமானுக்கு ஆபரணமாகும் பெருமையும் பெற்றான். ஊழிக்காலத்து எம்பெருமான் நடனங் காணும் பாக்கியமும் பெற்றான். ஒரு பிரளயத்தில் சனகராதியோர் நெல்லை அழிவிலதென்று அங்கு வந்திருந்து சேடன் வருதல் கண்டு எதிர்போய் ஒருவரை ஒருவர் இறைஞ்சித் தழுவிக் கொண்டனர். அனந்தன் பிரளயத்திற்கெங் கிருந்தீர்கள் என்று கேட்க எண்ணிறந்த ஊழியினு மழியாத பிரளயசித் தென்னும் பதியில் இருந்தோம் என்றவர் புகல அங்கிருந்து சேடனும் பூசை செய்ய விரும்பிப் பூசித்தான்.

பாதாளத்தே நாகலோகத்துள்ள நாகங்களெல்லாஞ் சிவபெருமானைத் தரிசிக்கவேண்டிச் சிவபெருமானைக்குறித்து அருந்தவஞ்செய்து அவன் அருளால் மேலே செல்லுதற்கு ஒரு வழி தோன்ற அதான் வழியே வந்து கைலைக்குச் சென்று கொண்டிருந்தன. அப்பொழுது இருடியர்கள் இவற்றை நோக்கி சித்தி தலம் தட்சண கயிலாயம் இங்கிருக்க நீங்கள் ஏன் வீணேசிரமப் படுகிறீர்கள் வேட்டதெல்லாந் தரும் நெல்லை நாதனைப் பூசியுங்களென அவைகளும் அவ்வாறே செய்து எம்பெருமானுக்கு ஆபரணமாகும் பேறுபெற்றது என்று சூதர் கூறி அகத்தியர் அரசு செய்த மேன்மை கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

## ௬௪-வது, அகத்தியர் அரசுசெய் சருக்கம்.

தந்தைதரு மாநிலமே முறைப்படியே யாண்டருளித் தனக்குப் பின்னர்
சிந்தைமகிழ் தாசான மாணவனுங் குறுமுனிக்குத் திருவி னீந்து
முந்தையமர் தனில்முடிந்த வவுணரெலா மீண்டுதித்து மொய்க்கப் பூமேல்
விந்தையுறக் கொன்றழித்துக் காத்ததிருக் குமரனிருதாள் விரும்புநெஞ்சே

பரம்பொருளாகிய சிவபெருமான் காசினியைப் புரந்து பின் தன் குமாரராகிய குமரக்கடவுளினிடம் தந்தார். குமரக்கடவுள் புரந்து தனது மாணாக்கராகையால் கும்பமுனிவரிடத்தில் அரசாட்சியைக் கொடுத்தார்.

கும்பமுனிவர் குமரக்கடவுள் தன்னிடத்தில் அரசுகொடுக்கும்பொழுது அவுணர்கள் வந்து துன்பப்படுத்தினால் எந்தையே நீவந்து உதவி செய்தருளவேண்டுமென்று கேட்டார். அதற்கு முருகக்கடவுளும் அவ்வாறு செய்தற் கிசைந்திருந்தனர். குறுமுனியும் உலகத்தெத்தீங்கும் வாரதபடி இன்பே பெருகும்படி அரசு செய்து வந்தார். இது இப்படியிருக்க முன் அவுணரைஎல்லாங் கொன்று, சூரபன்மனை இரண்டுபிளவாகப் பிளக்க அங்கெழுந்த கோழியைக் கொடியாகவும் மயிலைவாகனமாகவுங் கொண்டுதிருச்செந்தூரிலிருந்த முருகக்கடவுள் சிலநாளங்கிருந்து திரும்பவும் நெல்லைக்குப்புறப்படும் பொழுது, வருணனும்

மற்றைத்தேவரும் அநேக அவுணர்கள் போருக்காற்றாது கடலில் ஒளிந்திருக்கின்றார்கள். ஆகையால் குமரக்கடவுளே நீ செந்தூரிலேயே இருக்கவேண்டுமென்று வேண்டினார்கள். அதற்கிசைந்து அப்படியே குமரக்கடவுள் அங்கேயே வசித்துக் கொண்டிருக்கின்றார். சிவபெருமான் பூதப்படையுடன் அமலன் நெல்லையில் கோயிலுக்குத் தென்புறத்தில் தெய்வச்சிகரக் கோவிலில் வீற்றிருந்து உலகெலாம் புரந்து கொண்டிருக்கின்றார். இது முன்னர் நடந்தசங்கதி. பின்னர் முனிவர் அரசாட்சி செய்யும்பொழுது முன் குமரக்கடவுளாலிறந்த அவுணரெல்லாம் இப்பொழுதும் அவுணராகப்பிறந்து துன்புசெய்ய, முனிவர்கள் எல்லோரும் வேந்தாக இருக்கும் குறுமுனிவரிடத்தில் வந்து முறையிட்டுக்கொள்ள அவர்களை அஞ்சவேண்டாமென்று சொல்லி நெல்லையுட்சென்று பொற்றாமறையாடி நீறுங்கண்டிகையும் மணிந்து நெல்லையப்பரையும் வடிவாளையும் முறைப்படி பூசித்து குமரக் கடவுள் சன்னதியில் வந்து பூசித்துத் தன் குறையைச் சொல்லி இரந்து துதிக்க உடனே பரிந்தருள் செய்யுங் குமரக்கடவுள் மயின் மிசை நவவீரர் சூழக்காட்சி கொடுத்து வீரவாகுவினால் அவுணரையெல்லாங் கொல்வித்து அருள்செய்தார். பின்கும்பமுனிவர் குறைதீர்ந்து துதித்து விடை பெற்று வந்து முறைப்படி உலககாவல் செய்து வந்தார். இதுவே கும்பமுனி அரசியற்றிய கதை இனி வங்கியகுலசேகரபாண்டியன் அரசியற்றிய சிறப்புச் சொல்லுகின்றேன். கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

## ௬௫-வது வங்கியகுலசேகர பாண்டியச் சருக்கம்.

துளங்கிடுமெவ் வூழியினு மழியாத நெல்வேலி சூழ்ந்து போந்து
களங்கறுத்த நாதருறை கோயிலுமால் கோயிலுமே கனிவிற் கட்டி
உளங்கொளுநற் பூசையினை யியற்றியுயர் கைலைதனை யுற்று வாழும்
விளங்குறுவங் கியகுலசேகரன்புகழை நினைந்துருகி விளம்பு வோமால்.

முன்னொருகாலம் அலைகடல் வெள்ளம் உலகழித்தபிறகு இறைவனருளால் பிரமன் மீட்டும் படைத்தான்.

அந்த நாளிலிருந்து கடவுளருளால் வங்கியகுலசேகரபாண்டியன் உலகினைப் புரந்துவந்தான்.

இவன் முன்வந்த பிரளயத்தாற் சிதைக்கப்பட்ட கோயிலை யெல்லாம் புதிதாகக் கட்டிக்கொண்டே நெல்லைமாநகருக்கு வந்தான். அதன் வளங்களைக்கண்டு அதிசயமுற்று கோயிலையுங் கண்டு தொழுது இது எப்பதியினுஞ் சிறந்ததாகும். மற்றய வெல்லாம் பிரளயத்தழிய இது அழியாதிருக்கிறதேயென்று வியந்து கும்பமுனிவரைக் கண்டு தொழுது அதன் மகிமையை எல்லாங்கேட்டுப் புளகமுற்று முறை முறை தினமுங் கோயிலை வலம் வந்து எம்பெருமானைப் பூசித்து வந்தான். கனவிடை நெல்லைநாதன் கட்டளையிட்டபடிக்கோயில்கூடம்முதலிய சமைத்தான் சிந்து பூந்துறை முதலிய தீர்த்தங்களுக்குப் படி முதலியன அமைத்தான். தினம் இந்தவிதமாகத் திருப்பணி முதலிய செய்து பூசித்துவரும்போது அமலன் விடைமிசைத் தோன்றி, காட்சிகொடுத்தருளினார். அவரை கண்களிகூரக்கண்டு போற்றித் துதித்துப் பெறுதற்கு அரிய அநேக வரங்களைப் பெற்றான். எம்பிரான் இட்ட கட்டளைப்படி அநேக விண்டு ஆலயங்களையும்முறையேசமைத்து மாலருளும்பெற்றான் இந்தவிதமாக அரன் கோயில்களும் மாலிலயங்களுஞ்சமைத்து உலகினை இன்புறக் காத்து இறைவன்பேரருள்பெற்று வாழ்ந்து புகழ் நிறுத்தி ஈறிலா முத்தி பெற்றான்.



## சுசு-வது குலசேகர பாண்டியச் சருக்கம்.

உம்பரு முலகும் போற்ற வொருகுடை நிழலில் வையஞ்
செம்மையிற் காத்த மன்னன் றிகழ்குல சேகரன்பால்
வெம்மையில் வந்த வீரன் வீறழிந் தொழிய வீட்டி
இம்மையை வழுதிக் கீயும் இறைபுகழ் புகன்று வாழ்வாம்.

முனிவர்கள் திருநெல்வேலியில் வாழும் அமலர் புகழ் இன்னுங் கூறுமென்று கேட்கச் சூதர் சொல்லுகின்றார்.

உலகம் முற்றும் ஆண்டவங்கிய சேகர பாண்டியனும் பூபாரத்தைக் கொடுத்து கைலை மருவி யின்புற்றான். உலகுக் கொரு குறையு மின்றி இன்பமே பெருகக் காத்து வந்தான். திருப்பணிகள் பெருகுறச் செய்தான் தினமும் எம்பெருமான். 'ஆலயஞ்

சூழ்ந்து அரனடி வணங்கி யர்ச்சித்துத் தொழுது வந்தான். இங்ஙனந் தம் அரசாண்டுவரும் காலத்தில் வடக்கேயுள்ள கிராதர் குலத்து இறைவன், எண்ணரும் பல்லாயிரம் யானை பலமுடையவன் அதிவீரன் என்னும் பெயருடையான், தேவர்களைக் குறித்துத் தவஞ்செய்து பலபடைகள் பெற்றுள்ளோன், அரக்கர் நாடெல்லாஞ் சென்று அவர்கள் நட்டபுங் கொண்டோன், பல நாடுஞ் சென்று போர் புரிந்து அவர் திருவை எலாங் கவர்வோன். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் இடர் செய்வோன், கற்புடைய மாதர்கற்பழிப்போன், பாதகமே செய்வோன், கொடுமையும் அஞ்சுங்கொடுமை செய்வோன் குலசேகரபாண்டியனிடம் போர்செய்யவிரும்பிப் போர்க்கு வந்தான். வேகவதி நதிக்கரையிற்றங்கி அங்குள்ள நகரை எல்லாங் கொள்ளையடித்துக் குடிகளை எல்லாங் கொடுமை செய்தான்.

குடிகள் எல்லாம் பயந்து ஓடிவந்து பாண்டியன் காலில் விழுந்து செய்தியைச் சொல்லப் பாண்டியன் அஞ்சன் மின் முன்னெல்லை நாயகனே அரசாண்டான் அதன் பின் குமாரக் கடவுள் அரசு செய்து தன் மாணுக்கனாகிய கும்பமுனிக்குக் கொடுத்தார். அவர் அரசாண்டு சிவனருளால் எங்குலத்தோர் ஆள்கின்றூர். இதை அவன் சிதைக்க முடியுமோ? அடியனுக்காக எமனை எம்பிரான் உதைத்தது இந்தத் தலத்திலல்லவா? நான் எம்பிரானிடந் தெரிவிக்கின்றேனென்று சொல்லி சிந்துபூந்துறை பொற்றாமரை முதலிய நீராடி அமலனை முறைப்படி பூசித்து வேண்ட அவரும் அஞ்சல் என்று அருள்செய்து துற்கை! காளி சாத்தன், வீரபத்திரன், முதலியவர்களுக்குத் திருக்கண் சாத்திவிட்டு லிங்கத்துள் மறைந்தருளினார். பாண்டியனும் எம்பிரானைத் துதித்து விடைபெற்றுச்சென்று போர்செய்ய அவன் திறனுக்கு ஆற்றாமல் தன்படையுந் தானுந்தோற்றுச் சிவபெருமான் திருவுளம் எப்படி இருக்கிறதோ என்று ஏங்கி நின்றான். பகைவர் நாட்டிற்புகுந்து சூறையாடிக் கொடுமை செய்தனர் அப்பொழுது அஞ்சேல் அஞ்சேலென்று கவுரி பெருஞ் சேனையோடு வந்து பகைவர் சேனையை முற்றும் அழித்தாள். பிட்டாபுரத்திலைடையபுரத்திலும் சாத்தன் கீழ்புரத்திலும் வீரபத்திரர் மேற்கு

திசையிலும் நற்கை தென்றிசையிலும் நின்று பகைவர் கடலை முற்றுமழித்துப் பாண்டியற்கு வெற்றிதந்து இனிதருள் செய்து போயினர். சாத்தன் கரிய பனைமரத்தைப் பிடுங்கிக் கொண்டு போர் செய்ததினால்கரும்பனைவீரன் என்று நாமம்விளங்கப்பெற்றான். பாண்டியனும் பகையின்றி இனிதுவாழ்ந்தான். என்று சூதமுனிவர் கூறினார்.

---

## ௬௭-வது உருத்திர கோடிச் சருக்கம்.

அடன்மிகு மவுணர் தம்மை யழித்துயர் தேவர் நாகர்
திடன்மிகு முனிவர் மற்றோர் திருவுட னுய்யச் செய்த
உடன்மிசை புலித்தோ லார்த்த வொருவனை யனைய மேன்மைத்
தொடன்னரும் ருத்ரர் தம்மைத் தொழுமெமக் கின்ப மாமே.

சீதவதி புனையுஞ் சிவபெருமான் வசிக்கின்ற நெல்வேலி உருத்திரகோடித் தலமென்ற உரைத் தருள்செய்தீர். அந் தக்கதை சொல்லவேண்டுமென்று முனிவர்கள் கேட்கச் சூத முனிவர் கூறுகின்றார். அவுணர்கள் கேடு விளைத்திடுந் தன்மையால் அண்டகோடி களெல்லாம் அழிந்தோம் என்று அஞ்சினர். அப்பொழுது கைலைநாயகன் ஆருயிர் உய்ந்திடவும் அவுணர் அழிந்திடவும் நினைத்துத் தமது திருமேனியிலிருந்தும் உருத்திர கோடியோர்கள் வர நினைத்தார். உடனே மிக்கவலிமைபுடையரும் உருவம் முதலியவற்றால் எம்பெருமானை ஒத்தவருமான உருத்திரர் கோடிகோடியர் திருமேனியிலிருந்து தோன்றினர். அவர்களை நோக்கி, தம் தேகவலியாலும் வரபலத்தாலும் தேவர் முனிவர் மனிதர் முதலிய உயிர்களுக்குத் துன்பஞ்செய்யும் அவுணரை வதைசெய்களென்றருளினர். உடனே பெருமானார்மொழிப்படியே சென்று அண்டங்களெல்லாம்பரவி அங்கு இருள்போல எழுந்த அவுணரை எல்லாஞ்சூரியர்போல் அழித்துப்பலகோடி அண்டத்தையும் புரந்திருந்தனர். அந்தக்காலத்தில் தேவர்க்கு அமுதுதருதற் பொருட்டுக்கடல்கடைய மந்தரமலையைப்பிடுங்கினர். பிடுங்கிய அந்தத் துவாரத்திலிருந்து அநேகமாயிரங்கோடி தானவர் பிலத்திலிருந்து வெளிவந்தனர். மிக்கவலியுடையவர் கடல் ஏழை

யும் வாய்மடுப்பர் வடவை நெருப்பையும் உயிர்த்திடுவர் மாலயன் உலகும் நினைப்பின் அழிப்பர் இந்தவிதமான திறலுடைய அவுணர்களைக்கண்டு மாலயன் முதலியதேவர்களும் அஞ்சினர். அஞ்சிய வானிவர் அரன் திருக்கயிலைக்குவந்து அரன் சன்னிதானத்தில் நின்று போற்றி அவுணரால் அஞ்சினோம் எம்மைக்காத்தருளும். இன்று நீயருள்செயாதிருப்பின் அண்டமெலாம் உண்டிடுவர் என்னலும் தேவர்களை நோக்கி நீங்கள் அஞ்சாதீர்களென்று அபயம் ஈந்து ருத்திரர்களைநினைத்தார். உடனே அவர்களும் வந்து போற்றி நினைத்தருளிய காரியமென்ன பணித்தருளவேண்டுமென்றுவேண்ட ஈசன் அவுணரைக்கொன்றுதேவரைக் காப்பீராக என்றனர். உடனே அவர்களுஞ் சென்று அவுணரைக்கண்டு போர்செய்து கொன்றனர். தேவர்கள் பூமாரிபொழிந்து ஆர்த்தனர். களிகொண்டு கூத்துவந்து ஆடினர். ருத்திரகொடியர்கள் அவுணராகிய அநேகம்உயிர்களைக்கொன்றோமே என்று மனம் நைந்து கைலைசென்றனர். கைலையில் நாதனைக் கண்டு தொழுது நின்னருளால் அவுணர்களைக்கொன்றோம். அவர்கள் தீயவர்மகானாலும் முன் இவர்கள் நல்வரம் முடித்தவர்களல்லவா? எந்த உயிரானாலுங் கொன்றால் வினைகவிந்துகொள்ளுமே அதனால் அத்தீவினை நீங்குதற்குப் பரிகாரந்தேடினோமென்னச் சிவபெருமான மறையோர் முனிவர், தேவர்களுக்சாகத் தீங்குசெய்தால் தீங்காகாது. நீங்கள் இதற்கு அஞ்சினால் எம்மை அருச்சனை புரியும் என்றார். அதற்கு ருத்திரகோடிகள் பின்னை அருச்சிக்க ஏற்றதலம் உரைத்தருளவேண்டுமென்று கேட்கச் சிவபெருமான் சொல்லுகின்றார். எனக்குப்புவியில் பலதலங்கள் உண்டென்றாலும் அவற்றிலெல்லாம் மிக்கது நெல்வேலியே அதுபோலச் சித்தியும்முத்தியும்நல்கவல்லதுவேறில்லை அங்கே சென்று தவஞ்செய்யுங்கள் என்றனர். உருத்திரகோடிச்சுரர்களும் பணிந்து விடைபெற்றுத் தாய் நாடிவருங் கன்றுபோல் மிக்கவிருப்பத்துடன் நெல்லைமாநகரத்தில் வந்துசார்ந்து சிந்துபூந்துறை நீராடிப்பின் பொற்றாமரை நீராடி வடிவாளை வணங்கித் தொழுது பிரகாரங்களை எல்லாம் சூழ்ந்துபோற்றி

திருமூலலிங்கநாதரையும் ஆதிலிங்கத்தையும் அனவரததான நாயகரையும் முருகக்கடவுளையும் விநாயகக்கடவுளையும் மற்று முள்ள எல்லாத்தேவர்களையும் முறை முறை போற்றி இறைவர் சந்நிதியில் வந்து நின்று எமக்கருள்செய்யவேண்டுமென்று துதித்தனர். அப்பொழுது சிவபெருமான் கோடிலிங்கரூப மாக இருந்தார். கண்டு அதிசயமுற்றுத்துதித்து எனக்கெனக் கென்று ஒருவர் முன் ஒருவர் நெருங்கிச்சென்று ஒவ்வொரு வரும் ஒவ்வோர் லிங்கத்தைப் பூசைசெய்தார்கள். பற்பல துதிகள் சொல்லினார்கள். கங்கையணி கடவுள் காட்சிகொடுத் தபோது தலத்திற்குந் தீர்த்தத்திற்குந் தேவிக்கும் ஈசரா! உனக்கும் உருத்திரகோடி என்றபேரிருக்கவேண்டும். இந்தத் தலம் எல்லாத்தலங்களுக்கும் இருதயத்தலமாக இருக்கவேண் டுமென்றும் வரங்கள்வேண்டிப் பரஞ்சோதி வடிவமாய் நின் றார். மண்விண்மற்றை யண்டங்களெல்லாம் ஒடுங்க அவற்றிற் கெல்லாம் மேலாக எம்பெருமான் நின்றதவப் பேரொளியிற் கலந்து நின்றனர். தேவர்கள் முனிவர்கள் எல்லோரும் ஆர்த் தனர். ருத்ரகோடியோர் போற்றினதினால் இத்தலத்திற்கு ருத்ரகோடி என்றுபெயராயிற்று. இந்தப்பெயர் கூறுவோர் இருவினை நீங்கி இன்பவீடெய்துவர் என்று சூதர் கூறி மேலுங் கூறுகின்றனர்.

---

## ௬௮-வது, இபபுரிச் சருக்கம்.

---

வாரண முரித்த கோவை வானவ ருய்ய வென்றே
வாரணக் கொடியோன் றன்னை வளம்பெறத் தந்த தேவை
வாரண மணிந்த முன்னை மகிபதி போற்றும் வெள்ளை
வாரணக் கருளு வோனை வாயுற வாழ்த்து வோமே.

தேவேந்திரன் தேவர்களெல்லாந்துதிக்க அரசாகிவீற்றிருந் துதேவ போகங்களை எல்லாம் அநுபவித்துக் கொண்டு வருகை யில் அவனுடைய வாகனமாகிய வெள்ளையானை அமுதம் உண்ட களிப்பினாலே மதம்பெருகி மலைகளையும் மரங்களையும் பேர்த்தெ றிந்துகொண்டே மேருமலையை விட்டிறங்கி அங்கு ஒருதண்கா

வில்வந்து தங்கிற்று அந்நாள் ஒருபெட்டையானையைக் கூடிலீலை செய்துதேவலோகத்தைமறந்து புனிதம் நீங்கித்தன்பெயரையும் மறந்து பூமியையுந் தடம்பொழிலையும் மறவாது இதுவே பெரு வாழ் வென்றிருந்தது. உலகத்தோர் இதுபொய் என்றெண்ணுத படி உத்தயயானைகளுக்கெல்லாம் முகத்திற் புகர்மல்கப்பிரமன் வழங்கினன். இன்னும் பட்டத்திற்குரியர்பலரிருந்தால் யானைக் குத் தொடையல் புனைந்து பொற்கண்ணைக்கட்டி விடுதல் கட னாகும். அவ்யானைகொணர்ந்தவரையே அரசராக்க வேண்டு மென்றும் பகர்ந்தான் இஃதிப்படியிருக்க அவுணர்கள் தேவ லோகத்திற்படை எடுத்து வந்தனர். தேவர்கள் எதிர்த்துப்போர் செய்து ஆற்றாராகி இந்திராணியுடன் போகவின்பம் அனுப வித்துக்கொண்டிருக்கும் இந்திரனிடத்திற் சரண்புகுந்து தம் துயரைச் சொன்னார்கள்.

உடனே இந்திரன் இந்திராணியை விட்டு நீங்கி மணிமே டைக்குவந்து தேவர்களை அஞ்சவேண்டாமென்று கூறிப்போ ருக்குச்செல்லுதற்காக வெள்ளையானையைத்தேட அதுகாணுமை யால்,ஞானதிருட்டியால்புவியில்பெட்டையானையோடிருப்பதைக் கண்டு இனி நமக்குருவேண்டாம் அதன் அழகு அழிவதாக என் றுசபித்தான். உடனே வெள்ளையானைக்குச் சாபங்கிட்டியதால் அழகும் பலமும் அருளுங் கேட்டேக மிகநலிந்து துயருற்றது.

அந்தரத்திருந்து வந்த கந்தருவன் ஒருவனால் இந்திரன் சா பத்தால் இதுநேர்ந்தது என்று தெரிந்து கொண்டது. அந்தச் சமயத்தில் சிவபெருமான் வாழும் பலதலங்களுஞ் சென்று துதித்துவரும் நாரதனைக்கண்டு தொழ, அதன் நிலையை உணர்ந்த ஞானமுனி அஞ்சேல் உலகத்தில் மிக்கதலங்கள் எண்ணூறாகும், அதிலும் மிகஉயர்வுடையது அறுபத்தாறு, அதிலும் வேட்டவை யுகவும் தலம் பதினாறாகும், அவற்றில் எட்டுபாவம் போக்கும். இதில் ஐந்து முத்திகொடுக்கும். அந்தஐந்து தலத்தில் திருவா ரூரில் பிறக்க முத்திதரும், தில்லைதரிசிக்கமுத்திதரும் அருணாச லம்நினைக்க முத்திதரும், காசிஇறக்க முத்திதரும், நெல்லைபிறந் தாலும் இறந்தாலுந் தரிசித்தாலும் நினைத்தாலும் முத்திதரும்.

என்று கூறி அதன் சிறப்புகளை எல்லாம் விளங்கச்சொல்லி நீ அந்தநெல்வேலியில் சென்று திருமூலலிங்கத்தையும் வேணுலிங்கத்தையும் பூசித்தாயானால் இந்திரன் இட்டசாபம் நீங்குமெனஉடனேயானையும் நன்றென்று பணிந்து விடைபெற்றுப் பல தலங்களையுந் தரிசித்துங் கொண்டே நெல்லையில்வந்து சிந்துபூந்துறைபொற்றாமரை முதலிய தீர்த்தங்கள் ஆடி வடிவாளையுந்திருமூலலிங்கத்தையும் வேணுவனலிங்கத்தையும் மற்றைய மூர்த்திகளையும் முறையேதரிசித்துச் சாபம் நீங்கும் பொருட்டு பொற்றாமரையில் மூழ்கி நீர்முகந்து மூலலிங்கம் வேணுலிங்கம் ஆகிய இரண்டுலிங்கத்திற்கும் நீராட்டி மலர் கொண்டு அருச்சித்து மறைவிதிப்படி பூசித்துப்போற்றிற்று.

இந்தவிதமாகப்பன்னிரண்டு வருஷம் பூசைசெய்ய லிங்கத்தூடு எம்மான்றோன்றி இந்திரன் இட்டசாபத்தை நீக்கி வேண்டும் வரங்களை ஈந்து மூலலிங்கத்துள் மறைந்தார். நெல்லைநாதனைத்தரிசிக்க வந்த இந்திரன் அந்நாதன்றிருவருளால் தன்யானையைப்பெற்று புகழொடுதன்பதி புக்கான் என்று கூறிச் சூதர்மேலுஞ் சொல்லுகின்றார்.



## ௬௬-வது கச்சபாலயச் சருக்கம்.

காரொரு நிறத்தன் ஆமைக் கவினுருப் பெற்று வாரி
பேரொரு மண்ணு மெல்லாம் பேதுறச் செய்த காலை
சீரொரு கோட்டுப் பிள்ளாய் செல்கென வனுப்பி மாலின்
கூரொரு மமதை கொன்ற கூத்தனை நயந்து வாழ்வாம்.

முனிவர்களே மாயன் ஆமையாய்ப்பூசை செய்ததைச்சொல்லுகின்றேன் கேளுங்களென்று சூதர் கூறுகின்றார். காலத்தின் நீளவுங்கட்டற்று இறக்கும்பொழுது உயிர்களின் இளைப்பை மாற்ற மனத்தில் எண்ணி அண்டமெலாந்தொலைத்து பரையொடும் நாதன் இருந்தான். உலகெலாம் அழிவுறுங்காலத்து எம்பெருமான் நெல்லையில் லிங்காகாரமாக இருந்து ஐந்தொழிலையும் நடத்திவருவன். மால் அயன் முதலியோர்க்கு அருள் செய்து முறையே காத்தல் படைத்தற்றொழிலைச் செய்வன்.

இந்திரன் வெள்ளையானையின் மேல் பொன்னுலகத்தில் பவனி வரும்போது துருவாசர் எதிரே தோன்றித் துளவமாலை ஒன்று தந்தான் அதனை இந்திரன் செல்வச்செருக்கால் தோட்டியால், வாங்கிவெள்ளையானையின் மத்தகத்தில் வைத்தான். அது அதனை எடுத்துக் காலில் வைத்து மிதித்துக் கசக்கியது. அப்பொழுது முனிவர் சினந்து நின் செல்வம் அழியக் கடவதெனச்சபித்து விட்டார். அச்சாபப்படி செல்வமெல்லாங் கடலிற் போகவே தேவர்களெல்லாங்கடலைக்கடைந்து எடுப்போமென்று மந்திர மலையைப்பிடுங்கிக் கடலிலிட்டனர். வாசுகியைக்கயிறாகக் கொண்டுஒருபக்கந் தேவரும் ஒருபக்கம் அமரருமாகக் கடைந்தனர் அப்பொழுது மந்தரகிரிசாய்ந்தது. இதற்கு மாலேயுதவிசெய்வனென்று வந்து பொன்னடிவணங்கி நிகழ்ந்தனவெல்லாங்கூறி வேண்ட மாலும் இசைந்துவந்து பெரிய ஆமையாகத்தாங்கினர்.

சிவபெருமானுக் கறிவிக்காது இது தேவர் செய்தாராகையால் கடையும்போது ஆலகாலவிடம் எழுந்தது. அதுகண்டு மால் முதல் தேவரெல்லாம் அஞ்சி ஓடித்தஞ்சமின்றிமஞ் சுறைச் சடைப்பரன் கஞ்சமலர்ச்சேவடி சரண் வேண்டினர். அவரவர்களுக்கருள் செய்ய விரும்பி அவ்வாலகாலத்தை உண்டார். அது கண்டத்திற்கு மேற்கடக்கும் வலியில்லாததினால் அது கண்டத்திலேயே நின்றுவிட்டது. பின் தேவர்கள் எம்பெருமானைப் போற்றித் திரும்பவுங் கடைந்தனர். அப்பொழுது முன்னே மூதேவி தோன்றினாள். அவளை வருணனுக்கு ஈந்தனர். மருத்துவர் தோன்றினர் அவரைப பண்டிதராக வைத்தனர். அரம்பைமாதர் அறுபத்தாறு கோடியர் தோன்றினர். அவரை வானச் சிலதியராக்கினர். சுரை எழுந்தது அதைத் தேவர் கைக்கொண்டு சுரரேயானர்- அதனை அருவருப்புற்று நீத்த அவுணரும் அசுரராயினர். பின் எழுந்த திருமகளையுங்கவுத்துவமணியையும் மால்கொண்டார். தருசங்கநிதி முதலியவற்றை இந்திரன் கொண்டான் பிறகு அமுதம் எழுந்தது அதனைக்கண்டு தேவரும் அவுணரும் போர்புரியலுற்றார்கள்.

உடனே மால் மோகினியாகி அமுதகடத்தை ஏந்திச் செல்ல அவுணரெல்லாம் மோகினிமேல் காதலால் மயங்கி வீழ்ந்த

னர். தேவரெல்லாம் தம் நிலைகலங்காதிருந்தனர். மால் தேவர்களுக்கு அமுதிடும்பொழுதிராகுஎன்பவன் கரவில் தேவர்போல் வேடந்தாங்கி அமுதுண்ணச் சூரிய சந்திரர் குறிப்பாற் காட்ட மாலாகிய மோகினி கைச்சட்டுவத்தாலடித்து தலைவேறு உடல் வேறாக்கினள். தலைராகுவாகவும் உடல் கேதுவாகவும் விளங்கி தமக்கின்னல் வருவித்த சூரிய சந்திரரையும் தொடர்ந்து முறையே பற்றி வருகின்றனர். அமுதுண்ட தேவர்கள் தம் உயிரை ஓம்பி அவுணரை வென்று கடலிற் கவிழ்ந்ததிருவும் பெற்று இன்புற்று வாழ்ந்தனர்.

ஆமையாகிய மால் நீடுறவளர்ந்துகடலெலாங்கலக்கி யுலகெலாங் கலங்கும்படிச் செய்தான். அதுகண்டு தேவர்கள் நடுங்கி சிவபெருமானிடஞ் சென்று எம்மை முன் ஆலமுண்டு காத்தது போலவும், மால் மீனமாகிய காலத்து உலகினுக்குப் பெருந்துயர் செய்தபொழுது அம்மீனின் விறடக்கிக் காத்தது போலவுங் காத்தருளவேண்டுமென்று வேண்ட எம்பெருமான் அஞ்சலென்றருளி விநாயகரை நோக்க அவரும் கடல்நீரையுண்டு. ஆமையை வெளிப்படுத்தித் தரையிற்கிடத்திக் கொம்பினாற் குத்திக் குடைந்து ஓட்டைஎடுத்து வந்து தந்தைதாளில் காணிக்கையாக வைத்தார். தந்தையும் மகிழ்ந்தார் தேவர்களும் மற்றையவரும் பூமாரி பொழிந்து ஆர்த்துப் போற்றினர். தேவர்கள் வேண்டுகோளின்படி ஆமையோட்டை அணிந்தருளினர்.

பின்பு.மால் சோர்வு நீங்கித் துதித்துவேண்ட நீ நம் சிறந்த பதியாகியநெல்லையில்வந்துஎம்மைப்பூசிக்கவேண்டுமென்றார் அவ்வாறே மால் நெல்லைநாதனைப் பூசித்துப் பெரும்பேறு பெற்றான். கச்சப உருவோடுமால் எம்பெருமானைப் பூசித்து பேறு பெற்றதினால் இந்நகர்க்குக் கச்சபாலயம் எனப்பெயர் வந்தது. மால் என்று நெல்லைநாதனைத் தரிசித்துக்கொண்டும் பூசித்துக் கொண்டும் இருப்பதாலும், தன் ஒவ்வொரு அவதாரத்திலும், வந்து தரிசித்துச் செல்வதாலும் இந்நகர்க்குவிண்டுபுரமென்றும் பெயராம் என்று, சூதர்முனிவர்களுக்குக் கூறி யருள முனிவர்கள் இன்னும் நெல்லைநாதன் பெருமைகளைக் கூறியருளவேண்டுமென்று வேண்டச் சூதர் கூறுகின்றார்.

## ௧௦௦-வது, பிரமவிருத்தபுரச் சருக்கம்.

பதியெலா மழியு மூழி பலபல வரவுஞ் சற்றும்
முதிமதா நிலையின் மாரு முறைபெறு நெல்லை தன்னில்
விதியெனுக் கூறும் பல்லோர் விளங்கிடு தவத்தைச் செய்த
துதியொடே யிருப்ப ரந்தத் துகளறு நகரம் வாழி.

பெருமான் வாழும் நெல்வேலி பிரளையங்களெல்லாம் வந்துற்ற காலத்தும் அழிவில்லாது பூருவமாய்ச் சத்திசிவம் நீங்காது நித்தியமாக இருக்க விளங்கும் பிரமர் அளவிலா பூசித்து இதிலேயே வதிந்திருப்பதனால் இதற்குப் பிரமவிருத்தபுரம் என்றும் பெயராகும்.

## ௧௦௧-வது தசரதராமன் பூஜைபண்ணிய சருக்கம்.

தசரத ராமன் முன்னாள் தமிழ்முனி யொடுமே வந்து
மசரத மனைய வாழ்க்கை வன்குல வரக்கர் தம்மை
நிசரத மாகக் கொல்ல நெல்லைவாழ் தேவைப் போற்றி
வசரத பாணம் பெற்ற வளத்தவன் புகழ்கள் வாழி.

தசரதராமன் நெல்லைநாதனைப் பூசித்த கதையைச் சொல்லுகின்றேன் கேளுங்களெனச் சூதர் சொல்லுகின்றார்.

மால் முன்னொருகற்பத்தில் அயோத்தியில் தசரதருக்கு மகனாக ராமனெனும் பெயரோடுபிறந்து தாய் சொற்படி நாட்டைத் தம்பிக்குத் தந்து தவவேடம்பூண்டு மனைவியொடுகாட்டிற் சென்று வசிக்கும் பொழுது கோதாவரியில் சுப்பிரமணியரை வைத்து வணங்கி அவ்விடத்தில் அபிராமேசுரரென இலிங்கம் வைத்துப்போற்றி வரம்பெற்றான். மாரீசனாகிய மாயமானைத்தொடர்ந்துபோம்வழியில் கயத்தாற்றில் வில்லினால் கீறிப்பொருனையை அழைப்பித்து மேல்பாலில்லிங்கம் வைத்துப் பூசை பண்ணிக் கோதண்டராமரென நாமமுங்கூறிப்போனான்.

மாயமானை மானூரிற் கொன்றபின் தம்பி போகும் பன்னசாலை சென்று சீதையைக்காணாது சோகமுற்றுச் சோகந்தவிர்ப்பவர் கும்பமுனியே என்று அவர்பால் வந்து வணங்க அவர்

சொல்லியபடி நெல்லைக்குவரும் வழியில் சடாயுக்கு ஈமக்கடன் கழித்து பொருநைநதிக்கரையின் மேல்பாற்சிவபெருமானைவைத்துப் பூசைபண்ணி ராமேசரெனக் கைகுவித்துச் சேவை செய்து போற்றி அதற்கருச்சமீபத்திலுள்ள உருத்திரபாதமும் போற்றி பின் அகத்தியமுனிவருடன் நெல்லைவந்து சிந்துபூந்துறை பொற்றாமரை முதலிய தீர்த்தங்களிலாடி வடிவுடையாளையுந் திருமூலநாதரையும் வேணுவனநாதரையும் மற்ற மூர்த்திகளையும்போற்றித் தட்சணாமூர்த்திசன்னிதானத்தில்வரும்பொழுது அகத்தியர் ராமருக்கு ஐந்தெழுந்தையுபதேசிக்க ராமரும் நீறுகண்டிகையணிந்து நெடுங்காலந்தவஞ்செய்தார். சிவபெருமானிடத்தில் பாசுபதாஸ்திரம் முதலிய பெற்றுக் கடல் கடந்து சென்று ராவணாதி ராட்சதர்களைக் கொன்று சேதுவில் வந்து தான் பல உயிர்களைக் கொன்றபாவம் நீங்க லிங்கம்வைத்துப் பூசித்து ராமனாதனெனப்பெயரிட்டுப் போற்றித்துதித்து பெரும் வரங்கள் பெற்று அயோத்தியிற்சென்று இனிது அரசு செய்திருந்தார் என்று சூதர் கூறிமேலுஞ்சொல்லுகின்றார்.

## ௧௦௨வது, தலமகிமை கேட்ட கிருட்டினனுக்குப் புத்திரனுதவிய சருக்கம்.

பனைவனப் பதியின் சீரைப் பண்புடன் கும்பன் சொல்ல
இணையிலாக் கண்ணன் கேட்டே யெழின்மகப் பேறு பெற்றான்
கணைவிழி மாத ராசைக் கடல்விழுந் தேங்கு நெஞ்சே
துணையென நெல்லை நாதன் தூவடி யடைக நீயே.

முனிவர்களே கிருட்டினன் தல மகிமை கேட்டுப்புத்திரப் பேறு பெற்ற கதையைச் சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

கண்ணுதலோன் அருளால் வசுதேவன்பால் மால் புத்திரனாக வுதித்துக் கிருட்டினன் என்னும் பெயரோடு விளங்கினான். மண்ணும் விண்ணும் போற்ற அரசாண்டுவருங்காலத்துத் தனக்குப் புத்திரப்பேறில்லாமையால் கைலைக்குச்சென்று சிவபெருமானை அருச்சித்துத் துதித்து வேண்ட கண்ணுதலார் காட்சிதந்து

நெல்லைக்குவந்தால் நீ கேட்கும் வரம் தருவோம் என்று கூறி நெல்லைக்குவந்தார். கிருட்டினனுந் தொடர்ந்து வந்து கும்ப முனிவர்பால்திருநெல்லைப்பதியின் புராணத்தைக்கேட்டுக்கொண்டு தினந் தினம் நெல்லைநாதரைப் பூசித்துவந்தான். நெல்லைப் புராணங்கேட்டு முடிந்தவுடன் தான முதலியன ஈந்து நெல்லை நாயகனைப்போற்றி நிற்கையில் சிவபெருமான் காட்சிதந்து நீ நெல்லைப் புராணங்கேட்டமையால் உனக்குப் புத்திரப்பேறு உண்டாகுமென்று கூறியருளி இன்னும் வேண்டும் வரங்களெல்லாம் ஈந்து திருமூலலிங்கத்துக்குட் கலந்தருளினார். பின் கிருட்டினன் போற்றித் தன்மனையோடுஞ் சேனையோடும் தன் நாட்டிற் குவந்து வாழ்ந்திருக்கையில் தன்மனைவி சாம்பவதி வயிற்றில் கற்பமுண்டாகி நாள் நாளும் வளர்ந்து பத்தாமாதத்தில் ஒரு புத்திரனைப்பெற்றாள். அப்புதல்வனுக்குஞ் சாம்பனென்று பெயரிட்டு இனிது அரசுபுரிந்துவந்தான் என்று சூதர்கூறி மேலுஞ்சொல்லுகின்றார்.

## ௪0௩-வது, பொற்றாமரையில் முழுகின பெண்களுக்குப் புடவைகொடுத்த சருக்கம்.

பொன்மலர்த் தடத்தில் முன்னாள் பொருந்தவந் தாடும் மாதர்
இன்கலை கவர்ந்து பின்னால் இன்புடன் தந்தே யாடல்
பொன்மலை வில்லி செய்த புகழினைக் கற்றோர் நாளும்
மன்னிய செல்வம் பெற்று மகிதலத் தரசா வாரே.

ஓ முனிவர்களே ஆதிநாயகர் நெல்வேலியில் விளையாட்டாக மாதர்கள் கலைகளைக் கவர்ந்து பின் வழங்கிய கதை சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

முன்னொருகாலம் கோடை முதிர்ந்த வேனிற்காலத்தில் நெல்வேலியிற் கன்னியர் பலருங்கூடிவெம்மை தவிர்க்கக் குளிர்ந்த நீருடையதென்று ஆலயத்துள்ளிருக்கும் பொற்றாமரையில் வந்து ஆடைகளையும் அணிகளையும் கரையிற்களைந்து வைத்துவிட்டு நீரினுள் இறங்கிப் பலவிதமாக லீலைகள் செய்தனர். அப்பொழுது தாருகாவனத்து முனிபத்தினிகளுக்கு முனவந்த உருவோடு வந்தார்.

மாதரெல்லாம் நாணி இவரார் இவர் நின்ற நிலை நன்றா யிருக்கிறது ஓ திகாம்பரரே! தூரப்போம் நாங்கள் ஆடையடுத் தபின் வாரும் என்றனர். அப்பொழுது எம்மான் திருவரு ளாற் சூறைக்காற்று வந்து அவராடைகளை எல்லாம் எடுத்து அந் தரம் பறந்தது மாதர்களெல்லாம் மனம்வருந்தி ஓ பெரிய வரே உம்மை நாங்கள் கருத்தை விட்டு மறக்கவில்லை எங்கள் ஆடையைத்தாரும் என்று துதித்து வேண்ட குழகனார் கலை களைத்தந்து மறைந்தருளினர். கலைகள் முன்வைத்த இடத்தி லிருப்பவுடுத்துக்களிகொண்டு எம் நெல்லைநாதரின் திருவிளை யாட்டென்று துதித்தனர். நகரமாந்தரும் அரசனும் இது தெரிந்து மாதரைக்கண்டு கண் களிகூர்ந்து இறைவனைத் துதித் தனர். ஆகையால் அந்தத்தாமரை வாவியில் நீராடுவோர் ஆடை நீத்து ஆடுதல் கூடாது, ஆடின் நரகடைவர். சிந்து பூந் துறை பொற்றாமரை இவற்றில் பத்தியொடு ஆடிப்பரையையும் நாதரையுந் துதிக்கின பரகதி சேர்வரென்று கூறிச் சூதர் மேலுஞ் சொல்லுகின்றார்.



## கஙசுவது, காமவேதியனுக்குக் காமவேதனை தீர்த்த சருக்கம்.



சுந்தரற் கந்நாள் தூது தோகைநற் பரவை பாலாய்
முந்துறச் சென்ற நாதன் மொய்குழ லொருத்தி யில்லில்
சிந்தையில் வருந்தி வாடுந் திருவிலாக் காம வேதன்
நந்தலில் களிப்புக் கொள்ள நடந்தினி திசைவித் தானே.

ஓ முனிவர்களே! திருநெல்வேலிநாதன் காமவேதியன்காம வேட்கை தீர்த்தகதையைச் சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

திருநெல்வேலி மாநகரில்வாழும் ஒருவேதியன் சாத்திரம் கருமம் அனுட்டானம் எனபவை எல்லாம் விட்டுக்காமத்தில் மு ழுகிக்கிடந்தான். இவனுக்கு கோயிலில் விளக்குப் பார்க்கும் வேலை. இவன் தன்பொருளை எல்லாம் ஈந்து மாதர் நலம்அனு பவித்து வரும்பொழுது இவன்கையிற் பொருளில்லாது போக,

வேதிருடிப்பொன் கொடுத்துங் கோயிற்சோறுதந்துங் கோதை யரைக்கூடிவந்தான். ஒருநாள் எந்தவிதத்தும் பணங்கையிலில் லாமலிருந்தும் தான் விரும்பிய ஒருத்தி வீட்டிற்குப்போனான் அவள் இவன்கையிற் பணமில்லாமையால் பணமில்லாது இங்கு ஏன்வந்தாய்? என்று துரத்திவிட்டாள். உடனே வேதியன் கோயிலில் வந்து நாதனே நான் அவளைச்சேர்தற்குப் பொன்தாரும் இல்லாவிட்டால் உன்சந்நிதியில் இறப்பேனென்றான். அப்பொழுது இறைவர் ஒருவேதியக்கிழவன் போல் ஒருபதக்கத்துடன் வந்துதோன்றி நீ யார்? ஏன் வரதனை நினைத்தாய் உன் துயரமென்ன? என்று கேட்க நான் பெண் ஆசையாலயர்ந்தேன் பொருளின்றி என்னையாளுடைய நாயகனை நினைத்தேன் என்றான். அதற்கு அவ்விருத்தவேதியன் கன்னிபாகனையுபாதிப்பது ஏன்? அவள் இணங்க நான் சொல்லுகின்றேனென்று கூறிக் களமிருண்டவன் முன்செல்லக் காமவேதியன் பின்செல்ல அவள்வசிக்கும் மனையிற்சென்று அவ்வரிவையைநோக்கி இந்த வேதியனை அணைகவென்று சொல்லிப்பதக்கங் கொடுத்து இருவரையும் ஒன்றுகூட்டுவித்து மறைந்தார்.

நெல்வேலியமலன் ஒரு வேதியனுக்கு முன் எளியனாக வந்தெய்தினான். அவ்வமலர் பெருமை எவரே கூறவல்லார் என்று கூறிச் சூதர் மேலுஞ்சொல்லுகின்றார்.



## ௬௦௫-வது உபாத்தியாயராகவந்து பிள்ளைகளுக்கு ஓதுவித்த சருக்கம்.



நால்வருக் கினிய யோகு நலமுறக் காட்டி ஞானம்
மேல்வரச் செய்த பெம்மான் வேதியப் பாலர் கற்க
நூல்தரு குருவாய் வந்து நுண்பொரு ளோதி யன்னம்
வேல்விழி மனையி லுண்ட விதம் புகல் பவரே யுய்ந்தார்.

நெல்லை நாதன் உபாத்தியாயராகவந்து பிள்ளைகளுக்கு ஓதுவித்தசிறப்பைக் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

இந்த நெல்லைமாநகரத்தில் உள்ள வேதியர்களெல்லாந் தம்புதல்வர்க்கு ஓதுவிப்பாரின்றி மிகவருந்தும் பொழுது சிவபெருமான் இவர்களுக்கு அருள்செய்ய விரும்பி ஒருவிருத்த வேதிய உருவொடுவந்தார். அதுகண்டு அந்தணர்கள் நீர்யாரென்றுகேட்க, அவர் என்னகரம் காஞ்சி, புலஸ்தியன் மரபில்வந்தேன். நான் ஒரு உபாத்தியாயன் இங்குபிள்ளைகள் உண்டேல் ஓதுவிப்பேனென்று கூற, அவர்களும் அதியாநந்தங்கொண்டு நிலம் மனை பொன் தானியங் கொடுப்போம் எம்பிள்ளைகளுக்குப் போதியுமென வேதியர்எனக்கு அதெல்லாம் வேண்டாம் ஒருநாளைக்கு ஒருவேளை அன்னம்படைத்தால் போதும் என்று சொல்ல, அவர்களுஞ்சரியென்று ஒப்புக்கொண்டு தம் பிள்ளைகளை எல்லாம் அனுப்பினர். இவரும் எல்லோருக்குங் கல்வி கற்றுக்கொடுத்து ஒருநாளைக்கு ஒரு வீடுமுறையாக உண்டுவந்தார். இவர் இப்படி உண்டுவரும்பொழுது ஒரு நாள் ஒருவிளையாட்டுச் செய்யக்கருதி ஒரு எளிய வேதியன் வீட்டுமுறையன்று சென்று எனக்கு மிகப்பசிக்கிறது சோறுபோடும் என்றனர். அப்பொழுது அவள் ஓ சுவாமி! இப்போது இங்கிருப் ஒருகணப் போதில்போடுவேனென்றாள். அதற்கவர் சிறிது இருந்ததைச் சீக்கிரங் கொண்டுவா என ஐயரே இங்கிருப்பது பழயதும் அரிசியுமே என அதனைக்கொண்டுவாஎன்றார். அவள் இருந்த பழயதெல்லாங்கொண்டுவந்துபோடப் போட அதை எல்லாம் உண்டு இன்னுங்கொண்டுவா இன்னுங்கொண்டுவா என்று பழயசோற்றையெல்லாம்உண்டு அரிசி காய் கனி முதலியவற்றையும் உண்டு இன்னும் பசிக்கின்றது இன்னும்கொண்டுவா என்றனர். அவளும் தன் அயல் வீட்டிலுள்ளவைகளையும் வாரிக்கொணர்ந்துபோட அவற்றையும் உண்டு இன்னுங்கொண்டுவா என்றனர். அப்போது அவள் அஞ்சி நடுங்கி நான் இனிக்கொண்டுவர எங்கினிப்போவேன்? என்று கூவெனமுறையிடலும் எல்லோருங் கூடிவந்து பார்த்திடவும் விளங்கொளியுருவமாய் மறைந்தான். அதுகண்டு எல்லோரும் புகழ்ந்து பாடினர். இவர்பால் கற்றபிள்ளைகளெல்லாம் ஞானமாமுனிவரே யாயினர். அந்தணரெல்லாஞ் செல்வராய் வாழ்ந்தனர். அன்னமிட்ட பெண்களும் பெரும்பதம் பெற்றனர். என்று சூதர் கூறியருளினார்.

## ௧0௬-வது, பாடுவான் மகன்துயரந் தீர்த்த சருக்கம்.

நீடுவார் கலியா லன்பர் நிலமிசை யின்னல் சேர
வாடுவா ரென்று கொண்டு வளந்தர நெல்லை வாழ்வோன்
பாடுவான் மகனுக் குற்ற படுதுயர் களைந்த வன்மை
நாடுவார் தாமே கைலை நாடிவாழ் தரத்த ரம்மா.

ஓ முனிவர்களே! எம்பெருமான் பாடுவானின் மகன்துயரந் தீர்த்தகதையைச் சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்கின்றார்.

திருநெல்வேலியில் அறிவுமிக்க கல்விவல்ல பாடகனாகிய ஒருசிவனடியான் இருந்தான. அவனுக்கு வாமசாமென்று ஒரு மகனிருந்தான். அவனுக்குப் பதினாறு வயதுவந்தவுடனே பெண்கள்மேலாசைகொண்டு பல மாதர்களைக்கூடித் தன்கைப்பொருளை எல்லாம் அழித்தான். கைப்பொருளழிந்தவுடன் திருடிக்கொடுத்துப் பெண்களை மருவிவந்தான். ஒரு நாள் ஒரு வணிகன்வீட்டில் ஒரு பூடணப்பெட்டியைத்திருடி அதைக் கோதைபால்கொடுத்து மகிழ்ந்துகூடி அவளைவிட்டுப்பிரியாது வாழ்ந்து வந்தான். வணிகன் தன் அணிப்பெட்டியைக் காணமற்போனவுடனே அரசனிடந் தெரிவித்தான். அவனுங் காவலர்களைக்கொண்டு கள்வனைத்தேடிப்பிடிக்கச்செய்து உன்பொருளை வாங்கித்தருகின்றேனென்று சொல்லியிருந்தான். ஒருநாள் அக்கன்னிகை அப்பேழையில் ஒருஆபரணத்தையெடுத்து விற்கக்கடைக்குக்கொண்டுபோய் விதிவசத்தால் நகையை இழந்த செட்டியிடத்திலேயே விற்கவந்தாள். அவனும் தன்நகை என்றுகண்டு வந்தவிதமெல்லாம் விசாரித்துக்கொண்டு அரசனிடத்தில் தெரிவிக்க அரசனும் அவர்களை விசாரிக்க அவர்களும் உண்மை புகன்று ஆபரணங்களைக்கொண்டுவந்து கொடுத்தனர். அப்பொழுது வணிகன் வஞ்சனையாய் ஒரு வளையல்காணேனென்று பொய் சொல்லினன். அரசன் பாடுவான் மகனைக்கேட்க அவனும் இல்லை நான் அதில் பார்க்கவில்லை என்றான். பின் அரசன் சிறையிலிட்டான். இது அறிந்த பாடுவான் தன் மகனுக்கு ஏதேனும் ஆபத்து வந்துவிடுமே யென்றஞ்சி நெல்லைநாதன் சந்நிதியிற் சென்

று முறையிட அவரும் பாடுவானுக்குப் பொற்கடகந்தர அதைப் பாடுவான் வணிகனுக்கு ஈந்து தன் மகனை மீட்டுக்கொண்டுவந் தான். வணிகன் அக்கடகத்தின் வனப்பைக்கண்டு நல்லவிலைக் கு விற்கலாம் என்று இரவெல்லாந் தூங்காது இருந்து விடிந்த வுடன் பெட்டியைத் திறந்து பார்க்க எல்லாம் நாகமாக இருக்கக் கண்டுபயந்து அரசனிடஞ்சொல்ல, அரசன்பாடுவானை அழைத்து நிகழ்ந்த சங்கதியெல்லாந் தெரிவிக்க வணிகனுந் தான் செய்த தப்பிதத்தைக் கூறி நான் ஆசைப்பட்டு உள்ளதையும் இழந்தே னென்று, அரசனும் பாடுவானும் அவன் மைந்தனும் ஆலயத் திற்கு முன் செல்லத்தானுஞ் சென்று நெல்லை நாதனை வணங் கித் தோத்தரித்து இனிது வாழ்ந்து வந்தனர் என்று சூதர் கூறி மேலுஞ் சொல்லுகின்றார்.

## கள்ள வேதியன் பாவந்தீர்த்த சருக்கம்.

நெல்லையி லமர்ந்த தேவை நித்திய மளிக்குங் கோவை
எல்லையி லடியார் தம்மை யின்புறக் காத்து மென்மேல்
ஒல்லையே ஞான மூட்டு மொருவனை விடங்க ளுண்ணும்
தொல்லையாம் பவத்தை நீக்குந் தூயனைத் துதிப்பா மன்றே.

நெல்லைமா நகரத்திலே ஒரு வேதியன் பெண்பால் வைத்த மோகத்தால் வேதம், கருமம், நியமம், முதலிய வேதியர்க்குரிய வெல்லாம் மறந்து வேல்போலும் விழியார்மேல் ஆசைகொண்டு திரிந்து விடனென்னும் பெயரோடிருந்தான். ஒரு கன்னி ம னையில் கலவி செய்து தூங்கிவிழித்த உடன் நாப்புலர்ந்திருந்த படியினால் நீர் கேட்டான். அவள் குடித்திருந்தவெறியால் தான் முன் குடித்துவைத்திருந்தவெறியைச்சலமென்று கொடுத்தாள். அவனும் அதனை வாங்கிக்குடித்தபின் அதின் வேகம்மீற ஐயோ! என்ன செய்வனென்றிரங்கி அயலிலுள்ளோர் அறிவரே என்று இரங்கினன். மாது நீ இந்தமதுவினைத்தந்து வஞ்சம் புரிந்தனையே என்று வருந்துவான். துஞ்சிடாதிருந்தனனே என்பான், மறைக் குலத்துக்கு இசையிலேன், மறுமையும் இழந்தேன் என்று பல பலசொல்லி வேதியரிடஞ்சென்றுதான்செய்த பாவத்தைச்சொல்

வி அதற்குப் பிராயச் சித்தங் கூறியருள வேண்டுமென அவர்கள் நெய்யைக் காச்சியுண்ணென அவனும் அது செய்யப்போகையில் தந்தை வந்து தடுத்துவேறு பிராயச்சித்தமொன்று மில்லை என்றுகண்டுதன்மகன்காய்ச்சியகொதிக்கின்றநெய்யைஉண்டால் இறந்துபோவான் பிறகு தான் இருப்பதில் பயனில்லை என்று தன் செல்வங்களை எல்லாந் தானஞ்செய்துவிட்டு அக்கினிவளர்த்துத் தானுந் தன் மனைவியும் மருமகளும் ஆகிய மூன்றுபேரும் தீயை வலம்வந்து வீழப் போகையில் சாண்டிலிய முனிவர் வந்து தடுத்து நின்மகனுக்கு வேறுபிராயச் சித்தமுண்டு என்று வேதியர்கள் கூட்டத்திற்குக் கூட்டிவந்து இந்த நெல்லைமற்ற தலங்கள் போலல்ல மிக மேலானது இந்த நெல்லையில் அறியாமையால் பாவஞ் செய்தால் பாவமாகாது இந்த மறையோன் உண்டமதுவினால் வந்த பாவம் பொற்றாமரை நீராருந்நிறைற் போகுமென்றுகூறி இதனுண்மையை அகத்தியரையுங் காத்திரியரையுங் கேளுமெனச் சொல்லி அவர்கள் வரும்படி மனதில் நினைத்தான். அவர்களும் உடனே வந்து எல்லோருக்கும் முன்னிலையில் சாண்டிலிய முனிவர் சொல்லியது உண்மை என்றனர் பிறகு வேதியர்களும் அதிவிடனும் பொற்றாமரை சென்று நீராடிப் புனித மெய்தினர் என்று சூதர் கூறி மேலுஞ் சொல்லுகின்றார்.

## ௧௦௭-வது கருவூர்ச் சித்தர் சருக்கம்.

*கருவூறிக் கிடந்துழன்று பிறந்திறந்து வெய்துமக்கள் கருதிப் போற்றில்*
*வருமூரிற் பதமளித்துக் காத்தருளும் வரைவில்லான் வருத்த ஞானக்*
*கருவூரின் சித்தருறை வவரிருந்த விடந்தேடிக் கனிந்த வன்வால்*
*பெருவூரொன் றிரைச்குழயர் மானூறிற் சென்றவனைப் பேசி வாழ்வாம்.*

கீரனூரில் ஒரு வேதியனுடைய மனைவி கற்பின் மிகுந்த உத்தமி அவள் வயற்றில் சூரியனருளாற் கருவூர்ச் சித்தர் பிறந்தார். இவர் மெய்ஞானம் பெற்றவர். இவர் தலந்தலமாகச் சென்று பூசித்துக் கொண்டு வந்து நெல்லைமாநகர்க்கு வந்து சிந்து பூந்துறை நீராடி பொற்றாமரையாடி வீதியையுங் கோயிலையும் வலம் வந்து சந்நிதியில் இனிய நைவேதனஞ் செய்யுஞ்

சயையமென்று சிறிதும் எண்ணாமல் எந்தையை 'நெல்லையப்பா!' என்று மூன்றுதரங் கூப்பிட்டான். அதற்கு உத்தரம் ஒன்று மில்லை யாதலினால் 'எருக்கெழ! இங்கே ஈசனில்லை என்று சாப மிட்டு மானூர்மாநகர்' போயினர்.

'சிவபெருமான் கருவூர்ச்சித்தர் சொல்லிய சாபங்கேட்டு விடைமீதேறிமானூர்மாநகரில் வந்தான். கருவூர்ச் சித்தர் காலில் விழுந்து வணங்கி எழுந்து போற்றித் துதித்து ஒவ்வொரு வருடமும் மானூரில் மூலநாளில் எனக்குக் காட்சி தந்தருளவேண்டு மென்று வரம்பெற்று நெல்லை நாதனைப்பூசித்தான் நாதனார் நெல்லைக்குப்போகையில் தானுங்கூடவே நெல்லைக்குச்சென்று இங்கு ஈசன் இருக்கின்றானென்று சிந்து பூந்துறை பொற்று மரை இவற்றில் நீராடி வடிவாளையுந் திருமூலநாதரையும் வேணு லிங்கத்தையும் மற்றயதேவர்களையும் மகிழ்ந்து போற்றி வலம் வந்து விடைபெற்று மானூரிற் சேர்ந்தார். கருவூர்ச் சித்தர் வாழும் நாளில் சில அந்தணர்கள் நிந்தனைகூறக் கேட்டு அந்த ணர்களுக்கு அவ்வூரில் மனையில்லையாகுக என்று சபித்துவிட்டார். பின் மானூரிலிருந்து கரூரார் அங்கேயே எம்மானைப் புகழ்ந்து கொண்டு இனிது வாழ்ந்தனர். நெல்லை நாதரும் ஆவணி மூல நாளில் மானூர் சென்று காட்சிதந்து கருவூர்ச்சித்தரை மகிழ் வித்துவந்தார். என்று சூதமுனிகூறி மேலுஞ் சொல்லுகின்றார்.

---

## ௪௦கூ-திருஞானசம்பந்தப் பிள்ளையார் சருக்கம்.

---

பொல்லாத வமணகுழூப் போயொழியப் புவிமீது
எல்லாருங் கண்காண வியல்வழக்கைச் செய்யுமெங்கள்
வல்லாளன் சண்பையர்கோன் வரைவனத்து வந்தருளும்
நல்லாறு தனைநினைந்து நவின்றுதுதி செய்குவமே.

பின்னமாய்ப் பாஞ்சராத்தியும் போனதும் வைதிகசைவம் நின்றதன்மையுங் கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

தேவபாண்டியன் நீதிவழுவாது அரசுபுரிந்து வந்தான். மறையாகமவிதிப்படி திருவிழாக்களை எல்லாம் ஒழுங்காகச் செய்தான். அப்பொழுதுமதுரைப்பாண்டியன் அமணரைச்சார்ந்

தான். அமணர்கள் சைவநெறிகளை எல்லாம் இகழ்ந்து தன் நெறியைச் சிறப்பித்துக் கூறி உயர்வு படுத்திப்பரவச்செய்து வந்தனர். இதனைத் தேவபாண்டியன் காணப்பொறுனுகிலீனே ருங்கம் வரனைவர்கெட்டுப் போகின்றன்றோ என்று நெல்லைநாதன் சன்னிதியில் வந்து முறையிட்டுக்கொண்டான். குமரக்கடவுளை நினைந்து துதித்தான். அப்பொழுது குமரக்கடவுள் காட்சி கொடுத்தார். பாண்டியன் கண்டுகளித்துத் துதிகள் பல இசைத் தான். அப்பொழுது குமரக்கடவுள் நீவிரும்பியவெலாம் அறிந் தோம். மூன்றுநாளில்நாமாகிய, ஞானசம்பந்தன்வந்துன் செயல் நிறுப்பான. முன் அவன்றன்னிலாதாரமாய் தென்னன் வேப் பையும், கூனையும், சமணையுந்தீர்த்தோம். என்று கூறி தன் உரு வினின்மறைந்தான். பின் இறைமகன் அரன்மைந்தனுக்கு சிறப் புறு பூசைகள் முறையே செய்தான். மற்ற மூர்த்திகளுக்கும் முறையே பூசை முதலியவற்றை ஒழுங்காகச் செய்தான். ஞான சம்பந்தரின் வரவை அதி ஆவலோடு எதிர்பார்த்திருந்தான்.

இஃதிப்படி இருக்க, மதுரைமன்னவன் மறுசமயஞ் சார்ந் தான், அவன் மனைவியாரும் அமைச்சரும்அன்பினுலே சவுந்தரே ச்சுரனுர். முத்துக்குடை சிவிகை காற்பந்தர் பொற்காளம் தாளம் சின்னங்களை வந்த சம்பந்தற் களித்தார். ஞானசம்பந்தர்மன் னன் வெப்புநோயையுங் கூனையும் மாற்றி இந்நகர்க்குவந்தருளுவர் என்று ஒற்றர்கள் புகன்றனர். அது தெரிந்து பாண்டியன்கோயிலை யும். நகரையும அலங்கரித்து வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந் தான். முன்னாள் செய்த புண்ணியமெலாம் திரண்டுவந்தது போல ஞானசம்பந்தசுவாமிகள் வந்தார். வாத்தியங்கள்முதலிய முழுங் க அரசன் மந்திரிசேனை முதலிய சூழப் போய் எதிர்கொண்டு அழைத்து கொண்டாடிப் போற்றினுன். பிறகு கோயிலுக்குப் போயினர். ஆங்கே எம்பெருமான்மீதுளமது திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகங்கள் பாடினுர். தேவபாண்டியன் உபசரிக்க எல்லாம் ஏற்று நெல்லையாலயத்துள் நித்தனுர் சேவைகாலங்கள் தோறுஞ் செய்து கொண்டு இருந்தார். இப்படி இருக்கும் பொழுது குறுமுனிவர் வந்துசேர்ந்து இருவரும் மகிழ்ந்து தழு விக்கொண்டனர்.

பல அரசர்க்குந் திருமுகம் போக்கித் தன் அவையில் வருவித்து ஞானசம்பந்தப்பிள்ளையைப் பார்த்து அருள்பெற்றுப் போமாறு செய்தான். திருவருளின் விருப்பப்படி சந்திர புட்கரணியின் மேல்பால்லிங்கம் வைத்துப்பூசித்தார். பிறகு சபையில உட்சமயிகளும் புறச்சமயிகளுங்கேட்டுய்யும்படி சைவமதத்தைப் பற்றி பிரசங்கித்துச் சிவபெருமானின் பெருமைகளையுங்கூறி புறமதங்களைக் கண்டனஞ் செய்தனர் சைவமாகிய தன் மதத்தை தாபித்தார். அகத்தியரும் உண்மைநிலைகளை எடுத்து ஒதி விளக்கினர். அப்பொழுது சில அமணர்கள் வாதுசெய்ய அவர்களையும் வென்று சைவத்தினை நிறுத்தினர். என்று கூறி மேலுஞ் சூதர் சொல்லுகின்றார்.



## ௧௧௰-வது, தொண்டர்கள் நயிமுறச் சருக்கம்.



காழியர்கோன் றன்னொடு வந்ததிருத் தொண்டருடன் கருது நீண்ட
வாழியுண்ட கலைமுனியுஞ் சூழ்ந்துவர நெல்வேலி மன்னன் முன்னாள்
வாழியென நற்றளியுஞ் சாலையுமே வளப்பமுற வகுத்த மேன்மை
பாழியர்தோள் புனைசெய்த மனமுருகப் பரிந்துதினம் பாடுவோமே.

நெல்லையம்பதியில் குறுமுனிவரும் ஞானசம்பந்தரும் தொண்டர்கள் பதினாயிரவர் ம்தவபாண்டியனுங் கண்டருச்சனை செய்தொண்டகள்ளரரயினர் அக்கதையைச்சொல்கின்றேன் கேளுமெனச் சொல்லுகின்றார். திருஞானசம்பந்தரின் திருக்கூட்டத்தார் நெல்லையின் சரிதத்தை நியருள வேண்டுமென்று கும்பமுனியைக் கேடக அவரும் கேட்டோர் ஆனந்தப் படகண்ணீர் விட கூறியருளினர்.

இத்தலத்தில் சிவலிங்கம்வைத்துப்பூசிப்பதற்கு உத்தமமான இடமெது வென்ன வேய்வனநாதருக்கு இடதுபக்கம்மேல் புறம் வீரகாளிக்குமேல்பாலில் கூவிளவனமும் மற்றப் புண்ணிய மரங்களும் சூழப்பெற்ற இடத்தில் மத்தியில் தாய்விடையாளும் லிங்கமும் தேவபீடமும் அழகுபெற்றிருந்தது இதை எல்லாரும் அறியார். இது கோடிசென்மத்தும் இது காணக்கிடைக்காது. என்றபோது பாண்டியனும் வர எல்லோரும் வாத்தியமுழங்கச்

சென்று சிவனுக்கீசான திக்கில் ஓர் தீர்த்தமும் தேவிக்குமுன்னே ஒருதீர்த்தமும் உண்டாக்கி ஏழுநாளையில் எங்கும் வெளிகண்டு சிவாலயங்கள் மடங்கள் முதலியநிலைபெறக்கண்டு தென் கீழ்த்திசையில் * உக்கிரனுக்குக்கோயிலும், மதிள், சிகரம் முதலியன வகை வகை வகுத்தான். பிறகு பிள்ளையாரும் அகத்தியரும் மனமகிழ்ந்து ஈசனை அர்ச்சித்துப் போற்றி மகரமாதத்தில் திருவிழாக்களுஞ் செய்வித்து அரசனையும் வியந்தனர். மற்றும் அங்குள்ள தீர்த்தங்களிலாடி மூர்த்திகளைத் தரிசித்தார் என்று கூற முனிவர்கள் சூதரை வியந்து போற்றி இன்னும் எங்களுக்கு நெல்லைநாயகன் புகழெலாம் உரைக்கவேண்டுமென்று சூதமகா முனிவர் சொல்லுகின்றார்.



## ௧௧௧-வது நின்றசீர்நெடுமாற நாயனார் சருக்கம்.



உலகமயத்துச் சிவமதமே சிறந்துவிளங் கிடும்படிக்குக் குறிக்கொண்டான்ற
பவமகன்று புகழ்நின்ற சீர்நெடுமா றப்பெயர்சேர் பாண்டி யன்போர்
தவமுயல முடியாது வந்துசரண் புகவருளால் தழுவும் பூத
கணங்கள் தனைவிடுத்துக்காத்தருளு நாயகனார் நன்றாள் போற்றி.

தென் மதுரைப்பாண்டிநாட்டில் மதுரையை ஆளும் நின்றசீர் மாடன் என்னும் பாண்டியன் துன்னுதலைமயிர் பறித்த குண்டர் அவநெறியே தொடருங்காலை, திருஞானசம்பந்தரால் திருநீர்சாத்தப் பெற்று எங்கிலமுஞ் சைவநெறிதழைத்தோங்க அரசுசெய்தான். இவன் அரசியலை நோக்கிவானவர்கோன் மகிழ்ந்து மணியாரம் ஈந்தான். இவன் அரசியலை ஒழுங்காக நடத்திவரும் பொழுது ஆலவாய்ச் சோமசுந்தரரைத் தொழ அவர் அருளியபடி நெல்லைக்குச் சென்று சிந்து பூந்துறை பொற்றாமறை முதலிய தீர்த்தங்களாடி வடிவாளையுந் திருமூலலிங்கத்தையும் வேணுவனலிங்கத்தையும் மற்றையமூர்த்திகளையும் முறை முறை சென்று பணிந்து பூசித்தான். இதற்குமுன்னர் குலச்சிறையார் கோயில்திருப்பணிபலசெய்து விளங்கும்படிச்செய்தான். பாண்டியனுக்கு அரண்மனை முதலியன ஒழுங்குபட அமைத்திருந்தான். அதில் பாண்டியனும் மேவி இருந்து

இனிது அரசு செய்துவந்தான். அப்பொழுது தானுந் தன் மகனும் சோடச்சிந்துபூந்துறை போயினர். இவர்கள் இவ்வாறேக இறைவனை எதிரேகண்டு பனவனேறுஞ் சிவிகையை மூடிப்போக்கி அரசன் கிட்டவருதலுஞ் சிவிகையை விட்டு இறங்கித் தாதையை வணங்கினான்.

தன்மகனை உன்பக்கத்தே வருகிற அந்தச்சிவிகை எதென்ன மாதுடையதென்றான். பின் நதிக்குவந்து பார்க்கும்பொழுது வடிவுடைப் பெண்ணுயிருக்கப் பிராமணன் வடிவம் பெண்ணுயிற்று என்று வருந்தி அரசன் நெல்லைநாதன் சன்னதியிற் சென்று முறையிட சிவபெருமான் தோன்றி உனது புத்திரன் பெண்ணென்று சொன்னதனாலும் நீயும் அதனை உண்மையென்று நினைத்ததனாலும் இவ்வாறுயிற்று. இனி இது மாறாது ஆனால் அம்மறையோனுக்கு இன்னொரு மகவளித்தோம் என்று கூறி மகாலிங்கத்தூடுபோந்தான். உடனே அரசன் மறையவர்களிடத்தில் வந்து சிவபெருமான் கூறிய விஷயத்தைச் சொல்ல அவர்களும் ஒருவாறு உள்ளந்தேறி யிருந்தனர். பெண்ணுக ஆக்கப்பட்ட மாதை ஒரு பிராமணனுக்குக் கலியாணஞ் செய்வித்தனர்.

இப்படியிருக்கும்பொழுது வடபுலத்திருந்து ஒரு வளமிக்கோன் போருக்கு வருதல்கேட்டு சிவபெருமான்நாம் பூதப்படை அனுப்புகின்றோம் என்றனர். பிறகு வடதிசையிருந்து வந்தவன் நெருங்கியதால் பாண்டியனும் வீரமுடனே போர் செய்தான் கடைசியில் தன் கைசோர்தல்கண்டு சிவபெருமானைச் சிந்திக்கச் சிவபெருமான் கணங்கள் வந்து வடபுலத்தோரை எல்லாம் போர் செய்து அழித்தது.

வடபுலத்து அரசர் மாண்டழிந்து போனபின்னர் வரதன் அனுப்பிய படைகள் தத்தம் இடம் போயின அரசன் சிந்தனையின்றிச் சிவபெருமானைப் போற்றிக்கொண்டு அரசுசெய்து வந்தான். நெல்லைநாதன் பதமலரை அரசன் அடைந்தபின்னர் நெல்வேலி மாறன் அன்பாய்க் கனமணி முடிசூடிச் செங்கோல் செலுத்தினான். நீறுங் கண்டிகையும் உலகெலாம் பரந்தது. சைவம் எங்கும் விளங்கிற்று என்று சூதர்கூறி மேலுஞ்சொல்லுகின்றார்.

## ௧௧௨-வது, வடபுலத்துக் கெவுடன்வந்த சருக்கம்.



*கல்லிடபம் புல்லுண்ண நீருண்ண மூங்கிலிலே கஞ்சங் காண [ன்ற*
*சொல்லுமுயர் கொன்றையிலே வில்வமுற வன்னியிலே சொன்மாதோ*
*நல்லகவு டற்கருளுஞ் சாலிநக ரீசனையான் மனத்திற் கொண்டேன்*
*இல்லையெனக் கொருகுறையு மியைந்தபெரு வளமெல்லா மியைந்தன்றே*

முனிவர்களே! நெல்வேலிநாதன் விளையாட்டொன்று கூறுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்.

நெறிபிழைத் தோறும்கீழ்குலத்தோறும் சிவனடியார்களைக் கண்டால் தீங்குசெய்பவனுமாகிய கெவுடன் தென்றிசைக்கு வந்தான். நெடும்படையோடு நெல்வேலிக்கு வந்து சேர்ந்தவுடன் இத்தேசத்துள்ள மிருகம் பட்சி எல்லாம் சிந்தைவருந்தியோடுதலும் சிவனருளால் தொண்டர்குழாம் அறிவோடு கோயில் வாயிலில்நிற்பதைக்கண்டு அவர்களுக்குள திரேவந்து முடிவிலாதமுதல்வன் எவனென்று கேட்டான். அதற்கவர்கள் நெல்லைநாதன் என்றனர். அப்படியானல் நான் விரும்பும் அதிசயங்களுண்டாகுமோ?வென ஆம் உண்டாகுங் காணலாம் என்றனர். உடனே அங்கு ஒரு கல் ரிஷபமிருக்க இது புல் தின்று தண்ணீர் குடிக்குமோ ? வென்ருன். அவர்களும் அப்படியே புல்லுங் கழுநீரும் வைக்க அது வாய் திறந்து புல் தின்று கழுநீர் குடித்தது கண்டதிசயமுற்று வியந்தான். கீழ்ப்பிரகாரம் வரும்பொழுது மூங்கிலைக்கண்டான். இதில் தாமரை முளைக்குமோ எனத் தாமரை முளைத்திருக்கக் கண்டான்.

இன்னுமொரு பிரகாரத்துள் வரும்பொழுது கொன்றை மரத்தைக்கண்டு கூவிளையுண்டாகுமோ?வென அவர்களும்உற்று நோக்கென, அவ்விடத்து வில்வ இலை ஆரத் தழைத்திருப்பது கண்டான். வன்னிமரத்தைக்கண்டு இதில் மாங்காய் காய்க்குமோ? என்ன வேண்டுமேற் காணலாமென்ன அவனும் நோக்கக் காய்த் திருத்தலைக் கண்டு எல்லாத் தலத்திலும் உயர்ந்த தலம், இத்தலமே நெல்லைநாதனே கடவுள் என்று புகழ்ந்து பூசித்துப் போற்றித் தன் நகருக்குச் சென்ருன் என்று கூறிச் சூதமகா முனிவர் சொல்லுகின்ருர்.

## ககரு-வது, தாம்பிரசபையில் அம்மைக்கு நடனங் காட்டிய சருக்கம்.



விண்ணவரும் மண்ணவருங் களியெய்தத் துயரகல விரும்பி நெல்லை
பண்ணுயருந் தாம்ரசபை தனிலாடி யருள்பெருமான் பதத்தை நெஞ்சே
எண்ணுறவே பற்றிகெ பிறருனக்கிங் கொப்பாரா ரினிய வின்பம்
நண்ணியவெல் லாமெய்தும் நமபயயு மிலையாரு நவிற்றி னம்மா.

ஓ முனிவர்களே! நெல்வேலி நாதன்புகழ் எல்லாங்கூறினேன் இனி நாதர் தாம்ரசபையில் நடனஞ் செய்த கதையைக் கூறுகின்றேன் கேளுமெனக் கூறுகின்றார்.

நெல்லைநாதன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பொழுது என் அம்மைவடிவாள் பணிந்து போற்றித்துதித்து நாயகனே நின் நடனங்காண விரும்புகின்றேனென்றாள். தேவருந் துதித், துத்திருநடனங்காணவேண்டுமென்றுவேண்ட, அவர்களைநோக்கி வடிவாளுக்காகத் தாம்ரசபையில் நித்தஞ்செய்வோங் காணலாமென்றார். சந்திரநாதன் பொன்னகர்வாழ் கம்மியனைக் கொண்டு தாம்பிரசபையை அலங்கரிக்கச்சொல்ல அவனும் நவமணிகளாலும் பொன்னாலும் அலங்கரித்தான், நாதர் வடிவாளோடு தேவர் சூழச் சென்றார். தேவர்களெல்லாம் அபிடேகஞ் செய்தனர் இன்னும் அலங்கரிக்க நவமணியணிகளாலும் பட்டாலும் அலங்கரித்து வேதவிதிப்படி பூசித்துப்போற்றினர். மால் முதலிய தேவர்கள் வாத்தியம் வாசிக்க அந்தரதுந்துபிமுழங்க வேதியர்கள் முழங்க அடியார்களும் பாவலர்களும பாக்கள் கூற எம்மான் நிர்த்தனஞ் செய் தருளினார். தேவர்கள் போற்றினார்கள். தேவிகளி கொண்டுபோற்றி இத்திரு நடனமும் தாம்ர சபையில காட்டியருள வேண்டுமென்று வரம்பெற்று மகிழ்ந்தாள். தேவர்களும் இன்புறக்கண்டு வேண்டும் வரம்பெற்று இன்புற்றனர் என்று சூதர்கூறி மீண்டுஞ் சொல்லுகின்றார்.



## ௧௧௪-வது, தேவர்களுக்கு அகோரதாண்டவங் காட்டிய சருக்கம்.



*சிந்திக்க வேண்டியபொன் னூட்டவரும் புவியோருந் தெளியக் காண*
*வந்தித்து முனிவரரு மாதவருங் கரங்குவித்து வணங்கி நிற்க*
*முந்திக்குச் செய்தருளு மாகோர தாண்டவத்தை முறையே செய்த*
*பந்தித்து வரும்வினையைத் தீர்க்குநெல்லை நாதனடி பரவி வாழ்வாம்.*

இன்னும் நெல்லை நாதன் தாம்ரசபையில் ஆடிய கதையைச் சொல்லுகின்றேன் கேளுங்களெனக் கூறுகின்றார்,

தேவர்களெல்லாம் நெல்லை நாயகனைப் போற்றித் துதித்துத் தாம்பிரசபையில் நாங்கள் காணநடனஞ் செய்தருள வேண்டுமென்று வேண்ட மாலயன் பயங்கொள அகோர மெய்யாகினன் இந்தத்தாண்டவத்தை எவரே காணவல்லவர் எவரே? பகர வல்லவார்? எமக்கு ஞானக்கண் கொடுத்தருளு மெனவேண்ட அவ்வாறே கொடுத்தருள எல்லாருங்கண்டுள மகிழ்ந்தார்.

தாம்பிரசபை, இராச சபை, சுந்தரகல்யாண சபை, பரப்பிரம சபை, கொலுச் சபை, சன்னிதிச் சபை, மானூர்ச் சபை, ஆக எட்டு சபைகளுண்டு இந்தச் சபைகளுள் எம்மான் திருநடனங்காண்போர், புதுக்கிடுவோர், புகழ்வோர், அலங்கரிப்போர் பெரும்பாக்கிய முற்று அழியாத முத்திபடைவர் என்று சூதர் கூறி மேலுஞ் சொல்லுகின்றார்.



## ௧௧௫-வது, காளியுடன் வாதாடு சருக்கம்.



*தேவியொடு வாதுபுரிந் தாடுபிரான் திருச்சரணந் தினமும் போற்றி*
*பூவினிடை குறையின்றி வாழ்ந்துசுக போகமுற்றுப் புகழே யாக்கி*
*காவினிடை மதுவுண்டு களிகொண்டு பொறிவண்டு கானம் பாடு*
*மாவிடையர் வாழ்கைலை மருவிமிக வளமுறுவர் மதிக்க மாதோ.*

பார்வதியும் பரமேசுவரரும் கைலையிலிருக்கும் பொழுது ஈசுரன் பார்வதியை நோக்கி ஆடவர் உயர்வோ? என்று கேட்டார். அதற்குப் பார்வதி மன்னிய சக்தியின்றி மகிழ் கிருத்தி

பமூ மூண்டோ என்றாள்? உடனே சிவபெருமான் உமையை நோக்கி உன்னால் நான் இருப்பதுவோ? நீ சொன்னது தகாது, நம் சன்னிதானத் திருந்து சராசரமீன்றாய் அப்படி இருக்க நீயே அதிகமென்று நமதுமுன்னம் எப்படிச் சொல்வா யென்றிறைவன் கேட்க, உமையாள்சீறி விமலனைநோக்கிச்சொல் கின்றாள். புருடனே அதிக மென்று புகலுதலால் பொது வினின்று இருவரும் நடனஞ் செய்வோம் என்று சொல்லிக் காளிரூபங்கொள்ள இறைவர் உன்னால் என்னோடு ஆடமுடியாது என்று சொல்ல அவள் அகங்தையால் என்னோடாடப் பலமி லாய் உனக்கு எந்தவிதமாகப் பெருமை யுண்டாகும் என்றாள். உடனே இருவரும் தாம்பிரசபையில் வாதுபேசிக் கூத்தாடினர் இருவருஞ் சமமாகவே இருந்தார் பிறகு சிவபெருமான் ஒரு காலைத் தூக்கியூர்த்ததாண்டவமாடினான். அதுகண்டு காணிகாந்தி மதிதிருக் கோயில் புக்காள்.

தேவர்கள் முனிவர்க ளெல்லாந் துதித்துப் போற்றினர் பின்னர் தாய் காந்திமதி புலவியோ டிருக்கின்றாளென்று தெரிந்து அவளுக்கிதமுறும் இனிமைபேசி இன்புற இருந்த னர். இதுவே எம்மான காளியோடு வாதுக்காடிய தென்று சூதர் சொல்லி மேலுஞ் சொல்லுகின்றார்.

---

## கககூ-வது அம்மைக்கு ஆனந்தசவுந்தரிய நடனங்காட்டிய சருக்கம்.

---

தேவியின் புலவி நீக்கத் திகழுமா னந்தக் கூத்து
மேவிய நெல்லைத் தாம்ர மேதகு சபையி லாடும்
பூவியல் பதத்துத் தேவி பொருந்துநற் பாகன் றன்னை
பாவியல் தெரியப் பாடிப் பார்மிசை களிப்பா மம்மா.

கேளுங்கள் முனிவர்களே! எம்பெருமான் ஊர்த்துதாண் டவமதனால் உமாதேவி சினங்கொண்டிருக்கின்றாள் என்று அவளைக்களிப்பிப்பதற்காக அவளருகுசென்றுகரத்தாற் புல்லி இதஞ்சொல்லி அவள்விரும்பியபடி கைலையிலிருந்த ஆனந்த ச

பைமையவருவித்து அம்மை கோயிலின் சமீபத்தில் வைக்ககட்டளையிட்டனர்.

பிறகு ஆனந்தசபையில் தேவர்கள் முனிவர்கள் துதிக்க சிவ பெருமான் சபையில் நித்தம் புரிந்தருளினார். என்று கூறி இனிஎம்பெருமான் மானூர்ச்சபையில் ஆச்சரிய நடனஞ் செய்ததைச் சொல்லுகின்றேனென்று சூதர் கூறுகின்றார்.

## ககஎ-வது, மானூர்ச் சபையிலாச்சரிய நடனச் சருக்கம்.

மாச்சரிய மிட்டிலகில் மடிபவர்போல் மாயவிருள் மயக்க சேர்ந்து
எச்சடனே யிறந்தழியும் பாவிகளே இருடிகட்கா எழின்மானூரில்
ஆச்சரிய நடம்பயின்ற வமலன்றாளகத்திருத்தி யமரர் போற்ற
நீச்சரிய மெய்ஞ்ஞான நிலைபெற்று வீட்டினையே நேர்வீர் நீரே

தாருகாவனத்து இருடிகளே! நீங்கள் நம்மை அன்றியே செய்த சகலமும் அழிந்திடும். ஆகையால் நம்மைப் பூசியுங்கள் என்று சொல்லிப் பின்னும் சொல்லுகின்றார் உங்களுக்கு ஞான முந்தந்தோம் ஆகையால் நீங்கள் நாம் மானூரிற் செய்யுந் திருநடனங் காணுமென்றே மானூர்ச் சபை போய்ச் சார்ந்தான். அப்பொழுது மால்நினைக்க மயன் அச்சபையை அலங்கரித்தான். சிவபெருமானுட் சென்றுசுந்தர வடிவங்கொண்டு நிருத்தஞ்செய்தார் வடிவாள் முதலியோரெல்லாம் போற்றித் துதித்தனர். தேவர்களெல்லோருக்கும் வேண்டும் வரங்களை எல்லாங் கொடுத்து தேவர்கள் போற்ற ஆலயத்தமர்ந்து வீற்றிருந்தார்.

## ககஅ, தாம்ரசபைநடனந்தரிசித்தவனும் அவனைக் கூடினவருங் கதியடைந்த சருக்கம்.

காம்பிணங்கு தோளிபங்கன் நடம்புரியும் தாம்ரசபை கண்டபேரும்
அம்பலெனும்வாய்திறந்துசொன்னோரும்நினைத்தோரும்அதனைக்கண்டோர்
அம்பதும முகத்திலொரு கால்விழிக்க நேர்ந்தோரும் அருபாவம்
தாம்பறக்குஞ் சுகமுண்டாந் தரணியிலே இப்பெருமை தழுவுவோமே.

தாம்ரசபை மகிமையை இன்னுங்கூறியருள வேண்டுமென்று கேட்கச் சூதர் கூறுகின்றார். தாம்ரசபையென்று வாக்கினு

ரைத்தவரும் கண்டவரும் கேட்டவரும் தம்பிள்ளைகளுக்கு அப்பெயரிட்டவரும் முத்திசேர்வர்.

மலையாளத்தில் அன்னதி என்ற ஒருநகரத்தில் தெண்டி என்னும்நாமத்தான் நல்லொழுக்கந் தூரந்துதாய்,தந்தை,தங்கைமுதலியவர்கட்கு ஒன்றும் ஈயாமல் வந்தான். களவுசெய்வன், கொலை செய்வன் வழிப்பறிப்போன், கொடும்பாவஞ்செய்வன், பலபேரைக்கொன்றான் பலபெண்களைக் கொன்றான். அதனால் பிரமகத்திஇவனைத் தொடர்ந்து வருந்திற்று நெல்வேலிப்பக்கம் வந்தவுடன் நகர்க்காற்றும்பட்டவுடன் தெளிவுவந்தது. சிந்துபூந்துறைநீராடி கோயிலைத்தரிசித்துத் திருமூலநாதர் வடிவாள் வேணு லிங்கம் தாம்ரசபை நடனம் முதலிய வற்றைத் தரிசித்தவுடன் முற்றும் நீங்கிற்று. இவன் நகர் நீங்கி வரும் போது நெடுநாட்பட்ட துன்பம் நீங்கியதனாலும் பசியினாலும் வழியிற் படுத்துத் தூங்கிவிட்டான். நாகன் என்போன் படுகொலைபுரிவோன் பாபி ஒருவன்வந்து இவன் கையில் பொருளுளதோ என்று பரிசோதித்து இல்லாமையினால் அழன்று அடித்தான். அவ்வந்தணனும் விழித்து எழுந்தான்.

பிறகுஇருவரும் நட்பாயினர். முன்போலவேவழிப்பறித்து வாழ்ந்தனர். அரசன் காவலர் இவர்களைக்கண்டு கொன்றனர். அப்பொழுது யமபடர் குறுகித்துன்பஞ் செய்ய ஆரம்பித்தனர். அப்பொழுது சிவகணங்கள் அவர்களை அடித்துத்துரத்திவிட்டு விமானத்தில் ஏற்றிக்கொண்டு போய் சிவபெருமான் வாழுங்கைலைபாற் சேர்ந்தனர். நாகனுந் தெண்டியும் அவன் கூட்டத்தோரும் தேவலோகத்தில் கணங்களுக்குத் தலைவராய் சாரூபமுற்றிருந்தனர். தெண்டி என்பவன் தாம்ரசபையைத் தரிசித்துப் பாவம்நீக்கினன் நாகனும் அவன் கூட்டமும் தெண்டியைக் கண்டதால் அவர்களும் பாவநீங்கிப் புனிதராயினர் என்று உமாதேவிக்குச் சிவபெருமான் சொல்லியருளினர். கூற்றுவன் கொடும்பாவிகள்கைலைக்குச் சென்றதேனென்று விசாரித்து தாம்பிரசபையைத் தரிசித்ததாலும், தரிசித்தவனைத் தரிசித்தாலும் கைலை சென்றன ரென்றுதெரிந்து கொண்டான். என்று சூதர்கூறி மீண்டுங் கூறுகின்றார்.

## ௯-வது, தாம்பிரசபை நடனதரிசனங் கண்ட வேதியனைக் கண்ட பாவிகதியடைந்த சருக்கம்.



புலியத ளுடுத்த நாதர் புகழ்நட னத்தைக் கண்ட
ஒலிகிளர் மறையோன் றன்னை உணர்விலா தொருவன் கண்டு
நலிதரு பாவம் நீங்கி நாதனூர் கைலை யுற்றூர்
மலிபுக முதனைக் கூறி மருவுபே ரின்பஞ் சார்வாம்.

தாம்ரசபையில் நடனங் கண்ட வேதியனை தரிசித்த பாவிக்குமுத்தி கிடைத்தது அந்தக் கதையைச்சொல்கின்றூர்.

பானூரில் வசிக்கும் நெறிமுறை தவறாத புனிதவேதியன் ஆதிரைநாளில் சிந்துபூந்துறை நீராடிசெபதபமுடித்துத் தாம்பிர சபைத்திருநடனங் கண்டுதிருமூலநாதரையும் வேணுலிங்கத்தை யும் வடிவாளையுந் தொழுது தன் ஊருக்குத் திரும்பிவரும் போது ஒருபெரும் பாதகன் இவ்வேதியனை நோக்கிச் சென்றான், அந்தணன் தன்னூர் வந்து சேர்ந்தான், அந்தப்பாவி இறந்த பொழுது எமபடர் வந்து துன்புறுத்தி நரகத்திற்குக் கொண்டு போகவரும் போது சிவகணங்கள் இவன் தாம்ர சபையைத் தரிசித்த வேதியனைத் தரிசித்தபடியினால் இவன் முன் செய்த பாவமெல்லாம் நீங்கிப் புனிதனானு னென்று பொன் விமா னத்திலேற்றிக் கைலைக்குக் கொண்டுபோயினர் சிவபெருமான் மகிழ்ந்து கண்டு நீ பெரும் பாவங்க ளெல்லாஞ் செய்திருந்தா லும் நடனத்தைத் தரிசித்த எமது அடியவனை நீ தரிசித்த படியினால் உன் பாவங்கள் நீங்கிற்று இங்கு கணங்களுக்குத் இத்தலைவனாக இருவென்று வைத்துக்கொண்டார் என்று சூதர் கூறி, மீட்டுங் கூறுகின்றூர்.



## கஉ0-வது, திருநெல்வேலிப்புராணம் படித்தவேதியனைக்கண்ட பாவிகதியடைந்த சருக்கம்,

சாற்றருஞ் சாலி வேலித் தலபுரா ணத்தைக் கேட்டோர்
ஆற்றரு பொருளை ஈந்தே ரழுதயர் நூலைத் தொட்டோர்
கூற்றவ னுலகு சேரார் குஞ்சிதத் தாளைச் சேர்வர்
மாற்றரு மூலக வின்பம் மருவியே வாழ்வரம்மா.

திருநெல்வேலியின் புராணகதையைச் சொல்லிய ஒரு வேதியனை ஒரு பாவிகண்டு கதியடைந்த கதையைச் சொல்கின்றேன் கேளுங்களெனச் சொல்லுகின்றார்.

ஒரு வேதியன் தன்னால் ஒழுக்கங்கெட்டு மாதர் மயக்கினிற்றிரிந்து கைப்பொருளற்றபோழ்து களவுவழிப்பறிசெய்து பொருள் சம்பாதித்து மங்கையரை மருவி வந்தான். பொய், கொலை, களவு முதலிய பஞ்சமாபாதகமெல்லாம் இவனிடத்தில் நிறைந்திருந்தது.

இவன் இப்படித்திரிந்து கடைசியாக நெல்லை மாநகருக்கு வந்து தலபுராணத்தையோதும் சீல ஒழுக்கமுடைய பிராமணனைக் கண்டான். உடனே அவன் முன்செய்த பாவமெல்லாங் கட்டறவே அவ்வந்தணனே சிவனெனத் தொழுதான். சிந்துபூந்துறையாடி வேய்வனநாதர் கோயிலைச் சூழ்ந்து திருமூலலிங்கத்தையும் வேணுவன லிங்கத்தையும் வடிவாளையும் மற்றை மூர்த்தங்களையுந் தரிசித்து ஒருநாள் தங்கியிருந்து தன்னூர் சேர்ந்து காலகதியால் இறந்தான் அவனையமபடர்கள் அடர்த்து நெருங்கும்பொழுது சிவபெருமானின் ஏவலால் கணங்கள் வந்து பொன்மணி விமானத்தில் ஏற்றிக் கைலைக்குச் சென்றனர். அப்பொழுது இப்பாவி செய்த புண்ணியம் என்ன கூறுங்கள்

என்று யமபடர்கள் கேட்க இவன் அண்டர் நாயகன்றலபுராணங் கேட்டபான்மையால் பவமெல்லாம் நீங்கிக் கைலையுங் கண்டானென்று கூறினர்.

இவ்வினைக் கொன்றை சூடிய பரமன் முன் விடுதலும் பற்பல துதி புகன்று நாதனே! கடையனையருள்க என்றான். சிவபெருமானும் நீ எம்மகிமை கூறிய வேதியனைக்கண்டமையால் பாவம் நீங்கினை தூயனாயினை எங்கணங்களுக்குத் தலைவனாக இருத்தி என்றருளினர். நெல்லைப் புராணத்தை ஓதிய வேதியனைக் கண்டவனுக்கு இந்தப்பேறானல் இத்தலத்திற் பிறந்தோர் இருந்தோர் இறந்தோர் அவர் அடையும் நற்கதிபகரும்படியான தன்மை உடையதோ? ஆதலால் இத்தலப்புராணக் கதை அனைத்தையும் போதமுடன் உள்ளத்தில் நினைத்து யாவர்க்கும் புகல்வோர் நாதன் வாழ்திருக் கயிலையில் மருவி எந்நாளும் இருப்பர்.

மால் அயன் முதலிய தேவரும், முனிவர்களும், மனுமாந்தாதா முதலிய அரசர்களும் இத்தலமகிமைகேட்டே ஆலமுண்ட கண்டரடி சேர்ந்தார். ஓமுனிவர்களே! திருநெல்வேலித்தலப்பெருமைகளை யெல்லாஞ் சுருக்கிச் சொன்னேன் என்று கூற முனிவர்கள் மகிழ்ந்து போற்றித் துதித்து எங்கள் பால் கருணைகூர்ந்து இந்தப்பெரும் புராணங்கூறிய நன்றிக்கு என்னகைமாறு செலுத்தப்போகின்றோம்? என்றும் இந்நன்றி மறவோமென்று விடைபெற்றுத் தத்தமிடஞ் சேர்ந்து சிவபெருமான் புகழை சிந்தித்துக்கொண்டு பேரின்பமுற்றிருந்தனர்.



## வாழ்த்து.

சீர்கொண்ட மழைவாழி தேவ தேவன்
செய்யதிரு வாலயங்கள் திகழ வாழி
பேர்கொண்ட சைவமதம் பிறங்க வாழி
பெம்மானி னடியார்கள் வாழி வாழி
நீர்கொண்ட வுலகத்து மறைகள் வாழி
நித்தமிதைப் படிப்போர்கள் நேர்ந்து வாழி
ஏர்கொண்ட வெங்கடேஸ் வரனு மின்ப
விருங்கிளையு மென்றென்றும் வாழி மாதோ.

நெல்லைமா நகரம் வாழி! நித்தனார் என்றும் வாழி!
எல்லையில் சைவம் வாழி! எழிலடி யவர்கள் வாழி!
வல்லையே யெழுது மிந்நூல் வளம்பெற வாழி வாழி!
ஒல்லையே யிதனைக் கற்கும் உத்தமர் வாழி மாதோ!

திருநெல்வேலித்தலபுராண வசனம்.

முற்றிற்று.

